






# கொடைநூலும் அறிநூலும்

(பன்னாட்டு கருத்தரங்க ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு)







## ந சுப்பு ரெட்டியார்100

*Centenary Committee Publications*

ISBN: 978-81-957176-0-6

அழகப்பா அரசு கலைக் கல்லூரியின் 75வது ஆண்டு விழாவினை முன்னிட்டு
தமிழ்த்துறை வழங்கும்

# கொடைஞனும் அறிஞனும்

பன்னாட்டு கருத்தரங்கிற்கு வரப்பெற்ற ஆய்வுக்கட்டுரைகளின் தொகுப்பு


பதிப்பாசிரியர்கள்:
முனைவர் மா. சிதம்பரம்
முனைவர் சு. இராமலிங்கம்



அழகப்பா அரசு கலைக்கல்லூரி
தமிழ்த்துறை
பவள விழா ஆண்டு வெளியீடு
(1947 - 2022)
காரைக்குடி – 630 003

# கொடைஞனும் அறிஞனும்



முதல் பதிப்பு – ஆகஸ்ட் 2022

நிதியுதவி:

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

**Na Subbu Reddiar 100 Educational Trust**

**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**




Wrapper Design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

# அன்புப்படையல்

## வள்ளல் அழகப்பர்




6 ஏப்ரல் 1909 - 5 ஏப்ரல் 1957

# கருத்தரங்கக் குழு

| கருத்தரங்கத் தலைவர் | கருத்தரங்கத் துணைத்தலைவர் |
|---|---|
| முனைவர் அ. பெத்தாலெட்சுமி<br>முதல்வர்<br>அழகப்பா அரசு கலைக்கல்லூரி<br>காரைக்குடி – 630 003 | முனைவர் ம. துரை<br>துறைத்தலைவர்<br>தமிழ் உயராய்வு மையம்<br>அழகப்பா அரசு கலைக்கல்லூரி<br>காரைக்குடி – 630 003 |
| **கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள்** | |
| முனைவர் மா. சிதம்பரம்<br>இணைப்பேராசிரியர்<br>தமிழ் உயராய்வு மையம்<br>அழகப்பா அரசு கலைக்கல்லூரி<br>காரைக்குடி – 630 003 | முனைவர் சு. இராமலிங்கம்<br>நிறுவுநர் மற்றும் செயலர்<br>ந சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை<br>சென்னை – 600 040 |
| **கருத்தரங்க ஆலோசனைக் குழு**<br>**அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள்** | |
| **இணைப்பேராசிரியர்கள்:**<br><br>முனைவர் ச. முருகேசன்,<br>முனைவர் இரா. குமார் | **உதவிப்பேராசிரியர்கள்:**<br><br>முனைவர் க. அமுதா,<br>முனைவர் ப. சு. செல்வமீனா,<br>முனைவர் சி. பரமேஸ்வரி,<br>முனைவர் மு. மரகதவள்ளி,<br>முனைவர் அ. பாரதிராணி,<br>முனைவர் க. சொல்லேருழவன்<br>முனைவர் து. இரவிக்குமார்,<br>முனைவர் சு. கார்த்திகேயன்,<br>முனைவர் ஆர். முத்துராஜன் |
| **கௌரவ விரிவுரையாளர்கள்** | |
| முனைவர் க. சுப்பிரமணியன்,<br>முனைவர் ந. தங்கராசு,<br>முனைவர் நா. பெரியசாமி,<br>முனைவர் ப. சி. குருசண்முகம்பாள்,<br>முனைவர் ச. சிவசங்கரி,<br>முனைவர் இரா. அனிதா,<br>முனைவர் ம. லலிதா | |

# பதிப்புரை

**கருத்தரங்கக் காவினுள் கருத்தைச் செலுத்து முன் ;**

**பேரன்புடையீர்! வணக்கம்!!**

மனிதர்கள் அன்பு நெறி காண்பதற்கும் அவர்கள் மனம் வானைப்போல் உயர்வதற்கும் தனிமனிதன் என்ற நிலை மறந்து சகமனிதனைப் போற்றும் நிலை வளர்வதற்கும் இனியவழி, கற்றல் ஒன்றே என்பதனில் யாதுமோர் ஐயமில்லை. இக்கல்வியைப் பெற இயலாது வெள்ளை ஏகாதிபத்தியத்தின் அடிமை இருளுக்குள் அடைபட்டுக் கிடந்து, தாழ்வுற்று, வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற பாமர மக்களைக் கல்வி என்னும் தோணி கொண்டு கடைத்தேற்ற முயன்ற வள்ளல்களுள் குறிப்பிடத்தக்கவர், காலம் செய்தவத்தான் வந்துதித்த வள்ளல் அழகப்பர். காரைச் செடிகள் மண்டிக் காடாய்க் கிடந்த இடத்தினைப் பயன்பெறும் வண்ணம் ஏதும் செய்தல் இயலாது என்றெண்ணி நிலமகளே கைவிட்டாள். நிலமகளால் கைவிடப்பட்ட நீண்ட பாலைவனம் போன்ற இடத்தினைக் குலமகள் போல் நின்று காத்துப் பண்படுத்திக் கல்லூரியாய்க் கட்டமைத்துக் கல்விப்பயிர் வளரும் கழனியாய் மாற்றிக் காட்டியவர் வள்ளல் அழகப்பர். ஒரு விளக்கும் இல்லா உதிகாட்டில் கல்வித் திருவிளக்கு ஏற்றிய செம்மல் அவர். இன்றிலிருந்து எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் வள்ளல் அழகப்பர் கண்ட கனவு இன்று பவளவிழாக் காணும் பாங்கொடு வளர்ந்து நிற்கின்றது. அழகப்பா கல்லூரி பவளவிழாக் காணும் பண்பான ஆண்டிதனில் வள்ளல் புகழ் பரப்ப வண்ணத் தமிழெடுத்து வளம்சார் பன்னாட்டுக் கருத்தரங்கினை வரலாற்றில் பதிவு செய்யத் தமிழ்த்துறை தாகம் மிகக் கொண்டது. வள்ளல் கல்லூரியில் வந்தமைந்து பணிபுரிந்த சான்றோர் குறித்தும் அமைந்தால் தனிப்பெருமை சேருமன்றோ! அழகப்பர் உருவாக்கிய ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பன்னெடுங்காலம் பணியாற்றி, வள்ளல் அழகப்பரின் வாழ்த்தினைப் பெற்றமைந்த சான்றோர் ந. சுப்புரெட்டியார் எனும் நலமிகு தமிழறிஞர். பின்னாட்களில் திருவேங்கடம் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி வளர்த்தெடுத்த பெருமையைத் தன்னகத்தே கொண்டமைந்தவர். அழகப்பர் பயிற்சிக்கல்லூரியில் ஆசிரியப்பயிற்சி மேற்கொள்ளும் மாணவர்களுக்காக ஆங்கில நூல்களைத் தமிழாக்கம் செய்வதென்று அழகப்பர் முயன்றபொழுது அவர் நினைவில் வந்துதித்த நற்பெயர் ந. சுப்புரெட்டியார் என்பதாகும். எனவே வள்ளல் அழகப்பர் தேடிக்கொடுத்த அறிஞர் ந. சுப்புரெட்டியார். தமிழ்கூறும் நல்லுலகிற்குத் தேடிக்கொடுத்த ஆய்வுநூல்கள் நூற்றிற்கும் மேற்பட்டவை. எனவே கோடிகொடுத்த கொடைஞனாம் வள்ளல் அழகப்பரையும் தேடிக்கொடுத்த அறிஞராம் ந. சுப்புரெட்டியாரையும் மையமாகக் கொண்டு இப்பன்னாட்டுக் கருத்தரங்கம் பயணத்தைத் தொடர்கின்றது. அழகப்பா கலைக்கல்லூரித் தமிழ்த்துறை திட்டமிட்ட இப்பன்னாட்டுக் கருத்தரங்கத்தை இணைந்து சுழலச் செய்ய இசைவு தந்துதவிய ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையின் நிறுவனரும் செயலரும் சுப்புரெட்டியாரின் புகழ்

நிறுவலைத் தன் வாழ்வின் பெரும் பயனாகக் கொண்டு செயல்படுபவருமான சு. இராமலிங்கம் அவர்களுக்கும் அறக்கட்டளை உறுப்பினர்களுக்கும் அழகப்பா கல்லூரித் தமிழ்த்துறை தனிப்பெரும் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் பெரும் உவகை கொள்கின்றது. பன்னாட்டுக் கருத்தரங்கத்தினை நடத்திட இன்முகத்துடன் இசைவளித்த கல்லூரி முதல்வர் முனைவர் அ. பெத்தாலெட்சுமி அம்மையார் அவர்களுக்கு நன்றி நவிழ்வதில் நாளும் பெருமை கொள்கின்றோம். அழகப்பா அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் ம. துரை அவர்களுக்கும் தமிழ்த்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும், பிறதுறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும், அலுவலக நண்பர்களுக்கும் நன்றி உரியதாகுக. இக்கருத்தரங்கிற்கான ஆய்வுக்கட்டுரைகளை மலேயா, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா உள்ளிட்ட பிறநாட்டு அறிஞர்களுடன் தமிழ்நாடு உள்ளிட்ட இந்தியாவின் பிற மாநிலப் பல்கலைக்கழகப் பேரறிஞர்களும் வழங்கியுள்ளனர். அன்புடன் நட்பு பாராட்டி ஆய்வுக்கட்டுரைகள் நல்கிய தமிழறிஞர் பெருமக்களுக்கு என்றென்றும் நன்றியுடையோம். பன்னாட்டுக்கருத்தரங்கம் சிறப்புற நிகழ்வுற பல்லாற்றானும் உதவிய அனைவருக்கும் எமது நன்றி உரியதாகுக.

‘‘கேட்டதுநீ பெற்றிடுவாய், ஐயமில்லை
கேடில்லை, தெய்வமுண்டு, வெற்றியுண்டு’’ ( பாரதி)

முனைவர் மா. சிதம்பரம்
முனைவர் சு. இராமலிங்கம்
**கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள்**



ALAGAPPA GOVT. ARTS COLLEGE

( AFFILIATED TO ALAGAPPA UNIVERSITY )

KARAIKUDI – 630003



முனைவர் அ. பெத்தாலெட்சுமி
முதல்வர் 4.8.2022

# வாழ்த்துரை

அது ஒரு அழகிய கனவு கல்லூரியாய் விரிந்த காலம். 3-7-1947 ஆண்டு சென்னை அடையாற்றில் அன்னிப் பெசண்டு அம்மையார் நூற்றாண்டு விழா. தலைமை ஏற்ற சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் லட்சுமணசாமி முதலியார் தமிழகத்தின் பின் தங்கிய பகுதிகளில் புதிய கல்லூரிகள் நிறுவப் பலர் முன்வர வேண்டும் என்கிற வேண்டுகோளை முன்வைத்த காலம். அவையோர் அதனைக் கேட்டிருக்க அழகப்பர் எழுந்திருந்து ராமநாதபுர மாவட்டத்தில் ஒரு கல்லூரி நிறுவுவேன் எனக் கனிவோடு சொன்ன காலம். நின்ற சொல்லராய், நீடுதோன்று இனியராய் ஒரு திங்களுக்குள் ( 1947 ஆகஸ்ட் 11 ) காரைக்குடியில் கல்லூரியைத் தோற்றி, சொல்லிய வண்ணம் செயல்கொண்ட செம்மையாளராய் அழகப்பர் செயல் சிறந்து நின்ற காலம். காரைச்செடிகளின் புகழிடமாய் இருந்த காரைக்குடி கல்விதேடி வருவோர் சரணாலயமாய் விரிந்த காலம். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்து மழைநீருக்காய்த் தவம் செய்யும் சக்கரவாளப் பறவைபோல் அறிவுத்தாகம் கொண்ட ஆன்றோர் பலர் காரைக்குடி மண்ணைத் தன் கவனத்தில் இருத்திய காலம். காலம் வளர்ந்ததுபோல் கல்லூரியும் கருத்தாய் வளர்ந்தது. சொல்லுக்குள் பொருளைச் சுருக்கி வைத்த தமிழ்போல், சீர்த்தியால் அறத்தால் செழுமைசேர் கல்வி என்னும் நேர்த்தியால் அழகப்பா கல்லூரி காலச்சக்கரத்தின் கணக்கீட்டின்வழியே எழுபத்தைந்து ஆண்டுகளை எட்டிநிற்கும் இனிய நற்காலம்.

பவளவிழா ஆண்டின் பதிவுப்பாதையில் இதோ ஓர் பன்னாட்டுக்கருத்தரங்கம்! கோடிகொடுத்த கொடைஞனாம் வள்ளல் அழகப்பரையும் தேடிக்கொடுத்த அறிஞனாம் ந. சுப்புரெட்டியாரையும் சேர்த்தே கருத்தரங்கம் செம்மையாய் நடக்கின்றது. அள்ளிக்கொடுத்த அழகனும் சொல்லிக்கொடுத்த அறிஞனும் சேர்ந்தே அமைவது திருமகளும் கலைமகளும் சேர்ந்திருக்கும் பொழிவன்றோ! அத்தகைய சிறப்புடைய இப்பன்னாட்டுக் கருத்தரங்கினைத் திட்டமிட்டு நடத்தும் கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்களாகிய அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் மா. சிதம்பரம், ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை நிறுவுநர் மற்றும் செயலர் முனைவர் சு. இராமலிங்கம் ஆகியோரைப் பாராட்டி மகிழ்கின்றேன். கருத்தரங்கத் துணைத்தலைவர் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ம.துரை அவர்களுக்கும் பிற தமிழ்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும் எனது பாராட்டுதல்கள் உரித்தாகுக. ஆய்வுக்கட்டுரைகளை வழங்கியுள்ள பேராசிரியப் பெருமக்களுக்கும் எனது உளமகிழ் நன்றி அமைவதாகுக. கருத்தரங்கிற்குப் பல நிலைகளிலும் சிறப்பாகப் பணியாற்றிய அனைவருக்கும் மீண்டும் நன்றி சொல்லி இப்பன்னாட்டுக்கருத்தரங்கம் வெற்றிபெற்று அழகப்பா கல்லூரியின் மணிமகுடத்தில் மற்றுமொரு அழகிய வைரமாய் அணிசெய்ய அகமகிழ்ந்து வாழ்த்துகின்றேன்.

அன்புடன்,

(முனைவர் அ. பெத்தாலெட்சுமி)
முதல்வர்

# அணிந்துரை

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

"மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே"

என்பது சங்கத்தமிழ் எடுத்துரைக்கும் வாழ்வியல் விழுமியம் ஆகும். இத்தகைய உயர்ந்த நெறியைப் பின்பற்றித் தன் வாழ்நாளைத் தனக்கும் சமூகத்திற்கும் பயன் விளையும் கழனியாய் மாற்றிச் சென்றவர்களின் எண்ணிக்கை அளவிற் சிறிதே அகும். ஆயினும் தனக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலும் அத்தகைய சான்றோர் பெருமக்கள் வாழ்வின் வழியேதான் நன்னீர்ப் பஃறுளி மணலினினும் பலவாய் உயிர்களைத் தோற்றுவித்துத் தொடர்ந்து இயங்கி வரும் உலகம் நிலைபெறுகின்றது. உலகம் நிலைபெறல் வேண்டி, புகழ் எனின் உயிரும் கொடுத்துப் பழி எனின் உலகுடன் பெறினும் கொள்ளலன் என்று வாழ்ந்து சிறந்தவர்கள் கோடி கொடுத்த கொடைஞனாம் வள்ளல் அழகப்பரும் தேடிக்கொடுத்த அறிஞனாம் ந. சுப்புரெட்டியாரும் ஆவர். இவ்விருவரும் தமிழ்மொழிக்கும் தமிழ்ச்சமூகத்திற்கும் ஆற்றிய அரும்பெரும் பணிகள் வானத்து மீனினும் எண்ணிக்கையில் மிக்கன. இத்தகைய சான்றோர்களின் அரும்பெரும் பணிகளை நிகழ்காலச் சமூகம் அறிய வேண்டும் என்னும் உயரிய சிந்தனையுடனும் எதிர்காலச் சமூகத்திற்கான வரலாற்று ஆவணமாய் அமைதல் வேண்டும் என்கிற தொலைநோக்குப் பார்வையுடனும் ***கோடி கொடுத்த கொடைஞனும் தேடிக்கொடுத்த அறிஞனும்*** என்னும் இப்பன்னாட்டுக் கருத்தரங்கம் திட்டமிடப்பட்டு, தமிழ்நிலம் மட்டுமன்றி தமிழ் நிலத்திற்கு அப்பாலும் தமிழ் முழக்கம் செழித்து நிற்கும் இந்தியப் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், உலக நாடுகளில் தமிழ் வளர்க்கும் பேராசிரியர்கள், சான்றோர்கள் எனத் தேர்ந்தெடுக்கப்பெற்ற சிறப்புடையவர்களின் கட்டுரைகளைத் தன்னுள் கொண்டதாய் சிறப்புற நடத்தப்பெற உள்ளது. இச்சீரிய கருத்தரங்கின் விளைபயனாய் அமைந்திட்ட இவ் அரிய நூல் செறிவும் ஆழமும் அழகும் கொண்ட இருபது கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு அமைந்துள்ளது.

தான் பிறந்து செய்த தனிக்கொடையால் நம் முன்னோர் தான் துறந்த வண்மைக்குச் சான்றானாக, காரைச்செடிகள் மண்டிக் கிடந்த காரைமண் செய்தவத்தால் வந்துதித்த வள்ளல் அழகப்பரின் அரும் பெரும் கொடைப்பண்புகளை, குடியிருந்த வீடும் கொடுத்த வியன் பெருமையினை, கல்விக் கடலின் கலங்கரை விளக்கான வான்புகழினை, தேடியும் அள்ளிக் கொடுத்த செயற் செம்மையினை, வள்ளுவர் வழி வாழ்ந்து சிறந்த மாண்புதனை, சீர்த்திருத்தச் செயல் செழுமையினை, கடையெழு வள்ளல்களின் வரிசை மரபில் எட்டாம் வள்ளலாய் ஏற்றம் பெற்ற எழிலார் புகழினை, ரெட்டியாரின் நினைவுக் குமிழியில் வள்ளல் நீங்கா இடம்பெற்ற நேர்த்தியினைக் கற்றவர் முன் கொண்டு சேர்க்கும் கருத்துக் கருவூலங்களாய் அமைந்திட்ட கட்டுரைகள் ஆழ்கடலின் முத்துகளைக் கொண்டு அணிசேர்க்கப்பெற்ற மாலையாய் மிளிர்கின்றது.

தமிழின் துறையெங்கும் கலம் செலுத்திக் கற்றார் போற்றும் கவின்புகழ் கொண்டமைந்தவர் நல்லறிஞர் ந. சுப்புரெட்டியார். அத்தகைய சிறப்புடைய அறிஞரின் அறிவியல் சிந்தனைகளை, அறிவியல் பயிற்றுவிக்கும் அரிய நேர்த்திகளை, கவியனுபவத்தினை, சிற்றிலக்கிய ஆய்வுச் செழுமைகளை, கம்பன் கவிதை குறித்த ஆய்வு நுட்பங்களை, வைணவத் தமிழ் குறித்த வளம்சார் பார்வையினை, தமிழர்தம் இல்லறநெறி சிறக்க ரெட்டியார் எடுத்துரைத்த நெறிகளை,
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மூவர் தேவாரத்துள் முகிழ்த்தெழுந்த சிந்தனையை, ரெட்டியாரின் நினைவுக்குமிழிகள் வரலாற்றுப் பெட்டகமாய் வடிவம் பெற்ற சிறப்பினை, தமிழ்வள மேம்பாட்டில் ரெட்டியாரின் தனித்த பெரும் பணிகளை, முத்தொள்ளாயிர விளக்கத்தினை முன்நிறுத்தும் தகைமையினை, தமிழ் பயிற்றும் முறை குறித்த தனிப்பெரும் சிந்தனைகளை முன்மொழியும் வகையான் அமைந்த கட்டுரைகள் கட்டித் தங்கத்தினைக் கடிதின் முயன்றெடுத்து ஆபரணத் தங்கமாக்கி அணிசெய்து தந்த அரும் செயலினை ஒத்தமைந்துள்ளன.

கொடைஞனையும் அறிஞனையும் கற்றவர் உள்ளம் களிப்புறும் வண்ணம் கட்டுரைகளைக் கொண்டமைந்த இக்கருத்தரங்கமும், கருத்தரங்க நூல் வெளியீடும் காடு கொன்று கடிய நிலம் திருத்திக் கல்விப் பயிர் வளர்க்க, வள்ளல் அழகப்பர் தோற்றுவித்த அழகப்பா அரசு கலைக்ல்லூரியின் பவளவிழா ஆண்டில் நிகழ்வுறுவது பெரிதும் பொருத்தப்பாடு உடையதாகும். இதற்கான முழு முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கிய அழகப்பா அரசு கலைக்கல்லூரியின் முதல்வர் முனைவர் அ. பெத்தாலெட்சுமி அம்மையாருக்கு எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்வதில் பெரும் உவகை கொள்கின்றேன். சிந்தனைச் செழுமையும் சீரிய திட்டமிடலுமாய் அமைந்த இப்பன்னாட்டுக் கருத்தரங்கினைச் சிறப்போடு நடத்திடும் கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்களாகிய அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் மா. சிதம்பரம், ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை நிறுவுநர் மற்றும் செயலர் முனைவர் சு. இராமலிங்கம் ஆகியோரைப் பாராட்டி மகிழ்வதில் பெரும் உவகை அடைகின்றேன். கருத்தரங்கத் துணைத்தலைவர் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ம. துரை அவர்களுக்கும், பிற தமிழ்துறைப் பேராசிரியப் பெருமக்களுக்கும், அலுவலகப் பெருமக்களுக்கும் எனது பாராட்டு உரியதாகுக. ஆய்வுக்கட்டுரைகளை வழங்கியுள்ள தமிழ் நிலம், அயல் நிலம் சார்ந்த பேராசிரியப் பெருமக்களுக்கும், தமிழ்ச்சான்றோர்களுக்கும் எனது நல்வாழ்த்துகளை அறியத்தருவதில் அகம் மகிழ்கின்றேன்.

‘ ***கொடைஞனும் அறிஞனும்*** ’ என்னும் இவ்வரிய ஆய்வு நூல் காலம் கடந்து வரலாற்று ஆவணமாய் வளர்தமிழில் நிலைத்து நிற்கத் தமிழ்மகள், என்றும் தன் தளிர்க்கரத்தால் வாழ்த்தி நிற்பாள்!

அன்புடன்,

**முனைவர் சே கீதாலட்சுமி**
**துணை வேந்தர்**
**டாக்டர் எம். ஜி. ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்**
**(நிகர்நிலைப் பல்கலைக்கழகம்)**
**மதுரவாயில், சென்னை - 600 095**

# பொருளடக்கம்

# செய்தவத்தால் வந்துதித்த செம்மல்

**முனைவர் மா. சிதம்பரம்**
**இணைப்பேராசிரியர்**
**தமிழ் உயராய்வு மையம்**
**அழகப்பா அரசு கலைக்கல்லூரி**
**காரைக்குடி – 630 003**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தமிழன்னை காலம்தோறும் புலவர்களையும் புரவலர்களையும் ஈன்றெடுத்துத் தமிழ் மொழியின் நலமும் தமிழ்நிலத்தின் வளமும் செழிக்கச் செய்துள்ளாள். கண்ணுதற் கடவுளும் கழகமோடு இருந்து பண்ணுறத் தெளிந்தாய்ந்த பசுந்தமிழ், சங்கத்திருந்து தனிப்பெருமை பெற்ற காலத்து வாழ்ந்த வள்ளல் பெருமக்களை வரலாற்றில் ஆவணப்படுத்தும் அரும்பெரும் பணியைத் தமிழாய்ந்த புலவர்கள் தனிப்புகழுடன் செய்துள்ளனர். தமிழின் இத்தகைய நீண்ட நெடிய வரலாற்றின் தொடர்ச்சியில் இருபதாம் நூற்றாண்டில் இணையற்று விளங்கிய வள்ளல் அழகப்பர் ஆவார். மக்கள் மனங்களின் மாசகற்றி அறிவுச்சுடர் கொளுத்தி அவனியில் நிலைபெறச் செய்யும் அறிவுத்திருக்கோயிலாம் கல்லூரி கண்ட அழகப்பரின் புகழினை மூதறிஞர் வ.சுப. மாணிக்கனார் முன்மொழிந்து பாடிய நூலே ‘கொடை விளக்கு’ என்பதாம். அக் கொடை விளக்கு தந்து நிற்கும் வெளிச்சத்தின் பரவல் கொண்டு அழகப்பரின் செம்மார்ந்த பண்புகளை, பணிகளை விளக்கி ஆய்வதனை நோக்கமாகக் கொண்டு இக்கட்டுரை விரிகின்றது.

**பிறப்பான் அமைந்த கொடைக்குணம்:**

வள்ளல் அழகப்பர் மிகச்சிறந்த கல்வி வளம் நிறையப் பெற்றவர். தமிழ் இலக்கியம் கற்றுச் சிறந்தவர். சட்டக் கல்வி பயின்று அதனில் நனி சிறந்த தேர்ச்சி பெற்றவர்.வாணிகம் கற்றுப் பங்குச் சந்தையில் வெற்றி பெற்ற பெருமையைக் கொண்டமைந்தவர். இவையாவும் ஒருவருக்குக் கற்றறிந்த வகையான் அமையும் மேன்மைகள் ஆகும். ஆனால் கொடைக்குணம் கற்றலால் மட்டும் வந்தமைவதன்று. எனவேதான் வள்ளல் அழகப்பர் கொடுத்தலால் வந்தமையும் உயர் குணத்தை எங்கும் கற்றாரில்லை. பிறப்பின் பொழுதே அக்குணம் அழகப்பருக்கு இயல்பாய் அமைந்திருந்தது. அதனாலே அவர் மிகச்சிறந்த கொடையாளராகச் சிறக்க முடிந்தது. இதனை வ. சுப. மாணிக்கனார்,

> “இலக்கியம் கற்றான் இயல்சட்டம் கற்றான்
> கலக்கிய வாணிகமும் கற்றான்; - இலக்கம்
> அடுக்கப் பயின்ற அழகப்பன் எங்கோ
> கொடுக்கப் பயின்றான் கொடை” ( கொடை விளக்கு: 73 )

எனக் குறிப்பார்.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**சோழனையும் செம்மையால் வென்றவர்:**

காடு கொன்று கடிய நிலம் திருத்தி நாடமைத்த நல்லரசர்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கவன் சங்க காலத்துச் சோழ மன்னர் மரபில் மாப்புகழ் பெற்றமைந்த கரிகால்பெருவளத்தான் ஆவான். இம்மன்னின் இத்தகைய சீரிய பெரும் பண்பினை,

"காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கி" ( பட்டினப்பாலை: 283 – 284)

எனப் பட்டினப்பாலை எடுத்துரைக்கும். ஆனால் வள்ளல் அழகப்பரோ கரிகாலனினும் வள்ளல் தன்மையில் மேம்பட்டவர் ஆவார். கரிகால் பெருவளத்தான் மக்களிடம் இருந்து திரட்டிப் பெற்ற வரிப்பணத்தாலே நாட்டில் வளங்கள் பெருக்கினான். தானே முன்னின்று முயன்று ஈட்டிய பொருள் கொண்டு சோழ வளநாடு செழிக்கப்பணிகள் செய்தான் இல்லை. ஆனால் அழகப்பரோ தன்னை வருத்தித் தான் ஈட்டிய பொருள் கொண்டு காடழித்துக் கல்லூரியாக்கி வளம் பெருக்கினார். இதனை,

"காடு கெடுத்துக் கரிகால் வளவனார்.
நாடு படைத்தமை நாமறிவோம்; - கூடும்
வரிப்பொருளைக் கொண்டு வரிமிகுக்கச் செய்தான்;
உரிப்பொருளோ ஈந்தான் உழைத்து?" ( கொடை விளக்கு:21)

என எடுத்துரைக்கும் கொடை விளக்கு.

**பாரியினும் மேம்பட்ட பண்பாளன்:**

சங்க இலக்கியங்கள் புகழ்ந்துரைக்கும் கடையெழு வள்ளல்களில் பெரும் சிறப்பிற்கு உரியவன், வாடி நின்ற முல்லையின் வருத்தம் கண்டு, தான் ஏறி வந்த தேரினையும் வாரி வழங்கிய பறம்பு நிலம் ஆண்ட பாரி மன்னன் ஆவான். இவனின் கொடை சிறப்பு இத்துடன் முடிந்ததன்று. தன்னைப் பாடி வந்த புலவர்களுக்கும் நாடி வந்த இரவலர்களுக்கும் இல்லை என மாட்டாது இசைந்தளித்த பெரும் கொடைமையும் இவனுக்கே உரியதாகும். பாரியின் இத்தகைய கொடைத்தன்மையை,

"கடந்து அடு தானை மூவிரும் கூடி
உடன்றனிர் ஆயினும், பறம்பு கொளற்கு அரிதே;
முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நல்நாடு;
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்;
யாமும் பாரியும் உளமே;
குன்றும் உண்டு; நீர் பாடினிர் செலினே" ( புறநானூறு: 110 )

என உரைக்கும் புறநானூறு. இதன்வழி, பாரி தான் வாழ்ந்த பறம்பு மலையினைப் பரிசிலர்க்கு வழங்கினான் இல்லை என்பது பெறப்படும். ஆனால் வள்ளல் அழகப்பரோ மகளிர் கல்லூரி

நிறுவுதற்கு இடம் வேண்டும் என்ற போழ்து தான் குடியிருந்த வீட்டையும் விட்டுக் கொடுத்த விழுப்புகழுடையவர் என வ. சுப.மாணிக்கனார் புகழ்ந்துரைப்பார். இத்தகைய செய்தியினை எடுத்துரைக்கும் பாடல்களாக,

“ஊர் கொடுத்தான் கற்றார்க்கு; உரையாதமுல்லைக்குத்
தேர்கொடுத்தான் என்று திறம்பாடப் -பேர்கொடுத்த
பாரியும் வாழ்ந்த பறம்பு கொடுத்தானோ?
ஆரிலும் தந்தான் அழகு” (கொடை விளக்கு: 22)

“கோடி கொடுத்த கொடைஞன் குடியிருந்த
வீடுங் கொடுத்த விழுச்செல்வன்: - தேடியும்
அள்ளிக் கொடுத்த அழகன் அறிவூட்டும்
வெள்ளி விளக்கே விளக்கு” (கொடை விளக்கு: 77)

என்பன வந்தமைகின்றன.

**மாரியினும் மாண்புடையான்:**

இவ்வுலக உயிர்களின் நிலை வாழ்விற்கு முதற் காரணியாய் அமைவது நீர் வளம் ஆகும். அத்தகைய நீர் வளத்தினை மண்ணிற்குத் தந்து பயிர் காத்து அதன் வழி உயிர் காத்து நிற்பது வான் மழை ஆகும். கண்ணிற் காண இயலாத கடவுளின் ஆற்றல் அவனது தண்ணருளின் செயலாகிய மழையால் உணரப்படுகிறது என்பதனாலேயே கடவுள் வாழ்த்துக்கு அடுத்ததாக வான் சிறப்பை அமைத்தார் வான்புகழ் வள்ளுவர். ஒரு நாடு வேளாண்மை சார்ந்த சமூகமானாலும், வறண்ட பாலைநிலச் சமூகமானாலும் அதன் உயிர்களின் ஆதாரம் மழைநீரே ஆகும். மாந்தரது வாழ்க்கையின் சிறப்பும் அமைதியும் வலுவான பொருளாதாரத்தின் அடிப்படையிலேயே அமைகிறது. மழை இன்றேல் பொருளியல் வாழ்வே பொன்றிவிடும். பொருள் நிலைக்கு அடியாய், மூலத்தொழிலுக்கு இன்றியமையாததாய் விளங்குவது மழை. வான் வழங்காவிட்டால் பயித்தொழில் நடவாது. உழவு இல்லையென்றால் விளைபொருள் இல்லை. உணவு இல்லையானால் பசிக்கொடுமை மக்களை வாட்டும்; அவர்களது வாழ்க்கையில் அமைதி நிலவாது. உலகில் அமைதியும் சிறப்பும் நிலவும்போதுதான் இறையுணர்வும் தொடரும்; வளமான பொருளியல் வாழ்க்கையில்தான் மனிதப்பண்பு மிளிரும்; ஒழுக்கம் மேன்மையுறும். அத்தகைய நிலை கருதியே வள்ளுவப் பெருந்தகை,

“விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது” ( திருக்குறள்: 16 )

“வானின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று” (திருக்குறள்: 11)

எனக் குறித்தார். இத்தகைய உயரிய மேன்மைகள் எல்லாம் வான் மழைக்கு அமைந்ததே எனினும் அதனிடத்தும் ஒரு குறையுண்டு. வான்மழை, நீரை வழங்குமே அன்றி வேளாண்மை சிறக்க உழுது வித்திடும் உயர் பண்பு உடையதன்று. ஆனால் அழகப்பரோ செல்வம் என்னும் நீரைப் பெய்ததோடு மட்டும் நில்லாமல் மக்களின் மனதில் ஏர் பூட்டி உழுது கல்வி என்னும் வித்தினை விதைத்த செம்மையுடையவர் ஆவார். எனவே அழகப்பர் மழையினும் மாண்புடையவராய் அமைந்தார் என்பதனை,

"நீர்பெய்யும் மாரிக்கு நீரை வழிப்படுத்தி
ஏர்செய்யும் ஆற்றல் இயல்பில்லை: -சீர்செய்யும்
செல்வநீர் பெய்து சிறுமக்கள் நெஞ்சத்துக்
கல்வியேர் பூட்டினான் கற்று" ( கொடை விளக்கு: 23)

என்ற பாடல் எடுத்துரைத்து அமைகின்றது. அழகப்பரின் இத்தகைய சிறப்புகளை வ.சுப. மாணிக்கனார்,

பாரியை வென்றான் மனைக்கொடையால் பாரிநிகர்
மாரியை வென்றான் மதிக்கொடையால் - நீரியைந்த
ஏரியை வென்றான் இடக்கொடையால் காலவாட்
கூரினை வெல்வான் கொடுத்து ( கொடை விளக்கு: 24)

எனப் பிறிதோர் பாடலிலும் எடுத்துரைக்கின்றார்.

**சுந்தரர் பாட்டில் திருத்தம்:**

மானுடம் தழைக்கத் திருமுறை பாடியருளிய அருளாளர்களுள் ஒருவராகிய சுந்தரர் ஏழாம் திருமுறையில் தகைமை அமையாத மனிதர்களைப் புகழ்வதால் பயனில்லை என்பதனைக் குறித்துரைப்பார். அத்தகைய பாடலின் அரும் பொருள் 'வலியும் வீரமும் இல்லாதவனை, 'இவன் மல்லுக்கு வீமனே போல்வான்' என்றும் வில்லுக்கு வெற்றியையுடைய அருச்சுனனே போல்வான்' என்றும், கொடுத்தற்குணம் இல்லாதவனைக் 'கொடைக்குப் பாரியே போல்வான்' என்றும் இல்லது கூறிப்பாடினும், புலவர்கள் வேண்டுவதைக் கொடுப்பார் இவ்வுலகில் ஒருவரும் இல்லை; ஆதலின், நீற்றைக்கொண்ட திருமேனியையுடைய புண்ணிய வடிவினனாகிய சிவபிரானது திருப்புகலூரைப் பாடுமின்; பாடினால், பல உலக அடுக்கிற்கும் மேல் உள்ள அமரரது உலகத்தை ஆளுதல் உளதாகும். இதனை ஐயுறற் காரணம் யாதும் அறுதியாக இல்லை என்பதாய் அமையும். அத்தகைய பாடல்,

மிடுக்கிலாதானை வீமனே விறல்
    விசயனே வில்லுக்கு இவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே என்று
    கூறினும் கொடுப்பார் இலை
பொடிக்கொள் மேனி எம் புண்ணியன் புகலூரைப்

பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேல் அமருலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே. ( 7: 34: 2 )

என்பதாய் அமைகின்றது. இதனுள் கொடுக்கிலாதாரைப் பாரியே எனினும் கொடுப்பாரில்லை எனப் பாரியின் வள்ளல் தன்மையினை விதந்துரைப்பார் சுந்தரர். கல்லூரிக்காகத் தன் வீட்டையும் வழங்கிய அழகப்பர் வண்மை பாரியின் வண்மையினும் பெரிது ஆதலின் இனி 'அழகப்பன் என்றே அழைப்பினும் கொடுப்பாரில்லை' எனச் சுந்தரரின் பாட்டினைப் திருத்தம் செய்ய வேண்டும் என்பார் வ. சுப. மாணிக்கனார். இதனை விளக்கும் பாடல்,

"பாரியை விஞ்சிய பல்கொடையால் சுந்தரன்
பேரியல் பாட்டில் பெயர்மாற்றம்- நீரியல்
செல்வ அழகப்பச் சீரோன்நீ என்றிசைத்தும்
ஒல்வ கொடானென் றுரை" ( கொடை விளக்கு: 25)

என்பதாகும்.

**பேகனினும் பெருமையுடைய வள்ளல்:**

கடையெழு வள்ளல்களுள் மழையால் வாடி நின்ற மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கியமையால் பெரும் புகழ் பெற்றவன் பேகன் ஆவான். கார்முகில் கண்டு தோகை விரித்து மயில் ஆடும் என்பதனை அறியாதவன் அல்ல பேகன். மயில் உடுத்தாது, போர்த்தாது என்பது அறிந்தும் படாமஞ்ஞைக்கு ஈந்த பேகனின் வள்ளல் தன்மையை 'கொடைமடம்' எனப் புலவோர் உலகம் கொண்டாடுகின்றது. இதற்குச் சான்றாதாரங்களாய்,

"கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுத்த வல்லது" ( புறநானூறு: 142)

"உடாது போரா ஆகுதல் அறிந்தும்
படாம் மஞ்சளுக்கு ஈந்த எங்கோ" (புறநானூறு: 141)

என்ற புறநானூற்றுப் பாடல்களின் அடிகள் அமைகின்றன. மயில் உடுத்துக்கொள்ளாது போர்த்தாது என்று அறிந்தும் பேகன் தன்னறிவு மயங்கி மயில்களுக்குப் போர்வை வழங்கியதனைப் போல் அல்லாது அழகப்பர் தன்னறிவில் மயங்காது தன்னறிவைக் கொண்டு கல்லாதவர் அறியாமை தொலைக்கப் பொருள் வழங்கினார். எனவே பேகனினும் அழகப்பர் உயர்ந்து நிற்கின்றார் என்பதனை,

"பேகன் கொடையைப் பெருமடம் என்றுமுன்
வேகம் படமொழிந்தார் மேலோரார் – பேகன்
மடம்பட் டெறிந்தான் மயிற்போர்வை கல்லார்
மடம்பட ஈந்தான் மதி" ( கொடை விளக்கு: 2 )

என விளக்குவார் வ. சுப. மாணிக்கனார்.

**குமணனினும் கொடையில் உயர்ந்தோன்:**

குமணன் சங்ககால மன்னன். முதிரம் என்னும் நாட்டினை ஆண்டவன். சிறந்த கொடைஞனாக விளங்கியவன். தன்னை நாடி வந்த புலவர்களுக்கு வரையாது ஈந்த வள்ளல். இவன் கடையெழு வள்ளல்கள் காலத்துக்குப் பின்னர் வாழ்ந்தவன். இவனைப் பாடிப் பரிசில் பெற்ற பெருஞ்சித்திரனார் தான் கொண்ட பொருளினை எல்லோருக்கும் கொடுமதி என்று தனது இல்லக்கிழத்தியிடம் உரைக்கும் வகையான் அமைந்த,

"எல்லோர்க்கும் கொடுமதி மனை கிழவோயே!
பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்து வேல் குமணன் நல்கிய வளனே" ( புறநானூறு: 163)

என்ற புறநானூற்றின் பாடல் அடிகள் குமணனின் கொடைச் சிறப்பினை விளக்கி நிற்கின்றது. குமணனின் இளவலான இளங்குமணன் குமணனின் நாட்டினை வஞ்சனையால் கொண்டது மட்டுமன்றிக் குமணனை நாடு கடத்தினான். மேலும் குமணன் தலையைக் கொண்டு வருவோருக்குத் தக்க பரிசில் வழங்கப்படும் என்றும் அறிவித்திருந்தான். குமணனிடம் பரிசில் பெறச் சென்ற புலவர் பெருந்தலைச்சாத்தனார் குமணன் உறைந்திருந்த காட்டகத்துச் சென்று அவனைப் பாடிப் பரவினார். தன்னைப் பாடிப் பரவிய புலவருக்குப் பரிசில் தர வகையறியாது நின்ற குமணன் தன் தலையையே வெட்டியெடுத்து எடுத்துச் செல்வதற்காகப் புலவர்க்கு வாள் கொடுத்தான். குமணன் தந்த வாள் கொண்டு வந்த பெருஞ்சித்திரனார் இளங்குமணனிடம் வாளைக் காட்டி நிகழ்ந்தது கூறினார். இத்தகைய நிகழ்வினை,

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே;
துன்னரும் சிறப்பின் உயர்ந்த செல்வர்,
இன்மையின் இரப்போர்க்கு ஈயாமையின்,
தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே;
தாள்தாழ் படுமணி இரட்டும், பூணுதல்,
ஆடியல் யானை பாடுநர்க்கு அருகாக்
கேடில் நல்லிசை வயமான் தோன்றலைப்
பாடி நின்றெனன் ஆகக்,கொன்னே
பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல் என்
நாடுஇழந் ததனினும் நனிஇன் னாது என,
வாள்தந் தனனே, தலை எனக்கு ஈயத்,
தன்னிற் சிறந்தது பிறிதுஒன்று இன்மையின்;
ஆடுமலி உவகையோடு வருவல்,
ஓடாப் பூட்கைநிற் கிழமையோன் கண்டே. ( புறநானூறு :165 )

என்ற புறப்பாடல் வலியுறுத்தி நிற்கும். இத்தகைய குமணனின் செயல் சிறப்புடையது ஆயிடினும் குமணன் ஈந்தது புலவரின் வறுமையின் பொருட்டும் தனது வள்ளண்மையின் பொருட்டுமே ஆகும்

என்பதனை அறிதல் வேண்டும். இதனால் நாடு பெற்ற பயன் யாதொன்றும் இல்லை. ஆனால் வள்ளல் அழகப்பரோ ஈந்த கொடையால் நாடு நலம் பெற்றது என அழகப்பரின் கொடைப்பயனை சிறந்துரைப்பார் வ. சுப. மாணிக்கனார். இதனை எடுத்துரைக்கும் பாடல்,

“காட்டுக் குமணன் கருந்தலை கொள்ளெனப்
பாட்டுப் பெருந்தலையைப் பார்த்துரைத்தான் - நாட்டு
வளர்ச்சி கருதியோ வாளீந்தான்? வந்தான்
தளர்ச்சி கருதியோ தான்?” ( கொடை விளக்கு: 27)

என்பதாகும்.

**கல்விக்குப் பொருள் ஈந்த வள்ளல்:**

தமிழ் மன்னர் வரலாற்றில் புலவர்களுக்குப் பொருள் கொடுத்துப் புகழ் கொண்ட வள்ளல்கள் எண்ணற்றோர் உண்டு. அவர்கள் அனைவரும், புலவர்கள் கற்றதனான் அமைந்த புலமை கொண்டு தன்னைப் புகழ்ந்து பாடப் பொருள் வழங்கிய மேன்மை கொண்டவர்கள் ஆவர். வள்ளல் அழகப்பரோ கற்றார்க்குப் பொருள் வழங்கியவர் அல்ல. கல்லாதவர்க்குக் கல்வி என்றும் பொருள் வழங்கிக் காலம் போற்ற நிலைத்தவர் என்பதனை,

“பாடும் புலவோர்க்குப் பண்டெழு வள்ளியோர்.
நாடும் பிறவும் நயந்தளித்தார்:- ஓடுகின்ற
கல்லா இளைஞர்க்குக் கல்விப் புலமளித்தான்.
எல்லாரும் வாழ இனிது” (கொடை விளக்கு: 28)

என்ற கொடை விளக்கின் பாடல் எடுத்தியம்புகின்றது.

**கரியாய் நின்ற கல்வி வள்ளல்:**

சங்க இலக்கியங்கள் எடுத்தியம்பும் தமிழ் மன்னர்களின் கொடைகள் பொய்யாய், கற்பனையாய் அமைந்தவையோ எனச் சிலர் ஐயுறுதல் கூடும். அவ்வாறு ஐயுறுவார்க்கு வள்ளல்களின் கொடை குறித்த செய்திகள் பொய்யன்று. உண்மையே என உணர்த்தும் நிகழ்காலச் சான்று ஒன்று வேண்டுமன்றோ? அத்தகைய சான்றாய் (கரி) அமைந்தவர் வள்ளல் அழகப்பர் என்பதனைக் கொடை விளக்கு,

“தான்பிறந்து செய்த தனிக்கொடையால் நம்முன்னோர்
தான்துறந்த வண்மைக்குச் சான்றானான். - வான்கறந்த
மாரியோ ஒப்பான்? மழைப்பின் அடிவருடும்
ஏரியோ ஒப்பான் இவன்?” (கொடை விளக்கு: 29)

என எடுத்தியம்புகின்றது.

**வள்ளல் கண்ட வள்ளல் :**

கோட்டையூரில் வள்ளல் அழகப்பருக்குப் பாராட்டுக் கூட்டம் ஒன்று நிகழ்கின்றது. அதற்குத் தலைமை தாங்கியவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் கண்ட அண்ணாமலையரசர் ஆவார். அண்ணாமலையரசர் அழகப்பருக்கு ‘வள்ளல்’ எனும் பட்டத்தினை உளம் நிறையச் சூட்டி மகிழ்ந்தார். பட்டம் பெற்றோர் பெரிதும் மகிழ்தல் பாரில் இயல்பன்றோ! ஆனால் செல்வார்க்கே செல்வம் தகைத்ததாகிய பணிவுடைமையைக் கைக்கொண்ட அழகப்பர் அண்ணாமலையரசர் இருக்கும் போது தன்னை வள்ளல் என்பது பொருந்தாது. ‘குட்டி வள்ளல்’ என்றுதான் என்னைச் சொல்ல வேண்டும் எனக் கூறி நின்றார். இக்குறிப்பை 15-2-1957 ஆம் நாள் கோட்டையூரில் நடந்த பாராட்டுக் கூட்டத்தில் அழகப்பாவே நினைவுகூர்ந்து சொல்கின்றார்.இதனை மனத்துள் கொண்ட வ. சுப. மாணிக்கனார் இத்தகைய நிகழ்ச்சியினை,

“அள்ளும் புகழாளன் அண்ணா மலையரசன்
வள்ளல் எனச்சொல்ல வந்தமகன் - பள்ளும்
பறையும் முதலாப் பழந்தமிழ் மக்கள்
அறையும் புகழான் அழகு” ( கொடை விளக்கு: 30 )

எனக் கொடை விளக்கில் பதிவு செய்கின்றார்.

**தமிழ்த் தவம்:**

தமிழ்ப் புலவோர் பலர் தமிழ்த்தாய், வார்த்தை வரங்களைத் தங்களுக்கு அள்ளி வழங்க மாட்டாளா? என்று ஏங்கித் தவம் செய்து நிற்கின்றனர். ஆனால் தமிழ்த்தாய்க்கே ஒரு தாகம் இருந்ததாம். அது தனக்குள் அமைந்த ‘வள்ளல்’ என்னும் சொல்லிற்கு வாழ்வியல் சான்றாக அமைதற்கு ஒரு மகன் அவனியில் பிறக்க மாட்டானா? என்பதுதானாம். தமிழின் குறையைத் தணிப்பதற்காகப் பிறந்து, வள்ளல் என்னும் பெயருக்கு ஏற்ப வாழ்ந்து காட்டியவர் வள்ளல் அழகப்பர் என்பார் வ. சுப.மாணிக்கனார். இதனை எடுத்துரைக்கும் பாடல்,

“வள்ளற் றமிழ்ச்சொல் வணங்கித் தவஞ்செய்து
கொள்ளப் பிறந்த கொடையழகன் - உள்ள
உடைமை அனைத்தும் ஒழித்தான்; ஒழியார்
மடமை தொலைக்கும் மகன்” (கொடை விளக்கு: 31)

என்பதாய் அமைகின்றது. மிதிலை நகரம் நீண்ட நாட்களாய்ப் பெரும் தவம் செய்தது. அந்நகர் செய்த தவத்தின் மேன்மையால் மலர்மேல் உறையும் மங்கையாம் இலக்குமி சீதையாய் மிதிலையில் வந்து பிறந்தாள் என்பதனைக் கம்பர்,

“மை அறு மலரின் நீங்கி, யான் செய் மா தவத்தின் வந்து,
செய்யவள் இருந்தாள் : என்று, செழு மணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி, அந்தக் கடி நகர்,கமலச் செங்கண்

ஐயனை ‘ஒல்லை வா’ என்று அழைப்பது போன்றது அம்மா”
( கம்பன்: மிதிலைக் காட்சிப் படலம் : 564.)

எனக் காட்சிப்படுத்துவார். இச்செய்தியானது ‘வள்ளல்’ என்னும் சொல்லிற்குச் சான்றாய் அழகப்பர் பிறக்கத் தமிழ் செய்த தவத்தோடு ஒத்தமைவதனை உணர முடிகின்றது.

**கல்லூரி கண்ட காவிய நாயகன்:**

3-7-1947 ஆண்டு சென்னை அடையாற்றில் அன்னிப் பெசண்டு அம்மையார் நூற்றாண்டு விழா நிகழ்கிறது. அதற்குத் தலைமை தாங்கியவர் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் லட்சுமண சாமி முதலியார் ஆவார். அவர் தனது உரையில் தமிழகத்தின் பின் தங்கிய பகுதிகளில் புதிய கல்லூரிகள் நிறுவப் பலர் முன்வர வேண்டும் என்கிற வேண்டுகோளை மொழிகின்றார். அதனைக் கேட்ட அழகப்பர் எழுந்திருந்து ராமநாதபுர மாவட்டத்தில் ஒரு கல்லூரி நிறுவுவேன் என்று உரைத்ததோடு மட்டுமல்ல. ஒரு திங்களுக்குள் காரைக்குடியில் கல்லூரியைத் தோற்றி, சொல்லிய வண்ணம் செயல்கொண்ட செம்மையாளராய் விளங்கினார். இவ்வாறு அழகப்பர் கல்லூரி தோன்றிய வரலாற்றினை,

“அன்னை பெசண்டினார் ஆண்டு நிறைவிழாவில்
சென்னைத் துணைவேந்தர் செல்சொல்லால் - இன்னேயோர்
கல்லூரி காண்பனெனக் கையொலிக்கக் கூறினான்
நல்லூறும் வாயான் நமக்கு” (கொடை விளக்கு: 8)

என எடுத்துரைக்கும் கொடைவிளக்கு. இவ்வாறு கல்லூரி உருவாகிய இடம் காரைச் செடிகள் மண்டிய காடாய்க் கிடந்தது. இவ் இடத்தினைப் பயன்பெறும் வண்ணம் ஏதும் செய்தல் இயலாது என்றெண்ணி நிலமகளே கைவிட்டாள். நிலமகளால் கைவிடப்பட்ட நீண்ட பாலைவனம் போன்ற இடத்தினைக் குலமகள் போல் நின்று காத்துப் பண்படுத்திக் கல்லூரியாய்க் கட்டமைத்தவர் வள்ளல் அழகப்பர். அழகப்பரின் இத்தகைய அரும்பெரும் செயலின் மேன்மையினை,

“நிலமகள் கைவிட்ட நீள்சுரத்தை வீட்டுக்
குலமகள் போலக் குறித்தான் - வலமகள்
தன்னையே காமுறத் தானே கொடுத்தற்குப்
பொன்னையே காமுற்றான் போந்து” ( கொடை விளக்கு: 35)

எனக் குறித்துப் போற்றுவார் தமிழறிஞர் வ. சுப. மாணிக்கனார். மேலும் அழகப்பர் கல்லூரியின் அறிவியல் கட்டிடங்கள் மிக விரைவாகக் கட்டி முடிக்கப்பட்டன. ஒரு இரவில் வெள்ளி தோன்றுமுன் வியத்தகு கட்டிடங்கள் விரைவாய் எழவேண்டும் என்பதற்காக இரவில் மின் விளக்குகள் அமைத்து வேலை செய்ய வைத்தார் அழகப்பர் என்பதற்கு,

“வெள்ளி விடியுமுன் வீறுசால் கட்டிடங்கள்
உள்ளும் உயரம் உயர்த்துவான் - நள்ளிரவும்

மின்விளக்கம் வைத்து மிகவிரைந்து கட்டினான்;
பொன்விளக்கங் கண்ட புதிர்'' ( கொடை விளக்கு: 97)

என்ற பாடல் அடிகள் சான்றாகும். முதலில் தோன்றிய அழகப்பர் கலைக் கல்லூரியின் குறிக்கோளானது அன்பு, அறம், பணி என்பதனைக் கொண்டு அமைதல் வேண்டும் என்பதற்குப் பெருந் துண்டுகோலாக இருந்தவர் கம்பன் அடிப்பொடி திரு சா. கணேசனார் ஆவர். அதனை ஏற்று அழகப்பர் செயல்படுத்திய திறத்தினை,

''முன்னைக் கலைப்பள்ளி மூத்த குறிக்கோளைக்
கன்னித் தமிழ்ச்சொலாற் காதலித்தான் - நன்னீர
அன்பும் பணியும் அறமும் எனமூன்றும்
இன்பிற் குறித்தான் எழுத்து'' (கொடை விளக்கு: 105)

என விளக்கிடும் கொடை விளக்கு.

**சிலம்பின் வரியிசைத்த சீர்மை:**

காரை நகரின் காடுகள் நரிகள் இசைத்த காடுகளாய்க் கவின் இழந்து கிடந்தன. அத்தகைய இடங்களில் கல்லூரியைத் தோன்றச் செய்து, சிலம்பின் கானல் வரிகளென்னும் கவினுறு வரிகளாம்,

''திங்கள் மாலை வெண்குடையான்,
சென்னி,செங்கோல்-அது ஓச்சி,
கங்கை-தன்னைப் புணர்ந்தாலும்,
புலவாய்; வாழி, காவேரி!
கங்கை-தன்னைப் புணர்ந்தாலும்,
புலவாதொழிதல், கயல் கண்ணாய்!
மங்கை மாதர் பெரும் கற்பு என்று
அறிந்தேன்; வாழி, காவேரி!'' ( சிலம்பு: கானல்வரி: 21 – 28 )

என்பனவற்றை இசைக்கும் வண்ணம் மாற்றிய பெருமை வள்ளல் அழகப்பரையே சேரும். மேலும் பாம்புகள் படம் எடுத்து ஆடிய இடங்களைப் பந்தாடும் இடங்களாக மாற்றிய பெருமையும் அழகப்பரையே சாரும் என்பதனை,

''நரியிசைத்த காடு நகராய்ச் சிலம்பின்
வரியிசைக்கப் பள்ளி வகுத்தான். - உரியசைத்துப்
பாம்பா டிடமெல்லாம் பந்தா டிடமாகும்:
தாம்பாடு கன்னியர்க்குத் தாம்'' (கொடை விளக்கு: 36)

என விளக்கியுரைப்பார் வ. சுப. மாணிக்கனார். மேலும் ஒரு விளக்குகள் கூட இல்லாது இருளடைந்து கிடந்த உதிகாட்டில் வெறும் விளக்கல்ல. மனிதர்களின் அறியாமை என்னும் இருளினை அகற்றும் கல்வித்திருவிளக்கினை ஏற்றிய பெருமை உடையவர் வள்ளல் அழகப்பர் என்பதற்கு,

“ஒருவிளக்கு இல்லா உதிகாட்டில் கல்வித்
திருவிளக்கு ஏற்றிய செய்யன்;- பெருவிளக்கு
மின்னொளி ஆயிரம் வீதிக்கு நாட்டினான்;
தன்னொளி கண்ட தகை” (கொடை விளக்கு: 18)

என்ற பாடல் அடிகள் சான்றாகும்.

**உடற்கல்விக் கல்லூரி:**

மாணவர் சமூகம் அறிவு நிறைந்த சமூகமாய் உருப்பெறுதல் மட்டும் வளமான பாரதம் அமைய போதுமானதன்று. மாணவர்கள் உடல் வலிமை உடையவர்களாய் அமைதலும் மிகவும் இன்றியமையாதது ஆகும். திருமூலரும்,

“உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே” ( திருமந்திரம்: 211)

எனவும் குறித்தார். பாரதியும்,

“உடலினை உறுதி செய்” (பாரதி: புதிய ஆத்திச்சூடி : 5)

என்றான். வள்ளல் அழகப்பர் மாணவர்கள் உடல்நலம் பேணல் என்பது சிறப்பானது என்பதாலே உடற்பயிற்சிக் கல்லூரியையும் நிறுவினார். இதனை,

“வல்ல உடம்பின்றேல் வாழ்வு நலிவறிந்தான்
நல்லவுடன் கல்லூரி நாட்டினான் - சொல்லும்
அகத்தும் புறத்தும் அணிநலஞ் செய்ய
மிகத்தான் உழைத்தான் மெலிந்து” (கொடை விளக்கு: 49)

என்ற பாடல் உணர்த்துகின்றது.



**பல்கலைக்கழகங்களுக்கு நிதியுதவி:**

இந்தியாவின் தென்பகுதியில் மைசூர், திருவிதாங்கூர், ஆந்திரம், அண்ணாமலை போன்ற பல்கலைக்கழகங்கள் தோன்றுவதற்கு முந்தையது சென்னைப் பல்கலைக்கழகம் ஆகும். எனவேதான் சென்னைப் பல்கலைக்கழகம் ‘அன்னைப் பல்கலைக்கழகம்’ என்று அழைக்கப்பெறும் பெருமையுடைதாய் விளங்குகின்றது. சென்னைப்பல்கலைக்கழகம் செழிப்புற்று வளர்வதற்கு வள்ளல் அழகப்பர் இல்லை என மாட்டாது இசைந்து பொருள் தந்தார். மேலும் கேரளம் சிலம்பு பிறந்த நாடெனக் கருதி அங்கு தமிழ்த்துறை அமைதற்குப் பெரும் நிதியளித்தார். ( கொடை விளக்கு பா. 57 – 58)

**தொழிற்கல்வி நிறுவனங்கள் தோற்றிய கொடையாளர்:**

மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றை ஈடு செய்வது அவனது பொருளாதாரமே ஆகும். பொருளாதாரம் உழைப்பின் உறுபயனாய் வந்தமையும். இவ் உழைப்பிற்கு இன்றியமையாத தேவை தொழிற்கல்வியே ஆகும். ஏதேனும் ஒரு தொழிலைக் கற்றுக் கொண்டவர்கள் உழைத்துத் தம் வாழ்வை மேம்படுத்திக்கொள்கின்றனர். இளைஞர்கள் ஏட்டுக்கல்வியை மட்டும் கற்றுவிட்டு, வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து வேலைக்காகக் காத்திருப்பதனை விட சப்பான் நாட்டு இளைஞர்களைப் போல் ஏதேனும் ஒரு தொழிலையும் கற்றிருந்தால் வேலைக்காகக் காத்திருக்க வேண்டிய தேவை இல்லை. மேலும் தொழிற்கல்வி தனிமனித முன்னேற்றத்தின் வழி குடும்ப முன்னேற்றத்திற்கு மட்டுமன்றி நாட்டின் முன்னேற்றத்திற்கும் இன்றியமையாததாய் அமைகின்றது என்பதனை உணர்ந்தவர் வள்ளல் அழகப்பர்.எனவே தொழிற்கல்வி கற்பதற்கான கல்லூரி ஒன்றினையும் தொடங்கினார். அழகப்பரின் இத்தகைய தொலைநோக்குப் பார்வையுடன் அமைந்த சீரிய செயலினை வ. சுப. மாணிக்கனார்,

“தொழிலோடு கல்வி தொடர்புற்றால் அன்றோ.
எழிலாடு நாடாகும் என்பான் - பொழிலாடு
காரைக் குடியாகக் காடு திருத்தினான்
நீரைக் கொணர்ந்தான் நிலத்து” ( கொடை விளக்கு: 52)

“பொறிவளங்கள் நாடு பொலிய அமைத்தான்
அறிவினங்கள் சுற்ற அவன்” ( கொடை விளக்கு: 16)

எனப் போற்றுகின்றார்.

**பள்ளிகள் பல கண்ட பண்பாளர்:**

மனிதர்கள் உலகில் இயற்றும் அறங்கள் பலவகையானதாய் அமைகின்றன. அத்தகைய அறங்களுள் எல்லாம் தலையானதாய் அமைவது ஏழைக் குழந்தைகளுக்கு எழுத்தறிவிக்கும் கல்விசார் அறமாகும். எனவேதான் பாட்டுக்கொரு புலவன் பாரதியும் கூட,

இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்,
ஆலயம் பதினாயிரம் நாட்டல்,
பின்னருள்ள தருமங்கள் யாவும்,
பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்,
அன்னயாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்” ( பாரதியார்: கலைமகள்: 9)

எனப் போற்றியுரைப்பார். வள்ளல் அழகப்பர் மாணவ சமுதாயம் கல்வி கற்றுக் கல்வியின் மூலம் ஏற்றமிகு எதிர்காலத்தைப் பெற வேண்டும் என விழைந்தவர். எனவே தொடக்கப் பள்ளியில் வந்து சேரும் குழந்தை அனைத்துக் கல்வியையும் பெற்றுத் தொழிற்படிப்பும் தேர்ந்து நன்றாக வாழும் தகுதியோடு வெளியேற வேண்டும் என்ற வகையில் பல்வேறு பள்ளிகளை உருவாக்கினார். இதனை,

“பள்ளி நுழைபையன் பட்டமும் பெற்றுவந்து
வெள்ளி பெறுஉம் வினைபெறுவான் - உள்ளி
எனைவகைக் கல்லூரி ஈண்டே அமைத்தான்,
புனைவகை யன்று புகழ்” (கொடை விளக்கு: 41)

எனவும் வள்ளல் அழகப்பர் ஆயத்தப் பள்ளியோடு ஆதாரப் பள்ளிகளும் தோற்றுவித்த தன்மையை,

“ஆயத்தப் பள்ளியோடு ஆதாரப் பள்ளிகள்
மேய தொடக்கத்து மேம்பள்ளி - தூய
இசைப்பள்ளி கண்டான் இளஞ்சிறார் கற்க
வசைப்புள்ளி இல்லா மகன்” ( கொடை விளக்கு: 42)

எனவும் மாண்டிசோரிப் பள்ளியை உருவாக்கிய திறத்தினை,

“மறந்தபாற் பிள்ளையரை மாணாக்கும் தாயர்
கறந்தபால் உண்பித்துக் காக்கும் - சிறந்தபால்
மாண்டிசோர் பள்ளி வகுத்தான்; மதிநெஞ்சே
காண்டிசோர் வில்லான் கதை” ( கொடை விளக்கு: 43)

எனவும் எடுத்துரைப்பார் வ. சுப. மாணிக்கனார். இவ்வாறு சுட்டி சிறார் தொடங்கி அனைவரும் கற்க வேண்டும் என்ற அளப்பரிய ஆவலுடன் பல்வகைக் கல்வி நிறுவனங்கள் அமைத்த திறத்தினை,

“சுட்டிச் சிறுவர் தொடைமுடியாக் கூந்தலர்
கட்டுக் கடங்கிவரு காளையர் - பட்டம்
அடுத்த முதியர் அனைவரும் கற்க
எடுத்தான் பலபள்ளி ஈங்கு” (கொடை விளக்கு: 50)

என்ற பாடலும் விளக்கியுரைக்கும்.

**விருந்து போற்றும் வித்தகர்:**

தமிழரின் தலையாய பண்பாட்டுக் கூறு விருந்தோம்பல் என்பதாகும். தமிழர் வாழ்க்கை முறையில் விருந்தினரைப் போற்றுதல் தலைவன், தலைவியின் தலையாய கடனாகச் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றது. விருந்து என்பதற்கு ‘புதுமை’ என்பது பொருளாகும்.

வீட்டிற்கு வரும் புதியவர்களுக்கு உணவு அளித்தல் விருந்தோம்பல் ஆகும். சங்க காலத்தில் ஐவகை நிலப்பகுதியிலும் அந்த நிலத்திற்கு ஏற்ப உணவு விருந்தாக அளிக்கப்பட்டிருப்பதாகச் சங்கப் பாடல்கள் கூறுகின்றன. விருந்தினர் எந்த நேரத்தில் வந்தாலும், தலைவி இன்முகத்துடன் விருந்து பாராட்டினாள் என்பதனை,

"அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்" ( நற்றிணை: 142)

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் சிறப்பித்துக் கூறுகின்றன. விருந்து போற்றலின் இன்றியமையாமையை உணர்ந்த திருவள்ளுவர் 'விருந்தோம்பல்' என்று ஓர் அதிகாரத்தையே படைத்துள்ளார். கண்ணகியைப் பிரிந்து கோவலன் மாதவியுடன் வாழும் போது கண்ணகி தலையாய கடமையான விருந்தோம்பலைச் செய்ய இயலாது வருந்தினாள் என்பதனை,

"அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர் சிறப்பின் தொல்லெதிர் கோடலும்
இழந்த என்னை" ( சிலம்பு: 16: 71 - 73 )

என்ற அடிகளில் விளக்குவார் இளங்கோவடிகள். விருந்தோம்பல் பண்பினைக் கம்பர்,

"அருந்து மெல்லடகு ஆரிட அருந்து மென்று அழுங்கும்....
விருந்து கண்டபோது என்னுறுமோ என்று விம்மும்" (கம்பன்: காட்சிப்படலம் 15)

எனச் சீதையின் கூற்றாக வைத்துரைப்பார்.பாரதிதாசன் தமிழர் உலகில் சேர்த்த புகழ் விருந்தோம்பலே என்பதனை,

"நற்றமிழர் சேர்த்த புகழ்
ஞாலத்தில் என்னஎனில்
உற்ற விருந்தை
உயிரென்று - பெற்று உவத்தல்"
(குடும்ப விளக்கு II - மாமன், மாமி மகிழ்ச்சி)

எனக் குறிப்பர், இவ்வாறு தமிழர் வாழ்வின் இடையாறாத அறமாய் ஒன்றிப்போன விருந்தோம்பலில் அழகப்பர் சிறந்து விளங்கினார். அழகப்பர் பல துறையிலும் சிறந்த சான்றோர்களை அழைத்து மாலையிலும் இரவிலும் பவநகர் முற்றத்தும் நேருக்காவிலும் விருந்தளித்துப் போற்றினார். அழகப்பரின் இத்தகைய விருந்தோம்பல் பண்பினை வ. சுப. மாணிக்கனார்,

"பருந்தும் பறவாப் படுசுரத்து நாளும்
விருந்து தலைவர்க்கு வேட்டான்" (கொடை விளக்கு:39)

எனக் குறித்துரைப்பார்.

**பகலுணவுக்கொடை:**

மனித மாண்புகளைச் சீரழிக்கும் செயல்களுள் பெரிதும் முன் நிற்பது ‘பசி’ என்பதாகும். இப்பசியானது ஒருவனின் உயர்ந்த குடிப்பிறப்பு, ஒழுக்கம், கல்வியான் அமைந்த மாண்புகள் அனைத்தையும் அழித்தொழிக்கும் தன்மை கொண்டதாகும். இதனை,

“குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாண்அணி களையும் மாண்எழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவிஅது தீர்த்தோர்
இசைச்சொல் அளவைக்கு என்நா நிமிராது” ( மணிமேகலை: 11: 76 – 81)

எனக் குறித்துரைக்கும் மணிமேகலை. இத்தகைய பசிப்பிணியானது மாணவர்கள் கற்கும் காலத்து வருமாயின் அவர்களின் கல்வி நலன் பெரிதும் பாதிக்கப்படும் என்பதனை உணர்ந்த அழகப்பர் படிக்கும் குழந்தைகள் பகல் உணவினைப் பெறுவதற்கும் ஏற்பாடுகள் செய்து வைத்தார். அழகப்பரின் இத்தகைய சிறப்பியல்வினை,

“படிக்கும் குழந்தை பகலுணவு கொள்ள
அடுக்கும் இலக்கம் அளித்தான் - நடுக்கும்
கொடையாளி நாளிழக்கும் கோடியர்க்கு நல்ல
விடையாளி காட்டும் விளக்கு” (கொடை விளக்கு: 45)

எனச் சிறப்பித்துரைப்பர் வ. சுப. மாணிக்கனார். மேலும் இவ்வுலகில் பிறர்க்கு உதவாமால் பொருளைச் சேர்த்து வைத்து இழக்கும் கோடியர்க்கு உதவுதலின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் விளக்காயும் இருந்து வள்ளல் அழகப்பர் ஒளிகாட்டினார் என்பதனையும் மேற்கண்ட பாடல் விளக்கியுரைக்கின்றது.

**கல்விக்குழுத் தலைமை :**

தமிழக அரசு தொடக்கல்வியைச் சீரமைப்பதற்கென்று கல்விக்குழு அமைக்கத் திட்டமிட்டது. அதற்குத் தலைவராக யாரைத் தேர்ந்தெடுப்பது என்று சிந்தித்த பொழுது உடன் அரசின் நினைவிற்கு வந்த பெயர் ‘வள்ளல் அழகப்பர்’ என்பதாகும். எனவே அரசின் ஆணைக்கிணங்க 4- 12- 1954 இல் சென்னை அரசின் தொடக்கக்கல்வி சீரமைப்புக் குழுவிற்கு டாக்டர் அழகப்பர் தலைவரானார். நாடெங்கும் சுற்றிப் பல பள்ளிகளின் செயல்களைக் கண்டார். புதிய திட்டங்கள் அமைத்துத் தம் அறிக்கையினை அரசிடம் 20 – 10 – 1955 இல் வழங்கினார் அழகப்பர். வள்ளல் அழகப்பரின் இத்தகைய அரும்பெரும் பணியை,

“சென்னை அரசு சிறுகல்வித் திட்டத்தை,
நன்னர் அழகன்பால் நாடிற்றால் - என்னை?

பலவகையாற் பள்ளிகள் பாலார்க்குக் கண்ட
நலவகையான் என்று நயந்து'' (கொடை விளக்கு: 47)

எனப் போற்றியுரைப்பார் வ.சுப. மாணிக்கனார்,

**திருக்குறட்கல்வி:**

பண்டிதமணி மகாமகோபாத்தியாய மு. கதிரேசச் செட்டியார் அண்ணாமலையரசர் கோட்டையூரில் தலைமை வகித்து அழகப்பரைப் பாராட்டிய கூட்டத்தில் கலந்து கொண்டார். அதுமுதல் அழகப்பருக்கும் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாருக்கும் நட்பு வளர்ந்தது. பண்டிதமணியவர்களைச் சென்னை வேப்பேரி மாளிகைக்கு அழைத்துத் திருக்குறட் பகுதிகளை அழகப்பர் கற்றுக் கொண்டார். அதன்வழி, அமைந்த தமிழார்வத்தால் தமிழில் கலைக்களஞ்சியம் தொகுப்பதற்குத் தமிழ்வளர்ச்சிக் கழகத்துக்கு ரூபாய் பதினாயிரம் முதற்கண் கொடுத்தார். இதனை,

''பன்னூற் கடலனைய பண்டித நன்மணிபால்
தொன்னூற் குறளைத் தொடங்கினோன். - நன்னூற்
கலையார் களஞ்சியம் காணத் தமிழில்
தலையார் நிதிதொடுத்தான் தந்து'' (கொடை விளக்கு: 101)

எனச் சுட்டியுரைக்கும் கொடை விளக்கு.

**அருள் நூற்கல்வி**

அழகப்பரோடு நெருங்கிப்பழகிய பெருந்தமிழ்ப்புலவர்களுள் குறிப்பிடத்தக்கவர் தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் ஆவார். அவர் அழகப்பருக்குத் தமிழில் நல்ல ஈடுபாட்டை உண்டாக்கியவர். தமிழ் இலக்கியத்தின் சிறப்பை நன்கு அறியச் செய்தவர்; அழகப்பர் நலத்தோடு இருந்த போதும் நலங்குன்றிய காலத்தும் உடனிருந்து தமிழமுது ஊட்டியவர்; இவர் 'என் ஆசிரியர்' என்று அழகப்பரால் அழைக்கப்பெற்றவர். இவர் மூலம் அழகப்பர் அருள்நூற் கல்வி பெற்றதனை,

''ஆயசோர் வின்றி அருந்தமிழைக் சுற்றுரைக்கும்
ராயசொ நண்பன்: நறுந்தமிழன் - தூயசொல்
தேவாரம் அன்ன திருநூல் பலதெளிந்தோன்
பூவாரம் பூண்டான் பொலிந்து'' ( கொடை விளக்கு: 103)

என எடுத்துரைக்கும் கொடை விளக்கு.

**தமிழ்ச்சொல்லாக்கக் குழு:**

மொழியின் வளர்ச்சி என்பது அதனுள் உருவாக்கப்படும் கலைச் சொற்களோடு மிகப் பெரும் தொடர்புடையதாகும். இத்தகைய செல்லாக்க முயற்சிகளே தமிழ்மொழியின் பெருமையினைக் காலம் தோறும் நிலைநிறுத்தும். இதனை நன்குணர்ந்த இராசகோபாலாச்சாரியார் 'தமிழ்ச் சொல்லாக்கக்குழு' ஒன்று உருவாக்கப்பட வேண்டும் என்ற வேண்டுகோளை முன் வைத்தார். அவரின் வேண்டுகோளின்படி தமிழ்ச் சொல்லாக்கக்குழு அழகப்பர் கல்லூரியில் 30-1-1954 இல் நிறுவப்பட்டது. இதனை,

"ஆக்கக் குழுவொன்று அமைத்தான்: தமிழ்வளர்வில்
ஊக்கம் உடையான்: உறுத்துடையான் - நோக்கரிய
நோக்கம் உடையான்: நொடியில் அதைமுடிக்கும்
ஏக்கம் உடையான் இவன்" (கொடை விளக்கு: 106)

என எடுத்துரைக்கின்றது கொடை விளக்கு.

**கொடைப்பெருமை:**

14-8-1956 இல் குடியரசுத் தலைவர் டாக்டர் இராசேந்திரப் பிரசாத்தும் 30-1-1957 இல் இந்தியப் பிரதமர் சவகர்லால் நேருவும் வள்ளல் அழகப்பரை அவர்தம் வேப்பேரி மாளிகைக்கு வந்து நலம் உசாவினர். இத்தகைய உயரிய நிகழ்வினை,

"சாதுவும் நேருவும் தன்னில்லம் வந்தாரேல்
யாதுங் கொடுத்த கொடையன்றோ; - ஏதும்
தனக்கென்னத் தேடாத் தனியிலி மாய்ந்தால்
எனக்கென்ன என்பார் இலர்" ( கொடை விளக்கு: 109)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

**பெற்ற பாராட்டும் விருதுகளும்:**

இந்தியாவின் பல்வேறு தலைவர்கள் வள்ளல் அழகப்பரைப் புகழ்ந்துரைத்துள்ளனர். அவர்களுள் தேசத்தந்தை காந்தி அடிகள் வள்ளல் அழகப்பரின் கல்விப் பணியைக் கண்டு போற்றிப் புகழ்ந்ததை,

"காந்தி முதலாக் கருதரிய பல்புகழ்
ஏந்தியார் எல்லாம் இவற்புகழ்ந்தார்; - போந்தபெருஞ்
செல்வ வுடைமையைச் சீராய்ப் பொழிகின்ற
கல்வி முகிலெனக் கண்டு" (கொடை விளக்கு: 108)

எனக் குறிப்பார் வ. சுப. மாணிக்கனார். இந்திய அரசு 'பத்ம பூசன்' என்னும் பட்டத்தினை வழங்கிப் பெருமைப்படுத்தியதனை,

"வேற்றரசு தந்த விலைமதியாச் சர்ப்பட்டம்
மாற்றரசு நீங்க வழக்கொழித்தான்;- போற்றரசு
நன்னர் மதித்தளித்த நற்றா மரையணிந்தான்.
இன்ன பெரியன் இவன்" ( கொடை விளக்கு: 110)

என எடுத்துரைக்கும் கொடைவிளக்கு. 1943இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் டிலிட் பட்டத்தையும் 1944 இல் சென்னைப் பல்கலைக்கழகம் எல்.எல்.டி. பட்டத்தையும் அழகப்பருக்கு வழங்கிப் பாராட்டிய தன்மையினை,

"பண்ணார் தமிழகத்துப் பண்பார் இரண்டென்னும்
கண்ணார் கலைப்பல் கழகங்கள் - எண்ணார்
பெரும்பட்டம் தந்து பிறசிறப்புச் செய்த
அருந்திட்டம் இட்ட அவற்கு" (கொடை விளக்கு: 111)

எனப் புகழ்ந்துரைப்பர் வ. சுப. மாணிக்கனார்.

வள்ளல் அழகப்பரின் வான்புகழ் மேன்மைகளை எடுத்துரைக்கும் வண்ணம் அமைந்த கொடைவிளக்கு, அழகப்பரின் கல்வி நலன், கல்லூரி கண்ட கவின்நலன், பள்ளிகள் அமைத்த பண்புடைமை, கோடி கொடுத்த கொடைநலன், வீடும் கொடுத்த வியத்தகு செம்மை, தமிழுக்காய் உழைத்த தகைமை, விருதுகள் கொண்ட மேன்மை போன்ற பல்வேறு சிறப்புகளை வெளிப்படுத்தி நிற்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

**துணை நின்ற நூல்கள்:**

முதன்மைச் சான்றாதாரம்:

1.மூதறிஞர் வ. சுப. மாணிக்கம் --- கொடை விளக்கு
மணிவாசகர் பதிப்பகம் - சென்னை – 8
முதல் பதிப்பு – திசம்பர் - 1999




துணைமைச் சான்றாதாரங்கள்:

1.இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம் ( மூலமும் உரையும் )
உ.வே. சாமிநாதையர் ( ப. ஆ)
கமர்சியல் அச்சுக் கூடம் - சென்னை
இரண்டாம் பதிப்பு – 1920

2.கம்பர் — கம்பன் கழகம், சென்னை
முதற் பதிப்பு - 1976

3. கதிர். மகாதேவன் (உ.ஆ) — நற்றிணை
கோவிலூர் மடாலயம் - கோவிலூர்
முதல் பதிப்பு - 2003

4.சாமிநாதையர் உ. வே.( ப.ஆ) — புறநானூறு ( மூலமும் உரையும்)
லா ஜர்னல் அச்சுக் கூடம்,- சென்னை

மூன்றாம் பதிப்பு - 1953
.5.சீத்தலைச் சாத்தனார் மணிமேகலை ( மூலமும் உரையும் )
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி
6.திருவள்ளுவர் திருக்குறள் ( பரிமேலழகர் உரை)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
சென்னை 1941
7.நச்சினார்க்கினியர் ( உ.ஆ ) - பத்துப்பாட்டு ( மூலமும் உரையும்)
கமர்சியல் அச்சுக் கூடம் - சென்னை
இரண்டாம் பதிப்பு - 1918
8.பாரதியார் பாரதியார் கவிதைகள்
பூம்புகார் பிரசுரம் - சென்னை
முதல் பதிப்பு – 1976

.

**************************



# ந. சுப்புரெட்டியாரின் அறிவியல் சிந்தனைகள்

முனைவர் குமரன் சுப்பிரமணியன்
பேராசிரியர் (மேனாள்)
இந்திய ஆய்வியல் துறை
மலாயாப் பல்கலைக்கழகம்
கோலாலம்பூர், மலேசியா

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை**

"தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலர்
தோன்றலின் தோன்றாமை நன்று" ( திருக்குறள்: 236)

என்பது திருவள்ளுவரின் திருவாக்கு. இவ்வாக்குக்கேற்ப செவ்வனே வாழ்ந்து காட்டியவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தமிழ்நாடு , திருச்சி மாவட்டத்தில் பெரகம்பி என்ற ஊரில் வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தார். இவரது காலம் 27 ஆகத்து 1916 முதல் 1 மே 2006 வரையாகும். இவர் திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியல் துறையில் இளங்கலைப் பட்டமும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். இவரது 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இவர் சிறியவர், பெரியவர் அனைவருக்குமாக இயற்றிய பல்துறை நூல்களுள் பதினான்கு நூல்கள் அறிவியல் சிந்தனைகளைத் தூண்டும் நூல்களாக உள்ளன. அவற்றுள் "தமிழில் அறிவியல் செல்வம்", "தமிழில் அறிவியல் அன்றும் இன்றும் "அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்", "வாழையடி வாழை ஆகிய நூல்களிலும் இடம்பெற்றுள்ள உயிரணுக்கள், நிறக்கோல்கள், மரபணுக்கள் தொடர்பான எழுத்தோவியங்கள் மற்றும் சொற்பொழிவுகள் வாயிலாக வெளிப்படும் அறிவியல் சிந்தனைகளை ஆராய்வதுஇக்கட்டுரையின் நோக்கமாகும்.

**மனிதப் பிறவியின் தொடக்கம்**

இவ்வுலகில் மனித இனத்தினுடைய பரிணாமம், தோற்றம், வளர்ச்சி, இயக்கம் அனைத்துமே இயற்கையின் தனிச்சிறப்புகள் ஆகும். ஒரு குழந்தையின் உருவாக்கமானது பெற்றோரின் உடல், உயிர், அறிவு இவற்றின் தரத்திற்கேற்றவாறுதான் அமையும் என்பது அறிவியல் உண்மை. சிறந்த குழந்தை வேண்டுமாயின் பெற்றோர், உடலையும் அறிவையும் செம்மையாகப் பேணிக்காக்க வேண்டும் என்ற வேதாத்ரி மகரிஷியின் தத்துவத்தினை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்டதே "வாழையடி வாழைஞுநரழவ; என்ற நூல். மரபுத்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தன்மை மிகவும் நுட்பமாகவுள்ள விந்தணு, முட்டை ஆகியவற்றின் சேர்க்கை மூலமாகவே நமது தலைமுறை உருவாகுதல் இயற்கை. ஊணக் கண்களால் காண இயலாத இந்த உயிரணுக்களே பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் தொடர்பினை ஏற்படுத்துகின்றன. தந்தையிடமிருந்து வரும் 23 தனி நிறக்கோல்கள், தாயிடமிருந்து பெறப்பட்ட 23 தனி நிறக்கோல்களுடன் ஒன்றிணைந்து குழந்தையின் உடலில் இணை நிறக்கோல்களாக உருப்பெறுகின்றன. எனவே, நாம் ஒவ்வொருவரும் நமது வாழ்வியல் தொடக்கத்தினை 46 நிறக்கோல்களைக் கொண்ட ஒரு கருவுற்ற முட்டையிலிருந்து தொடங்குகின்றோம்.

உயிரணுக்கள் இரட்டித்துப் பல்கிப் பல இலட்சக்கணக்கான உயிரணுக்களாக மாறிப் பந்து போன்ற பிழம்பாகக் கருப்பந்தாகத் தாயின் கருப்பையில் ஓடி, முட்டைக் கருப்பையில்ஒட்டிக்கொள்ள முயலும்போது பல எதிர்ப்புகளைச் சமாளித்து வென்று முட்டைச் சுவரில் பதிந்துகொண்டபின் முட்டையின் மேற்புறத்திலிருந்து சிம்புகள் வளர்ந்து கருப்பைச் சுவரைக் குடைந்து அதிலுள்ள குருதிக் குழல்களை அரித்துக் குருதியுடன் தொடர்புகொண்டு தாயின் குருதியிலுள்ள ஊட்டச்சத்தினால், புல்லுருவிபோல வளர்கின்றது. இளஞ்சூழின் அடிவயிற்றையும் குழந்தையின் நஞ்சையும் இணைப்பது கொப்பூழ் கொடியாகும். இந்தக் கொப்புழ் கொடியின் வழியாக உயிரியம், நீர் சென்று, கழிவுப் பொருள்கள் சவ்வூடு பரவுதல் முறையில் வெறியேறுகின்றன. நான்காவது வாரத்தில் உயிரணுக்கள், தசை அணுக்கள், தோல் அணுக்கள், குருதி அணுக்கள், எலும்பு அணுக்கள், மூளை அணுக்கள் போன்ற அணுக்களாகப் பிரிந்து உடலின் பல்வேறு பகுதியாக வளர்கின்றன.

### உயிரணுக்கள் (Cells)

நமது உடலில் கோடிக்கணக்கான உயிரணுக்கள் உள்ளன, இவையாவும் ஆதியில் தோன்றிய ஒற்றை உயிரணுவிலிருந்து பெருகினவையே. இந்த உயிரணுக்கள் குருதி வழியாகத் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பெற்று வளர்கின்றன. ஒரு குறிப்பிட்ட அளவு வளர்ச்சியைப் பெற்றவுடன் இவை தம் உட்கரு உட்பட இரண்டாகப் பிளவுபடுகின்றன. ஒவ்வோர் உயிரணுவும் தனது இனத்திற்குத் தக்கபடியும் உறுப்பின் செயலுக்குத் தக்கபடியும் அமைப்பில் வேற்றுமை கொண்டதாகக் காணப்பெறும். எடுத்துக்காட்டாக, இழையங்களிலுள்ள உயிரணுக்கள் (Tissues) உழைப்பினாலும், இறுக்கத்தினாலும், அமுக்கத்தினாலும் தாக்கப்பெறுவதால் அவை கோள வடிவாகவும், உருளை வடிவாகவும், தட்டை வடிவாகவும், நூற்கும் கதிர் (Spindle) வடிவாகவும் இருக்கும். பெரும்பாலான நரம்பு அணுக்கள் நீளமான நுண்ணிய கிளைகளைக் கொண்டிருக்கும். உயிரணுக்கள் பெருகும்போது பலவித அணுக்களாக மாறுகின்றன. இவ்வுயிரணுக்களே நமது மரபு வழி அற்றுப்போகாமல் காக்கின்றன. நிறக்கோல்கள் (Chromosomes) ஒவ்வோர் உயிரணுவிலும் இணை நிறக்கோல்கள் அடங்கியுள்ளன. அவை

தந்தை வழியாகவும் தாய் வழியாகவும் கிடைக்கப்பெற்றவை. இருபாலருக்கும் 22 இணைகள் ஒரே மாதிரியாக இருக்கும். பெண் குழந்தையின் 23ஆவது இணையிலுள்ள நிறக்கோல்கள் இரண்டும் ஒரே மாதிரியாக (XX) இருக்கும். ஆண் குழந்தையின் 23ஆவது இணையில், ஒன்று பெண்ணுக்குரிய நிறக்கோலும் (X), மற்றொன்று ஆணுக்குரிய நிறக்கோலும் (Y) இணைந்திருக்கும். ஆக, பெண் குழந்தையின் உடலில் XX நிறக்கோல்களும் ஆண் குழந்தையின் உடலில் XY நிறக்கோல்களும் உள்ளன. மானிட உயிரியின் ஒவ்வோர் உயிரணுவிலும் 23 இணை நிறக்கோல்கள் இருப்பதுபோலவே தலைமுறையைப் பெருக்குவதற்காகவும் ஒதுக்கபெற்றுள்ள உயிரணுக்களிலும் 23 இணை நிறக்கோல்களே இருக்கும். ஒவ்வோர் உயிரியின் ஒவ்வோர் உயிரணுவிலும் ஒரேவகை உயிரியின் பலவற்றின் உயிரணுவிலும் இந்த நிறக்கோல்களின் எண்ணிக்கை மாறாதிருப்பதால்தான் இனம் மாறாமல் காக்கப்பெற்று வருகின்றது என்று தெளிவுபடுத்துகின்றார் ந. சுப்புரெட்டியார் அவர்கள்.

**சுரப்பிகள் (Glands)**

நமது உடலிலுள்ள சுரப்பிகள் (Glands) உள்ளுறுப்புகளின் தொகுதியாகும். சுரப்பிகளுள் அடித்தலைச் சுரப்பிகள் (Pituitary glands), புரிசைச் சுரப்பிகள் (Thyroid glands) மேல்தலைச் சுரப்பிகள் (Pineal glands) துணைப் புரிசைச் சுரப்பிகள் (Para Thyroids glands), மாங்காய் சுரப்பிகள் (Adrenal glands), செஞ்சுக்குழைச் சுரப்பிகள் (Thymus glands), காமச் சுரப்பிகள் (Sex glands) முதலியவை அடங்கும். இவற்றைக் குருதியினுள் இயக்குநீர் (ஹார்மோன்கள்) அனுப்புகின்றன. சிலரிடம் காணப்படும் சிறப்புப் பண்புகளுக்குச் சுரப்பிகளே காரணமாக அமைகின்றன. மூளை, இதயம், கல்லீரல், நுரையீரல்கள், தீனிப்பை போன்ற ஏனைய முக்கிய உள்ளுறுப்புகளின் வடிவத்திலும் அமைப்பிலும் செயல்பாட்டிலும் காணப்பெறும் சிறு சிறு வேறுபாடுகளும் மாறுபாடுகளும் வாழையடி வாழையாக மரபு வழியாகவே அமைந்தவை என்பதை நன்கு தெளிவுபடுத்துகின்றார் ந. சுப்புரெட்டியார் அவர்கள்.

**கால்வழி இயல் (Genetics):**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் கூற்றுப்படி மக்கள் தங்கள் பெற்றோரிடமிருந்து நேர்முறையிலோ வழிவழியாக வரும் தமது முன்னோர்களிடமிருந்தோ நிறம், உருவம், உயரம், பருமன், முகவெட்டு முதலான சில உடலமைப்புகளைப் பெற்றே ஆகவேண்டும். இது கால்வழி இயலின் (Genetics) நியதி; தவிர்க்க முடியாத சட்டம். ஆனால். தாமாக அவர்கள் சூழ்நிலையால் (Environment) சில பண்புகளையும் திறன்களையும் அடைகின்றனர் என்பதையும் அறிகின்றோம். அறிவு, திறன்கள், குணம், ஆயுள் முதலியனவும் மரபு வழியாக இறங்கி வருவதையும் நாம் கண்டுள்ளோம்.

இதுமட்டுமன்றி கண்பார்வையில் சில குறைபாடுகள், மாலைக்கண், நிறக்குருடு, செவிட்டுமை, வழுக்கை மண்டை, குருதிநோய் (Hemophilia), மனவலி இல்லாமை, பைத்தியம் ஆகியவையும் மரபு வழியாக இறங்கி வரும் நோய்களாகும். இயற்கை அமைப்பில் ஒருபோதும் இனமாற்றம் நிகழ்வதில்லை. மக்கள் இனத்தில் மக்களே தோன்றுகின்றனர். பறவை இனங்கள், விலங்கு இனங்கள், பூச்சி இனங்கள் இவற்றில் அந்தந்த இனங்களே தோன்றுகின்றன.

இயற்கையன்னை மனிதனைப் படைக்கும்பொழுது அவனிடம் கோடிக்கணக்கான உயிரணுக்களைத் தருகிறாள். இவற்றை அவன் தன் விருப்பப்படிக் கையாளலாம். இந்த அணுக்களைத் தவிர குறைந்த அளவு எண்ணிக்கையுள்ள கரு - உயிரணுக்களையும் (Germ cells) அவனிடம் தருகின்றாள். அவனிடம் ஓரளவு நம்பிக்கையின்றியே இந்த உயிரணுக்களிலுள்ள பொருள்களை நன்றாக இறுகக் கட்டித் தருகின்றாள் என்றே கருதலாம். இவற்றை அப்படியே வழிவழியாகச் தலைமுறையினருக்கு வழங்க வேண்டுமென்றே தருகின்றாள். கரு - உயிரணுக்களில் அடங்கிக் கிடக்கும் மரவுவழிக் கூறுகளை மனிதன் தவறாகக் கையாளவும் முடியாது; அவற்றைத் தம் விருப்பப்படி மாற்றி அமைக்கவும் முடியாது என்று கருதியே இத்தகைய முறையை இயற்கையன்னை கையாண்டுள்ளாள் என்று எண்ணத் தோன்றுகின்றது.

மரபணு (Genes) நெருங்கிய, குறுகிய நிலையிலுள்ள நிறக்கோல்கள் உள்ளன. சில சமயங்களில் அவை விரிந்து நீண்ட இழைகளாகவும் இருக்கும். அப்பொழுது அவற்றில் சளி போல் ஒட்டுத் தன்மையுள்ள உருண்டைமணிகள் நெருக்கமாகக் கோக்கப்பெற்றுள்ளதைப் போலக் காணப்படும். உருண்டைமணி போன்ற இவையே மரபுவழிப் பண்புகளைத் தாங்கி நிற்கும் மரபணுக்கள் ஆகும். இவைதாம் பெற்றோரிடமிருந்து பிள்ளைகட்குக் கடத்தப் பெறுபவை.

ஒவ்வொரு நிறக்கோல்களிலும் ஏறக்குறைய 3000 மரபணுக்கள் இருப்பதாகக் கால்வழியியல் (Genetics) வல்லுநர்கள் ஆரய்ந்து கண்டுள்ளனர். ஒவ்வொரு மரபணுவும் ஒரு திட்டமான பண்புக்கும் செயலுக்கும் காரணமாகின்றது என்பதை உயிரியல் அறிஞர்கள் நிலைநாட்டியுள்ளனர். ஒரு குழந்தை தன்னுடைய பெற்றோரிடமிருந்து புதியவகை மரபணுக்களைப் பெறுகின்றது. இந்த மரபணுக்கள் தனது பெற்றோரிடமிருந்தும், அவர்கள் தங்களது மரபணுக்களைத் தங்களது பெற்றோரிடமிருந்தும் பெற்றவையாகும். எனவே, மரபணுக்கள் வழிவழியாகப் புதிய புதிய சேர்க்கையாகச் தலைமுறையினருக்கு இறங்கிக் கொண்டுள்ளன என்பது தெளிவாகின்றது.

**மரபுவழிப் பண்புகள்**

ஒரு குழந்தை தன்னுடைய பெற்றோரிடமிருந்து பெறும் ஒவ்வொரு நிறக்கோலும் தன்னுடைய இருவழிப் பாட்டன்மாரிடமிருந்து பெற்றவையாகும். இந்த முறையில் குழந்தை தன்னுடைய தந்தையின் எந்த ஒரு விந்தணு தன்னுடைய தாயின் எந்த ஒரு முட்டையைச் சந்தித்துக் கருவுறச் செய்கின்றது என்பதைத் தற்செயலே (Chance) அறுதியிடுகின்றது. வழிவழியாக அமையும் இந்த விந்தணுக்களிலும் முட்டைகளிலும் நிரக்கோல்களின் அமைப்பு எண்ணற்ற முறைகளில் சேர்ந்து அமையும். எனவே, மரபுப் பண்புகள் தற்செயலாகவே இறங்கி வருகின்றன என்பதை உளங்கொள்ள வேண்டும். இத்தகைய நுண்ணிய மரபணுக்கள் ஒரு மனிதனுடைய வாழ்க்கையையே மாற்றியமைக்கக் கூடிய திறனைப் பெற்றிருப்பதை எண்ணும்போது வியப்படைகின்றோம். இறைவன் படைப்பின் அற்புதத்தை எண்ணி எண்ணி களிக்கின்றோம்.

**மரபுவழி இயங்காப் பண்புகள்**

உயிரியல் மரபுரிமை பற்றி அண்மைக் காலத்தில் கண்டறியப்பெறும் அறிவியல் உண்மைகள், இதுகாறும் நம்பிக்கையாகக் கொண்டிருந்த பல கருத்துகளை முற்றிலும் தவறு எனக் காட்டிவிட்டன; பொய் என மெய்ப்பித்துவிட்டன. உடலணுக்களில் நடைபெறும் எந்தவிதமான நிறகோல்களை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை என்ற உண்மையே பல நம்பிக்கைகளை மாற்றிவிட்டன.

நாம் ஒரு தலைமுறையில் நம்மை மேம்பாடு அடையச் செய்யும் ஏற்பாடுகள் யாவற்றையும் நம்முடைய கரு - அணு மூலம் அடுத்த தலைமுறைக்குக் கடத்தலாம் என்று கொண்டுள்ள நம்பிக்கையை விட்டொழிக்க வேண்டும். அங்ஙனமே நம்முடன் உண்டான குறைபாடுகள் யாவும் கேடுபயக்கக் கூடியவாறு செய்துள்ள யாவும் அடுத்த தலைமுறைக்கு இயங்க முடியாது போகின்றன என்பதையும் உணரவேண்டும்.

**இலக்கியத்தில் அறிவியல் சிந்தனைகள்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அறிவியல் சிந்தனைகள்வழி பல அரிய கருத்துகளைத் தெளிய முடிகின்றது. "அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்" என்னும் நூலில் குறிப்பிட்டுள்ள அவரது அறிவியல் சிந்தனைகளை ஆராய்வோம். தமிழர் நாகரிகத்தில் அறிவியற் கலைகள் அவர்தம் பயன்முறைக் கலைகளாக இருந்துள்ளமைக்குப் பல்வேறு சான்றுகள் தமிழ் இலக்கியத்தில் உள்ளன. பண்டைத் தமிழர்கள் இன்று இருப்பன போன்ற அறிவியல் துறைகளைத் தனித்தனிக் கலைகளாக வளர்த்து வைத்திருந்தனர் என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லாதுபோயினும், அவர்கள் இக்கலைகளைப்பற்றி ஓரளவு அறிந்திருந்தனர் என்பதற்கும், இவை

அவர்களது வாழ்வில் பயன்முறை அறிவியல் துறைகளாக (Applied sciences) அமைந்தன என்பதற்கும் பல்வேறு இலக்கியச் சான்றுகள் உள்ளன. பண்டைத் தமிழர்கள் வானநூல், உயிரியல், இயற்கையியல், பொறியியல் முதலிய பல்வேறு துறைகளிலும் வல்லுநதர்களாகத் திகழ்ந்தனர் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன.

உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார் என்ற புலவர் அறிவியல் அறிஞர்கள் அக்காலத்தில் வாழ்ந்தனர் என்பதை,

"செஞ்ஞா யிற்றுச் செலவும்
அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமு மென்றிவை
சென்றளந் தறிந்தார் போல வென்றும்
இனைத்தென் போரு முளரே" (புறம். 30:1-7)

என்று குறிப்பிடுகின்றார். "செஞ்ஞாயிற்றினது வீதியும் அஞ்ஞாயிற்றினது இயக்கமும் அவ்வியக்கத்தாற் சூழப்படும் பார்வட்டமும், காற்று இயங்கும் திக்கும் ஓர் ஆதாரமும், இன்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பெற்ற இவற்றை ஆண்டாண்டு போய் அளந்தறிந்தவர்களைப் போல நாளும் இத்துணையளவை உடையனவென்று சொல்லும் கல்வியுடையோரும் உளர்" என்ற பேராசிரியரின் கூற்றில் இத்தகைய அறிஞர்கள் இருந்ததை அறியமுடிகின்றது.

**வானநூலறிவு** (Astronomical knowledge)

பண்டைய அறிஞர்கள், விண்ணில் மதி செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தேழு பிரிவுகளாகப் பிரித்து அப்பிரிவுகளை அறிந்துகொள்ளும் அடையாளமாக "எறிகடல் ஏழின் மணல் அளவாகரூநரழவ;வுள்ள விண்மீன்களுள் இருபத்தேழு விண்மீன்களைத் தொகுதிகளைக் குறித்து அமைத்தனர். புறநானூற்றில் "மதிசேர் நாண்மீன் போல்ரூநரழவ; (புறம். 160:8) என வரும் சொற்றொடருக்கு உரையாசிரியர் 'திங்களைச் சேர்ந்த நாளாகிய மீன்யொப்ப எனக் கூறும் உரையால் இதனை அறியலாம்.

கோள்களின் இயக்கத்தால் இயற்கை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்பதைப் பண்டைத் தமிழர்கள் நன்கு அறிந்திருந்தனர். வெள்ளி என்பது ஒரு மழைக்கோள். அது தெற்கே விலகியிருப்பது மழை இல்லாமைக்கு அறிகுறி என்னும் நம்பிக்கை கொண்டிருந்தனர். இவற்றை,

"வெள்ளி தென்புலத் துறைய விளைவயல்

பள்ளம் வாடிய பயனில் காலை'' (புறம். 388:1-2)

என்ற பாட்டின் பகுதியால் அறியலாம்.

இவ்வுலகிலுள்ள 92 தனிமங்களின் அணுக்களும் தம்மொடுதாமும், பிறிதுமாய்ச் சேர்ந்து அணுத்திரளைகள் ஆகிய திரட்சியே அண்டங்கள் என்பது அறிவியலாளர் ஆய்ந்து கண்ட உண்மையாகும். இந்த உண்மையினையே கவிஞர் பரஞ்சோதியார்,

"அண்டங்கள் எல்லாம் அணுவாக
அணுக்கள் எல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்
சிறிதாயி னானும்
அண்டங்கள் உள்ளும் புறம்பும்
கரியாயி னானும்
அண்டங்கள் ஈன்றாள் துணைஎன்பர்
அறிந்த நல்லோர்" (திருவிளையாடல் புராணம், பாயிரம் 6)

என்று அநுபவ இயலாய்க் கூறியுள்ளமையைக் கண்டு தெளியலாம்.

பாரதியார் தமது பாடலில், கண்ணன் காண்டீபனுக்குக் காட்டிய விசுவரூப தரிசனம் போல், பரவெளியில் உள்ள அண்டகோளங்களை ஒருங்கே காட்டியுள்ளார். இந்த அண்டகோளங்களின் அமைப்பை,

"விண்டு ரைக்க அறிய அரியதாய்
விரிந்த வான வெளியென நின்றனை;
அண்ட கோடிகள் வானில் அமைத்தனை;
அவற்றில் எண்ணற்ற வேகம் சமைத்தனை:
மண்ட லத்தை அணுஅணு ஆக்கினால்
வருவ தெத்தனை அத்தனை யோசனை
கொண்ட தூரம் அவற்றிடை வைத்தனை"
(பாரதியார் கவிதைகள், தோத்திரம் பாடல்கள், மஹா சக்திவாழ்த்து)

என்று விளக்குவதுடன் அவற்றிடையேயுள்ள தூரத்தையும் கற்பனை மூலம் கணக்கிட்டுக் காட்டுவர். ஒரு மண்டலத்தைப் பொடியாக்கி, அந்தப் பொடிகளையும் அணுக்களாக்கினால் வரும் தொகை எவ்வளவோ அவ்வளவு தூரத்தில் பல்வேறு அண்டங்களை இறைவன் இயங்கச்செய்கின்றார்.

பாரதியார், புறமுக ஆற்றல் (Centrifugal force) என்ற இறைவனது ஆணையால் இக்கோள்கள் - அண்டங்கள் - வழி விலகாமல் சுற்றி வந்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொரு கோளுக்கும் இடையிலும் பல்லாயிரக்கணக்கான மைல் இடைவெளிகள் உள்ளன. இந்த இடைவெளியில்தான் சில சமயம் 'வால்மீன்களையும்' (Comets), 'வீழ்கொள்ளி' அல்லது 'எரிமீன்களையும்' (Meteors) காண்கின்றோம்.

**பொறியியல் அறிவு (Engineering knowledge)**

பண்டைத் தமிழர்கள் பொறியியலிலும் வல்லுநர்களாய் இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க இடமுண்டு. இராமாயணத்தில் காட்டப்பெறும் புட்பக விமானமும், சீவக சிந்தாமணியில் விசயை சென்ற மயிற்பொறியும், பெருங்கதையில் குறிப்பிடப்பெறும் யூகியால் சமைக்கபெற்ற இயந்திர யானையும் பொறியியல் அறிவினால் அமைக்கபெற்ற சாதனங்கள் என்று கருதலாம். அமைக்கபெறாவிடினும் அமைக்கலாம் என்ற அறிவியல் கற்பனையாவது எழுந்திருக்க வேண்டும் என்று கருதவாவது இடம் உண்டல்லவா?

கம்பராமாயணத்தில் புட்பக விமானத்தைப் பற்றிய குறிப்பினைக் காண்போம். வீடணுக்கு முடிசூட்டு விழா நடைபெற்ற பிறகு இராமன் முதலியோர் அயோத்திக்குத் திரும்பும் வேளை வருகின்றது. இராமன் வீடணனை நோக்கி ‘இப்பொழுது அயோத்திக்குச் சென்று சேரத்தக்க ஊர்தி உளதோ?’ என்று வினவ, அதற்கு விடையாக வீடணன் ‘விமானம் உளது என்கிறான். இந்த விமானம் குபேரனுக்குரியது; நான்முகனை நோக்கித் தவம் செய்து பெற்றது. அதனை இராவணன் அவனிடமிருந்து பெருஞ் செல்வத்துடன் கவர்ந்து கொண்டான் என்று கூறினான்; அதன் தன்மையை,

“ஓங்கு மால்வெள்ளம் எழுபது
ஏறினும் ஒல்காது
ஈங்கு ளாரெலாம் இவருவது
இவரின் நீ இனிது
பூங்கு லாநகர் புகுதிஇஞ்
ஞான்று” (கம்பராமாயணம், யுத்தகாண்டம் - 143)

என்று விளக்குகின்றான். இராமன் அவ்விமானத்தைக் கொணருமாறு கூற, வீடணன் அதைக் கொணருகின்றான். அது ஒரு பெரிய வானப் பேருந்து (Air bus) போல் வந்து சேர்ந்தது.

“அண்ட கோடிகள் அநந்தமொத்(து)
ஆயிரம் அருக்கர்
விண்ட தாம்என விசும்பிடைத்
திசையெலாம் விளங்கக்
கண்டை யாயிரம் கோடிகள்
ஒலிப்புறக் கஞலக்
கொண்ட ணைந்தனன் நொடியினின்
அரக்கர்தம் கோமான்” (கம்பராமாயணம், யுத்தகாண்டம் - 145)

என்பது விமானத்தின் தோற்றம். ஆயிரம் சூரியர்கள் ஒரே சமயத்தில் தோன்றினாற்போல தன் பேரொளியால் எல்லாத் திசைகளும் விளக்கமடையவும் மிகப் பலமான மணிகள் அதிகமாக ஒலிக்கவும் விமானத்தை வீடணன் கொணர்ந்தான். இந்த விமானம் நினைத்தபடித் தடையின்றிச்செல்ல வல்லது.

சீவக சிந்தாமணியில் குறிப்பிடப்பெற்றுள்ள மயிற்பொறி குறித்த செய்திகளை இங்கு ஆய்வோம். சச்சந்தன் தன்னைப் பாதுகாத்தற் பொருட்டு ஓர் இயந்திர ஊர்தியைச் செய்யுமாறு ஒரு தச்சனைப் பணிக்க, அவனும் ஏழு நாட்களுள் ‘மயிற்பொறி ஒன்றினைச் தயாரிக்கின்றான். அந்தப் பொறியை இயக்கும் முறைகளைச் சச்சந்தன் தன் மனைவி விசயைக்குக் கற்பிக்கும் செய்தியினைக் காண்போம்.

“பண்தவழ் விரலில் பாவை
பொறிவலந் திரிப்பப் பொங்கி
விண்தவழ் மேகம் போழ்ந்து
விசும்பிடைப் பறக்கும்; வெய்ய
புண்தவழ் வேற்கண் பாவை
பொறியிடந் திரிப்பத் தோகை
கண்டவர் மருள வீழ்ந்து
கால்குவித் திருக்கு மன்றே” (சீவக சிந்தாமணி, 301)

திருச்சிக்கருகேயுள்ள காவிரி நதியின் குறுக்கே கட்டபெற்றுள்ள கல்லணை கரிகாற்பெருவளத்தான் காலத்தில் கட்டப்பெற்றதாய்க் கூறுகின்றனர். தஞ்சை பெரிய கோயிலின் மாபெரும் கோபுரமும், கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள கோபுரமும் முறையே இராசராசன் - ஐஐ காலத்திலும், அவனது மகன் இராசேந்திரன் - II காலத்திலும் கட்டப்பெற்றனவாய் வரலாற்றால் அறிகின்றோம். இவற்றால் பொறியியலும் சிற்பக்கலையும் அற்புதமாய் வளர்ச்சி பெற்றுள்ள நிலைகளைக் காணமுடிகின்றது. அவை கட்டபெற்ற தொழில்நுட்ப நூல்கள் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

**வானியல் (Meteorology)**

வானியல் பற்றிய ஒரு சில கருத்துகளையும் இலக்கியங்களில் காண்கின்றோம். மேலே செல்லச் செல்லக் காற்று இலேசாக இருக்கும் என்பது விண்வெளி ஆராய்ச்சியால் பெறப்படும் உண்மையாகும். கடல்மட்ட அளவில் பத்து மைல் உயரத்தில் காற்று பத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்றும், இருபது மைல் உயரத்தில் அது கிட்டத்தட்ட நூறில் ஒரு பங்காய்க் குறைந்துவிடுகின்றது என்றும், மூப்பது மைல் உயரத்தில் அ∴து ஆயிரத்தில் ஒரு பங்காகிவிடுகின்றது என்றும் இந்த ஆராய்ச்சியால் அறிகின்றோம்.

வானியல் அறிவினைப் பழந்தமிழர் கைக்கொண்டிருந்தனர் என்பதனைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் இலக்கியச் சான்றுகளுடன் தெளிவுபடுத்துகின்றார். மேற்கண்ட உண்மையைக் கம்பன் மிகத் துள்ளியமாய்க் கூறுகின்றான். இலங்கையிலுள்ள மாளிகைகள் தேவர் உலகை எட்டும்படியாய் உள்ளன. மேருவையும் வருத்தக்கூடிய பேராற்றல் வாய்ந்த காற்று அந்த உயரத்தில் தென்றலாய் வீசுகின்றதாம்.

“நாகா லயங்களொடு நாகர்உல கும்தம்
பாகார் மருங்குதுயில் என்னஉயர் பண்ப
ஆகாயம் அஞ்சஅகன் மேருவை அணுக்கும்
மாகால் வழங்குசிறு தென்றல்வர நின்ற” (கம்பராமாயணம், ஊர்தேடு - 2)

தேவர்கள் வாழுகின்ற இல்லங்கள் உட்படத் தேவலோகம் தமது பகுப்பாய்ப் பொருந்தியஓரிடத்தில் (கீழ் நிலையில்) இனிது தங்கத்தக்கன என்னும்படி மிக்க உயர்ச்சியுடையவை இலங்கை நகரத்து மாளிகைகள் என்பதனை முதல் இரண்டடியின் கருத்து வெளிப்படுத்துகின்றது. அங்ஙனம் அவை மிக உயர்ந்திருந்தாலும், மிக்க வலிமையுடைய வாயுதேவன் இராவணனிடத்து கொண்டுள்ள அச்சத்தால் அடங்கித் தென்றலாய் வீசப்பெற்றிருந்தனன் என்பதைப் பின்னிரண்டு அடிகள் தெளிவுபடுத்துகின்றன. இங்கு இயல்பாக உள்ள அறிவியல் உண்மை கற்பனையாகக் கவிதையில் வெளிப்படுவதைக் காணலாம்.

**மருத்துவ இயல்** (Medical)

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், இலக்கியத்தில் பயின்றுவரும் மருத்துவச் செய்திகளையும் சிகிச்சை முறைகளையும் விளக்குகின்றார்.

திருக்குறளிலுள்ள ‘மருந்து’ என்ற அதிகாரத்தில் நோய்கள் வருவதன் காரணங்களையும், அவை வாராது தடுக்கும் முறைகளையும், அவை வந்தால் தவிர்க்கும் வழிவகைகளையும் பற்றிய செய்திகள் தரப்பெற்றுள்ளன.

“நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்” (குறள். 948)

திருவள்ளுவரின் கூற்றுப்படி நோய் வருவதன் காரணத்தையும், நோய் இன்னதென்பதையும் ஐயமறத் தெளிந்து மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய முறைகளை மேற்கொண்டு அந்நோயைப் போக்க வேண்டும் என்பது பண்டைய மருத்துவ முறையாகும். இன்றைய மருத்துவ முறையும் இதனையொட்டியே உள்ளது.

அங்ஙனமே நோயுற்றவனின் வயது முதலியவற்றையும், அவனுடைய வேதனை, வலி முதலியவற்றையும், காலவேறுபாடுகள் முதலியவற்றையும் நோக்கிச் சிகிச்சை செய்தல் வேண்டும். இதனை,

“உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல் (குறள். 946)

என்று வள்ளுவப்பெருந்தகை குறிப்பிடுகின்றார்.

கண் முதலிய நுட்பமான பகுதிகளில் இரும்புத்துள் முதலியவை புகுந்துகொண்டால் காந்தத்தைக் கொண்டு இக்காலத்தில் சிகிச்சை செய்கின்றனர். பண்டைத் தமிழரும் இம்முறையை அறிந்திருந்தனர் என்பதைக் கம்பன் காட்டுகின்றான். இராவண வதம் முடிந்த பிறகு தயரதன் உம்பருலகிலிருந்து நில உலகிற்கு வந்து இராமனுடன் உரையாடும்பொழுது தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கின்றான். இதனைக் கம்பர்,

அன்று கேகயன் மகள்கொண்ட
வரம்எனும் அயில்வேல்
இன்று காறும்என் இதயத்தில்
இடைநின்ற தன்னைக்
கொன்று நீங்கலது இப்பொழுது
அகன்றதுஉன் குலப்பூண்
மன்றல் ஆகமாம் காந்தமா
மணியின்று வாங்க (கம்பாராமாயணம் - யுத்தகாண்டம் - 118)

என்று குறிப்பிடுகிறான். அன்று கைகேயி தன் இதயத்தில் பாய்ச்சின வரம் என்னும் கூரிய வேல்,இன்று இராமனைத் தழுவியதனால் அவன் மார்பாகிய காந்தம் அதனை வாங்கிவிட்டது என்று கூறுவதில் நவீன சிகிச்சை முறையின் குறிப்பைக் காட்டுகின்றது. கருவுயிர்த்த மங்கையர், குழந்தையை நீராட்டி மருந்தூட்டி வளர்க்கும் திறம் சீவக சிந்தாமணியில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

"காடி யாட்டித் தராய்ச்சாறும்
கன்னல் மணியும் நறுநெய்யும்
கூடச் செம்பொன் கொளத்தேய்த்துக்
கொண்டு நாளும் வாயுறீஇப்
பாடற் கினிய பகுவாயும்
கண்ணும் பெருக உகிர்உறுத்தித்
தேடித் தீந்தேன் திப்பிலிதேய்த்(து)
அண்ணா உறிஞ்சி மூக்குயர்த்தார்" (சீவகசிந்தாமணி, முக்தி இலம்பகம் - 2703)

(காடி - கஞ்சி; தராய்ச் சாறு - பிரமிச்சாறு; கன்னல்மணி - கருப்புக்கட்டி; வாயுறீஇ - வாயில் உறுத்தி; பெருக - பெரிதாகும்படி; உகிர் உறுத்தி - நகத்தால்

அகலமாம்படி செய்து; அண்ணா - உண்ணாக்கு) என்ற பாடலில், குழந்தை பிறந்தவுடன் அதற்குச் செய்யும் பணிகள் இதில் நன்கு குறிப்பிடப்பெற்றுள்ளன. நவீன மருத்துவர்களும் அறியாத அரிய செய்திகள் இதில் துள்ளியமாகக் காட்டப்பெற்றுள்ளன

**அணுவியல்** (Atomic)

இயற்பியலின் ஒரு பிரிவாக விளங்குவது அணுவியல். அண்மைக் கால அறிவியல் வரலாற்றில் அற்புதமான வளர்ச்சி பெற்றிருப்பது அணுவியலாகும். அணு பற்றிய குறிப்புகள் தமிழ் இலக்கியத்தில் காணக்கிடப்பதைக் காண்போம். ஔவையார் அணு குறித்துப் பாடியுள்ளார்.

"அணுவிற்கு கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புளே காட்டி
வேடமும் நீரும் விளங்க நிறுத்தி
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன்
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக! விரை கழல் சரணே!"
(ஔவையார், விநாயகர் அகவல், 64 - 71)

இறைவனின் உன்னத நிலையினை 'அணுவிற் கணுவாகி' என்று பாடற்பகுதியில் ஔவையார் காட்டுகின்றார். திருக்குறளைப் பற்றிக் கூறுமிடத்தும் ஔவையார்,

"அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி
சிறுகத் தறித்த குறள் (திருவள்ளுவ மாலை, 61)

என்று கூறுகின்றார்.

இரணியவதைப் படலத்தில் இரணியனுக்கும் பிரகலாதனுக்கும் இடையில் நடைபெறுகின்ற உரையாடலில் அணு பற்றிய கருத்து வெளிப்படுகின்றது. 'நீ சொல்லும் நாராயணன் எங்கு இருக்கின்றான்?' என்று இரணியன் பிரகலாதனைக் கேட்க, அதற்கு அவன்,

"சாணிலும் உளன்ஓர் தண்மை
அணுவினைச் சதகூறு இட்ட
கோணிலும் உளன்; (கம்பராமாயணம், இரணியன் வதை, 124)

என்று விடையளிக்கின்றான். இங்கு அணு என்பது ஒரு சிறிய பொருள்; அதன் நூறில் ஒரு பகுதி 'கோண்' என்பது என்ற கருத்துகள் குறிப்பிடப்பெறுகின்றன. பிறிதோர் இடத்திலும் அணு என்பது ஒரு சிறிய பொருள் என்ற கருத்து வெளிப்படுகின்றது. இலக்குவன் கணையால் மேகநாதன் இறந்துவிடுகின்றான். மண்டோதரி புலம்புகின்றாள்.

"முக்கணான் முதலி னோரை
உலகொரு மூன்றி னோடும்
புக்கபோர் எல்லாம் வென்று
நின்றஎன் புதல்வன் போலாம்
மக்களில் ஒருவன் கொல்ல
மாள்பவன் வான மேரு

உக்கிட அணுவொன்று ஓடி
உதைத்தது போலும் அம்மா"
(கம்பராமாயணம், யுத்த காண்டம், இராவணன் சோகப்படலம், 52)

என்பது கம்பனின் வாக்கு. 'என் மகன் மேகநாதன் சாதாரணமானவன் அல்லன். மூன்றுஉலகங்களிலும் நடைபெற்ற போரில் எல்லாம் மூன்று கண்களையுடைய சிவபெருமானையும் வென்று வாகை சூடியவன். அத்தகையவன் இன்று கேவலம் ஒரு மனிதனால் கொல்லப்பட்டு வீழ்ந்தான். இது வானுற ஓங்கி வளர்ந்து நிற்கும் மேருமலையை அணு ஒன்று ஓடி உதைத்தது போலல்லவா இருகின்றது?' என்று கணக்குப் போட்டுப் புலம்புகின்றான். இங்கும் அணு ஒரு சிறிய பொருள் என்ற கருத்து விளக்கப்பெறுகின்றது.

ஊழியின் முடிவில் இந்த அகிலம் முழுவதும் அணுத் தத்துவமாக மாறும் (Involution) என்பதையும், மீண்டும் படைப்புக் காலத்தில் (Evolution) அஃது அண்டங்களாக வடிவுபெறும் என்பதையும் மெய்யுணர்வு பெற்ற தாயுமான அடிகள்,

"செகத்தை யெல்லாம் அணுவளவும்
சிதறா வண்ணம்
சேர்த்துஅணுவில் வைப்பை; அணுத்
திரளை எல்லாம்
மகத்துவமாய்ப் பிரமாண்ட
மாகச் செய்யும்
வல்லவா நீநினைத்த
வாறே யெல்லாம்" (தாயுமான அடிகள், தந்தை தாய், 6)

என்று விளக்குகின்றார். புலன் உணர்வைப் பன்மடங்கு பெருக்கும் கருவிகளைக் கொண்டு இன்றைய அறிவியலறிஞர்கள் இந்த உண்மையை உலகிற்கு உணர்த்தியுள்ளனர். நாம் காணும் பொருள்கள் யாவும் அணுத்திரளைகளேயன்றி வேறொன்றுமில்லை என்பதையும் விளங்கச் செய்துள்ளனர்.



**உயிரியல்** (Biology)

இன்று உயிரியல் துறையில் டார்வின் போன்ற அறிஞர்களால் குறிபிடப்பெறுவது கூர்தல் அறம் (Doctrine of Evolution) என்பது. இதுபற்றி அறிவியறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துகள் வெளிப்படுகின்றன. இத்தகைய கொள்கை போன்றதொரு கருத்தினை,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன்" (திருவாசகம், சிவபுராணம், 26 - 31)

என்று மணிவாசகர் பகர்ந்துள்ளார்.

**முடிவுரை**

பண்டைய தமிழர்களிடம் அறிவியல் சிந்தனை நிறைந்திருந்தது என்பதனையும் அச்சிந்தனையைத் தலைமுறை தோறும் வளர்த்து வந்துள்ளனர் என்பதனையும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் நன்கு ஆய்ந்தறிந்துள்ளார் என்பது அவரது அறிவியல் சிந்தனை தொடர்பான நூல்கள் பறைசாற்றுகின்றன. பழந்தமிழ் அறிஞர்களிடையே மனிதப் பிறவி குறித்த

நுட்பமான செய்திகள், உயிரணுக்கள், நிறக்கோல்கள், சுரப்பிகள், மரபணு, கால்வழி இயல், மரபுவழிப் பண்புகள், வானநூலறிவு, பொறியியல் அறிவு, வானியியல், மருத்துவ இயல், அணுவியல், உயிரியல் என அனைத்து அறிவியல் துறைகளிலும் சிறந்தோங்கி விளங்கினர் என்பதனை நிரூபித்துள்ளார். இவற்றிற்கான சான்றுகள் அனைத்தும் தமிழ் இலக்கியக் களஞ்சியங்கள் மூலம் அறியக்கிடக்கின்றன என்ற செய்திகளை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமது நூல்களின் வாயிலாகவும், கட்டுரைகள் வாயிலாகவும், சொற்பொழிவுகள் வாயிலாகவும் வெளிப்படுத்தியுள்ளார்.




************************

# தமிழ்வள மேம்பாட்டில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் பணி

முனைவர் வ.கணபதிராமன்
இணைப்பேராசிரியர்
தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர் – 608 002.

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை**

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் எனத் தமிழகத்தின் எல்லைத் தொன்மையும், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்தகுடி எனத் தமிழினத்தின் பழமையும்,;நின் சீர் இளமை திறம்வியந்து செயல்மறந்துவாழ்த்துதுமே; என மொழியின் வளமையும் கொண்ட மொழி தமிழ்மொழி என்றால் அது மிகையில்லை. தனிநாயக அடிகளாரால் ;தமிழ் தெய்வத்தின் மொழி என்று போற்றப்பட்ட காலத்திலிருந்து இன்று வரை தமிழ் தெய்வத்தின் மொழி என்றே அனைவரும் ஒத்துக்கொண்டுள்ளனர். இந்த வரிசையில் தெய்வத் தமிழைப் பல்லாண்டுகள் ஆய்வு செய்த பெருந்தகை பேரா. டாக்டர் ந. சுப்புரெட்டியார் என்றால் எள்ளளவும் ஐயமில்லை. பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் 1916-ம் ஆண்டு ஆகஸ்ட் 27-ம் தேதி திருச்சி மாவட்டத்திலுள்ள பெரகம்பி கிராமத்தில் எளிய விவசாய குடும்பத்தில் பிறந்தார். திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியல் பட்டம் பெற்ற இவர், பின்னர் சென்னை பல்கலைக் கழகத்தில் எம்.ஏ., பட்டமும்,திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். தமிழ் மொழி மீதான ஈடுபாட்டாலும், இலக்கிய, சமய, அறிவியல் ஆர்வத்தாலும் ஏராளமான நூல்களை இவர் எழுதியுள்ளார். அவர் எழுதியுள்ள 135 நூல்களையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-ல் தமிழ்த் துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றிய அவர், தமிழ்ப் பணிக்காகவும், நூல்களுக்காகவும் திரு.வி.க.விருது, திருக்குறள் விருது, டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது கலைமாமணி விருது உட்பட பல்வேறு விருதுகளைப் பெற்றுள்ளார். மறைவுக்குப்பின்பு அதனால்தான் கலைஞர் பெருமகனார் சுப்புரெட்டியாரின் பிறகு அவர் படைப்புக்களை நாட்டுடைமையாக்கிப் பெருமைசேர்த்தார். அந்த வகையில் பேராசிரியரின் தமிழ்வள மேம்பாட்டுப் பணியான கடித இலக்கியம், சொற்பொழிவுகள், இலக்கிய நூல்கள், அறிவியல் நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் தொடர்பாக காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**கடித உத்தி**

பொதுவாக இக்கால நூலாசிரியர்கள் பல்வேறு உத்திகளைக் கையாண்டுத் தம் படைப்புகளைப் படைக்கின்றனர். அரிய கருத்துகளை எளிய முறையில் படிப்போர் மனதில் பதிப்பப்பதற்குப் பெரும்பாலோர் கையாள்வது ஒன்று விவாவிடை உத்தி. மற்றொன்று கதை உத்தி. முன்னதை விடப்பின்னது ஆசிரியருக்கும் படிப்போருக்கும் மிக நெருங்கிய தொடர்பை விளைவிப்பதால் கடித உத்தியைப் பேராசிரியர் கையாண்டார். இம் முறையில் கையாண்டு படைக்கப் பெற்ற நூல்களாவன,

1. இல்லற நெறி; (வேலனுக்கு வேங்கடத்தானின் கடிதங்கள்)
2. முத்தி நெறி (வேங்கடவானனுக்கு வேலப்பன் கடிதங்கள்)
3. சைவ சமய விளக்கு (கண்ணுதலப்பாக்குக் கார்த்திகேயன் கடிதங்கள்) பேராசிரியர்

ரெட்டியார் அவர்கள் பல்லாண்டுகள் ஆசிரியப் பணியில் ஈடுபட்டிருந்ததாலும், பயிற்சிக்கல்லூரியில் பத்தாண்டுகள் பணி ஆற்றியதனாலும் ஆசிரியர் தகுதியை அனுபவத்தால் நன்கு அறிந்தவர்..

“--------------------------தெய்வம் வாழ்த்திக்
கொள்வோன் உணர்வகை அறிந்தவ கொய்வரக்
கொடுத்தல் மரபௌக் கூறினர் புலவர்”[1]

அதே கருத்தை நன்னூலாரும்,

“.... உரைக்கப்படும் பொருள் உள்ளத்தமைத்து
விரையான் வெகுளான் அறிந்து அவன் உளங்கொளக்
கோட்டமில் மனத்தில் நூல்கொடுத்தல் என்ப”[2]

ஆசிரியர் மாணாக்கர்க்கு உணர்த்தும் முறையை ஈதல் இயல்பு என்பர். நன்னூலார் மேற்காட்டிய நூற்பாக்களிலும் உணர்வகை, கொள்வகை, என்பது அவர்கள் மனம் ஏற்கும் திறனாகும். இவ்விரண்டு முறைகளும் குருவித் தலையில் பனங்காயைக் கட்டுதல் போன்றமுறையை மேற்கொள்ளலாகாது என்ற கருத்தை உளவியல் பாங்கினை நன்கறிந்த பேராசிரியர் விளக்குவனவாகும்

**இல்லற நெறி:**

இல்லற நெறி என்பது திருமணம் மக்கட்பேறு முதலிய கருத்துகள் அடங்கிய ஒருசமூக நெறி. திருமணம் என்பது தனிப்பட்டோரின் உடல்பற்றியதும், உளம்பற்றியதும், உள்ளக் கர்ச்சி பற்றியதும் (Emotion) ஆன்மீக உறவு பற்றியதுமான முதிர்ச்சி நிலையைக் காட்டும் ஒரு சமூக உறவு முன்ற அ∴து ஒரு குறிப்பிட்ட தருவத்தில் ஒரு இளைஞனை கணவன்- தந்தையாகவும் யுவதியை மனைவி - தாயாகவும் மாற்றுகிறது. இந்நிலையில் அது அவர்கட்கு சமூகத்தில் ஓர் உயரிய நிலையையும், கடமைகளையும், உரிமைகளையும், பொறுப்புகளையும் நல்குகிறது. பெரும்பான்மையான ஆடவர் மகளிர் வாழ்க்கையில் திருமணம் உயிர்நாடிபோல் அமைந்து, உடல்,

உள, ஆன்மிக ஒருமைப்பாட்டிளை விளைவித்து வீடுகிறது. "யான், எனது" என்ற தன்மை நிலைகள் மறைந்து நமது என்ற பொதுநல நிலைகள் தோன்றுகின்றன.

ஒரு நல்ல திருமணத்தில் கணவன், மனைவியரில் தனிப்பட்ட முனைப்புகள் ஒன்றிக் கலக்கின்றன. ஒருவரின் சுகதுக்கங்கள் மற்றவரின் சுக, துக்கங்களாக அமைகின்றன. இல்லறநெறி என்ற இந்நூலை அமைத்த பேராசிரியர் திருமண வாழ்வில் நுழையும் நம்பி-நங்கையர் அறிந்துகொள்ள வேண்டிய அடிப்படைச் செய்திகள் அனைத்தையும் ஐம்பது கடிதங்களில் அமைத்து விளக்குகிறார். இச்செய்திகள் மனப்பொருத்தம், அறிவியல் அடிப்படையில் திருமணம், இனப் பெருக்கம், குடும்பக்கட்டுப்பாடு, மக்கட்பேறு, திருமணக்கலை, பால் பொருத்தக் கேடுகள், திருமன வாழ்வில் உடல்நலம், மகிழ்வுடைய இல்வாழ்க்கை என்ற பத்து இயல்களில் பாங்குடன் பாகுபாடு செய்து விளக்கப்பெறுகின்றன. ஒவ்வொரு இயலின் தொடக்கத்திலும் அவ்வியலின் திரண்டகருத்து, சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளது. உடலியல், உளவியல் முறையில் அமைந்த இந்நூலைப் படிக்கப் புகுவோர்க்கு கடிதஉத்தி ஆர்வம் எழுப்பக் கூடியதாக இருக்கும். பொருள் விளக்கத்திற்கு இந்நூலில் அமைந்த 55 படங்கள் மிகவும் துணைசெய்கின்றன..

"பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புனர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளோ"[3]

என்ற மாமுனிவரின் திருவுள்ளத்தை நன்கறிந்து இந்நூலை மிக்க பக்தியுடன் படைத்துள்ளார்

பேராசிரியர். கடிதங்கள் தொடங்கும் முறைக்கு சில எடுத்துக்காட்டுகள் தருவது பொருத்தமாகும்.

வீட்டில் நின் பெற்றோர்கள் திருமணப்பேச்சு தொடங்கியுள்ளனர் என்று எழுதியிருந்தாய்.
நீ திருமணம் செய்து கொள்வதற்கு முன் என் யோசனைகளையும் கேட்டிருந்தாய்.

என்று ஒரு கடிதத்தைத் தொடங்கி தன் கருத்துகளைக் கூறுவார்.

சென்ற கடிதத்தில் பெற்றோர்களிடமிருந்து தம் குழவிகட்கு மரபுவழியாக இறங்கும் பண்புகளைக் குறிப்பிட்டேனல்லவா? அவை பற்றிய சில கருத்துகளை இன்று விளக்குவேன் என்று தொடங்கி மரபு வழியில் பொறி நுட்பத்தைத் தெளிவாக்குவர்.

சென்ற கடிதத்தில் உயிரியல் அடிப்படையில் திருமணத்தைப்பற்றி சில கருத்துகளைத் தெளிவாகத் தெரிவிப்பதாகக் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? மானிட இனப்பெருக்க மண்டலத்தைப்பற்றிய கருத்துகளே இவ்வாரய்ச்சியாகும் என்று கூறி இனப் பெருக்கத்தில் ஆணின் பங்கு (ஆண் பிறப்புறுப்புக்களின் அமைப்பு) இன பெருக்கத்தில் பெண்ணின் பங்கு (பெண்

பிறப்புறுப்புகளில் அமைப்பு) இவற்றை விளக்குவார். தொடர்ந்து விந்துப் பாய்மம் கருப்பையில் பீச்சப்படுவதையும் தெளிவாக்குவார்.

இதுகாரும் எழுதிய மூன்று கடிதங்களில் பெண்களிடம் காணப்பெறும் பால் பொருத்தமின்மைகளையும், அவற்றை நீக்கும் முறைகளையும் ஓரளவு விளக்கினேன். இத்தகைய நிலைகள் ஆண்களிடம் காணப்பெறவில்லையா என்று வினவி இருந்தாய், கூறுவேன் ………… என்று கருத்துகளை விளக்குவார்.

சென்ற கடிதத்தில் இறுதியில் திருமன வாழ்க்கையில் எழும் காரணங்களை மூன்று பகுதியில் தொகுத்துக் தொகுத்துக் கூறினேன் அல்லவா? அவற்றை ஈண்டு விளக்கமாக ஆராய்வேன்.. என்று கருத்துகளை விளக்குவார்.

மணமக்கள் மகிழ்ச்சியான வாழ்வு பெறுவதற்குத் துணையாக இருக்கக்கூடிய குறிப்புகளைத் தருமாறு எழுதியிருந்தாய்… என்று கூறி அவற்றை விளக்கத் தொடங்கினார்.

**முத்திநெறி**

இவ்வுலகம் தோன்றிய நாள்தொட்டு மக்களிடையே ஏதோ ஒரு முறையில் சமய வளர்ச்சி நிலவி வருகிறது. காலப்போக்கில் மக்களில் அறிவு முதிர்த்திக்கேற்ப இச் சமய வளர்ச்சியும் வளர்ந்து பல்வேறு கொள்கைகளுடன் கூடிய பல்வேறு பிரிவுகளாக வளர்ந்தன.

இப்பிரிவுகளுள் ஒன்று வைணவ சமயம். இதனைப் பாயிர இயல், தத்துவ இயல், சாதன இயல், புருஷார்த்த இயல், மந்திர இயல், சம்பிரதாய இயல் என்று ஆறு இயல்களாகவும் 52 கடிதங்களாகவும் தொகுத்தும் வகுத்தும் விளக்குவார். விசிட்டாத்துவைதம் என்பது பழங்காலம் முதல் இறைவனையும் இறைவனைப் பற்றியுமான கருத்துகள் இலக்கியங்களிலும் பேச்சுகளிலும் சிதறிக் கிடந்தவற்றை எம்பெருமானார் என்று போற்றப்படும் இராமாநுசர் பாகுபடுத்தி வைணவ நெறியாக - விசிட்டாத்துவயம் தத்துவமாக-முறைப்படுத்தி நமக்கு வழங்கினார்.

இந்த நெறியையும் தத்துவத்தையும் பேராசிரியர் மூத்திநெறி என்ற தலைப்பில் ஐம்பது கடிதங்களில் இது இயல்களில் வருத்தும், தொகுத்தும் வெளியிட்டுள்ளார். சாதாரணமாக வைணவ தத்துவங்கள் மணிப்பிரவாள நடையில் விளக்கப்பெற்று மரபுவழியாக வந்துள்ளன. ஆனால் பேராசிரியர் அவர்கள் இயன்ற வரையில் இக்கருத்துகளை நல்ல தமிழில் நீரோட்டமான நடையில் விளக்கியுள்ளார்.

பல காலமாக வைணவர்கள் இடையே இருந்த இந்த மலிப்பிரவாள நடையில் சிக்கித் தவிக்கும் இக்கருத்துகளை நல்ல தமிழில் விடுதலை செய்து வெளிப்படுத்தின திறம் சமய

அறிவை நாடும் தமிழ் மக்களுக்குச் செய்த ஒருசிறந்த தொண்டாகும் இந்த நூலில் தொடங்கப்பறும் கடிதங்களுக்குச் சில எடுத்துக்காட்டுகள் தருவது பொருத்தமாகும்.

எம் கடிதத்தில் முத்திநெறி அறியாத மூர்க்கர் (திருவா. 648) என்ற மாணிக்கவாசகரின் சொற்றொடர் உன் உள்ளத்தைத் தொட்டதாகவும், அந்த முத்திநெறியை அறிந்துகொள்ள பேரவாக் கொண்டுள்ளதாகவும் அதனைத் தெரிவிக்குமாறும் கேட்டிருந்தாய்...என்று தொடங்கி சில தத்துவங்களைக் கூறுவர்.

உன் கடிதம் வந்தது. அதில் என்ற தத்துவத்தை விளக்குமாறு கேட்டிருந்தாய். அதனை இக் கடிதத்தில் விளக்குவேன். .. என்று கூறி சித்தினைத் தத்துவ ரீதியிலும் ஆழ்வார் பாசுரங்களை எடுத்துக்காட்டாக கொண்டும் விளக்குவார். உன் கடிதம் வந்தது, “அடியேன் உள்ளான் உடல் உள்ளான்” (திருவாய் 8.8:2) என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழி சொற்றொடரையும், அவற்றில் அடங்கியுள்ள தத்துவக் கருத்துகளையும் விளக்குமாறு கேட்டிருந்தாய். அவற்றை ஈண்டு விளக்குவேன்..என்று கருத்துகளை விளக்குவார்.

சில சமயம்,இக்கடிதம் தொடங்கி மூன்றாவது தத்துவமாகிய ஈசுவரலை விளக்குவேன். முதலில் அவன் திருக்குணங்களைப் பகர்வேன்... என்று திருக்குணங்களை விளக்கத் துவங்குவார். சில சமயம் சென்ற கடிதத்தில் குறிப்பட்டபடி இறைவனுடைய திவ்விய மங்களா விக்கிரகத்தைப்பற்றி விளக்குவேன்.-- என்று கூறி, கடவுளின் ஐந்து நிலைகள் விளக்குவார்.

இன்றும் சில சமயம் இக்கடிதத்தில் பக்திநெறி இன்னது என்று விளக்குவேன் எனக் கடிதத்தில் நேராக இறங்கி விடுவார்.

பெரிய பிராட்டியார் புருஷகார புதியாக (தகவுரை கூறுபவளாக) செயற்படுவதையும், சேதநரின் உய்விற்கு புருஷகாரத்தின் இன்றியமையாமையையும் இக்கடிதத்தில் விளக்குவேன் என்று நேராக விளக்கத்தில் புகுந்து விடுவார்.

**3.சைவசமய விளக்கு**

மக்களுக்கு மன அமைதியை நல்கி வருவறு இறை அனுபவத்தோடு கூடிய சமய வாழ்க்கையாகும் என்பது அனுபவ உண்மை. எல்லாச் சமயங்கட்ஞும் இது பொருந்தும். பொதுவான உண்மையாகும். மூன்று மாணவர்களை பிஎச்.டி. ஆய்வுக்கு நெறிபடுத்தும் வாய்ப்பினைப் பெற்றபோது ஒருவர் தாயுமானவர் பாடல்களை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டதால், தாயுமானவர் கூறும் சுத்தாத்துவத்தில் (தாயுமானவர் பாடல் 253) தெளிவு ஏற்படுத்துவதற்காக சைவ நூல்கைளையும் சித்தாந்த சாத்திரங்களையும் பயிலத் தொடங்கினார். இந்த வாய்ப்பே சைவ சமயத்தில் ஆழங்கால் படுவதற்கு சந்தர்ப்பம் கிட்டியது.”[4]

ஓய்வுபெற்று சென்னைக்கு வந்தபிறகு (1978 ஜனவரி) சில ஆண்டுகள் கழிந்து சைவ சமயத்தில் நாட்டம்கொண்டு பதினான்கு சாத்திரங்கள் பயிலத் தொடங்கினார். இந்த அனுபவமே சைவசமய விளக்கமாக மலர்ந்தது.

இந்த நூலையும் கடித உத்தியைக்கொண்டே அமைத்தார் இதனைப் பாயிர இயல், பதி இயல், பசுஇயல், பாச இயல், சாதன இயல், பயன் இயல் வழிபாட்டு இயல் என்ற ஏழு இயல்களாகவும் ஐம்பத்திரண்டு சுடிதங்களாகவும் பிரித்துக்கொண்டு விளக்குவார். இந்த உத்திமுறையை. விளக்க சில எடுத்துக்காட்டுகள்:

உன் கடிதம் கண்டு மகிழ்ந்தேன். சைவசமய தத்துவங்களின்மீது உள் நாட்டம் செல்வதாகவும், அவற்றைத் தெளிவாக விளக்கமாவும் கேட்டிருந்தாய். உன் நல்லெண்ணத்தைப் பாராட்டுகிறேன், முன்னைய நல்வினைப்பயன் காரணமாக உன்மனம் சமய தத்துவங்களில் ஈடுபட விரும்புகிறது என்பது என் கருத்து என விளக்குவார்,

சைவ சித்தாந்தக் கருத்தினைப்பற்றி அனுபவத்தோடு அறிவதற்கு திருமுறைப்பயிற்சி மிகவும் இன்றியமையாதது. திருமுறைகள் பன்னிரண்டு என்று கூறி திருமுறைகள் பன்னிரண்டையும் அறிமுகம் செய்து வைப்பார். பாயிரஇயல் கடிதம் ஒன்றில் பதி, பசு, பாசம் என்று குறிப்பிட்டேன் அல்லவா? அவற்றுள் பதியைப்பற்றிய சித்தாந்தக் கருத்துகளை இந்த இயலில் விளக்குவேன் .என்று கூறி விளக்கத்தில் இறங்குவார்.

இக் கடிதத்தில் உயிர்பற்றிய மெய்கண்டாரின் கொள்கையை விளக்குவேன் என்று நேராகக் கடிதத்தை துவங்கி பசுவில் இயல்புபற்றி விளக்கத் தொடங்குவார். இக் கடிதத்தில் கன்ம மலத்தைப்பற்றித் சித்தாந்த அடிப்படையை விளக்குவேன்.. என்று கூறி மும்மலங்களில் ஒன்றான கன்ம மலத்தைப்பற்றி விளக்கத் துவங்குவார்.

ஆருயிர்கள் பாசத்தினின்றும் நீங்கிப் பதியினை அடைதற்குரிய சாதனத்தின் (வழியில்) இயல்பை விளக்குமாறு கேட்டிருந்தாய், அதுபற்றிய சுருத்துகளை இக்கடிதத்திலும், இதனைத் தொடர்ந்து எழுதம் கடிதங்களிலும் விளக்குவேன்.... என்று கூறிக் கருத்துகளை விளக்கத் துவங்குவார்.சென்ற கடிதத்தில் சித்தாந்தத்தில் சொல்லப்படும் பரமுத்தி (முடிந்தது என்றுசொன்னேன் அல்லவா? இதற்கு முன்னரும் சில முத்திகள் உளவோ? என்ற பயம் நின்பால் எழுந்திருக்கும். என்று கடிதத்தைத் தொடங்கி பயத்தை நீக்கும் வழியை விளக்குவார்.

இக் கடிதத்தில் ஆலய வழிபாட்டைப்பற்றி சில கருத்துகளை விளக்குவேன்... என்று தொடங்கி அவற்றை விளக்குவார், இக்கடிதத்தில் ஆலயத்திற்குள் எழுந்தருளியிருக்கும் தெய்வத்திற்கு நடைப்பெறும் பூசை முறையை விளக்குவேன். என்று தொடங்கி இறைவழிபாட்டின் முறைகளை விளக்குவார்.

**சொற்பொழிவு உத்தி**

பேராசிரியர் ரெட்டியார் திருப்பதியில் பணிபுரிந்தபோது தாம் மேற் கொண்ட பணிக்கு அப்பாற்பட்டு பொதுத் தொண்டாக பாக்காலாவில் பாக்காலா தமிழ்ச்சங்கம்! என்ற ஒன்றை, அந்தந்த ஊர் சான்றோர்கள் துணைக்கொண்டு தாம் முன்னின்று நிறுவினார். தமிழ்நடை பாடாத பகுதியாதலாலும் இச்சங்கத்தைத் தமக்கு ஒரு பேச்சு மேடையாகவும் அரசுகளில் தொடர்புகொள்ள நிறுவனங்களாகவும் பயன்படுத்திக் கொண்டார். இதை உத்தி என்று சொல்வதைவிட நடைமுறையில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் ஆதலால் “சொற்பொழிவுகளின் தொகுப்பு என்றே கூறுவது பொருத்தமாகும். இந்த முறையில் வெளிவந்த நூல்கள்:

1) திருவேங்கடமும் தமிழிலக்கியமும்,
2) கலியன்குரல்
3. தமிழ் இலக்கியத்தில் அறம் நீதி, முறைமை,
4) ஆழ்வார்களின் ஆரா அமுது
5) பரவீப் பொழிவுகள்,
6) புதுமைக் கவிஞர் சுப்பிரமணிய பாரதி-ஒரு கண்ணோட்டம்,
7) தமிழில் அறிவியல-அன்றும் இன்றும்

என்பவையாகும். இவை ஒவ்வொன்றைப்பற்றியும் சுருக்கமாகக் காணலாம்..

**1. திருவேங்கடமும் தமிழிலக்கியமும்**

இந்நூல் செல்னைப்பல்கலைக் கழகத்தில் ரா.பி.சேதுப்பிள்ளை வெள்ளிவிழா சொற்றிபொழிவு திட்டத்தின் கீழ் (1973-74) நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளின் தொகுப்பு.முதற்சொற்பொழிவு சங்க கால வேங்கடம் என்பதாகும். இதில்,

அ) இன்றையோர் கருமும் வேங்கடம் வேறு தொல்காப்பிய பாயிரம் அருளிய பனம்பாரனார் கூறிய வேங்கடம் வேறு என்பதை அகநானூறு, கலித்தொகை, நற்றிணை, பட்டினப்பாலை, பெரும்பானாற்றுப்படை, கல்வெட்டுகள், அமலநாதிபிரான் என்ற நூல்களில் உள்ள சான்றுகளைக்கொண்டு விளக்கி உள்ளார்.

ஆ) வேங்கடத்தை ஆண்ட அரசர் என்ற தலைப்பில் குறிபடப்பெறும் அரசர்கள் இன்றைய திருவேங்கடத்தில் இருந்துகொண்டு அரசாளவில்லை. என்று வற்புறுத்திக் கூறுவர் இரண்டாம் சொறிபொழிவு இடைக்கால இலக்கியத்தில் வேங்கடம் என்பது இத்தலைப்பில் இடைக்கால இலக்கியங்களான நாலாயிரத்திவ்யப்பிரபந்தம், வில்லிபுத்தூரார் பாரதம், கம்பராமாயணம் ஆகியவற்றில் வரும் வேங்கடம் பற்றிய குறிப்புகள் எடுத்துக்காட்டப்பட்டுமிளன, சில எடுத்துக்காட்டுகள்:

i. அசித்து எம்பெருமாறுடைய படைப்பாதலால் மலைபின் இயற்கைக் காட்சிகளை இதில் அடக்கி மூன்றாழ்வார்களின் பாசுரங்களில் வரும் இயற்கைக் காட்சிகளை எடுத்து விளக்குவார்.

ii. குலசேகராழ்வார் திருவேங்கடத்தின்மீது கொண்டுள்ள கழிபெருக்காதல் அற்புதமானது. திருமலையின் உள்ள கேனேரியில் வாழும் குருகு, மீன் திருக்கோயிலின் பொன்வட்டில் மலைகளிலுள்ள சப்பகமரம், தம்பகம், கருவறையில் உள்ள வாயிற்படி இவற்றில் யாதேனும் ஒன்றாக இருக்கும் வாய்ப்புபெற வேண்டுகிறார். ஒவ்வொன்றுக்கும் உள்ள குறைகளை நினைத்து அவற்றைத் தவிர்த்து எம்பெருமான் பொன் மலையில் ஏதேனும் அவாவே என்று கூறுகிறார்.

iii. இங்ஙனமே திருமிழிசையாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார் ஆகிய ஆழ்வார்களின் அனுபவங்களை நயம்பட எடுத்துக்கூறுவார். நம்மாழ்வாரின் திருவேங்கடம் பற்றிய பாசுரம் எவை தத்துவமாகிய பிரபந்தநெறியை விளக்குவதாக எடுத்துக்காட்டுவார். ஆழ்வார் பெருமக்கள் அகப்பொருள் தத்துவத்தைக் குழைத்துக் காட்டும் அருமைப்பாட்டைத் தெளிவாக்குவார்,

“ஞானத்தில் தம் பேச்சு
பிரேமத்தில் பெண் பேச்சு”

என்று ஆச்சார்ய சூத்திரத்தை எடுத்துக்காட்டி விளக்குவார்.

கம்பராமாயணத்தில் வேங்கடத்தைப்பற்றிய ஒரு குறிப்பு வருகிறது. சுக்ரிவன் தென் திசைக்கு ஏகும் வானர வீரர்களை நோக்கி மலைக்கு எழுந்தருள வேண்டா, காரணம் அது முத்தியை அளித்து விடும். இதனால் இராமகாரியம் கெட்டுவிடும்! என்ற கூறுவான். இதனால் மலையிலுள்ள பெருமை காட்டப்படுகிறது. வில்லிபாரதத்தில் அருச்சுனன் தீர்த்த யாத்திரை சருக்கத்தில் அரவக்கிரியைச் சார்ந்ததாக உள்ள குறிப்பைத் தவிர வேறு செய்தி இல்லை,

மூன்றாம். சொற்பொழிவு:திருவேங்கடத்து மீதெழுந்த

(அ) திருவேங்கடத்தந்தாதி
(ஆ) திருவேங்கடமாலை
இ) திருவேங்கடக் கலம்பகம்
ஈ) சேடமலைப் பதிற்றுபட பத்தந்தாதி
(உ) திருவேங்கட புராணம்

என்ற ஆறு நூல்கள் பற்றிய விளக்கம் அமைகிறது

1. திருவேங்கடமலை வானுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும் இடையில் இருப்பதாகவும் அதனால் மண்ணோரும், விண்ணோரும் வழிபடுவதற்கு ஏற்புடைத்தாக இருக்கிறதென்றும் கூறி மலையின் உயர்ச்சியை விளக்குவார்.

2. வேங்கடமலையின் சிறப்பினைத் திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்காரின் பாசுரங்களைக்கொண்டு விளக்குவார். இப்பகுதியில் பன்னிரு ராசிகள் மேடம், இடபம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், தனுசு, மகரம் கும்பம், மீனம் என்றவை மலையின் உயரத்தை விளக்கும் பாங்கைப் புலப்படுத்துவார். எடுத்துக்காட்டாக திருமலையில் ஓங்கி வளர்த்திருக்கும் மூங்கிலுக்கு நேராக சுறாவடிவம் போன்ற மகராசி பொருந்துங்கால் கம்பத்தின்மீது நடக்கும் கழைக்கற்றைப்போல் திகழ்கிறது. திருமலையின் மீதுள்ள கோனேரியில் மீன் பிடிக்கக்காத்திருக்கும் கனல் இளவெண்குருகு ஒன்று வானத்தில் செல்லும் மீன்வடிவமான மீனராசியில் நிழல் நீரில் தெரியக்கண்டு அதனை உன்மையாக மீனென்று கொத்தி ஏமாந்து போகிறது. இதில் ஒளிமுறிவு (Refraction) என்ற அறிவியல் விதி பொருந்தியிருப்பது கவனிக்கத்தக்கது,

3. திவ்ய கவி மாலவன் சிறப்பையும், மாலவன் குன்றத்தின் சிறப்பையும் பக்தியுடன் எடுத்துக்காட்டுவதை விளக்குவார்.

**2 கலியன் குரல்**

திருமங்கையாழ்வார் அண்ணாமலை நகர்க்கருகிலுள்ள திருநாங்கூர்த் திருப்பதிகள் அடங்கிய பகுதியில் வாழ்ந்தவராதலால், பேராசிரியர் ரெட்டியார் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில், திருமங்கையாழ்வார் படைத்த பக்திப் பனுவல்களைப் பற்றிப் பேச வேண்டும் என்று பல்லாண்டுகள் கனவு கண்டார். அக்கனவு பதினைந்து ஆண்டுகட்குப் பிறகு நனவாகியது. பல்கலைக்கழகத்தில் இருந்து சொற்பொழிவுக்கு அழைப்பு வந்தது. திருமங்கையாழ்வார் பற்றி மூன்று பொழிவுகள் நிகழ்த்தினார் அவற்றில் சில கருத்துகள்:

1. திருமங்கையாழ்வார் வாழ்க்கை அகச்சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

2. திருநின்றவூர் என்ற திவ்விய தேசம்பற்றிய பதிகமோ, பாடலோ இல்லாவிட்டாலும், நின்ற ஊர் நிதில்லத்தை என்ற தொடர் இரண்டு பாடல்களில் வருகின்றன. இதுபற்றி உரைமன்னர் பெரியவாச்சான் பிள்ளை எடுத்துக்காட்டும் வரலாறு சுவையுடையதாகக் காணப்படுகிறது என்று கூறி விளக்கம் தருவது சுவையாக அமைந்துள்ளது.

3. திருமங்கையாழ்வார் கொள்ளைக்காரனாக வந்தபொழுது திருமணத் தம்பதியர் போல் வந்த நாராயணன் மூலம் “வாள்வலியால் திருமந்திர உபதேசம் பெற்றதையும், அம் மந்திரம் பிறந்த பத்ரி ஆசிரமத்திற்குத் திருத்தலப் பயணமாக சென்றதும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

4. திருமங்கையாழ்வார் பாசுரங்களில் அமைந்துள்ள கற்பனை நயம், சொல்வளம், ஒலிநயம், யாப்பமைதி, இயற்கை வருவனை ஆகியவை எடுத்துக்காட்டப்பெற்று விளக்கப் பெற்றுள்ளன.

**3. தமிழ் இலக்கியத்தில் அறம் நீதி முறைமை**

இந்நூல் சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் திருமதி கிருஷ்ணா சஞ்சீவி-திருமதி கண்ணம்மா நடேசன் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் (1986-87) திட்டத்தின்கீழ் நிகழ்த்தப்பெற்ற மூன்று சொற்பொழிவுகளின் தொகுப்பு.

முதற்பொழிவு தமிழ் இலக்கியங்களில் அறம்“ என்பது பற்றியது. இதில்,

1. அறம் மிக விரிந்த பொருளில் அமைந்துள்னறு என்பதை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குவார்.

2. அகப்பொருளில் அறம் என்பதற்குச் சங்க இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள் காவியங்கள் போன்றவற்றிலிருந்து எடுத்துக்காட்டுகள் தரப்பெற்றுள்ளன.

3. புறப்பொருளில் அறம் என்பதற்கு வள்ளுவத்தில், சிலம்பில், அறம் வகையும் தொகையும் என்றெல்லாம் விளக்குவார். மனத்தின்கண் மாசு இல்லாமல் இருப்பதே சிறந்த அறம் என்றும் வற்புறுத்துவார்.

4. புறப்பொருளில் இல்லறவியல், துறவறவியல் என பாகுபாடு செய்து இல்லற இயலை நான்கு பகுதியாக வகுத்துக்கொண்டும், பல்வேறுபட்ட இலக்கியங்களிலிருந்து எடுத்துக் காட்டுடன் விளக்குவார்.

தமிழ் இலக்கியங்களில் நீதி என்பது இரண்டாவது சொற்பொழிவில் அடங்கியுள்ள சில கருத்துகள் :

1. அரசனின் இன்றியமையாமைபற்றி பரிமேலழகரின் உரைகொண்டு விளக்குவார். செங்கோண்மை, நாட்டின் பொருள்வளம் போன்ற செய்திகள் இங்கு விளக்கப்பெற்றுள்ளன.

2. சேர, சோழ, பாண்டிய அரசர்கள் நீதி வழங்கியமுறை பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்படுகிறது.

3. இறைபெறும் நெறியைக்குறித்து வள்ளுவர் வாழ்த்துவது கருத்தையும், அறங்கூறும் அவயம்மூலம் நெறிவழங்கும் முறையையும், மனுதர்மமும் வள்ளுவர் அறமும் என்பதையும், பொய்கறியுகல்லோருக்குச் சதுக்கப்பூதம் வழங்கும் தண்டனையையும் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன..

தமிழ் இலக்கியங்களில் முறைமை என்பது மூன்றாவது பொழிவு, இதில் அடங்கிய சில கருத்துகள்:

1. முறைமை பற்றிய பல்வேறு கருத்தகர் சிலம்பு, மணிமேகலை, கம்பராமாயணம் இவற்றிலிருந்து எடுத்துக்காட்டுகள் தரப்பெற்றுள்ன.

2. முறைக்கும் முறைமைக்கும் உள்ள மாறுபட்ட கருத்துகள் தெளிவாக்கப்பெற்றுள்ளன.

3. நீதி என்ற சொல் முறைமை என்ற பொருளில் வருவது குறித்து எடுத்துக்காட்டுகள் தரப்பெற்றுள்ளன.

4. ஊழ்செயற்படுதல் அண்டங்களின் ஒழுங்முறைபற்றிய கருத்துகள் தெளிவாக விளக்கப்படுகின்றன.

5. பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், ஈட்டாசிரியர் இவர்கள் முறை பற்றி விளக்குவது தெளிவாக்கப்பெற்றுள்ளது.

6. வள்ளுவரின் ஊழ் - இதில் முறைமை பற்றிய விளக்கம் தரப்பெற்றுள்ளது.

7. காவியங்களில் ஊழ்-கையாளப்படும் முறையும், முறைமையும். தெளிவாக்கப் பெறுகிறன.

8. திக்கற்றவர்களின் கண்ணீர் அனைத்தையும் அழிக்கும் ஆற்றல் படைத்தது என்பதைப் பாவேந்தரின் அமுதவல்லி- உதாரன் வரலாற்றில் ஆற்றல் செயற்படுவதை எடுத்துக்காட்டி விளக்குவது தனிச்சிறப்பு.

**4) ஆழ்வார்களின் ஆரா அமுது**

இந்நூல் திருவேங்கடவன் பல்கலைக்கழக விரிவுச் சொற்பொழிவு திட்டத்தின்கீழ் திருப்பதியைச் சுற்றியுள்ள பல சிற்றூர்களில் நிகழ்த்தப்பெற்ற ஆறு சொற்பொழிவுகளின் தொகுப்பாகும். 26.1.67 இல் பாக்கால தமிழ்ச்சங்கத்தில் ஆண்டாள் பாசுரங்களைப்பற்றி ஞானப் பூங்கொடி என்ற தலைப்பிலும், இதே திட்டத்தில் கீழ் 2.7.67இல் ஏகாம்பரக்குப்பம் என்ற சிற்றூரில் உள்ள கழக உயர்நிலைப்பள்ளியில் பாணர்குலவிளக்கு என்ற தலைப்பில் திருப்பானாழ்வார் பற்றியும், 5.2.67இல் பாக்காலா தமிழ்ச்சங்கத்தில் மூவர் இயற்றிய மொழிவிளக்கு! என்ற தலைப்பில் முதலாழ்வார்கள் பற்றியும், 31,3.67 இல் பக்திசாரர் என்ற தலைப்பில் திருமழிசை ஆழ்வார் பற்றியும், 31,1.68 இல் குண்டக்கல் தமிழ்ச் சங்கத்தில் தொண்ரடிப்பொடிகள் என்ற தலைப்பில் தொண்டரடிப் பொடியாழ்வார் பற்றியும் ஐந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். 30.10.1969-இல் கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தில் குலசேகரப் பெருமாள் என்ற தலைப்பில் குலசேகராழ்வார் பற்றி நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவும் இத்தொகுப்பில் அடங்கியுள்ளது.

நாலாயிரத் திவிய பிரபந்தம் நம்மாழ்வார்-தத்துவம் என்ற தலைப்பில் பேராசிரியர் தம் பிஎச்.டி பட்டத்திற்கு ஆய்வு நடத்திய காலம் ஆதலால் ஆழ்வார் பாசுரங்களில் பக்திச்சுவையையும் அவை படிப்போரை பக்தியின் கொடுமுடிக்கு இழுத்துச் செல்வதையும்,

இடைஇடையே பாசுரங்களின் சொல்வளம், வைணவ உரையாசிரியர்கள் குறிப்பிடும் பாசுர நயங்கள் போன்ற கருத்துகள் தெளிவாக விளக்கப் பெறுகின்றன. பின்னிணைப்பு இரண்டில் காட்டப்பெற்றுள்ள இந்த ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்கள் பற்றிய குறிப்புகள் ஆயிவு மாணவர்களுக்கு மிகவும் பயன்படத்தக்கனவாக அமைந்துள்ளன.

**5. பரணிப் பொழிவுகள்**

இப் பொழிவுகள் பேராசிரியர் முன்னின்று நிறுவிய பாக்காலா தமிழ்ச்சங்கத்தில் நிகழ்த்தப்பெற்ற பொழிவுகளில் தொகுப்பு. பாக்காலா இருப்பு ஊர்தி சந்திப்பில் பல்வேறு மட்டங்களில் பணி ஆற்றி வந்த சுமார் ஒன்றுக்கும் மேற்பட்ட தமிழர்கள் இலக்கியச் சுவையை நுகரும்பொருட்டு இச்சிறிய காவியத்தை அவர்களுக்கு அறிமுகம் செய்யும் பாக்கில் அமைந்தன. இச்சொற்பொழிவுகள், இவற்றிலுள்ள சில கருத்துகள்:

1. சிற்றிலக்கியங்கள் வளர்ந்த வரவாற்றைக்கூறி அவற்றில் ஒன்றாகி பரணியை விளக்கி, கலிங்கத்துப்பரணி என்ற சிறு காவியத்தை அறிமுகம் செய்வதாக அமைந்தது.

2. இந்தச் சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும் என்று கூறும் மரபை எடுத்துக்காட்டி, இவையாவும் தொல்காப்பியர். கூறும் விருந்து! என்ற தலைப்பில் அடக்கும் என்று விளக்கப்பெற்றுள்ளது.

3. நூலைப்பற்றி பருந்து நோக்காக எல்லா இயல்களையும் எடுத்துக் காட்டும்போக்கில் அமைந்துள்ளது இப்பொழிவு.

4. கடைத்திறப்பு என்ற பகுதியில் ஆசிரியர் கூறும் அகப்பொருள் - பற்றிய சொல்லோவியங்கள் சிறப்பாக விளக்கப்படுகிறன.

5. பேய்கள் உலகம் பற்றிய குறிப்புகள், வரலாற்று குறிப்புகள், பிறிதோர். இடத்தில் விளக்கப் பெற்றுள்ளன.

6. ஐந்தாம் சொற்பொழிவு பரணி காட்டும் சுவைகள் பற்றியது. சுவைபற்றிய உரையாசிரியராகிய பேராசிரியர் கூறும் விளக்கத்தையும், வடமொழிவாளர்கள் கூறும் ஸீதாயிபாவம், சஞ்சாரிபாவம் போன்ற சுவை பற்றிய கருத்துகளையும் ஒப்பிட்டு விளக்கி இருப்பது சிறப்பாக அமைந்துள்ளது,

7. சுவைகளில் தோற்றம் பற்றி தொல்காப்பியர் கூறுவதையும் வடமொழிவாணர்கள் கூறுவதையும் ஒப்பிட்டு விளக்கும் திறம், நுண்மான் நுழைபுலத்ததாக அமைந்துள்ளது.

8. வடமொழிவாணர்கள் கூறும் பாவம், அபாவம், சஞ்சாரிபாவும், ,ஆலம்பளவிபாவம், உத்தீபன விபாவம் பற்றிய கருத்துகளும் தெளிவாக்கப் பெற்றுள்ளன. இவற்றைத் தொல்காப்பியர் கூறும் முகற்பொருள், கருப்பொருள் இவற்றுடம் ஒப்பிட்டு விளக்குவது மிகச் சிறப்பாக அமைந்துள்ளது.

9. துஷ்யந்தன், சகுந்தலை மனதில் எழும் காதல் - சோகம், துஷ்யந்தன் நாடகத்தை நடிக்கும் நாடக மாந்தர்களில் மனத்தில் எழும் காதல் – சோகம் நாடகத்தைப் படிப்போர் மனதில் எழும் காதல்-சோகம் இவற்றுள் மூன்றாவதாக கூறப்பெறும் நாடகத்தைப் பார்ப்போர் மனத்தில் எழுவதுபோல கவை என்று வடமொழிவானர்கள் கருதுகின்றனர் என்பதை அற்புதமாக விளக்குவார்.

10. உலகியல் நிகழ்ச்சிகள் சுவை அன்று இலக்கியம், நாடகம் முதலிய இலக்கியங்களிலிருந்து தோன்றுவதே சுவையாகும் என்று விளக்குவார்.

**6) புதுவை(மை)க் கவிஞர்-சுப்பிரமணிய பாரதியார்-ஒரு கண்ணோட்டம்-**

இது புதுவைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்தப்பெற்ற அறக்கட்டளைச் சொற்பொழிவாகும். பாரதியாருடைய பாடல்கள் தேசிய கீதங்கள் தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள் பலவகைப் பாடல்கள், சுயசரிதை, கண்ணன்பாட்டு, பாஞ்சாலிசபதம், குயில்பாட்டு, வசன கவிதைகள் என்ற பகுப்புகளிலிருந்து பல நயமான கருத்துகளை இலக்கியச் சுவை ததும்ப எடுத்துக் கூறுவது இந்நூல். இதில் அடங்கியுள்ள சில கருத்துகள்.

1. நாட்டுப்பற்றுக் கனல் பாரதியிடம் திகழ்ந்ததைப் பல எடுத்துக்காட்டுகளுடன் காட்டப்பெற்றுள்ளது.

2. பாரதியாரில் தமிழ்ப்பற்று, பாப்பா பாடலிலிருந்து பாவலர் போற்றும் பாடல்கள் வரையிலுள்ள பாடல்களில் பொதிந்துள்ளது என்பதைச் சிறப்பாக எடுத்துக்காட்டுவார் பேராசிரியர்,

3. ஆங்கிலக் கல்வி பற்றி பாரதி கூறும் கருத்துகள் பேராசிரியர் ரெட்டியார்க்கு உடன்பாடில்லை. சுதந்திரம் பெற்று நாற்பதாண்டுகளுக்கு மேலாகியும், நம் நாட்டுக்கேற்ற கல்விமுறையை வகுக்க முடியாத பரிதாப நிலையைக் காண முடிகிறது.

பழைய ஆங்கிலக் கல்வி முறையில் சில ஒட்டு வேலைகள் செய்கின்றனரே அன்றி அதனை அடியோடு அகற்றிட புதுக்கல்வி ஏற்பாட்டினை வகுக்கவில்லை. வார்தா கல்வி முறையும், ராஜாஜி கொண்டு வந்த குலமுறை கல்விமுறையும் ஆங்கிலக் கல்வி முறையை தகர்த்தெரிய முடியவில்லை. அவைதாம் நம் நாட்டில் செல்லாக் காசாயின என்பன பேராசிரியர் கருத்துகள். இன்று எம்மருங்கும் ஆங்கிலம் மூலம் கல்வி புகட்டும் பள்ளிகள், நர்சரி பள்ளியிலிருந்து தோன்றுவதைக் காண முடிகிறது.

4. அறிவியல் கல்விக்குப் பாரதியார் அதிக முக்கியத்துவம் காட்டுவதைப் பேராசிரியர் எடுத்துக்காட்டுவார். நாடு விடுதலைப்பெற்று பிறகு அறிவியல் கல்வியில் அதிக நாட்டம் செலுத்த பெறுகிறது. ஆரியபட்டா பாஸ்கரா ஆப்பிள், இன்சாட் போன்ற விண்கலங்களை, விண்வெளியில் செலுத்தி உலகப் புகழ் பெற்றனர் நம் நாட்டு அறிவியல் அறிஞர்கள் என்பதை மிக மகிழ்ச்சியுடன் போற்றுவார் பேராசிரியர்.

5. தொழிற்கல்வி, பெண்கல்வி, புதுமுறைக்கல்வி போன்ற போக்குகளில் பாரதியார் உற்சாகம் காட்டுவதை உவப்புடன் எடுத்துக்காட்டுவார்.

6. பாரதியை வைணவச் செல்வராகவும், சீவன்முத்தராகவும் எடுத்துக்காட்டுவார். வைணவத் தத்துவமாகிய நவவித சம்மந்தத்தை கண்ணன் பாட்டிலிருந்து எடுத்துக்காட்டுவது ஒரு சிறந்த ஆய்வுக் குறிப்பு.

**7. தமிழில் அறிவியல் அன்றும் இன்றும்**

இ∴து உலகத்தமிழாராய்ச்சி. நிறுவனத்தில் டாக்டர் செ. அரங்கநாயகம் அறக்கட்டளைச்சொற்பொழிவாக அமைந்தது. இதில் இரண்டு பொழிவுகளின் அடக்கம். ஒன்று, தமிழில் அறிவியல் அன்று என்பது மற்றொன்று, தமிழில் அறிவியல் இன்று என்பது முன்னது தமிழ் இலக்கியக் கடலில் மூழ்கி முத்தெடுத்ததுபோல் கல்வியியல், அறிவியல் அறிஞர்கள், வானஇயல், வானியல், இயற்பியலும் வேதியலும், உளவியல், உயிரியல் மருத்துவ இயல், கவிதை இயல், வேளாண்மை இயல் இவை பற்றிய கருத்துகள் பொதிந்துள்ள இடங்களெல்லாம் தெளிவாக எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்படுகின்றன.

இரண்டாவது பேராசிரியர் பல துறை அறிவியலைக் கற்றவராதலால் முன் பொழிவில் சுட்டப் பெற்ற பத்து கருத்துகளையும் இன்றைய அறிவியலோடு இணைத்து விளக்குவதாகும்.



**அறிவியல் படைப்புகள்**

மேற்புல அறிஞர்கள் அறிவியலை ஆய்ந்து எண்ணற்ற நூல்களைப் படைத்துள்ளனர். அவை போன்ற நூல்கள் தமிழில் வெளிவர வேண்டும் என்பது பேராசிரியரின் விருப்பம்.

'புத்தம் புதிய கலைகள்' தொடக்கத்தில் மொழிபெயர்ப்பு நூலாகவும், பின்னர் முதல் நூலாகவும்தோன்ற வேண்டும். தமிழில் இலக்கியச் செல்வத்திற்குக் குறைவில்லை. ஆனால் ஆங்கில மொழியில் அமைந்திருப்பது போல "மொழி செல்வம்" தமிழில் வரண்டு கிடக்கிறது. இதை நிவர்த்தி செய்வதற்காக ஒரு சில நூல்களைப் பேராசிரியர் படைத்துள்ளார். இராமர் கட்டிய சேதுவுக்கு ஒரு அணில் செய்த பங்கைப்போல தாம் இப்பணியச் செய்ததாக அடக்கத்துடன் கூறிக்கொள்வார்.

(அ) மொழிபெயர்ப்பு நூல்கள் (அறிவியல்)

1. அணுக்கரு பௌதிகம்,
2. யுனெஸ்கோ அறிவியல் பயிற்றலின் மூல முதல் நூல்
3) மானிட உடல்.

(ஆ) முதல் நூல்கள்

1. இளைஞர் வானொலி,
2. இளைஞர் தொலைக்காட்சி,
3 அதிசய மின்னணு
4. நமது உடல்,
5. இராக்கெட்டுகள்
6. அம்புலிப் பயணம்,
7, தொலை உலகச் செலவு,
8. விண்வெளிப்பயணம்
9. வாழையடி வாழை,
10. இல்லற நெறி,
11, அறிவியல் விருந்து
12. அனுவின் ஆக்கம்.

**(அ) மொழிபெயர்ப்பு நூல்கள்**

இத் தலைப்பில் உள்ள மூன்று நூல்களை நோக்கும்பொழுது அவை முதல் நூல்களாகவே தோற்றமளிக்கும், ஆங்கிலச் சொற்களுக்கு நிகரான தமிழ்ச் சொற்களும், அவற்றின் சொற்றொடருக்கு நிகரான தமிழ்ச் சொற்றொடர்களும் ஆங்கில மரபுத் தொடர்களும் நேரான தமிழ் மரபுத் தொடர்களும் மிகக் கவனமாக கையாண்டிருப்பதை இந் நூல்களில் காணலாம்.

**(ஆ) முதல் நுல்கள்** :

முதல் நூலைப்பற்றி நன்னூல்,

‘வினையினீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதலூலாகும்‘‘[7]

என்ற நூற்பாவால் விளக்கும். இதனால் இராமன் விளைவுகள் (Raman Effect) என்ற தலைப்பில் சர்.சி.வி.ராமனும், ஒப்பு நோக்குக் கொள்கை (Theory of Relativity) பற்றி அறிவுலக மேதை ஐன்ஸ்டைனும் எழுதியவையும், அணுவைப்பற்றிப் பல்வேறு கண்டு பிடிப்புகளை முதன் முதலாக தெரிவித்த அறிஞர்கள் எழுதிய நூல்களையும் முதல் நூலாகக் கொள்ள வேண்டும். ஆயினும், இந்த நூல்களைப்பற்றிப் பல்வேறு அறிவியல் அறிஞர்கள் தம் வாக்கினால் விளக்கும் நூல்களை சார்பு நூல்கள் என்று கொள்ளலாம் என்பது நன்னூலார் கருத்து. ஆங்கிலத்தில் இத்தகைய நூல்கள் எண்ணற்றவையாகத் தோன்றியுள்ளன. ஜப்பான், இரஷ்யா போன்ற நாடுகளில் உள்ள

அறியியல் அறிஞர்கள் தம் மொழியிலேயே பல முதல் நூல்களைப் படைத்துள்ளனர். எடுத்துக்காட்டாக, “பெட்ரன்ட் ரசல்“ என்பார் எழுதிய அணு அரிச்சுவடி (ABC Of Atoms) எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். இங்ஙனமே பேராசியர் முதல் நூலென்று மேலே குறிப்பிட்ட நூல்களைத் தம்முடைய சொந்தமொழியில் எழுதியது எங்கள் தமிழைப் பொருத்தமட்டிலும் இவற்றை முதல்நூல்களாகவே கொள்ளவேண்டும்.

**பணியில் இருக்கும்பொழுது உருவான கல்வியியல் பற்றிய நூல்கள்**

பேராசிரியர் ரெட்டியார் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பத்து ஆண்டுகள் பணிபுரிந்தார். இக்காலத்தில் நான்கு நூல்களை முதல் நூல்களாகப் படைத்துள்ளார். அவை தமிழ் பயிற்றும் முறை, அறிவியல் பயிற்றுமுறை (இயற்பியல், உயிரியல் உட்பட) கல்வி, உளவியல், கவிதைப் பயிற்றுமுறை என்பவையாகும். கல்வி உளவியல் பற்றியும், தாய்மொழி கற்பித்தல் பற்றியும் எண்ணற்ற நூல்கள் ஆங்கிலத்தில் உள்ளன. அவற்றில் பல நூல்களை தேர்ந்தெடுத்துப் பயின்று, அவற்றிலுள்ள கருத்துகளை வகுப்புகளில் கையாண்டு பல்லாண்டுகளில் உருவாகியவை இந்நூல்கள். தமிழ் பயிற்றும் முறை உருவாகுவதற்கு ஆறு ஆண்டுகள் ஆயின என்றும், கல்வி-உளவியல் எழுதி முடிப்பதற்கு மூன்று ஆண்டுகள் ஆயின என்றும், அறிவியல் பயிற்றும் முறை என்ற நூலைப் படைப்பதற்கு ஓராண்டு ஆயிற்றென்றும் பேராசிரியரே கூறியுள்ளார்.

இம்மாதிரிப் பணியில் இருந்துகொண்டே தம்முடைய கற்பித்தல் பற்றிய பட்டறிவைக்கொண்டு நூல் படைத்தோர்களில் இருவர் உள்ளனர். பேராசிரியர் டாக்டர் மு.வ. அவர்கள் பச்சையப்பன் கல்லூரியில் எம்.ஏ.வகுப்பு மாணவர்களுக்குக் கற்பிக்கும்போது தம் அனுபவத்தைக் கொண்டும், ஆழ்ந்து அகன்ற படிப்பைக் கொண்டும், இலக்கிய ஆராய்ச்சி, இலக்கியத்திறன், இலக்கிய மரபு என்ற மூன்று திறனாய்வு நூல்களையும்; மொழியியல், மொழி வரலாறு என்ற மொழிபற்றிய இரண்டு நூல்களையும் எழுதி ஆசிரியர் உலகிற்கும் மாணவர் உலகிற்கும் வழங்கினார். அங்ஙனமே அதே பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றிய பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தம் அவர்களின் அற்புதப்படைப்பு இலக்கியக் கலை என்பது. இவை இதழ்களில் வந்த கட்டுரைகளின் தொகுப்பு. இங்ஙனமே பேராசிரியர் டாக்டர் ரெட்டியார் அவர்கள் காரைக்குடியில் பணியாற்றிய பொழுது தமிழ்ப்பயிற்றுமுறை ‘அறிவியல் பயிற்றுமுறை’ கல்வி - உளவியல், கவிதைப் பயிற்றுமுறை என்ற நான்கு நூல்கள் உருவாகின. திருப்பதியில் பணியாற்றிய காலத்தில் எம்.ஏ மாணவர்களுக்குக் கற்பித்தபோது தம்முடைய அனுபவத்தையும், ஆழ்ந்த அகன்ற படிப்பையும் பயன்படுத்தி ‘தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை’ ‘அகத்திணைக் கொள்கைகள்’ என்ற இரு ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளார். இவை இன்றும் தமிழ் எம்.ஏ, முனைவர் பயிலும் மாணவர்களிடம் புழக்கத்தில் உள்ளன .

**மெய்ப்பொருளியல் படைப்புகள்**

பேராசிரியர் சுப்புரெட்டியார் திருப்பதியில் பணியாற்றிய பொழுது பிஎச்.டி ஆய்வுக்குப் பதிவு பெற்றுக் கொள்ளுதற்கு கால் நூற்றாண்டு முயற்சி செய்து அந்த முயற்சியில் விளைவாக பிஎச்.டி. ஆய்வுக்குப் பதிவுபெற்றார். வேங்கடவன் அருள் ஆட்சி நடைபெறும் புண்ணிய தலத்திற்கு ஏற்பவும், வடமொழித்துறையில் பணியாற்றி வந்த துணைப்பேராசிரியர் டாக்டர் வி.வரதாசாரியாருடைய இயல்புக்கேற்பவும் ;நாலாயிரத் திவ்விய பிரபந்தம் - நம்மாழ்வாரின் தத்துவம்‘‘ என்ற பொருளை ஆய்விற்கு எடுத்துக்கொண்டு ஐந்தாண்டுகள் ஆராய்ந்தார். இதனால் வைணவம்பற்றிய தத்துவத்தைப் பயில்வதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. பின் டாக்டர் பட்டமும் பெற்றார். இவர் மாணவர் ஒருவருக்கு வழிகாட்டியாக அமையும்பொழும் அந்த மாணவர் ‘‘தாயுமானவர் பாடல்‘‘ பற்றி ஆய்ந்தார். இதனால் சைவசமய நூல்களையும், சைவ சமயத்தில் உள்ள பதினான்கு சாத்திரங்களையும் பயில நேர்ந்தது.

இவருடைய பிஎச்.டி ஆய்வு நூல் சற்றேறக்குறைய ஆயிரம் பக்கங்களில் அமைந்து பல்கலைக்கழக வெளியீடாக வெளிவந்துள்ளது. பல்கலைக் கழகத்தில் ஆய்ந்த பொருள் பொதுமக்களுக்குப் பயன்படும் முறையில் பல நூல்கள் எழுத வேண்டும் என்பது பல்கலைக்கழக மானிய ஆணையத்தின் விருப்பம். இக்கருத்தைச் செயல்படுத்தியவர் பேராசிரியர் சுப்புரெட்டியார்.

பணியில் இருந்தபொழுதே ‘‘மலைநாட்டுத் திருப்பதிகள்‘‘ ‘‘தொண்டை நாட்டுத் திருப்பதிகள்‘‘ ‘‘பாண்டிநாட்டுத் திருப்பதிகள்‘‘ உருவாகின. இவை தவிர இவர் முன்னின்று நிறுவிய மூன்று தமிழ்ச்சங்கங்களில் இவருடைய ஆய்வுக் கருத்துகளைச் சொற்பொழிவுகளாக பொதுமக்களீடம் நிகழ்த்தினார். ஓய்வு பெற்ற பிறகு (அக்.1977) சென்னைக்கு வந்து குடியேறினார். இக்காலத்தில்தான் சமய நூல்கள் பல வெளிவந்தன; வெளிவந்தும் கொண்டிருக்கின்றன. இவற்றுள் சில இக்கட்டுரையில் மேலே குறிப்பிடப் பெற்றுள்ளன. இவை தவிர (1) வீட்டு சித்தன் விரித்த தமிழ், 2) சடகோபன் செந்தமிழ், 3) பரகாலன் பைந்தமிழ் 4) நாவுக்கரசர், 5) ஞானசம்பந்தர், 6) தம்பிரான் தோழர், 7) மாணிக்கவாசகர் என்ற நூல்களைக் குறிப்பிடலாம்.

**மொழிபெயர்ப்புப் படைப்புகள் (இலக்கியம்)**

இத்தலைப்பின் கீழ் இந்நூல்களை அடக்கலாம்.

1.வேமனர் - தெலுங்கு
2. குரஜாடா - தெலுங்கு
3 சி.ஆர், ரெட்டி - தெலுங்கு

இவை ஆங்கில மொழி மூலம் சாகித்திய அகாடமியால் அறிமுகப்படுத்தப்பெற்றவை. இவற்றைப் பேராசிரியர் மொழிபெயர்க்கும்போது வாசகர்கள் முதல்நூலாக கருத வேண்டும் என்ற

குறிக்கோள் கொண்டு மொழிபெயர்த்தவை. இந்த நூலங்களில் உள்ள தெலுங்குப்பாடல்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பெற்றவை. பேராசிரியர் மிகக் கவனமாக இவற்றைத் தமிழில் மொழிபெயர்க்கும்பொழுது அவற்றைத் தமிழ் மரபுக்கேற்ற முறையில் மொழிபெயர்த்திருப்பது கவனிக்கத்தக்கது. இத்தகைய பாடல்கள் மொழிபெயர்ப்பை பிறிதோர் இடத்தில் காணலாம். ஆகவே, மொழிபெயர்ப்பில் மிக்க கவனம் செலுத்த வேண்டும் என்பது பேராசிரியரின் செயலால் தெளிவாகின்றது. இப்பணி தமிழ் மேம்பாட்டிற்குச் செய்யப்பெறும் சிறந்த பணியாகும். இவ்விடத்தில் வால்மீகி எழுதிய இராமகாதையைத் தமிழ்மொழியினுடைய மரபு கெடாது தமிழ்க்குக்கொணர்ந்த கம்பன் படைப்பை நினைவுகூறலாம். ஆனால், அவன் படைப்பை மொழிபெயர்ப்பு என்று கூறலாகாது அதனை ஓர் ஒப்பற்ற தமிழ்ப்படைப்பு என்றுதான் கருதவேண்டும்.

**பயண இலக்கியத் தமிழ்**

பயண இலக்கியத் தமிழில் வைணத்தில் ஆறும், சைவத்தில் நான்குமாக படைத்துள்ளார். இந்த நூல் பக்தியில் அடிப்படையாக அமைந்தவையாதலால் இந்நூல்களின் போக்கே தனித்தன்மை வாய்ந்ததாக அமைந்துள்ளது. நூலைப்படிப்போர் செய்திகளைத் தெரிந்து கொள்வதுடன் தாம் புராணக் காலத்திற்குச் செல்வதுபோலவும், நிகழ்ச்சிகள் நடந்த காலத்திற்குச் செல்வது போலவும் பாடல்களில் விளக்கத்தை அறியும்போது பக்தியின் கொடுமுடிக்கு எட்டுவதுபோலவும், சிவசமயம் இறைவனோடு இரண்டறக் கலப்பது போன்ற உணர்வுகளை அடைவதுபோலவும் வாசகர்கள் அனுபவிக்கின்றனர். பக்தி இலக்கியப் பயண நூல்களை முதன்முதலாக எழுதியவர் இவரே. இம்முறையில் இவர் தமிழ் இலக்கிய மேம்பாட்டை வளமுடையதாக ஆக்கியவர் ஆகின்றார்.

**திறனாய்வுத் தமிழ்**

தமிழில் திறனாய்வு நூல்கள் மிக அரியதுவே ஆகும். உரையாசிரியர்கள் தம் உரையில் சில திறனாய்வுக் கருத்துகளை ஆங்காங்கு தூவியிருந்த பொழுதும், தனித் திறனாய்வு நூல்கள் அக்காலத்தில் தோன்றவில்லை. ஆங்கிலத்தில் திறனாய்வு நூல்கள், திறனாய்வு நூல்களைப்பற்றிய திறனாய்வு நூல்கள் எழுந்தன போல் தமிழில் எழவில்லை. ஆனால் சில திறனாய்வு நூல்களை டாக்டர் பட்டத்திற்கு ஆராயும் ஆய்வு மாணவர்களின் திறனாய்வுக் கூறுகளை தோன்றியிருந்தலைக் காணமுடிகிறது. திறனாய்வுத் துறையில் டாக்டர் மு.வ. பேராசிரியர் அ.சா. ஞானசம்பந்தன், கலைமகள் ஆசிரியர் கி.வா.ஜகந்தாதன் போன்றவர்கள் சில படைப்புகளைச் செய்துள்ளார்கள். ஆனால் பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் எண்ணிக்கையில் சில நூல்கனை அதிகமாக செய்துள்ளார் எனக் கருதலாம். இம்முறையில் தமிழ்வள மேம்பாட்டிற்கு இவரது தொண்டு அளப்பரியது என்பது யாவரும் அறிந்த உண்மையாகும்.

## நிறைவுரை:

பேராசிரியர் பல்துறை அறிவினர் கல்லூரியில் கணிதம், வேதியல், இயற்பியல் பயின்றவர். பணியில் ஈடுபட்ட பிறகு மிகுந்த ஆர்வத்துடன் முறையாகக் கற்றத்துறைகள் அறிவியல், விண்வெளியியல், உயிரியல், கால்வழியியல், மருத்தவ இயல், பயிற்சிக் கல்லூரியில் பணிபுரியும் வாய்ப்பு நேரிட்டதால் கல்வியியல், கல்வி உளவியல் போன்ற முறைகளைப் பயில நேரிட்டது. ஆகவே, இந்த பின்னனியில் இவர் படைத்த நுல்கள் பல்துறை வாய்ந்தவையாக அமைந்தன. பலதுறைவாய்ந்த அறிஞர்கள் பலர் தம்நாட்டில் உள்ளனர். அவர்கள் பிற துறை அறிவினைத் தமிழில் வார்த்துக்காட்டிற்றிலர். இந்நிலையில் சமயத் தொண்டாற்ற வந்த மேனாட்டுப் பாதிரியார்கள் தமிழுக்குச் செய்த தொண்டு போலவும் நம்நாட்டுச் சமயப் பெரியார்கள் தமிழுக்கு ஆற்றிய தொண்டு போலவும், அவர்கள் கொண்ட உணர்வைப்போல் பேராசிரியரும் கொண்டிருந்ததனால் பல நூல்கள் தமிழக்கு வர நேர்ந்தன.

> “என்னை இறைவன் நன்றாகப்படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே”[9]

என்ற திருமூலரின் அருள்மொழியை தம் குறிக்கோளாகக் கொண்டிருப்பதால் பல துறையில் பல நுல்கள் படைத்தார். தமிழ்மொழியின் மேம்பாட்டிற்கு பேராசிரியரின் பணி யாவராலும் ஏற்றக்கொள்ளக் கூடியதாகும்.

## அடிகுறிப்புகள்

1.நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் காட்டும் நூற்பா பகுதி
2.நன்னூல் நூற்பா-36.
3.திருமந்திரம். - 1158
4.சைவ-சமய விளக்கு-நூல்முகம்
5.மலரும் நினைவுகள், ப.74.
6.தமிழ் பயிற்றும் முறை, ப.32
7.நன்னூல் – பொதுப்பாயிரம் – நூற்பா – 9
8.தொலை உலகச் செலவு, ப.46.
9.திருமந்திரம் - 81

## ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்:


1. சுப்புரெட்டியார்.ந - மலரும் நினைவுகள்
வேங்கடம் வெளியீடு, அண்ணா நகர்,சென்னை – 48.
2. சுப்புரெட்டியார்.ந - தமிழ் பயிற்றும் முறை, எஸ்.ஆர்.சுப்பிரமணியப் பிள்ளை வெளியீடு, மு.ப.1957.
3. சுப்புரெட்டியார்.ந - கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி
செல்வி பதிப்பகம், காரைக்குடி, முதற் பதிப்பு – 1958.
4. சுப்புரெட்டியார்.ந - வட வேங்கடமும் திருவேங்கடமும்
வேங்கடம் வெளியீடு, அண்ணாநகர், மு.ப.1992.

5. சுப்புரெட்டியார்.ந - நினைவுக் குமிழிகள், பாரி நிலையம், பிராட்வே, சென்னை – 108.
6. கைலாசபதி, க. - சமூகவியல் இலக்கியமும், என்.சி.பிஎச் வெளியீடு, சென்னை – 1979
7. சாமி.பி.எல் - இலக்கியத்தில் அறிவியல், சேகர் பதிப்பகம், சென்னை – 1981.
8. பவணந்தி முனிவர் - நன்னூல் காண்டிகையுரை, ஆறுமுக நாவலர் பதிப்பு
9. மணிவல்லன்.ஆ - தமிழ்மொழி வளர்ச்சி – கலைக்கதிரின் பணி ஓர் ஆய்வு.

**********************************



# கல்விக்கடலின் கலங்கரை விளக்கம்: வள்ளல் டாக்டர் அழகப்பர்

**முனைவர். ஆறு. சரவணகுமார்**
துறைத் தலைவர் (பொ)
வரலாற்றுத் துறை
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி - 630 003

**முனைவர்.க.கிருஷ்ணமூர்த்தி**
மேனாள் துறைத் தலைவர் (பொ)
வரலாற்றுத் துறை
அழகப்பா பல்கலைக் கழகம்
காரைக்குடி - 630 003

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**ஆய்வுச்சாரம்**

நாடு கடந்து பல பட்டங்களைப் பெற்றாலும் தனது தாய் மண்ணை மறவாத நகரத்தார்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் உலகம் போற்றும் மிகப்பெரிய தொழிலதிபராக செல்வச்செழிப்பு மிக்க செல்வந்தராகத் திகழ்ந்த அழகப்பர். தன் செல்வங்களைக் கொண்டு கல்விக்குடியாம் காரைக்குடி என்னும் செட்டிநாட்டில் கல்விப் பூஞ்சோலையினை உருவாக்கியவர் வள்ளல் அழகப்பர். துள்ளிக் குதிக்கும் மாணவச் செல்வங்களைக் கண்டு மகிழ்ந்தவர் வள்ளல் அழகப்பர். வள்ளல் அழகப்பர் ஒவ்வொரு துறைக்கும் பல அறக்கட்டளைகளை வழங்கியிருந்தாலும் கல்விக்காக வழங்கிய அறக்கட்டளைகள் ஈடுயிணையற்றவை. கல்விக்காகத் தாம் வாழ்ந்த வீட்டையே அற்பணித்த கொடை வள்ளல் அழகப்பர் எனில் அஃது மிகையாகாது. அவ்வகையில் கடற்கரையின் மீது மீனவர்களுக்கு ஒளிவீசும் கலங்கரை விளக்கத்தைப் போல கல்விக் கடலின் கலங்கரை விளக்காக திகழ்ந்தவர் டாக்டர் வள்ளல் அழகப்பர்.

கலங்கரை விளக்கம் என்பது கடலில் செல்லும் கப்பல்களுக்கு வழிகாட்டுவதற்காக ஒளி உமிழும் விளக்குகள் பொருத்திக் கடற்கரைகளில் அமைக்கப்பட்டுள்ள உயர்ந்த கோபுரம் போன்ற அமைப்பாகும். இக்கலங்கரை விளக்கத்தைப் போல உலகமெல்லாம் சென்று கல்வி பயின்று, பயின்ற கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கும் வகையில் நாடெங்கும் சென்று பட்டம் பெற்றாலும் தாம் பிறந்த மண்ணை மறவாது வாழ்ந்து வந்த நகரத்தார்களில் ஒருவரான வள்ளல் அழகப்பரின் கல்விப் பணியை 'வெளிச்சவீடு' என்றுக் குறிப்பிடப்படும் கலங்கரை விளக்கத்தைப் போல எங்கும் கடல் போன்று பரந்து விரிந்து காணப்படக்கூடிய கல்விப் பெருங்கடலை சிவகங்கை மாவட்டத்தில் 'செட்டிநாடு' என்று பெயர் பெறக் கூடிய காரைக்குடியில் உருவாக்கியவர். வள்ளல் அழகப்பர். இத்தகைய சிறப்பியல்புகளைத் தன்னகத்தே கொண்டமைந்த வள்ளல் அழகப்பரின் வாழ்க்கை வரலாற்றையும், கல்விக்காக அவர் செய்த
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

அற்பணிகளையும், அதன் வளர்ச்சியைப் பற்றியும் விளக்குவதாக இக்கட்டுரை அமையப்பெறுகிறது.

**வாழ்க்கை வரலாறு**

‘திரை கடலோடியும் திரவியம் தேடு’ என்ற பழமொழிக்கேற்ப பர்மா ரங்கூன், செய்கோன், மலேயா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கு வாணிபப் பொருட்களை மரக்கலங்களில் கொண்டு சென்று விற்பனை செய்ததோடு அங்கிருந்து பொன், நவரத்தின மணிகள், தேக்கு, அழகிய வேலைப்பாடுடைய கலைப்பொருட்கள், மங்குச்சாமான்கள் போன்றவற்றைக் கப்பல் கப்பலாகக் கொண்டு வந்து இறக்குமதி செய்தவர்கள் நகரத்தார் சமூகத்தினர் என்பது சிறப்புக்குரிய ஒன்றாகும். இம்மக்களால் நாட்டுப் பொருளாதாரம் சிறந்தது மட்டுமன்றி இவர்கள் தொழில் கருதிச்சென்ற அயல் நாடுகளின் பொருளாதாரத்தையும் பன்மடங்கு வளர்த்தவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. சென்ற இடமெல்லாம் சிறப்புச் சேர்த்து தமிழ்ச் சமய உணர்வுகளைப் பரப்பியதோடு, புராதனக் கலைச் செல்வத்தைப் போற்றித் தமிழகத்தின் பண்டைய பெருமை, பண்பாடுகளைப் பாதுகாத்து, கால மாறுதலுக்கேற்ப புத்துணர்வுடனும், விழிப்புணர்வுடனும் செயல்பட்டுள்ளனர். மொழி தெரியாத நாடுகளில் கூடக் கடல் கடந்து சென்று அற்புதமாக வாணிபத்தைச் செய்து சாதித்துக்காட்டியவர்கள் நகரத்தார்கள் என்பது சிறப்புக்குரிய ஒன்றாகும் . மேலும் கல்விக்காகப் பல கொடைகளை வழங்கியதோடு செல்லும் இடமெல்லாம் தமிழ் வளர்த்து முன்னேறிய நகரத்தார் பெருமக்களில் கல்விக் கொடை வள்ளலாக திகழ்ந்தவர் அழகப்பர் என்பது போற்றுதலுக்குறியது.

பழங்காலத் தமிழ் இலக்கியங்கள் பல வள்ளல்களை அடையாளம் காட்டுகின்றன. அவர்களைப் போலத் தொண்டுள்ளம் கொண்டு நம்மோடு வாழ்ந்து மறைந்தவர்கள் ஏராளம். அத்தகைய தொண்டுள்ளம் கொண்டவர்களுள் கல்விக்காகத் தனது வீட்டையே தானமாகக் கொடுத்தவர் வேறு யாருமல்ல, கல்விக்கொடை வள்ளல் அழகப்பர் மட்டுமே என்பது குறிப்பிடத்தக்கது. அவர் எல்லா விதமான நல்ல குணங்களையும் பெற்றிருந்தார். ஆகவே கல்விக்கொடையில் மிகச் சிறந்தவராகக் கருதப்பட்டு பாராட்டுக்குரியவராகிறார்.

**பிறப்பும், படிப்பும்**

வரலாற்றுச் சிறப்புமிக்க சிவகங்கை மாவட்டத்தில் உள்ள செட்டிநாடு எனக் குறிப்பிடப்படும் காரைக்குடியில் கோட்டையூர் என்னும் ஊரில் இராமநாதன் செட்டியார் மற்றும் உமையாள் ஆச்சிக்கும் இரண்டாவது மகனாக 06.04.1909 – இல் அழகப்பர் பிறந்தார். தொடக்கக் கல்வியைக் கோட்டையூரிலும், பின் காரைக்குடி எஸ்.எம்.எஸ்.வி உயர்நிலைப் பள்ளியிலும் பயின்று, சென்னை மாநிலக்கல்லூரியில் ஆங்கில இலக்கியத்தில் முதுகலை

வகுப்பில் படித்தார். அப்போது அங்கு ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த, தத்துவ மேதை சர்வபள்ளி இராதாகிருட்டிணனோடு இவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. நகரத்தார் சமூகத்தில் 1930ல் முதுகலைப் பட்டத்தை முதன்முதலாகப் பெற்றது வள்ளல் அழகப்பர் என்பது குறிப்பிடத்தக்கது.

பின்னர் ஐ.சி.எஸ். படிக்கும் நோக்கத்தோடு இங்கிலாந்து சென்றார். ஆனால் மருத்துவ சோதனையில் தேர்ந்தெடுக்கப்படாததால் அப்பட்டப் படிப்பில் அவரால் சேர இயலவில்லை மனம் தளராமல் மிடில் டெம்பிள் என்ற சட்டக் கல்லூரியில் சேர்ந்து வழக்கறிஞர் படிப்புப் படித்தார். அப்போது இந்திய சுதந்திரப் போராட்டத்தின் திருப்புமுனையாக அமைந்த இரண்டாவது வட்ட மேஜை மாநாடு லண்டனில் கூடியது. அந்த மாநாட்டுக்காக இந்தியாவிலிருந்து பேச்சுவார்த்தை நடத்துவதற்காக வந்த குழுவில் ஆங்கில மொழியில் சுவையும் நயமும் துடிப்பும் பொங்கச் சொற்பொழிவாற்றுவதில் உலகப் புகழ் பெற்ற தமிழர் வெள்ளி நாக்கு (Silver Tongue) என ஆங்கிலேயர்களின் விருது பெற்ற சீனிவாச சாஸ்திரியும் ஒருவர் ஆவார். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்னும் முதுமொழிக்கேற்ப ஆங்கில நாவலரான சீனிவாச சாஸ்திரிக்கு இளைஞர் அழகப்பர் மீது தனிப்பற்று ஏற்பட்டது. அவருடைய பரிந்துரையின் பேரில் படிக்கும் போதே பகுதி நேரமாக, இலண்டனில் உலகப் புகழ்ப்பெற்ற சார்ட்டர்டு வங்கியில் பயிற்சியாளராகச் சேர்ந்தார். (Aikkan 2008) இதற்கிடையில் ஓய்வு நேரத்தை வீணடிக்க விரும்பாமல், விமானிக்கான பயிற்று வகுப்பில் சேர்ந்தார். இரண்டு வருடப் பயிற்சியில் சிறந்த விமானி ஆனார். 1933இல் வழக்கறிஞர் (Barrister - at - Law) பட்டத்தோடு இந்தியா திரும்பினார்.

இலண்டனில் மூன்று வருடங்கள் படித்துவிட்டு, சிறந்த வழக்கறிஞர், விமானி மற்றும் பங்குசந்தையில் லாபகரமாக நிதிமுதலீடு செய்வது ஆகியவற்றில் மிகவும் திறமையானவரானார் அழகப்பர். பின்னர் சொந்த ஊருக்குத் திரும்பிய அழகப்பர் 1937-இல் திருச்சூருக்கு அருகே புதுக்காடு எனும் இடத்தில் ‘கொச்சின் டெக்ஸ்டைல்ஸ்’ எனும் ஆலையை நிறுவினார். (Alagappa Chettiar Biographic Data, ACET Register,Karaikudi, 1957.) அதுவே பின்னர் அழகப்பா டெக்ஸ்டைல்ஸாக உருவெடுத்தது. அதனைத் தொடர்ந்து கேரளத்திலும், தமிழ்நாட்டிலும் பல ஆலைகளை அமைத்தார். பின்னர் பங்குச் சந்தையில் முழுமூச்சாக ஈடுபட்டார். பம்பாயில் ஜூபிடர் ஜெனரல் இன்சூரன்ஸ் கம்பெனி, ஈஸ்ட் அண்டு வெஸ்ட் இன்சூரன்ஸ் கம்பெனி. ரிட்சு ஓட்டல் ஆகியவற்றின் நிருவாகப் பொறுப்பை ஏற்றார். ஜூபிடர் ஏர்வேஸ் எனும் விமானப் போக்குவரத்து நிறுவனத்தை நடத்தினார். 1943இல் தனது ஒரே மகள் உமையாளைத் தம் தமக்கையார் மகனான இராமநாதனுக்கு திருமணம் செய்து கொடுத்தார். இந்தத் திருமணம் தமிழகமே கண்டு வியந்த திருமணமாக அமைந்தது. இத்திருமணத்தின் போது தான் அழகப்பரின் மனத்துள் இருந்த வள்ளல் தன்மை உலகறிய வெளிப்படத் தொடங்கியது.

**அழகப்பரும், காந்தியடிகளும்**

அழகப்பர் அண்ணல் காந்தியடிகளிடம் அளவற்ற அன்புடையவர். சுதந்திரத்திற்கு முன்பு ஒருமுறை அழகப்பர் ஒரு மாநாட்டிற்குச் சென்றார். மாநாடு முடியும் நிலையில் அண்ணல் காந்தியடிகளால் சில பொருள்கள் ஏலத்திற்குக் கொண்டு வரப்பட்டன. மாநாட்டுக்காக இரண்டாயிரம் ரூபாய்க்குத் தயாரிக்கப்பட்ட அழகான கொடிகள், திரைச்சீலைகள் முதலியன காந்தியடிகளால் ஏலம் விடப்பட்டன. காந்தியடிகள் ஏலத்தின் முதல் தொகையாக ரூ.5000 என்றார். முதல் வரிசையில் அமர்ந்திருந்த அழகப்பர் உடனே ஏலத் தொகையை ஒரு இலட்சம் ரூபாய் என்று கூறினார். (அரு.சோமசுந்தரர் 1992) கூட்டம் வியந்து பாராட்டிக் கைதட்டி ஆராவாரித்தது. வேறுயாரும் ஏலம் கேட்க முன்வரவில்லை. உடனே காந்தியடிகள் அழகப்பரை அழைத்து, அன்போடு அணைத்துக் கொண்டு அவரிடம் கொடிகளைக் கொடுத்தார். அழகப்பர் ஒரு இலட்சம் ரூபாய்க்குக் காசோலை வழங்கினார். அவரது நண்பர்கள் சிலர் அழகப்பரிடம் ஏலத் தொகை பற்றி விசாரித்தனர். கொடிக்கு ஒரு இலட்சம் ரூபாய் மிகுதி என்றனர். அதற்கு அழகப்பர், காந்தியடிகளின் அன்புக்கும், அரவணைப்புக்கும் ஒரு இலட்சம் என்ன, எத்தனை இலட்சம் வேண்டுமானாலும் வழங்கலாம் என்றார். இந்நிகழ்ச்சி அழகப்பர் காந்தியடிகளின் மீதுகொண்டிருந்த அன்பினைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**கொடையாளர்**

திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை நிறுவுவதற்கென ரூபாய் இலட்சத்தொன்றும், மகள் உமையாள் பெயரால் சென்னை சேவாதளத்தில் மகளிர் விடுதி கட்ட ரூபாய் 75,000 வழங்குவதாக மகள் திருமணத்தன்று அறிவித்தார். அன்று முதல் வாழ்நாளின் இறுதிவரை இவரது நன்கொடைகள் தொடர்ந்தன. திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்திற்கு இவர் அளித்த நன்கொடைதான் அங்கு இன்றும் வளர்ந்து செழித்துக் கொண்டிருக்கும் தமிழ்க்கல்வி மற்றும் ஆராய்ச்சி எனும் ஆலமரத்திற்குரிய வித்தாக அமைந்தது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பொறியியல் கல்லூரி ஒன்றை நிறுவத் தாமே முன்வந்து நன்கொடையாக ஐந்து இலட்ச ரூபாய் வழங்கினார். (Valli,.N.,2001) சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு ஐந்து இலட்ச ரூபாய் அளித்தார். அதனை ஏற்றுக்கொண்ட பல்கலைக்கழகம் கிண்டியில் அழகப்பச் செட்டியார் தொழில் நுட்பக் கல்லூரியை அழகப்பர் பெயரால் நிறுவியது.

1946இல் சென்னை தியாகராய நகரில் உள்ள தக்கர்பாபா வித்தியாலயத்தில் அழகப்பா என்னும் பெயரில் மண்டபம் கட்ட இலட்சரூபாய் வழங்கினார். இம்மண்டபத்திற்குரிய அடிக்கல்லை காந்தியடிகள் நாட்டினார். புதுதில்லியில் தென்னிந்தியக் கல்விக் கழகத்திற்கு ரூ.25,000, கொச்சி அரசு மாணவர்கள் வெளிநாடு சென்று தொழில் நுட்பகக் கல்வி பயில உதவும் வைப்புத் தொகையாக ரூபாய் ஒரு இலட்சமும், திருச்சூருக்கு அருகே அழகப்பா ஆலைத் தொழிலாளிகள்

குடியிருப்பாகிய அழகப்பா நகரில் மகப்பேறு மருத்துவமனை நிறுவ ரூபாய் ஒரு இலட்சமும், இந்திய மருத்துவ முறை ஆய்வுக்கென எர்ணாகுளம் மகாராசா கல்லூரிக்கு ரூ.80,000, கொச்சித் தனியரசில் பள்ளிச்சிறார் பகலுணவு பெற ரூ1,50,000 ஆகியவை அவர் வழங்கிய கொடை வெள்ளத்தில் சில துளிகள் என்பது குறிப்பிடத்தக்கது. 1947இல் அன்னிபெசண்ட் அம்மையார் நூற்றாண்டு விழாவில் தலைமையேற்ற சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஏ.எல்.முதலியார், அறக் கொடையாளராகிய செல்வந்தர்கள் பின்தங்கிய பகுதிகளில் கல்லூரிகளை நிறுவ முன்வர வேண்டுமென ஒரு வேண்டுகோளை முன் மொழிந்தார். உடனே அழகப்பர் அந்த மேடையிலேயே தாம் காரைக்குடியில் ஒரு கல்லூரி நிறுவுவதாக அறிவித்தார். 11-8-1947 இல் அழகப்பா கலைக் கல்லூரி காரைக்குடி காந்தி மாளிகையில் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு தி.சு. அவினாசிலிங்கம் செட்டியாரால் தொடங்கி வைக்கப்பட்டது. 1948 இல் கல்லூரிக்கெனத் தனிக் கட்டடங்கள் உருவாகிக் கல்லூரி அங்கே மாற்றப்பட்டது.

காரைக்குடியில் ஓர் ஆய்வுக்கூடம் அமைய வேண்டும் எனக் கனவு கண்ட அழகப்பர், மத்திய மின் வேதியியல் ஆய்வுக் கூடம் ஒன்றைக் காரைக்குடியில் அமைக்க இந்திய அரசு இசையுமானால் தாம் அதற்கு 300 ஏக்கர் நிலத்தையும், 15 இலட்ச ரூபாயையும் நன்கொடையாக நல்கத் தயாரென அறிவித்தார். அவரது இடைவிடாத முயற்சியாலும், கொடையினாலும், ஆய்வுக் கூடத்திற்கு 25-7-1949 இல் இந்தியாவின் முதல் பிரதமர் பண்டித ஜவகர்ளால் நேரு அடிக்கல் நாட்ட, 14-1-1953 இல் டாக்டர். இராதாகிருட்டிணன் ஆய்வுக்கூடத்தைத் திறந்து வைத்தார் என்பது குறிப்பிடத்தக்கதது.

27-7-1950-இல் அழகப்பச் செட்டியாரால் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி தொடங்கப்பட்டது. இதன் இணைப்பாக மாதிரி உயர்நிலைப்பள்ளி ஒன்றையும் அழகப்பர் 1951 இல் தொடங்கினார். காரைக்குடியில் அழகப்பா பொறியியல் கல்லூரி தொடங்குவதற்கு முயற்சி செய்து 1952 ஜுலையில் அழகப்ப செட்டியார் பொறியியற் கல்லூரியைத் தொடங்கினார். இங்ஙனம் தமிழகத்தின் பொறியியற் கல்வி வரலாற்றில் மூன்று பொறியியற் கல்லூரிகள் முதலில் தோன்றுவதற்கு வித்தூன்றியவர் அழகப்பர் ஆவார். 21-7-1954 இல் அழகப்பா மகளிர் கல்லூரியைத் தொடங்கினார். (Manian T.V.S,1973) இக்கல்லூரியை அழகப்பர், தாம் வாழ்வதற்காகக் கோட்டையூரில் கட்டிய ஸ்ரீநிவாஸ் என்ற தம் இல்லத்திலேயே தொடங்கினார். இதனைப் பாராட்டும் வகையில் தான் அறிஞர் வசுப. மாணிக்கனார்,

‘குடியிருந்த வீடும் கொடுத்த விழுத்தெய்வம்’

எனத் தம் கொடைவிளக்கில் குறிப்பிடுகிறார். 1955இல் அழகப்பா பல்தொழிற் பயிற்சி நிலையமும் (Alagappa Polytechnic), 1956இல் அழகப்ப செட்டியார் உடற்பயிற்சிக் கல்லூரியும்

தொடங்கப்பெற்றன. இவர் தோற்றுவித்த கல்வி நிறுவனங்கள் ஒன்றிணைக்கப் பெற்று 1985 இல் அழகப்பா பல்கலைக்கழகம் உருவாக்கப்பெற்றது. (Meyyappan.1998)

### தமிழ்ப் பற்று

நகரத்தாரின் தமிழ்ப்பற்று நாடறிந்த ஒன்று. அவர்தம் அன்றாடப் பேச்சு வழக்கிலேயே தனித்தமிழ்ச் சொற்களும், இலக்கியத் தமிழ்ச் சொற்களும் மிகுதியாக இடம் பெறுவது அனைவரும் அறிந்ததாகும். தம் தமிழ்ப் பற்றுக் காரணமாக அழகப்பர் தமிழகம் முழுவதிலும் நடைபெற்ற சில இயக்கங்களில் ஈடுபாடு கொண்டு முன்வரிசையில் நின்று தொண்டாற்றியுள்ளனர். (Chandrasekar,S, 1980). அவை தனித்தமிழ் இயக்கம், தமிழிசை இயக்கம், தமிழ் அருச்சனை இயக்கம், தில்லைத் திருமுறை இயக்கம் என்பனவாம். இதைப்போல கல்விக்கு அள்ளிக்கொடுத்த அழகப்பர் சிறந்த தமிழ் ஆர்வலராகவும் விளங்கினார். அவரது முதற்கொடையே திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை தொடங்குவதற்குத்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

### தமிழ் வளர்ச்சிக் கழகம்

தமிழில் கலைக்களஞ்சியம் வெளியிடுவதையும், இன்னும் சில நோக்கங்களையும் கொண்டதாகத் தமிழ் வளர்ச்சிக் கழகம் என்ற அமைப்பு 1947 இல் உருவாக்கப் பெற்றது, இவ்வமைப்பில் இராசா சர்.அண்ணாமலை செட்டியார், வள்ளல் அழகப்பர் ஆகிய இரு நகரத்தாரும் உறுப்பினராக இருந்து தமிழ்ப்பணி செய்துள்ளனர். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயற் குழுவிலும், அவ்வகையில் தமிழ்க் கலைக்களஞ்சியச் செயற்குழுவிலும் உறுப்பினராகப் பணியாற்றினார் அழகப்பர். தமிழில் கலைக்களஞ்சியம் வெளியிடுவதற்கு நிதி உதவியாக ரூ.10,001 வழங்கினார். (Ramanathan Vairavan, 2015). காரைக்குடி கம்பன் கழகத்தின் தலைவராகவும், குமுதம் வார இதழின் கௌரவ ஆசிரியராகவும் பணியாற்றினார் வள்ளல் அழகப்பர்.

### விருதுகள்

கோடி கொடுத்த கொடைஞனாம் அழகப்பரைப் பல பட்டங்களும், பிற சிறப்புக்களும் தாமாகவே தேடிவந்து அடைந்தன. 1943 இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகமும், 1944இல் சென்னைப் பல்கலைக்கழகமும் இவருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தன. 1953இல் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற காமன்வெல்த் பல்கலைக்கழகங்களின் மாநாட்டுக்குச் சென்னைப் பல்கலைக்கழகத்தின் சார்பிலும், பின்னர் கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தின் ஐந்நூறாவது ஆண்டு விழாவிற்கு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சார்பிலும், 1954இல் ஜப்பானில், கியோட்டோ நகரில் நடந்த 12ஆம் பசிபிக் நாடுகள் உறவுக் கழக மாநாட்டுக்கு இந்திய அரசின் சார்பிலும் அனுப்பி வைக்கப்பட்டார். (Ramaswami,A.1972)

அனைத்திந்திய அறிவியல் ஆராய்ச்சிக் கழகத்தின் செயற்குழுவிலும், தொழில் நுப்பக் கல்விக்கான வட்டார விதியமைப்புக் குழுவிலும், சென்னைப் பல்கலைக்கழகப் பொது மேற்பார்வைக் குழுவிலும் உறுப்பினராக அமர்த்தப் பெற்றார் அழகப்பர். இவர் பாரதச் சாரணர் படைக்கும், மத்திய மின் வேதியியல் ஆய்வுக்கூட ஆலோசனைக் குழுவுக்கும், 1954இல் தமிழக அரசால் அமைக்கப்பட்ட தொடக்கக்கல்வி ஆய்வுக் குழுவுக்கும் தலைவராக இருந்து சிறந்த தொண்டு ஆற்றியுள்ளார். சென்னை, அண்ணாமலைப் பல்கலைக்கழகங்களின் ஆட்சிக் குழுக்களில் இவர் ஆயுட்கால உறுப்பினராக 1946 இல் பல்கலைக்கழக வேந்தரால் அமர்த்தப்பட்டார். காரைக்குடியில் சுழற்குழு (Rotary Club) வின் கிளையை முதன் முதலில் உருவாக்கியவர் இவரேயாவார்.

ஆங்கிலேய அரசு இவருக்கு 1946இல் சர் பட்டத்தை வழங்கியது. இந்திய அரசு 1957இல் பத்மபூசன் பட்டம் வழங்கியது. பண்டித நேரு சமதர்ம முதலாளி (Socialistic Capitalist) என்றும், அண்ணல் காந்தியடிகள் ‘முன்மாதிரியான தர்மகர்த்தர்’ என்றும் இவரைப் பாராட்டிச் சிறப்பித்தனர். (Randargai 2002). அழகப்பர் பிறவிக் கொடைஞராகவும், தன்னேரில்லாத் தமிழ்க் கொடைஞராகவும் திகழ்ந்ததைத் தமிழக வரலாறு பதிவு செய்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**அழகப்பா கல்வி நிறுவனங்கள்**

கோட்டையூரில் பிறந்த டாக்டர். இராம. அழகப்ப செட்டியார் தம் கொடைத்திறத்தால் காரைக்குடியைக் கல்விக்குடியாக மாற்றிய வள்ளலாவார். 1947 இல் முதன் முதலில் ஒரு கலைக் கல்லூரியைத் தொடங்கினார். அடுத்தடுத்துப் பல கல்வி நிறுவனங்களைத் தொடங்கும் திட்டம் அவருக்கு இருந்தமையால், அவற்றை நிருவகிக்க ஓர் அமைப்பு தேவை என நினைத்து ‘அழகப்பா கல்வி அறநிலையம’ ஒன்றை ஏற்படுத்தினார். அதன் நிறுவுநர் தலைவராக அவர் பொறுப்பு ஏற்றார். அதன் தாளாளராகத் தம் ஒன்றுவிட்ட தமையனார் க.வீ.அழ.மு. இராமநாதன் செட்டியாரைப் பொறுப்பேற்கச் செய்தார். பின்னாளில் இராசா. சர்.அண்ணாமலைச் செட்டியாரின் மாப்பிள்ளையும், கானாடுகாத்தானைச் சேர்ந்தவருமான க.வெ.சித.வெ. வெங்கடாசலம் செட்டியாரும், அவர் காலமானபின் அழகப்பரின் மகள் உமையாள் இராமநாதனும் இப்பொறுப்பை ஏற்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்த அறநிலையத்தின் சார்பாக அழகப்பர் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடங்கிய கல்வி நிறுவனங்கள் பின்வருமாறு குறிப்பிடப்பெறுகின்றது.

- அழகப்பா கலைக் கல்லூரி (1947)
- அழகப்ப செட்டியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி (1950)
- மாதிரி உயர்நிலைப் பள்ளி (1951).
- அழகப்ப செட்டியார் பொறியியற் கல்லூரி (1952)

- அழகப்பா மகளிர் கல்லூரி (1954)
- அழகப்பா அடிப்படைப் பள்ளி (1955)
- அழகப்பா ஆதாரப் பள்ளி (1955)
- அழகப்பா பல்தொழிற் பயிற்சி நிலையம் (1955)
- அழகப்பா மழலையர் பள்ளி (1955)
- அழகப்பா இசைப்பள்ளி (1956)
- அழகப்ப செட்டியார் உடற்பயிற்சிக் கல்லூரி (1956)

அழகப்பரின் மறைவுக்குப் பிறகு மகளிர் கல்லூரிக்குப் பதிலாகப் பெண்களும் அழகப்பா கலைக்கல்லூரியிலேயே சேர்த்துக் கொள்ளப் பெற்றனர். அடிப்படைப் பள்ளி, ஆதாரப்பள்ளி ஆகியவற்றிற்கு மாற்றாக அழகப்பா ஆயத்தப்பள்ளி தொடங்கப்பட்டது. பின்னர் ஆயத்தப்பள்ளியும், மழலையர் பள்ளியும் இணைக்கப்பட்டு அழகப்பா மெட்ரிக்குலேசன் மேனிலைப்பள்ளியாக உருவானது. இது ஒன்று மட்டுமே இப்போது அழகப்பா கல்வி அறநிலையத்தின் நிருவாகத்தில் உள்ளது. அழகப்பா இசைப்பள்ளி தொடர்ந்து நடைபெறவில்லை. அழகப்ப செட்டியார் பொறியியற் கல்லூரியும், அழகப்பா பல்தொழிற் பயிற்சி நிலையமும் தமிழக அரசிடம் ஒப்படைக்கப்பட்டன. தமிழக அரசு அவற்றை அதே பெயர்களோடு தம் நிருவாகத்தில் நடத்திக் கொண்டிருக்கிறது.

1985 இல் அழகப்பா பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்ட போது அழகப்பா ஆசிரியர் பயிற்சிப்பள்ளி, அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரி, மாதிரி உயர்நிலைப் பள்ளி இவற்றோடு அழகப்பா கலைக் கல்லூரியின் முதுகலைப் படிப்புத் துறைகளும் இணைக்கப்பட்டு, பிற பல்கலைக்கழகங்களைப் போன்ற தன்னாட்சி அமைப்பாக உருவாக்கப்பட்டது. அழகப்பா கலைக்கல்லூரி அழகப்பா அரசு கலைக் கல்லூரி என்ற பெயரோடு தமிழக அரசால் ஏற்று நடத்தப்பட்டு வருவதோடு இன்று 75 ஆம் ஆண்டு நிறைவு பவள விழாவும் கொண்டாடி வருகின்றது.

**அழகப்பா நகர்**

கொடை வள்ளல் டாக்டர். இராம. அழகப்ப செட்டியார் 1937 இல் திருச்சூருக்கு அருகே புதுக்காடு எனும் இடத்தில் கொச்சின் டெக்ஸ்டைல்ஸ் எனும் ஆலையை நிறுவினார். அதுவே பின்னர் அழகப்பா டெக்ஸ்டைல்ஸ் ஆக உருவெடுத்தது. அந்த ஆலையின் தொழிலாளர் குடியிருப்பு ‘அழகப்பா நகர்’ என வழங்கப்பட்டது. அந்த அழகப்பா நகரில் இலட்ச ரூபாய் நன்கொடை வழங்கி மகப்பேறு மருத்துவ நிலையம் ஒன்றைக் கட்டினார் அழகப்பர். தமிழ் நாட்டுக்கு வெளியே ஒரு குடியிருப்புப்பகுதி நகரத்தார் ஒருவர் பெயரால் உருவானது என்ற சிறப்பு இந்த அழகப்பா நகருக்கே உரியது. (Sihappi,S. Dr.RM, 1988)

**அழகப்பா பல்கலைக்கழகம்**

தமிழ்நாட்டின் பிற பல்கலைக் கழகங்களைப் போல, இதுவும் அரசு சார்ந்த ஒரு தன்னாட்சி நிறுவனம்தான் எனினும், இதற்குரிய வித்து ஒரு நகரத்தாரால் விதைக்கப்பட்டது. கொடைவள்ளல் அழகப்பர் ஏற்றி வைத்த கல்வி விளக்கின் புதிய பரிணாமமே இப்பல்கலைக்கழகம். கொடைவள்ளல் டாக்டர். இராம. அழகப்பசெட்டியாரால் காரைக்குடியில் தொடங்கப்பெற்ற 11கல்வி நிறுவனங்களுள், அழகப்பா கலைக்கல்லூரியின் நான்கு முதுகலைப்படிப்புத் துறைகள், அழகப்பா உடற்பயிற்சிக் கல்லூரி, அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, அத்துடன் இணைந்த மாதிரி உயர்நிலைப் பள்ளி ஆகியவை இணைக்கப் பெற்று, 9-5-1985 இல் இப்பல்கலைக் கழகம் உருவாக்கப்பெற்றது.

தமிழ்நாட்டின் பதினோராவது பல்கலைக்கழகமாகிய இது, தன்னோடு இணைக்கப்பெற்ற கல்லூரிகளோடு இயங்கும், தனி முழுப் பல்கலைக்கழகம் ஆகும். காரைக்குடியில் 420 ஏக்கர் பரப்பளவில் அமைக்கப்பட்டுள்ள இப்பல்கலைக்கழகம் மேனாள் துணைவேந்தர் முனைவர் சொ. சுப்பையா அவர்களின் பெரும்முயற்சியால் உலகத்தரமான நூலகம், வள்ளல் அழகப்பருக்கு அருங்காட்சியகம், தமிழ்ப்பாண்பாட்டு மையம், வள்ளல் அழகப்பர் பூங்கா, புதிய துறைகள் மற்றும் புதிய மையங்கள் போன்றவை உருவாக்கப்பட்டு நாக் (NAAC) தரவரிசையில் 3.64 புள்ளிகள் பெற்று இந்தியாவில் இரண்டாவது பல்கலைக்கழகமாகவும், தமிழகத்தில் முதன்மைப் பல்கலைக்கழகமாகவும் சிறப்புற்று, உலகத்தரமான பல்கலைக்கழகமாக திகழ்கிறது.

**முடிவுரை**

வள்ளல் அழகப்பர் அவர்கள் ஒப்பற்ற ஒரு கல்விக்கொடை வள்ளல். இந்தியா விடுதலை அடைந்த நேரத்தில் தமிழ்நாட்டின் உயர்கல்வி வளர்ச்சிக்காகப் பல கல்விச்சாலைகளையும், ஆய்வுக்கூடங்களையும் தமது சொந்த செலவில் பல கல்வி நிறுவனங்களையும் நிறுவியதோடு தமிழகம் இந்தியாவில் கல்வியில் சிறந்த மாநிலமாக விளங்க வித்திட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது. காரைக்குடி இன்று பெற்றிருக்கும் அனைத்து வளர்ச்சிக்கும் வள்ளல் அழகப்பர் தான் காரணம் என்றால் அது மிகையில்லை. காரைக்குடியைக் கல்விக் குடியாக மாற்றியதோடு, மத்திய மின் வேதியியல் ஆய்வகம் உருவாகவும் காரணமாக இருந்தவர் அழகப்பர். அடிப்படைக் கல்வி முதல், ஆராய்ச்சிக் கல்வி வரை படித்து முடிக்கும் பெருவாய்ப்பு காரைக்குடி மண்ணில் உருவாகிட முழு முதற் காரணமானவர் வள்ளல் அழகப்பர். தமது தொழில் துறையில் ஏற்படும் நட்டத்தைப் பற்றி கவலைப்படாமல் தொடர்ந்து நாட்டின் வளர்ச்சியில் கவனம் செலுத்த ஆரம்பித்தார். கை நிறையப் பணம், மலேசியாவில் ரப்பர் தோட்டம், பர்மாவில் டின் சுரங்கம், கேரளாவில் நூற்பாலை, கொல்கத்தாவில் இன்சூரன்ஸ் பிஸினஸ், சென்னையில் விமான சர்வீஸ் நிறுவனம் என லாபத்தை அள்ளித்தர பலவிதமான தொழில்கள் இருந்தபோதும், அவர் மனம்

தனது தாய் மண்ணின் மக்களுக்கு நன்மை செய்வதிலேயே முனைப்பாக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. 1940-களில் ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் மேற்படிப்பு படிக்க வேண்டும் என்றால் மதுரைக்கோ, திருச்சிக்கோதான் போக வேண்டியிருந்தது. இதனாலேயே பலரும் மேற்படிப்பு படிக்க முடியாத நிலையிருந்தது. இதற்கொரு தீர்வாகக் காரைக்குடியில் பல கல்வி நிலையங்களை அமைத்தவர் வள்ளல் அழகப்பர். அவருடைய வாழ்வில் தனது சொந்த நலனுக்காக எதையும் செய்யாமல் கல்வி வளர்ச்சிக்காக அவர் ஏற்படுத்திய கல்வி குழுமங்களால் மக்களின் மனதில் என்றும் நீங்காத கடவுளாக உருவெடுத்து வாழ்ந்து வாழ்கிறார் வள்ளல் அழகப்பர். குறிப்பாக இந்தியா சுதந்திரம் அடைந்தவுடன் அன்றைய காலகட்டத்தில் இருந்த தொழிலதிபர்களுள் வள்ளல் அழகப்பர் அவர்கள் நாட்டின் முன்னேற்றத்தில் கல்வி ஒன்றே பல மாறுதல்களைக் கொண்டு வரும் என்பதை நன்கு உணர்ந்து கல்விக்காகப் பல அறப்பணிகளைச் செய்தவர். உலகம் போற்றும் அளவிற்கு பெருஞ்செல்வமும், புகழும் பெற்ற அழகப்பர் 1957-ஆம் ஆண்டு ஏப்ரல் 5-ஆம் நாள் காலமானார். ஆனால் மறைந்தது அவரது உடலே தவிரக் கல்வி என்னும் பூஞ்சோலையில் நம்முடன் வாழ்ந்துக் கொண்டிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

**நூற்பட்டியல்**


1) Aikkan, Alagappa, Alagappa University, Karaikudi, 2008.
2) Alagappa Chettiar Biographicla Data, ACET Register, Karaikudi, 1957.
3) Chandrasekar, s. The Nagarathars of South India.,Madras 1980.
4) Gowrishshankar,m, (1979), Annamalai University Golden Jubilee Record, Annamalai University, Chitambaram.
5) Manian T.V.S, “Our Founder” in Souvenir, Karaikudi, 1973.
6) Meyyappan, Nagarathar Kalai Kalanjeeyam.,Chidambaram, 1998
7) Nagarajan,K.,(1998) Dr.Rajah Sir Muthiah Chettiar-A Biography, Annamalai University Chitambaram
8) Ramanathan Vairavan, Alagappa A Beautiful mind.,Asoka charitable Trust.,chennai.,2015,
9) Ramaswami, A. Tamil Nadu District Gazetteers Ramanathapuram, Government Press, Madras, 1972.
10) Randargai, Anndraiya Chennai Pramugarhal, Chennai, 2002.
11) Rudner, DAVID West.,(1995) Caste and Capitalism in Colonial India – The Nattukkottai Chettiars, Munshiram Manoharlal Publishers Pvt Ltd. New Delhi,
12) Sihappi,S. Dr.RM .Alagappa Chettiar – A Study, University of Madras, Madras., 1988.
13) Valli,.N.,Nagaratharin Arapanikal .,Karaikudi, 2001
14) அண்ணாமலை, பழ., (1986), செட்டிநாடு ஊரும் பேரும், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.
15) அண்ணாமலை, பழ., (1988), நகரத்தார் கணக்கியல் முறை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
16) அண்ணாமலை, பழ.,(1984), நகரத்தார் பண்பாடும் பழக்கங்களும், பாரி நிலையம், சென்னை.

17) அண்ணாமலை, பழ., (1991), நகரத்தார் யார்? எவர்?, சென்னை.
18) இராமநாதன் செட்டியார்., (1953), நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, கமர்ஸியல் பிரிண்டிங் அன்பப்ளிசிங் கவுஸ், சென்னை.
19) இனியவன்., (1993), நனிபுகழ் நகரத்தார், ஔவை மன்றம், சென்னை.
20) சோமலெ., (1972), அலைகடலுக்கு அப்பாலும் நகரத்தார்களின் ஆலயப்பணிகள், சோமு நூலகம், சென்னை.
21) சோமலெ., (1972), இராமநாதபுர மாவட்டம், பாரி நிலையம், சென்னை.
22) சோமலெ., (1984), செட்டிநாடும் செந்தமிழும், வானதி பதிப்பகம், சென்னை.
23) சோமசுந்தரன். அரு., வள்ளல் அழகப்பர் பக்.47-48.2007.
24) சோமலெ., (1984), செட்டிநாடும் தமிழும், பாரி நிலையம், சென்னை.
25) தேனப்பன்.வ., (1998), ஒன்பது நகரக் கோயில்கள், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை.
26) நடராஜன் இளவரசன்., (1959), வணிகர் வரலாறு, சுந்தர சுகுமார் பதிப்பகம், கீழச்சீவல்பட்டி
27) லேணா தமிழ்வாணன், ப.ஆ.,(1987), இராமநாதபுர மாவட்டம், மணிமேகலைப் பிரசுரம், சென்னை.
28) லேணா தமிழ்வாணன், ப.ஆ., (1987), புதுக்கோட்டை மாவட்டம், மணிமேகலைப் பிரசுரம், சென்னை.
29) பழனியப்ப சுப்பிரமணியன்., (2009), செட்டிநாட்டு வட்டார வழக்குச் சொல்லகராதி, தமிழினி வெளியீடு, சென்னை.
30) மெய்யப்பன்., (2002), நகரத்தார் கலைக் களஞ்சியம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

**************************************



# ந. சுப்புரெட்டியாரின் கவிதையனுபவம்

**முனைவர் மு.பழனியப்பன்**
**தமிழ்த்துறைத் தலைவர்**
**அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி**
**திருவாடானை - 623407**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

இலக்கியத் திறனாய்வில், குறிப்பாக வைணவ இலக்கியத் திறனாய்வில் சிறந்ததொரு இடம் பெறுபவர் ந. சுப்பு ரெட்டியார். இவர் தமிழகத்தில் கல்விச் சேவையைத் தொடங்கி ஆந்திர மாநிலம் திருப்பதியில் கல்விச் சேவையைத் தொடர்ந்து இந்திய அளவில் கல்விச் சேவையாற்றியவர். காரைக்குடியில் கனிந்தவர். திருப்பதியில் கீர்த்தி பெற்றவர். இவரின் ஆய்வுகள் பருமையும் பெருமையும் வாய்ந்தவை. தேடல் நுணுக்கமும், கருத்து வல்லமையும் வாய்ந்தவை. வைணவ இலக்கியங்களிலும், தத்துவங்களிலும் தேர்ந்த ஆய்வுகளாக இவரின் ஆய்வுகள் விளங்குகின்றன.

கவிதையைக் கற்பிப்பது குறித்து நூல் இயற்றியவர் ந.சுப்பு ரெட்டியார். கவிதையை அனுபவிக்கக் கற்றுத் தந்தவரும் அவரேயாவார். அவரின் “வாழும் கவிஞர்கள்” என்ற நூல் கவிஞர்களையும் கவிதைகளையும் அணுகும்முறை பற்றியது. தன் காலத்தில் வாழ்ந்த தரமான மரபுக் கவிஞர்களை மதிப்பிடும் நூலாக அவரின் வாழும் கவிஞர்கள் என்ற நூல் விளங்குகிறது. இந்நூலின் முன் பகுதியில் உள்ள மரபுக் கவிதை பற்றியதான விளக்கங்கள் மரபுக் கவிதை குறித்தான மிகச் சரியான பார்வையை வழங்குவதாக உள்ளது. கவிதைகளை எழுதுவோரும், கவிதைகளைத் திறனாய்வோரும் அறிந்து கொள்ள வேண்டிய அடிப்படைத் தகவல்கள் இப்பகுதியில் அமைந்துள்ளன.

**கவிதை**

வாழும் கவிஞர்கள் என்ற நூல் தன் காலத்தில் வாழ்கின்ற கவிஞர்கள் பற்றிய மதிப்பீட்டைச் செய்யும் நூலாகும். நேரடியாக கவிஞர்கள் குறித்தான மதிப்பீட்டில் ந. சுப்பு ரெட்டியார் இறங்காமல் கவிதை என்பது குறித்தான கருத்துகளை நூலின் முன்னிலையில் வைக்கிறார்.

இந்நூலில் “கவிதை என்றால் என்ன?” என்ற அடிப்படைக் கேள்வியுடன் கவிதை குறித்தான விவாதத்தைத் தொடங்குகிறார் ந. சுப்புரெட்டியார். ஒரு சிறந்த திறனாய்வாளன் ஏன், ஏதற்கு, எப்படி என்ன என்பதான கேள்விகளை முன்வைத்தே தன் திறனாய்வினைத் தொடங்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வை அமைந்துள்ளமையை இத்தொடக்கம் காட்டி நிற்கிறது.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

கவிதை என்றால் என்ற என்ன என்ற கேள்வியை முன்வைத்து தன் இலக்கியக் கல்வி அனுபவத்தில் அவர் பெற்ற கவிதை அனுபவங்களைத் தொகுத்து ஒரு பத்து பக்க அளவில் அவர் தருகிறார். இப்பத்துப் பக்கங்களும் கவிதைக்கான அனுபவத்தைக் கற்பவருக்கும், படைப்பவருக்கும், திறனாய்வோருக்கும் தருவன என்பதில் ஐயமில்லை.

“கவிதை என்பது காணும் பொருள்களை வருணிப்பதில் இல்லை. அப்பொருள்களைக் காணுங்கால் அவனிடம் எழும் மனநிலையில் அது உள்ளது. அது மனநிலைக்கு ஒரு வடிவம் கொடுத்து அழகிய சொற்களால் ஓவியமாக அமைப்பதே கவிதையாகும். கவிதையைப் படிக்கும் நம்மிடத்திலும் அதே மனநிலையை உண்டாக்க வல்லது கவிதை.”[1] என்று கவிதைக்கு வரையறை தருகிறார் ந. சுப்பு ரெட்டியார்.

கவிதை எழுதுதல் என்பது ஒருவகையையான எழுச்சி மிக்க மனநிலை என்ற ந.சுப்புரெட்டியாரின் கருத்து கவியாற்றலின் ஊற்றுக்கண்ணைக் காட்டும் கருத்தாகும். மேலும் இக்கருத்தில் நுண்மையாகக் கவனிக்க வேண்டிய பகுதி கவிதையைப் படிக்கும் நம்மிடத்திலும் என்பதாகும். எனவே ந. சுப்பரெட்டியார் கவிதையை வாசிப்பவர், அனுபவிப்பவர் என்ற தளத்தில் நிற்பவர். நம்மையும் அந்த இடத்தில் நிற்கவைக்கிறார். ஆனால் கவிஞர்கள் படைப்பாளர்கள். அவர்கள் மன எழுச்சி மிக்க வல்லமை பெற்றவர்கள் என்பதை ந. சுப்புரெட்டியாரின் கருத்தின்படி பெறமுடிகின்றது.

‘உள்ளத்தில் உள்ளவற்றை உணர்ச்சி பொங்கத் தெள்ளத் தெளிந்த சொற்களால் எடுத்துரைப்பதுதான் கவிதையாகும்”[2] என்ற ந.சுப்புரெட்டியாரின் கருத்து கவிதை தொடங்கும் இடத்தையும், கவிதை நிறைவு பெறும் இடத்தையும் காட்டுகின்றது.

**உண்மையான கவிதை**

கவிதையில் உண்மையான கவிதை என்ற ஒன்றை இனம் பிரிக்கிறார் ந. சுப்பு ரெட்டியார். “உண்மையான கவிதையில் உயிர் இருக்கும். உயிர்க்களையும் இருக்கும். மட்ட ரகமான செய்யுளில் உயிர் இருக்காது. சவம் போல் கிடக்கும். உறங்கும் மனிதனையும், சவத்தையும் கண்டு பிடிப்பதைப் போலத்தான் கவிதையின் மூச்சை நாம் உணர வேண்டும்.”[3] என்று உண்மையான கவிதைக்கான உயிர்ப்பினைக் காட்டுகிறார் ந. சுப்பு ரெட்டியார்.

உண்மையான கவிதை என்பது யாப்பிற்குள் சொற்களைத் திணிக்கும் முறைமை பெற்றதல்ல. கவிதையைப் படைக்கும்போதும், அக்கவிதையைப் படிக்கும்போதும் ஓர் உயிர்ப்பு மனதிற்குள் எழும். அதுவே உண்மையான கவிதையின் அடையாளம் என்கிறார் ந.சுப்பு ரெட்டியார்.

“கவிதையின் தலைமைப் பண்பு அஃது உணர்த்தும் உண்மையில் தான் உள்ளது. செய்தி கூறாத கவிதை வெற்றெனத் தொடுத்தலாகும். உயிரில்லாத சடம் போன்றது”[4] என்று ந.சுப்புரெட்டியார் உண்மையான கவிதை என்பது உண்மையை உணர்த்தும் கவிதையாக இருக்கவேண்டும் என்கிறார்.

இதற்குக் காட்டாக புறநானூற்று அடிகளை அவர் காட்டுகிறார்.

“நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்

என்பது போன்ற அனைவருக்கும் இன்றியமையாத உண்மை போன்றவை கவிதையில் அமைதல் வேண்டும். மரபுக் கவிதையாயினும் இன்றைய கவிஞர்கள் ஏதோ ஒரு கருத்தை கவிதைகள் மூலம் மக்களுக்கு உணர்த்துகின்றனர்”[5] என்ற அவரின் கருத்து கவிதைக்கு உண்மை அவசியம் என்பதைக் காட்டுவதாக உள்ளது.

**கவிதைக்கான இலக்கணம்**

கவிதை இன்னது , இதுதான் கவிதை என்று யாராலும் கவிதை இலக்கணம் குறித்து சொல்ல இயலா நிலையில் ந. சுப்பு ரெட்டியார் கவிதைக்கான வரைவிலக்கணத்தைத் தருகிறார்.

“உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம், அணிநலன்கள், தொடைநயம், சுவைகள் முதலியவை அமையச் செந்தமிழ்ச் சொற்களால் நல்ல வடிவத்துடன் அமைவதே கவிதை அல்லது பாட்டு ஆகும்”[6] என்பது ந.சுப்பு ரெட்டியாரின் கவிதை குறித்தான வரையறையாகும். இந்த வரையறை கவிதைக்காக முழு நிலையையும் உணர்த்துகின்றது. இக்கருத்தினை ந. சுப்புரெட்டியாரின் கவிதை அனுபவத்தின் வழியாக வெளிப்பட்ட கவிதை இலக்கணச்சாறு என்பதாகக் கொள்ளலாம்.

“கவிதை சிறப்பது அதனைப் படைக்கும் கவிஞனின் அநுபவத்தினைப் பொறுத்து வருவது. அவன் அநுபவத்தைக் கூறும் முறையையும் பொறுத்தது” என்று கவிதைப் படைப்பில் அனுபவம் முக்கிய பங்காற்றுவதை ந.சுப்பு ரெட்டியார் காட்டுகிறார்.

கவிதையின் பாடுபொருள் குறித்தும் அவர் வரையறை செய்கிறார். “கவிதை வாழ்க்கையின் உண்மைகளை உட்கிடக்கையாகக் கொண்டு நிற்க வேண்டும்”[7] என்பது கவிதையின் பாடுபொருள் குறித்த ந. சுப்பு ரெட்டியாரின் கருத்தாகும்.

கவிதைக்கான பாடுபொருள்களாக ந.சுப்பு ரெட்டியார் சிலவற்றைக் காட்டுகிறார். ‘பாடுவோரின் அநுபவத்திற்கு ஏற்ப எல்லாம் கவிதைக்குரிய பொருளாக அமையலாம். உலகம் தோன்றிய நாள் தொட்டு இன்று வரையிலுமுள்ள பழம் பொருளான இருசுடர் , விண்மீன்,

கருமுகில், மலை, காடு, ஆறு, கடல், மான், முயல், கிளி, மயில், குழந்தை முதலியவை கவிதைப் பொருள்களாக அமைந்துள்ளன. அங்ஙனமே காதல், வீரம்,இன்பம், துன்பம் போன்றவையும் பாட்டில் அமைகின்றன. இவை பழம் பாடல்களிலும் இடம்பெற்றுள்ளன. புதுமையான பாட்டுகளிலும் இடம்பெற்றுள்ளன. …புதுப் பொருள் பற்றிப் படைக்கும் திறன் கவிஞர்களிடமே உள்ளது.' என்று கவிதைக்கான பாடுபொருள்கள் தமிழ் இலக்கியப் பரப்பில் எவ்வாறு மேற்கொள்ளப்பெற்றுள்ளது என்பதையும் அளந்து உரைக்கிறார் ந.சுப்பு ரெட்டியார்.

இவ்வளவில் கவிதை குறித்த வரையறைகளை, அதன் பாடுபொருள் குறித்த வரையறைகளை ந. சுப்புரெட்டியார் தெளிவாக சுற்றி வளைக்காமல் தருகின்ற பக்குவம் உடையவராக விளங்குகிறார் என்பதை அறியமுடிகின்றது.

கவிதையின் முக்கியக் கூறுகளான உணர்ச்சி, கற்பனை, ஒலிநயம் போன்றவற்றைப் பற்றியும் விரிவாக உரைக்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

**உணர்ச்சி**

கவிதையின் கவிதைப் பண்புகளுள் சிறந்தது அது தரும் உணர்ச்சியாகும். "ஆழ்ந்த உணர்ச்சியை வெளியிடுவதற்கு உரைநடை ஒலிநயம் போதுமானதன்று. அதற்குச் செய்யுள் வடிவமே மிகவும் ஏற்றது"[8] என்று உணர்ச்சியை வெளியிடும் களமாக கவிதை விளங்குகிறது என்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

இதற்குக் காட்டாக சீவக சிந்தாமணியில் இருந்து ஒரு பாடலை எடுத்துக்காட்டுகிறார் ந. சுப்பு ரெட்டியார்.

"கைப்பழம் இழந்த மந்தி, கட்டியங்காரன் ஒத்தது
இப்பழம் துரந்து கொண்ட சிலதனும் என்னை ஒத்தான்.
இப்பழம் இன்று போகத்து இன்பமே போதும் என்று
மெய்ப்பட உணர்வு தோன்றி மீட்டிது கூறினானே"

என்ற பாடலைப் படிக்கும்போது நிலையாமை உணர்ச்சி மிகுவதைக் காட்டி உணர்ச்சிக்கான எடுத்துக்காட்டுப் பாடலாக மேற்பாடலைத் தருகிறார் ந.சுப்பு ரெட்டியார்.

**கற்பனை**

கவிதையின் மற்றொரு முக்கியமான கூறான கற்பனை குறித்தும் அதன் அமைப்பு குறித்தும் ந.சுப்பு ரெட்டியார் தெளிவு படுத்துகிறார்.

‘கற்பனை என்பது புலன்களை நேரே ஒரு பொருளை அநுபவியாத காலத்திலும் அந்தப் பொருள்களை நினைவிற்குக் கொண்டுவந்து அப்பொருளினிடத்து மீண்டும் அனுபவத்தை ஏற்ற வல்ல ஒருவகை ஆற்றல்”[9] என்று கற்பனைக்கு விளக்கம் தருகிறார் ந.சுப்பு ரெட்டியார்.

கற்பனைக்கு பாரதியாரின் குயில் பாட்டில் இருந்து எடுத்துக்காட்டினைத் தருகிறார் ந.சுப்பு ரெட்டியார்.

”தங்கம் உருக்கித் தழல் குறைத்துத் தேனாக்கி
எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ

என்பது பாரதியாரின் குயிற்பாட்டடிகள். இவை காலைக் கதிரவனை வருணிக்கும் அற்புதச் சொல்லோவியம். இளஞ்சூரியனின் கதிர்களை உருக்கிவிட்ட தங்கம் போலப் பரவி வருகின்றனவாம். உருக்கிய தங்கமாயிருப்பினும் என்ன மாயத்தினாலோ சூடு குறைந்திருக்கின்றதாம். இத்தகைய ஒளியுடன் அக்காட்சியில் இனிமையும் கலந்து கொஞ்சுதலைக் கண்டு மகிழலாம். இதைத்தான் கவிஞன் ‘தழல் குறைத்துத் தேனாக்கி’ என மிகவும் இங்கிதமாக வெளியிடுகிறான். நாமும் அக்காட்சி இன்பத்தில் மூழ்கி அதனை அநுபவிக்கின்றோம். கவிஞன் தான் அநுபவித்தவற்றை நம்மையும் அநுபவிக்கச் செய்கின்றான்.”[10] என்று ந.சுப்பு ரெட்டியார் கற்பனைக்கான எடுத்துக்காட்டையும் தந்து கவிதையனுபவத்தை வெளிப்படுத்துகிறார்.

**ஒலிநயம்**

கவிதைக்கான அடுத்து கூறாக ந.சுப்பு ரெட்டியார் காட்டுவது ஒலிநயம் என்பதாகும். உரைநடையிலோ அல்லது நவீனக் கவிதைகளிலோ ஒலிநயம் என்பதைக் காண இயலாது. மரபுசார்ந்த கவிதைகளில் ஒலிநயம் என்பது தவிர்க்க இயலாதது. கவிதையில் ஒலியத்தின் இன்றியமையாமை குறித்து ந.சுப்பு ரெட்டியார் தெளிவுபட விளக்குகிறார்.

‘பாட்டை உரக்கப் படிக்கும் பொழுது பாட்டிலுள்ள ஒலிகள் இயங்குகின்றன. அந்த இயக்கத்தில் ஏற்படும் ஒழுங்கே ஒலிநயம் எனப்படுவது. வண்ணம், சந்தம் என்பனவும் ஒரு வகையில் ஒலி நயத்தைத்தான் குறிப்பிடுகின்றன’ என்று பாட்டின் இயக்கத்திற்குக் காரணம் அதன் ஒலிநயம் என்று உரைக்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

கவிதையில் இடம்பெறும் ஒலிகளின் தன்மையை மூன்று வகையாக வகைப்படுத்துகிறார் ந. சுப்பு ரெட்டியார். இந்த நுணுக்கமான வகைப்பாடு அவரின் நுண்ணிய திறனாய்வாற்றலுக்குச் சான்று பயப்பதாகும்.

1. ஒலியின் கால அளவு
2. ஒலியின் தன்மை
3. ஒலிக்கும் முறை

என்ற மூன்றின் இயல்பால் கவிதைக்குள் ஒலிநயம் சிறக்கும் என்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

குலசேகர ஆழ்வாரின் பாடல் ஒன்றைக் காட்டி அதன் வழியாக கவிதையில் ஒலிநயம் இருப்பதை அறிவிக்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

“கொல்லணைவேல் வரி நெடுங்கண் கௌசலைதன் குலமதலாய் குனிவில் ஏந்தும்
மல்லணைந்த வரைத் தோளா வல்வினையேன் மனம் உருக்கும் வகையே கற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்று இனிப்போய் வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண் துயிலக் கற்றனையோ காகுத்தா கரிய கோவே!

என்ற குலசேகர ஆழ்வாரின் பாசுரத்தை உள்ளங் கனிந்து ஓதுங்கால் ஆழ்வார் தான் தசரதனாக இருந்து புலம்பும் முறையில் பாடியதைப் போலவே நாமும் தசரதனாகி விடுகின்றோம். இதையே உளவியலார் ஒட்ட உணர்தல் என்று குறிப்பிடுவர். செவி ஒலி நயத்தை உணரத் தொடங்கியதும் நம் கற்பனையை உணர்ந்து பாசுரத்தின் உணர்ச்சியைப் பெறத் தொடங்கிவிடுகிறது”[11] என்று ஆழ்வாரின் பாடலில் ஒலிநயத்தில் கலந்து நிற்கிறார் ந. சுப்பு ரெட்டியார். மெல்லணை மேல் நேற்று வரை துயின்ற இராமன் இன்றுமுதல் கல்லணையின் மேல் கண் துயிலவேண்டுமே என்று மன உருக்கத்துடன் தசரதன் வருந்தும் இந்த அவல ஒலிக் குறிப்பினைப் படிப்போரும் பெறுகின்றனர்.

**அணிநலன்**

கவிதைக்கான அழகுகளுள் ஒன்றாக அமைவது அணிநலன் ஆகும். “கவிதைக்கு அழகு செய்வன அதில் அமையும் அணிகள். உவமையும், உருவகமுமே பெரும்பாலும் கையாளப் பெற்று வருகின்றன”[12] என்று அணிகளில் தலைசிறந்த அணிகளாக உவமையையும், உருவகத்தையும் கருதுகிறார் ந.சுப்பு ரெட்டியார்.

‘உவமையே பிற்காலத்தில் தோன்றிய நூற்றுக் கணக்கான அணிகட்கும் தாய். இதனை அப்பய தீட்சிதர் என்ற வடமொழிப் புலவர் தமது சித்திர மீமாம்சையில்

உவமை என்னும் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே.

என்று அற்புதமாகக் கூறுவார்.” என்று உவமை அணியையே அனைத்து அணிகளுக்கும் மூத்த வேர் போன்ற அணி என்று ந. சுப்புரெட்டியார் உரைக்கிறார்.

‘கவிதைகளில் உவமை முதலிய அணிகளைச் சிறந்த புலவர்கள் முயன்று சேர்ப்பதில்லை. அவர்கள் கற்பனையில் ஒரு தன்மையாகத் தோன்றி இயையும் பொருள்கள்

தாமே வந்து பொருந்தி உவமை முதலிய அணிகளாக அமைந்து விடுகின்றன' என்று உவமை போன்ற அணிகள் தானாகச் செய்யுளில் இடம்பெறுவன என்றும் அவற்றைக் கட்டாயப் படுத்தித் திணிக்க இயலாது என்றும் கருதுகிறார் ந.சுப்புரெட்டியார்.

**நல்ல வடிவம்**

ந.சுப்பு ரெட்டியார் கவிதைக்கான சிறப்புப் பண்புகளுள் ஒன்றாகக் காட்டுவது வடிவம் என்பதாகும். மரபுக் கவிதைகளைப் பொறுத்தவரை அதன் வடிவம் என்பது யாப்புக் கட்டுமானமே ஆகும். யாப்பின் வளர்ச்சி என்று யாப்பு குறித்த செய்திகளை இப்பகுதியில் தருகிறார் ந. சுப்புரெட்டியார்.

கவிதைக்கு யாப்பு தடையாகிறதா, விடையாகிறதா என்ற கேள்வி படைப்பாளர் மனதிலும், திறனாய்வாளர் திறத்திலும் இருந்துவரும் கேள்வியாகும். பாட்டினுக்கு யாப்பு எவ்வகையில் அமையவேண்டும் என்பதை ந. சுப்பு ரெட்டியார் கணிக்கிறார்.

"பழைய பாக்களான வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற பா வகைகளைக் கொண்டு பல்வேறு உணர்ச்சிகளுக்கு ஏற்ப, பல்வேறு ஓசை வேறுபாடுகளைக் காட்டுவதற்கு இடம் தரவில்லை. ஒவ்வோர் உணர்ச்சியிலுமுள்ள பல்வேறு வகைகளையும் இவற்றைக் கொண்டு காட்டுதல் இயலாது. ஆதலால் தாழிசை, துறை, விருத்தம் என்னும் பல்வேறு பாவினங்கள் தோன்றின. இவை ஒவ்வொரு பாவுடனும் சேர்ந்து பல்வேறு பாவிகற்பங்களைத் தோற்றுவிக்கின்றன. இவற்றுள் விருத்தமே மிகச் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கிறது. இன்று வாழும் மிகப் பெரும்பாலான கவிஞர்கள் அனைவருக்கும் இதுவே கை வந்த கலையாகிவிட்டது. இதையே பொது மக்களும் கேட்க விரும்புகிறார்கள்"[13] என்று யாப்பு குறித்து கருத்துரைக்கிறார் ந.சுப்பு ரெட்டியார். ஓசைக்கு ஏற்ப யாப்பு பெருகுவது நல்லது என்பது அவரின் கருத்து. தாழிசை, துறை, விருத்தம் போன்ற பாவினங்கள் தோன்றுவதற்கு யாப்பின் ஒலி பற்றாக்குறையே காரணம் என்ற அவரின் கருத்து ஏற்கத்தக்கதாகும்.

யாப்புடன் இசைந்த ஒலிநயமுடன் கூடிய கவிதையின்பத்திற்குப் பாரதியாரின் பாடலை எடுத்துக்காட்டாகக் காட்டுகிறார் ந. சுப்பு ரெட்டியார்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ சொல்வீர்
தேமதுர தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்

என்ற பாரதியாரின் பாடலில் எளிய சொற்களே உள்ளன. எனினும் அ்வை உணர்ச்சிக்கும் யாப்புக்கும் ஏற்றவாறு அமைந்து விளங்குவதைக் காணலாம்'' என்று ந.சுப்பரெட்டியார் யாப்பின் அழகினை எடுத்துக்காட்ட பாரதியாரின் பாடலை முன்வைக்கிறார்.

'ஒலிநயம் போலன்றி யாப்பு செயற்கையாகப் புனையப் பெற்ற சாதனமே. ஆனால் அதன் அடிப்படையில் ஒலிநயம் இருப்பதால் அஃது உணர்ச்சி நிலையைப் புலப்படுத்தும் நல்ல கருவியாகவும் அமைகின்றது' என்ற ந. சுப்பு ரெட்டியாரின் கருத்து யாப்பின் எந்திரத் தன்மையைக் காட்டுவதாக உள்ளது. உணர்ச்சியற்ற யாப்புடைக் கவிதை உயிர்ப்பு அற்றது. எந்திரக் கட்டுமானத்தையே உடையது என்ற கருத்தை ந.சுப்புரெட்டியார் ஆணித்தரமாக எடுத்துரைக்கிறார்.

யாப்பு அற்றது உரைநடை. யாப்பு உடையது செய்யுள். யாப்பினால் என்ன நன்மைகள் விளைகின்றன என்ற கேள்வியை எழுப்பினால் அதற்கு விடை தருகிறார் ந.சுப்புரெட்டியார்.

"உரைநடையில் அமையும் சொற்களுக்கும் பாட்டில் அமையும் சொற்களுக்கும் வேற்றுமையுண்டு. முன்னவை உணர்ச்சி சிறப்பு வேண்டாதவை. யாப்பின் தொடர்பு இல்லாதவை. பின்னவற்றிற்கு உணர்ச்சி வளம் வேண்டும். யாப்பு அமைதியும் வேண்டும். எவ்வளவு எளிய சொற்களால் பாடப்பெற்ற பாட்டேயாயினும் உரைநடைக்கும் பாட்டிற்கும் மலையனைய வேறுபாடுண்டு"[14] என்று உரைநடைக்கும் செய்யுளுக்கும் ஆன வேறுபாட்டை உணர்த்துகிறார் ந. சுப்புரெட்டியார்.

உரைநடைக்கும் செய்யுளுக்கும் மிக முக்கியமான வேறுபாடு ஒலிநயமும் யாப்புக் கட்டமைப்பும் என்பதை தெளிவுபட விளக்கியுள்ளார் ந.சுப்பு ரெட்டியார்.



**சொல்வளம்**

கவிதையின் நலம் சிறக்க அக்கவிதை செந்தமிழ்ச் சொற்களால் அமைய வேண்டும் என்பது ந.சுப்புரெட்டியாரின் கருத்தாகும். கவிதைக்கான சொல் நிலையை அவர் சொல்வளம் என்று காட்டி விளக்கம் தருகிறார்.

சொற்களே கவிதையின் ஆழத்தை ஆற்றலை அதிகரிக்கும் என்பது ந. சுப்பு ரெட்டியாரின் கருத்தாகும். "சதுரங்க ஆட்டத்தில் காய்கள் தாம் இருக்கும் இடத்திற்கேற்ப ஆற்றல் பெறுவன போலவும், துப்பாக்கியில் தோட்டாக்கள் அமையும்போது ஆற்றல் பெறுவன போலவும் கவிதையில் சொற்கள் தாம் இருக்கும் இடத்திற்கேற்ப புதிய பொருள்களைப் பெறுகின்றன."[15] என்று

கவிதைகளில் சொற்கள் ஆற்றலுடன் இடம்பெற வேண்டிய நிலையைக் காட்டுகிறார் ந.சுப்புரெட்டியார்.

இதற்கு திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் இறந்தபோது அவருக்குப் பாடிய இரங்கற்பா ஒன்றை எடுத்துக்காட்டாகத் தருகிறார். இதனை எழுதியவர் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் இனிய நண்பர் இராமசாமி என்பவர் ஆவார். எனைவைத்தி எனைவைத்தி எனப் பதங்கள்

இடையிடை நின்று இரந்து வேண்ட
'இனிவைப்பாம் இனிவைப்பாம் பொறுத்திடுமின்
பொறுத்திடுமின் என்று கூறி
நினைவுற்ற ஒருகடிகைக் களவில்கவித்
தொடைதொடுத்து நிமலர் பூணப்
புனைவுற்ற மீனாட்சி சுந்தர வள்
ளலைப் போல்வர் புவியில் யாரே

இது மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் திருநாடு அலங்கரித்ததனை நினைந்து பாடிய இரங்கற்பா, சொற்கள் யாவும் அகராதியினின்றும் புறப்பட்டு நம்மூர் கிருஷ்ணன் கோவிலில் சுண்டல் வாங்கும் சிறுவர்கள் பல்வேறு வரிசையில் நிற்றல் போல, தேன் கூட்டில் தேனீக்கள் பல வரிசைகளில் நிற்றல் போல பல்வேறு வரிசைகளில் நின்று என்னை வையுங்கள், என்னை வையுங்கள் என்று கெஞ்சி வேண்டுகின்றனவாம். பிள்ளையவர்கள் இதோ வைக்கிறேன். இதோ வைக்கிறேன். பொறுங்கள் என்று அமைதி கூறுகின்றாராம்."[16] என்ற பகுதியில் சொற்களின் அணிவகுப்பையும், மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் கவித்திறத்தையும் அறிய முடிகிறது.

மேலும் இங்கு மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் உயிர் நீத்தார் என்பதை ந.சுப்பு ரெட்டியார் வைணவ நெறிப்படி திருநாடு அலங்கரித்தார் என்று குறிப்பிடுவது ந.சுப்புரெட்டியாரின் வைணவ உள்ளத்தைக் காட்டுவதாகும். மேலும் கிருஷ்ணன் கோயிலில் சுண்டல் பெறும் சிறுவர்களைப் பற்றி உரைக்கும்போது நம்மூர் கிருஷ்ணன் கோயில் என்று குறிப்பது காரைக்குடி கிருஷ்ணன் கோயிலாகத்தான் இருக்க இயலும். ஏனெனில் வாழும் கவிஞர்கள் என்ற நூல் காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரியில் முனைவர் ரெ. முத்துக்கணேசனாரின் அறக்கட்டளைப் பொழிவாக பொழிந்ததன் நூல்வடிவமாகும். இவ்வாறு தன் மனத்தில் வைணவம் இருப்பதையும், நம்மூர் என்று அவர் காரைக்குடியைக் குறிப்பதையும் காணுகையில் அவரின் உள்ளத்தில் உள்ள அடையாளங்கள் தெரியவருகின்றன.

உரைநடை என்றாலும் செய்யுள் என்றாலும் சொற்கள் ஒன்றுதான். ஆனால் அவை உரைநடையில் வருகையில் ஒரு நிலையையும், செய்யுள் அமைப்பில் வருகையில் உணர்வு

வேகத்தையும் பெறுகின்றன. இங்கும் உரைநடை செய்யுளுக்கான வேற்றுமையை எடுத்துரைக்கிறார் ந. சுப்புரெட்டியார்.

உரைநடையில் ஆளப்பெறும் சொற்களுக்கும், கவிதையில் ஆளப்பெறும் சொற்களுக்கும் வேற்றுமை இல்லை. கவிஞன் அந்தச் சொற்களைக் கையாளும் முறையில்தான் அந்த வேற்றுமை உள்ளது. ஒவ்வொரு சொல்லுக்கும் உரிய நேரான பொருளைத் தவிர வழிவழியாக அந்தச் சொற்கள் ஆளப்பெறும் இடங்களின் தொடர்பால் அவற்றுடன் சேர்ந்து அமைந்த கருததுக்களும் உள்ளன. அன்றியும் சொற்கள் தமக்கென்று அமைந்த ஒலித்தன்மையும் வல்லின, மெல்லின எழுத்துக்களுக்கு ஏற்ப உணர்ச்சியுடன் சேர்ந்து ஒலிக்கும் தன்மையும் பெறுகின்றன. எனவே கவிதையில் சொற்கள் அமையும் பொழுது இடத்திற்கு ஏற்றவாறும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறும் சுவைக்கு ஏற்றவாறும் அவை அமைந்து கவிதையைப் பொலிவுடையதாக்குகின்றன" என்று உரைநடைகளிலும், செய்யுள்களிலும் இடம் பெறும் சொற்களின் தன்மையை ஆற்றலை, உணர்வின்பத்தை வேறுபடுத்திக் காட்டுகிறார் ந.சுப்பு ரெட்டியார்.

சொற்களின் தெரிவு குறித்தும் ந. சுப்புரெட்டியார் கருத்துரைக்கிறார். "சொற்களைக் கையாளுவது கவிஞனின் திறனைப் பொறுத்தது. அவனது மேதைத்தன்மையையும் பொறுத்தது. கம்பன் போன்ற கவிஞர்கள் சொற்களைக் கையாளும் முறைக்கும் சாதாரணக் கவிஞர்கள் சொற்களைக் கையாளும் முறைக்கும் மலையனைய வேறுபாடு உண்டு"[17] என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

சொல் தேர்வு என்பது ஒரு கவிதையை கவிதையாக்கும் நெறிமுறை என்பதை ந.சுப்புரெட்டியார் மேற்சொன்னவற்றின் வழி தெரிவிக்கிறார்.

இவ்வாறு கவிதையாற்றலை அதன் வரையறைகளை ந. சுப்பு ரெட்டியார் தெளிவுபட எடுத்துரைத்துள்ள முறைமை திறனாய்வாளர்களுக்கும், படைப்பாளர்களுக்கும், படிப்பாளர்களுக்கும் இனியது, எளியது, அவசியமானது.

**சான்றெண் விளக்கம்:**

1 ந. சுப்புரெட்டியார், வாழும் கவிஞர்கள், ப. 4
2 மேலதுப.2
3 மேலது.ப. 4
4 மேலது. ப.13
5 மேலது ப. 13
6 மேலது,ப. 5
7 மேலது ப. 5
8 மேலது,ப. 8
9 மேலது ப. 5
10 மேலது.ப. 6

11 மேலது ப. 9
12 மேலது.ப. 13
13 மேலது.பக் 11-12
14 மேலது ப. 12
15 மேலது ப.7
16 மேலது ப. 7
17 மேலது ப. 6

**பயன் கொண்ட நூல்**

ந. சுப்புரெட்டியார், வாழும் கவிஞர்கள், மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, 1998

****************************************



# ந சுப்புரெட்டியாரின் இல்லறநெறி

**முனைவர். வி.கலாவதி**
**உதவிப்பேராசிரியர்**
**தமிழ்த்துறைத்தலைவர்**
**இராஜபாளையம் இராஜுக்கள் கல்லூரி**
**இராஜபாளையம்.**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தமிழ் இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்பே அக வாழ்க்கை சிறப்பாக பெறப்பட்டுள்ளது.அக வாழ்க்கையின் கூறுகளைப் பகுத்தாய்ந்து பெண்மைக்கு உரிய இடம் தந்த பெருமைக்குரிய இலக்கியங்களாகச் சங்க இலக்கியங்களும் சங்கம் மருவிய இலக்கியங்களும் திகழ்கின்றன.இதில் ஆராய்ந்து தெரிந்து உயர்த்தும் ஆன்றோர் சான்றோர் பெருமக்கள் நூல்களை வகுத்தும் தொகுத்தும் தந்திருக்கும் ஒப்பற்றப் பணிகளைச் செய்துள்ளனர். அந்தவகையில் ந. சுப்புரெட்டியார் எண்ணற்ற இலக்கிய நூல்களைச் ஆய்வு நோக்கில் தமிழுக்குக் கொடையாக வழங்கியுள்ளார். இம்மண்ணுலக மாந்தரின் வாழ்க்கையின் ஒவ்வொரு பரிமாணங்களில் கிடக்கும் அளவில்லாத பண்புகளின் தொகுப்பாக இல்லறநெறி என்னும் இந்நூல் விளங்குகின்றது. இந்நூலில் காணப்படும் வாழ்வியல் கருத்து ஆண்,பெண் பண்புநலன்களையும் தொகுப்பாக இருக்கும். இந்நூலின் சிறப்பியல்புகளை ஆராய்வதே அக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திருமண வாழ்வில் இல்லறத்தின் மதிப்பு:**

கணவன்,மனைவியாக உற்றார்,உறவினர் அறிய வாழ்வதற்காக மட்டுமல்ல திருமணம் என்ற பந்தம்.வாழையடி வாழையாகத் தழைத்தோங்க வேண்டிய குடும்பத்தை உணர்வினால் விட்டுக் கொடுத்தலினால் சிறப்பாக வழி நடத்த உதவுவதே இல்லறமாகும். இல்லற வாழ்க்கைக்கு இயைச்த மனமும் உடலும் தன்னை நன்னெறிப்படுத்திக்கொண்டு சிறப்பாக அறங்கும் மனநிலையை வளர்த்துக்கொண்டு அதன்வழி இயங்கும் இயங்குநிலைக் கருவி இல்லறம்.இதனை நன்கு உணர்ந்து அதன் வழி வாழ்ந்த பெருமக்கள் கூறிய அறிவுரைகளின் தொகுப்பாக நா.சுப்புரெட்டியாரின் இல்லறநெறி என்ற நூல் விளங்குகின்றது.

**மணப்பொருத்தமும் அதன் சிறப்பியல்புகளும் :**

திருமணம் செய்ய இருக்கும் ஆண்,பெண் இருவருக்குமான மணப்பொருத்தம் பார்ப்பது என்பது ஜோதிடக்கலையின் சிறப்பு.அதனை அடிப்படையாகக்கொண்டு மணப்பொருத்தம் என்ற இயலினைத்தேர்வு செய்து இருக்கலாம். என்று ஊகித்தாலும் வாழ்க்கைத்துணையாகத் தேர்வு
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

செய்யப்படுபவர். எல்லா நிலைகளிலும் சரியானவர்களாக இருக்க வேண்டும்.என்பதன் அடிப்படையில் மணப்பொருத்தம் பார்க்கும் முறையைப் பின்பற்றி உள்ளனர்.

திருமணம் என்பது வெறும் விளையாட்டு விளையாட்டு நிகழ்ச்சி அன்று ஒருபொழுது தோன்றி மறுபொழுது அழியும் சாதாரண செயல் அன்று .ஆயிரங்களாத்துப் பயிர்!ஒவ்வொரு பாதியாக வளர்ந்து வரும் இரண்டு உயிர்கள் ஒன்றி முழுத்தன்மை எய்தி கடனாற்றுவதற்கு அவற்றை அன்புக்கயிற்றால் இயற்கைப் பிணைக்கிறது (இல்லறநெறி-18,19) என்று ந.சுப்புரெட்டியார் கூறுகிறார்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.:"(குறள்-45)

என்ற குறளின் பொருளாவது கணவன்,மனைவிக்குள் அன்பும்,பிணைப்பும் அறநெறிப்படி நிகழ்ந்து வருவதும உடையதனால் அதுவே இல்வாழ்க்கையின் உயர்ந்தப் பண்பாகும்.இத்தகைய மணப்பொருத்தம் என்பது தான் சிறந்தது.அறிவியல் ரீதியாக ஆராயப்பட்டுள்ளவை யாவும் ஆன்ம பயனுக்கானது.திருமணத்தின் முக்கிய நோக்கங்களுக்காக அறிவியல் முறையில் வரையறுக்கப்பட்ட எந்த விதமான தீர்க்கமான முடிவுகள் இதுவரை இல்லை.மேலும்,

"ஒருவர் மற்றொருவர்பால் அன்பு, நட்பு இவற்றின் அடிப்படையில் நிலையானஉறவுகொள்ளல்,உரிமையாகவும் சுதந்திரமாகவும் இணைவிழைச்சு புரிதல்,குடும்பம் அமைத்து இல்வாழ்க்கையாகிய நல்வாழ்க்கைழய அமைத்துக்கோடல் ஆகிய மூன்று நோக்க்களுக்காக நாகரிகமடைந்த மக்கள் திருமணம் என்ற ஒரு தெய்வீக ஏற்பாட்டைக் கண்டனர். ((இல்லறநெறி-21) என்று ந.சுப்புரெட்டியார் கூறுகிறார்.

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப."
(தொல்காப்பியம்)

என்று சமூகத்தில் பொய்கூறுதல், குற்றம் இழைத்தல் போன்றவையும் ஒருவரை ஒருவர் ஏமாற்றும் நிலையும் வந்த பிறகு திருமணம் என்ற முறை உருவாக்கப்பட்டது என்கின்றார்.

**திருமணம்-இல்லறமும் பாலுணர்வும் இணைந்தது:**

திருமணத்திற்கு பல்வேறு நோக்கங்கள் இருந்தாலும் அன்போடு இருந்து வாழ்க்கையை நடத்துவதற்கு உரிய நிலைகலனாகப பாலுணர்வும் அமைகின்றது. தமிழ் இலக்கியங்கள் மக்கட்பேறு பெறும் வழியைப் பிறரிடம் வெளிப்படுத்த முடியாத உணர்வு என்று பாலுணர்வு சுட்டப்படுகின்றது. உயிரியல் அடிப்படையில் நோக்கும் போது, திருமணம் என்பது சமூக, சட்டப்பூர்வமான மக்கட்பேற்றிற்கு அடிகோலி மரபுவழிப் பெறுக்கத்தை

வளர்க்கின்றது.குழந்தையைப் போற்றி பாதுகாத்து வளர்க்கும் தன்மை மனிதகுலம் தான் அதிகம் நிறைந்துள்ளது.மற்றபிற உயிர்களிடம் இத்தகைய தன்மையை காண்பது அறிது.திருமணம் என்பது சமூக,சட்ட பூர்வமான அறவொழுக்கத்தில் வழுவாத பாலுறவினை ஏற்படுத்துகின்றது. இதுவும் மணப்பொருத்தம் சார்ந்தது என்பதை ந.சுப்புரெட்டியார் எடுத்துரைக்கின்றார்.

குடும்பத்தின் மீது பற்றுக்கொண்டவராக இருப்பதும் மனப்பொருத்தத்தின் பாற்படும். குடும்பம் என்பதை மையமிட்டே வாழ்க்கை முறை அமைவதானால், திருமணத்துக்கு தன்னை தயார் செய்து கொண்டு நேர்மறையான எண்ணங்களை வளர்த்துக் கொள்வது வாழ்க்கைக்குப் பயனுடையதாகக் கருதப்படுகின்றது.என்பதை திருவேங்கடமுடையானுக்கு என்று கடிதமாக ந. சுப்புரெட்டியார் எழுதிய இல்லறநெறி என்ற நூலில் அறிவியல் அடிப்படையில் திருமணம் செய்ய சமூக ஒத்துழைப்பு அவசியமானது என்கின்றார். மானுட உடலில் உயிரணுக்களை உற்பத்தி செய்யும் காமச்சுரப்பிகள் ,இந்த உயிரணுக்களை உரிய இடங்களுக்கு அனுப்பிக் கருவுறுதலைச் செய்யும் புறவழிகள் என்ற அடிப்படையிலான அறிவியல் கருத்தாக்கங்களை திருமணம் செய்யப்போகும் ஒவ்வொருவரும் அறிதல் அவசியமானது. பழங்காலத்தில் தமிழ் மக்கள் ஒருவனுக்கும் ஒறுத்திக்கும் ஏற்படும் காதல் உறவு ஊழின் வலியால் தான் ஏற்படுகின்றது.

“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்”

என்ற தொல்காப்பியப் பகுதியால் இதனை அறிய முடிகின்றது.அன்புடையார் இருவர் யாதொரு முயற்சியும் உள்ளக்குறிப்பும் .இன்றி முற்பிறப்பின் நல்வினைப் பயனாகத் தம்முள் நிகழும் இந்த உறவினைப் பண்புடையோர் இயற்கைப்புணர்ச்சி என்றும் தெய்வப்புணர்ச்சி என்றும் கூறுவர். இல்லறவாழ்க்கைக்கு உரியப் பொருத்தங்களை உடல்பொருத்தம்,இனப்பொருத்தம் என்பதோடு அறிவியல் வகைகளில் மருத்துலம் சார்ந்தும் தெளிவுபெறத்தக்க வினாக்களும் விடைகளும் வழங்கியுள்ளார்.

திருமணம் உறவினர்களுடன் செய்யப்படும் போது அதனால் ஏற்படும் விளைவுகள் குறித்தும் கூறியுள்ளார்.

‘‘உறவுமுறை விட்டு போகக்கூடாது என்று உறவினர்களுக்குள் திருமணம் செய்து கொள்கின்றனர். சிலர் பணத்தையும் படிப்பையும் கருதி அந்நியரிடம் திருமண உறவு கொள்கின்றனர். சிலர் சாதி விட்டு சாதி திருமண உறவு கொண்டால் ஒட்டு வகை மாம்மழங்கள் போல் சிறவ்த பலனைப் பெறலாம் என்றும் இக்குறைகள் உடல் வன்மையும் அறிவாற்றலம் சிறப்பாக வளரும் என்றும் தம் செயல்களை ஒரு கொள்கை போலப் பேசுகின்றனர்.’’என்று உறவு முறை திருமணம் என்பதும் ,வேறு சாதியினருடன் செய்யும் திருமணம் குறித்தும் குறிப்பிடுகின்றார். நெருங்கிய உறவு முறைத்திருமணம் என்பது மரபுவழியாக அவர்களுக்கு

நன்மை தரக்கூடியதாக அமைந்தால் பரவாயில்லை.ஆனால், தீமை தரக்கூடிய உடல் நலக்கோளாறுகளுடன் குழந்தை பிறந்தால் அதுவே அவர்களுக்கு பெறும் சுமையாகிவிடும்.அறிவியல் அடிப்படையில் திருமணம் பெறும் இடம் முக்கியமானது.

**தமிழரின் மண வகைகள்:**

ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழும் ஒழுக்கத்தினைப் பண்டையோர் "அகத்திணை என்றப் பெயரால் குறித்தனர். அகத்திணை என்பது அகவொழுக்கமாகும். திணை- ஒழுக்கம் .

"போக்கெல்லாம் பாலை ,புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சேர் ஊடல் அணிமருதம் -நோக்குங்கால்
இல்லிருத்தல் முல்லை, இரங்கல் நறுநெய்தல்
சொல்லிருந்த நூலின் தொகை."

என்ற பழம்பாடலில் கூறப்பெற்றிருத்தலைக் கண்டு அறியலாம். மேற்கண்ட கருத்து வழி தமிழரின் வாழ்வியல் முறைமைகளை பற்றி கூறியுள்ளப்பாங்குப்போற்றுதற்குரியது.

**முடிவுரை:**

அறிவியல் அடிப்படையில் திருமணம் பெறும் இடம் முக்கியமானது. குழந்தைப்பேறு மட்டுமல்ல உடல்நலம்,மனநலம்,வாழ்க்கைத்துணை என்று எல்லவற்றோடும் பொருத்திப் பார்ப்பது மற்றும் தேர்ந்தத் தன்மையை ஆராய்வத இதன் நோக்கமாகும்.இல்லற வாழ்க்கை எளிமையானது அல்ல என்பதை ந.சுப்புரெட்டியாரின் இல்லற நெறி என்ற நூலின் வாயிலாக அறியலாம்.



******************************

# தேடியும் அள்ளிக் கொடுத்த அழகன்

**பேரா. நா. ப. மாணிக்கம்**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

புகழ் பெற்ற ஆங்கிலக் கவிஞர் லார்டு டென்னிசன் ஒருமுறை எழுதினார். “என்னுடைய பலம் பத்துப்பேருடைய பலம். ஏனெனில் என்னுடைய இதயம் தூய்மையானது. “புகழ்பெற்ற டென்னிசனின் இந்த வரிகளில் கால் நிறுத்தம் செய்யலாம் என நினைக்கின்றேன். அதாவது என்னுடைய உடல் வலியையும், மகிழ்ச்சியற்றநிலையையும் மீறிய என்னுடைய இன்பம் எல்லையற்றது. ஏனெனில் என்னுடைய மகிழ்ச்சி என்பது எனக்குள் உள்ளமகிழ்ச்சி சார்ந்ததன்று. இப்பரந்தவளாகத்தில் பயின்றுவரும் இளம் மாணவ, மாணவியரின் மகிழ்ச்சியே என்னுடைய மகிழ்ச்சியாகும்”. இது டாக்டர் அழகப்பசெட்டியார் 1957இல் ஆற்றிய இறுதிச் சொற்பொழிவின் ஒருபகுதியாகும்.

இம்மாபெரும் மனிதரைப் பற்றிமுனைவர் வ.சுப.மாணிக்கனார் ‘தேடியும் அள்ளிக் கொடுத்த அழகன்’ என்று எழுதினார். இந்தவரிகளைத் தலைப்பாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப்படுகிறது. முனைவர் வ.சுப.மாணிக்கனார் முதல்வராக இருந்தகாலத்தில் அழகப்பாகல்லூரியில் நான் இளநிலைக்கல்விப் பயின்றவன். பிறகு அக்கல்லூரியிலேயே முப்பத்திரண்டு ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றும் பேறும் எனக்குக் கிடைத்தது. இக்கல்லூரியின் பாலும் வள்ளல் அழகப்பர் மீதும் நான் மிகுந்தபற்றுக் கொண்டவன். அவரை என்றும் தெய்வமாக நினைத்து வணங்கிக் கொண்டிருப்பவன்.

கடந்த 2017ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 6ஆம் நாள் நடைபெற்ற வள்ளலின் பிறந்தநாள் விழாவில் அவருடைய மகள் வயிற்றுப் பேரன் முனைவர் ராம.வயிரவன் அவர்களால எழுதப்பெற்ற ALAGAPPA – A BEAUTIFUL MIND என்ற வாழ்க்கை வரலாற்று நூல் வெளியிடப்பெற்றது. அப்பொழுது அந்நூல் ஏற்கனவே‘பிரஞ்சு’,‘இந்தி’ஆகியமொழிகளில் வெளியிடப்பட்டதாகக் கூறினார்கள். அந்தநேரத்தில் என் மனதில் உதித்த எண்ணம் “இதைநாம் தமிழில் மொழிபெயர்த்தால் என்ன?”அதுவொரு பேராசை என்று நான் உணர்ந்த போதிலும் அதற்காகப் பலவழிகளில் முயற்சி மேற்கொண்டு திரு. வயிரவன் அவர்களைச் சந்தித்து வேண்டிக் கொண்டபொழுது அந்நூலைத் தமிழில் மொழிபெயர்க்கும் வாய்ப்பினை எனக்கு அளித்தார்கள்.

‘அழகப்பா என்னும் அழகியமனம்’ என்ற தலைப்பில் 2018ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 6ஆம் நாளில் இந்நூல் வெளிவந்தது. இதை மொழிபெயர்ப்பதற்கான வாய்ப்பு எனக்கு
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மட்டுமேகிடைத்ததாகும். என்னுடைய வாழ்நாள் முழுதும் இதைநான் மறக்கமுடியாது. தொடக்கக் கல்விமுதல் தொழிற்கல்வி, உயர் கல்விபோன்ற அனைத்துக் கல்வியையும் தமிழகத்தின் கிராமப்புறமாணவர்களுக்குக் கொண்டு சேர்த்த பெருமை வள்ளல் அழகப்பரையே சேரும். இன்றுவரை அவருடைய கல்வி நிறுவனங்களில் பயின்று வெளிவந்துள்ள மாணவர்களின் எண்ணிக்கை ஒரு கோடியைக் கூடத் தாண்டியிருக்கலாம்.

1909ஆம் ஆண்டு கோட்டையூரில் பிறந்த அவர் காரைக்குடி எஸ்.எம்.எஸ். உயர்நிலைப் பள்ளியில் படித்தபிறகு, இந்தியக் குடியரசுத் தலைவராக விளங்கியடாக்டர் எஸ்.ராதாகிருஷ்ணன் ஆசிரியராகப் பணியாற்றிய சென்னைமாநிலக் கல்லூரியில் மேற்படிப்பைக் கற்றார். லண்டனில் சார்ட்டர்டு வங்கியில் பயிற்சிபெற்ற முதல் இந்தியர் என்ற சிறப்பைப் பெற்றார். இங்கிலாந்தில் ‘மிடில் டெம்பிள்’வழக்குரைஞர் குழு உறுப்பினருக்கான (பார்-அட்-லா) தகுதிபெற்றார். சென்னைப் பல்கலைக்கழகமும் அண்ணாமலை பல்கலைக்கழகமும் அவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தன.

கல்வியில் அவருக்கு இருந்த ஆர்வம் எல்லையற்றது. தொழில் அதிபர்களின் நட்சத்திரமாக ஒளிவீசித் திகழ்ந்த இவரதுசிறப்பை, 1945 ஆம் ஆண்டில் அவரின் 37ஆவது வயதில், ஆங்கிலேயஅரசு இவருக்குசிறப்புப் பட்டம் (சர்) வழங்கிச் கௌரவித்ததுப் போற்றி புகழ்ந்தது. இந்தியா விடுதலை பெற்றவுடன் அந்த விருதினைத் துறந்துவிட்டார். 1957ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் நாளில் இந்தியக் குடியரசு‘பத்மபூஷன்’ சிறப்புவிருதினை வழங்கிக் கௌரவித்தது.

இருபது ஆண்டுகாலத்துக்குள் வணிகத்திலும், தொழில் துறையிலும் வியத்தகு மாற்றங்களை விளைவிக்கும் திறன் பெற்றவர். காரைக்குடியில் காடாய்க் கிடந்தசுமார் 1000 ஏக்கர் நிலத்தைச் சீர்திருத்திகல்விப் பயிர் வளர்த்தசெயல்வீரர் என்பதை மெய்ப்பித்துக் காட்டினார். தம் 48ஆம் வயதில் இளம்வயது மரணத்தைஏற்றபோது டாக்டர் அழகப்பசெட்டியார் வள்ளல் தன்மைக்கு ஒருசிறப்பு வடிவம் கொடுத்திருந்தார். பிரபலமான வேறு எவரும் அது வரை வழங்கியிராத அளவுக்குதமிழகத்தின் கல்விமேம்பாட்டுக்கு அள்ளிஅள்ளிக் கொடுத்துப் பெருஞ்சிறப்புப் பெற்றார். அவர் வழங்கியுள்ள கொடை அமெரிக்கடாலர் அளவில் முப்பதுகோடியைத் தாண்டும்.

நிதிநெருக்கடி மற்றும் உடல் நலத்தில் குறைபாடு என்றவாழ்வின் துன்ப அலைகளில்த் துவண்டுவிடாமல் துச்சமென எண்ணித் தொடர்ந்து போராடி வெற்றிகண்டதே அவருடைய வாழ்க்கை சகாப்தம். சமூக நலநன மேம்படுத்துவதற்காக அவருக்கிருந்த கருணை உள்ளம் தம்மிடம் இருப்பதையெல்லாம் கொடுக்குமளவுக்கு அவரைத் தாண்டி இழுத்தது. எல்லையற்ற பெருந்தன்மையால் கல்விக்கோர் அடையாளமாகஅழகப்பர் விளங்கினார் என்றால் அதுமிகையாகாது.

எதையும் விட்டுக்கொடுக்காமல் ஓர் புதியபாதையில் தோல்விகண்டு அஞ்சாமல் நடைபோடவேண்டும் என்றஎண்ணம் கொண்ட இளைஞனாக அழகப்பர் இருந்தார். அன்றைய குலவழக்கப்படி அழகப்பனுக்கும் கோட்டையூரைச் சேர்ந்த வள்ளியம்மைக்கும் திருமணம் நடைபெற்றது. அவர் F.A (First in Arts) படித்துக் கொண்டிருந்தபொழுது அவருடைய அன்னையாரும் பிறகு சிலமாதங்களில் தந்தையாரும் இறந்துவிட்டார்கள். குடும்பத்துப் பெரியவர்கள் அழகப்பன் படிப்பை நிறுத்திவிட்டு மலேயாசென்று குடும்பத் தொழிலில் ஈடுபடவேண்டும் என்றுவற்புறுத்தினார்கள். ஆனால் அப்பொழுது அவர் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றதைரியத்தில் தன் படிப்பைத் தொடருவதற்கு உறுதிபூண்டார். அதே மாநிலக் கல்லூரியில் B.A (Hons) ஆங்கில இலக்கியத்தில் சேர்ந்து 1930இல் வெற்றிகரமாகத் தேர்ச்சியடைந்து நகரத்தாரில் முதன் முதலில் M.A. பட்டம் பெற்றவர் என்றபெருமைக்கு உரியவர் ஆனார்.

தன் செல்வத்தைத் தன் தேச வளர்ச்சிக்கே பயன்படுத்த வேண்டும் என்று நினைத்த சிந்தனை சிற்பிகளில் அவரொருவர், டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனுடன் நெருக்கம் ஏற்படுத்திக் கொண்டார். கல்லூரிப் பருவத்தில் அவருக்குக் கிடைத்த மற்றொரு நண்பர் எஸ்.ஒய். கிருஷ்ணசாமி என்பவர். இவர் பின்னாளில் இந்தியாவின் குடிமைப் பணி (ICS) அதிகாரியாகப் பணியாற்றியவர். மாணவர் மன்றக் கூட்டத்தில் கிருஷ்ணசாமியின் பேச்சால் ஈர்க்கப்பட்டுத் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு அவரை மிகவும் பாராட்டியதுடன் தன்னுடைய விலை உயர்ந்த காரில் அவரை வீட்டில் இறக்கி விட்டார். அன்று பூத்த அந்த நட்பினால் அழகப்பன் நண்பர்கள் வட்டத்தை விரிவு படுத்திக் கொண்டார். பிற்காலத்தில் கல்லூரிகளை நிறுவுவதற்கும் மேம்படுத்துவதற்கும் இது மிகவும் உதவியது.

அன்றைய வாலிபனான அழகப்பனுக்கு ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற ஆர்வம் இயற்கையாகவே இருந்தது. அதனால் மிகுந்த ஆர்வத்துடன் மேடைகளில் பேசினார். ஒவ்வொரு தடவையும் தன் பேச்சை முடித்த பிறகு தன்னுடைய உச்சரிப்பு, கருத்துகளைக் கூறிய முறை, தலைப்புக்கும் கருத்துகளுக்கும் இடையேயான தொடர்பு பற்றித் தன் நண்பர்களின் கருத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வார். அவருக்குள்ளும் தன் நண்பர்களுக்குள்ளும் மற்றும ் ஒன்பது நண்பர்களையும் சேர்த்து திருவல்லிக்கேணி விவாதக் குழுவை (Triplicane Debating Club) ஆரம்பித்தார். மாலை நேரங்களில் யாராவது ஒரு உறுப்பினர் வீட்டு மாடியில் திறந்தவெளியில் சந்தித்து பொழுதுபோக்கு, அரசியல், வணிகம் பற்றிய செய்திகளை விவாதித்தனர். கல்லூரி மாணவனாக இருந்த பொழுதே வெளி உலகத் தொடர்புகளை ஏற்படுத்தி வலுப்படுத்திக் கொண்டார். அவருடைய அறிவு தாகத்தைத் தீர்ப்பதற்கான இடமாக இந்த விவாதக் குழு இருந்தது. உறுப்பினர்களுக்குச் சந்தாத் தொகையை செலுத்துவதே கடினமாக இருந்த பொழுது செலவுகளைத் தயங்காமல் ஏற்றுக் கொண்டார். இதனால் தானோ என்னவோ சங்கத்தின் பொருளாளர் பொறுப்பை ஏற்றிருந்தார். அவருடைய வாழ்வு தர்மத்தின் வாழ்வாக அமையப்

போகிறது என்பதற்கு அன்று ஆரம்பித்த இந்த தர்ம சிந்தனை ஒரு அடிக்கல் என்றே சொல்லலாம்.

ஆங்கில மொழியில் வல்லமை படைத்தவராக அழகப்பன் இருந்த போதிலும் தன் தாய் மொழியையும் தாய் நாட்டையும் மிகவும் நேசித்தார் இந்தியாவில் மிக உயர்ந்த குடிமைப்பணி ஐசிஎஸ் அதிகாரியாகும் கனவுகளுடன் 1930 இல் இங்கிலாந்து புறப்பட்டுச் சென்றடைந்தார் அங்கு நடத்தப்பட்ட மருத்துவப் பரிசோதனைகள் Hansen's disease என்று அழைக்கப்படும் தொழுநோய் அவருக்கு இருப்பதாகத் தெரிவித்தன. இதனால் ஐ சி எஸ் படிப்புக்குத் தடை ஏற்பட்டு விட்டது. கனவுகளைச் சுமந்து கொண்டு கடல் கடந்து இவ்வளவு தூரம் சென்ற இளைஞனின் மனநிலை எவ்வாறு இருந்திருக்கும்? இருப்பினும் மனம் தளராமல் நகரத்தாரில் முதல்முறையாக ஏதாவது செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார். அவர்களுடைய குடும்ப நண்பரான ரைட் ஞானரபிள் சீனிவாச சாஸ்திரி சார்ட்டட் வங்கிக்கு அழகப்பனை சிபாரிசு செய்தார். அவரின் அறிவாற்றலும் திறமையும் அந்த வங்கியில் பயிற்சியாளராகச் சேர்வதற்கு உதவின. மேலும் இவர்தான் அந்த வங்கியின் முதல் இந்தியப் பயிற்சியாளர். வங்கியில் பணியாற்றும் பொழுதே மற்றொரு திறமையான வேலை பார்க்க வேண்டும் என்று நினைத்தார். சட்டத்துக்குக் கீழ்ப்படியும் குடிமகனான அவர் சட்டப்படிப்பில் சேர விரும்பினார். எனவே லண்டனில் உள்ள மிடில் டெம்பிள் சட்டக் கல்லூரியில் சேர்ந்து பட்டம் பெற்ற நகரத்தார்களில் முதல் பார் அட் லா முதன் முதலில் வெளிநாடு சென்று கல்வி கற்றவர் என்ற பெயர் பெற்றார். லண்டன் பாரில் (Bar) வழக்கறிஞராகப் பணியாற்ற 26 ஜனவரி 1933இல் அனுமதி கிடைத்தது சார்ட்டட் பாங்க் வேலை, சட்டம் பயிலுதல் ஆகிய இரண்டு நோக்கங்கள் நிறைவேறியவுடன் ஆங்கில மண்ணில் புதுமையானவற்றைக் கற்றுக்கொள்ள விரும்பினார். வாழ்வின் ஒவ்வொரு நொடியும் அவருக்கு விலை மதிப்பற்றதாக இருந்தது துணிச்சல் மிகுந்த அவர் விமானம் ஓட்டக் கற்றுக்கொள்ள விரும்பி Croydon இல் (London) உள்ள விமானப் பயிற்சியில் சேர்ந்து அதை வெற்றிகரமாக முடித்து 1933இல் விமானிக்கான சான்றிதழும் அதற்கான உரிமமும் பெற்றார். கடுமையான நோய் தாக்கத்தால் இழந்த உடல் நலத்தை ஈடு கட்டுவது போல் இரவு அதிக நேரம் விழித்திருப்பதும் அதிகாலையில் விரைவில் எழுந்து தொடர்ந்து உழைப்பதையும் வழக்கமாக ஆக்கிக் கொண்டார்.

கல்லூரி நாட்களில் இருந்தே மிகச்சிறந்த பேச்சாளர் என்பது மட்டுமன்று. மிகச்சிறந்த எழுத்தாளரும் கூட. இந்தியாவில் இருந்த தலைவர்களுக்கும் அவருடைய நண்பர்களுக்கும் எழுதிய கடிதங்களே இதற்குச் சான்றாகும். அவைகளில் அரசியல் முதல் விளையாட்டு வரை பிரிட்டிஷ் காலனி ஆதிக்கம் முதல் கிரிக்கெட்டில் பிராட்மேன் வெற்றி பெற்றது வரை அவருடைய கருத்துகளைத் தெரிவித்தார். எப்பொழுதுமே தன்னுடைய கருத்துகளைத் தெரிவிப்பதில் மிக்க ஆர்வம் கொண்டிருந்தார். வெளிநாட்டில் தம்முடைய பணி முடிந்தவுடன் தாய்நாடு திரும்ப

முடிவெடுத்தார். லண்டனில் மூன்று ஆண்டுகள் தங்கித் தம் திறமைகளை வளர்த்துக் கொண்ட பிறகு 1933இல் இந்தியா திரும்பினார்.

அவர் நினைத்திருந்தால் இங்கிலாந்தின் குடியுரிமை பெற்றிருக்கலாம். தாய் மண்ணுக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று நோக்கமும் நாட்டுப்பற்றும் அவ்வாறு செய்ய அவரை அனுமதிக்கவில்லை. அழகப்ப செட்டியாருடைய தந்தையார் இறந்த பிறகு மூத்த மகன் சேது செட்டியார் குலவழக்கப்படி சொத்துக்களைப் பிரித்துக் கொடுத்தார். அழகப்ப செட்டியாருக்குப் பொது வட்டிக் கடையில் அவருக்குள்ள பங்கும் ரொக்கம் ரூபாய் 3 லட்சமும் கிடைத்தன. அன்று வளர்ந்தும் வளராமல் இருந்த தொழில் வானில் இந்த மூலதனத்தைக் கொண்டு ஒரு விடிவெள்ளி முளைத்தது. பர்மா மலேயாவில் நிலங்களை வாங்கிப் போட்டார். ரப்பர் தோட்டங்களை விலைக்கு வாங்கினார். அடுத்து, நிலம் கட்டிடங்களை வாங்கி விற்பதில் கவனம் செலுத்தினார். சிங்கப்பூரின் நடுப்பகுதியில் ஆர்ச்சர்ட் ரோட்டில் ஒரு சொத்தை வாங்கிய பொழுது இவருடைய ஊக்கத்திறமை வெளிப்பட்டது. இந்தியாவில் காப்பித் தோட்டத்தில் முதலீடு செய்தார்.

இந்தியா திரும்பிய பிறகு வசதி படைத்த செட்டியார்கள் செய்வதைப் பின்பற்றி சென்னை புரசைவாக்கத்தில் ஒரு வீட்டை வாங்கி அதற்கு "கிருஷ்ண விலாஸ்" என்று பெயரிட்டார். இன்றுவரை அந்த வீடு இருக்கும் சாலைக்கு அவரை கௌரவிக்கும் வகையில் "அழகப்பா ரோடு" என்று அரசு பெயர் சூட்டியுள்ளது. இங்கிலாந்து வீடுகளைப் போல் அந்த வீடு அழகுற அலங்கரிக்கப்பட்டிருந்தது. பரந்து விரிந்த வரவேற்பு அறையும் தூய வெள்ளை நிறச் சுவர்களும் அழகொளி சிந்தின. வரலாற்றுச் சிறப்புமிக்க ஓவியங்கள் தீட்டப்பட்ட திரைச்சீலைகள் கண்களைக் கவர்ந்தன. அங்குள்ள நூல் நிலையத்தில் அவர் வாய்விட்டு உரத்த குரலில் படிக்கும் புத்தகங்களும் பல்லாண்டு காலமாகச் சேர்த்த தகவல் திரட்டும் புத்தகங்களும் அடுக்கப்பட்டிருந்தன. இந்தியக் குடியரசுத் தலைவர், துணைத் தலைவர், ஆளுநர்கள், முதல்வர்கள் போன்ற மிக முக்கியமானவர்களை அழைத்துத் தன் தோட்டத்தில் விருந்தளித்தார். தோட்டத்தை மிகவும் நேசித்ததால் அதை மிகுந்த கவனத்துடன் சீர் செய்து அழகு குன்றாமல் பார்த்துக் கொண்டார். எனவே இத்தோட்டம் வருடாந்திரத் தோட்டக்கலைப் போட்டிகளில் அடிக்கடி பரிசுகளைத் தட்டிச் சென்றது.

உலக நாடுகள் பொருளாதார வீழ்ச்சியிலிருந்து மீண்டு வந்து கொண்டிருந்ததால் நகரத்தார் வழக்கமாகச் செய்து வந்த தொழிலில் இறங்காமல் வித்தியாசமான தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்று முடிவெடுத்தார். ஆங்கில அரசாட்சியின் கீழ் கொச்சியில் திவானாக இருந்த அழகப்ப செட்டியாரின் நண்பராகிய ஆர்.கே. சண்முகம் செட்டியும் மற்றொரு பக்கத்து மாநிலமாகிய திருவாங்கூரின் திவானாக இருந்த அழகப்பச் செட்டியாரின் நண்பர் சி.பி. ராமசாமி ஐயரும் அவர்களுடைய மாநிலங்களில் தொழில் முன்னேற்றத்திற்கான முனைப்புக் காட்டினர். முற்போக்கு மனப்பான்மையுடைய இவ்விரு நண்பர்களுக்கு இடையே சிக்கித் தவித்து எந்த

இடத்தில் தன் தொழிலுக்கு வித்திட வேண்டும் என்று யோசித்துப் பின் கொச்சி மாநிலத்தில் திருச்சூர் அருகே புதுக்காட்டில் 1937 இல் “கொச்சின் டெக்ஸ்டைல்ஸ் ஐத் தொடங்கினார். ஆர்.கே. சண்முகம் செட்டியாரும் அவர் தம் சகோதரர் ஆர்.கே. கந்தசாமி செட்டியாரும் கோயம்புத்தூரில் வெற்றிகரமாக ‘வசந்தா மில்ஸை’ நடத்திக் கொண்டிருந்ததாலும், தானே செய்து அனுபவரீதியாக அறிந்து கொள்வதற்கான ஆலோசனையை அவர்கள் வழங்க முடியும் என்பதாலும் இந்த முடிவுக்கு வந்தார். தவிர திருச்சூருக்கு அருகில் இருந்த தனியாருக்குச் சொந்தமான சண்முகம் மின் உற்பத்தி நிலையத்திலிருந்து மின்சாரம் பெற முடியும். அத்துடன் இந்த மின் உற்பத்தி நிலையத்தில் சண்முகம் செட்டியும் ஒரு பங்குதாரராக இருந்தார். அந்தக் காலத்தில் தொழிற்சாலைகள் தனியார் மின் உற்பத்தி நிலையங்களைச் சார்ந்திருந்தன. ஆனால் ஆரம்ப காலங்களில் தொழிலில் சிக்கலுக்குத் தீர்வு காண்பதற்கு மிகவும் போராட வேண்டியிருந்தது.

உலகப் போர் நடந்து கொண்டிருந்த பொழுது ஜவுளி ஆலைகளுக்கு மிகுந்த மதிப்பு உயர்ந்ததால் ஆலையை விரிவு படுத்தி ‘அழகப்பா டெக்ஸ்டைல்ஸ்’ என்று மறுபெயரிட்டார். ஐம்பதாயிரம் நூற்புக் கதிர்களைக் கொண்ட கேரளாவிலேயே மிகப்பெரிய நூர்பாலையாக அது அமைந்தது. அதுவும் தமிழ்நாட்டுக்கு வெளியில் ஒரு நகரத்தாரால் ஏற்படுத்தப்பட்ட பெரிய முதலீடு 2.5 கோடி மூலதனமும் 2500 தொழிலாளர்களையும் கொண்டிருந்தது. ஆலையை விரிவு படுத்தியதோடு மட்டும் நிற்காமல் தொழிலாளர்கள் மீது பரிவு கொண்ட முன்மாதிரியான முதலாளியான செட்டியார் தொழிலாளர் நலனில் கவனம் செலுத்தினார்.

அழகப்பா டெக்ஸ்டைல்சைச் சுற்றி அதிகாரிகளுக்கும், பணியாளர்களுக்கும் தற்சார்புடைய “அழகப்பா நகர்“ என்ற நகரத்தை அரசு சம்மதத்தின் பெயரில் ஏற்படுத்தினார். அங்கு தபால் நிலையம், தொலைபேசி நிலையம், மின் விநியோகம் ஆகிய எல்லா வசதிகளும் இருந்தன. பிற்காலத்தில் ஆலயம், மருத்துவமனை, பள்ளி வசதிகளையும் ஏற்படுத்திக் கொடுத்தார். ரயில்வே வழங்கும் பயணச் சீட்டுகளில் புதுக்காடு என்பதற்குப் பதிலாக அழகப்பா நகர் என்று அச்சிடும்படி செய்தார். அழகப்பா டெக்ஸ்டைல்ஸ் நல்ல செழிப்பான வளர்ச்சி கண்டதால் காமதேனுவைப் போல் பணம் கொட்டிக் கொண்டே இருந்தது. எங்கு பணத்தை வைப்பது என்று தங்களுக்குத் தெரியவில்லை என்று அங்கு பணியாற்றியவர்கள் சொன்னார்கள்.

வணிகத்தைப் பெருக்கி ஆதாயமடைவதற்கான நேரமாக உலகப் போர் இருந்ததால் தன்னுடைய மற்றொரு நண்பர் ஆகிய சி.பி. ராமசாமி ஐயரை மகிழ்விப்பதற்காக ‘ஆல்வே’க்கருகில் திருவாங்கூரில் 1.5 கோடி மூலதனத்துடன் 25 ஆயிரம் நூற்கதிர்களுடன் அசோகா டெக்ஸ்டைல்ஸ் ஆலையை நிறுவினார். அங்கும் பணியாளர்களுக்காக அசோகாபுரம் என்ற இடத்தை உருவாக்கி வேண்டிய வசதிகள் அனைத்தையும் ஏற்படுத்திக் கொடுத்தார்.

வணிகத்தில் நுணுக்கமும் அனுபவமும் கொண்டிருந்த செட்டியார் கொச்சின் திவான் ஆர்.கே. சண்முகம் செட்டியின் நட்புக்காக அழகப்பா டெக்ஸ்டைல்ஸையும் திருவாங்கூர் திவானாக இருந்த சர். சி.பி.ராமசாமி ஐயரின் நட்புக்காக திருவாங்கூரில் அசோகா டெக்ஸ்டைல்ஸையும் ஆரம்பித்தார். இதன் பிறகு கண்ணனூரில் தன்னுடைய ஒரே மகளின் பெயரில் “உமையாள் நெசவு ஆலையையும் சென்னை மாநிலத்தின் ஈரோட்டுக்கு அருகில் சென்னி மலையில் ‘துணி நாட்காட்டி நெசவு ஆலையையும் தொடங்கினார். தென்னிந்திய நூற்பாலைகளில் “உமையாள் நெசவாலை ஏற்றுமதிக்கு முதலிடமாகத் திகழ்ந்தது. நூற்பாலைகளுக்குத் தேவையான குழாய்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையையும் ‘கம்மிஸ் லிட்’ என்ற பெயரில் ஆரம்பித்தார். வெற்றி வாய்ப்பைப் பற்றி உறுதியாகத் தெரியாத போதிலும் இடர்பாடுகளாகத் தோன்றும் புதிய முயற்சிகளில் அவர் துணிந்து இறங்கினார். அவைகளை நன்கு திட்டமிட்டு ஆழ்ந்த கவனத்துடன் செயல்படுத்தி வெற்றி கண்டார். 1943இல் பெரும்பான்மையான செட்டியார்கள் அவர்களுடைய சொத்துக்களை வெளிநாடுகளில் இழந்த பொழுது மிக வசதி படைத்த செட்டியார்களில் ஒருவராக அழகப்ப செட்டியார் இருந்தார். ஜவுளி ஆலைகளில் அவர் செய்த முதலீடு அக்காலத்தில் பணக்காரச் செட்டியார்களில் ஒருவராக அவரை உயர்த்தியது. இதற்குக் காரணம் அவருடைய தன்னம்பிக்கை, துணிச்சல் புதியதாக ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற ஆர்வம், எது வந்தாலும் எதிர்கொள்ள முடியும் என்ற நம்பிக்கை மட்டுமல்ல நண்பர்களின் உதவியும் கூட!

அழகப்ப செட்டியார் லண்டனில் சார்ட்டட் வங்கியில் பயிற்சியாளராகப் பணியாற்றிய பொழுது பங்குச்சந்தையில் அவருடைய ஆர்வம் மிகுந்திருந்தது. முதலீடு பற்றி பெரும் கட்டிடத்துக்குள் கற்றுக் கொண்டதை வெளியில் செயல்படுத்தினார். 1930 களின் இறுதியிலும் 1940களின் முற்பகுதியிலும் ‘பாம்பே ஸ்டாக் எக்ஸ்சேஞ்சில்’ நுழைந்து தன்னை முழுதுமாக வலுப்படுத்திக் கால் ஊன்றினார். இயற்கையிலேயே ஊகம் செய்வதில் தெளிந்தவராக இருந்ததால் அதிவேகமாக நினைத்ததை முடித்தார். பங்குச்சந்தையின் வெற்றிக்கு அத்தியாவசியமானவராக அறியப்பட்டார். பங்குகளை மிகப்பெரிய அளவில் துணிந்து வாங்கி மிகப்பெரிய லாபத்துக்கு விற்றார். ஒரு கம்பெனியின் ஐந்தொகையைப் பார்த்த மாத்திரத்திலேயே கம்பெனியின் வளர்ச்சிக்கான கூறுகளைக் கணிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். வேகமாகவும் தைரியமாகவும் முடிவெடுப்பதற்கும் பங்குகளை வாங்குவதற்குமான விசித்திரமான அறிவு அவருக்கு இருந்தது. பங்குச்சந்தையில் அவர் வாங்கினால் பங்குகளின் விலை விண்ணைத் தொட்டது. விற்றால் விலை இறக்கம் கண்டது. பம்பாய் பங்குச்சந்தையில் பெரும் வெற்றிகளை வாரிக் குவித்தார். இதனால் அங்கு ‘தி மெட்ராஸ் எக்ஸ்பிரஸ்’ என்ற அடைமொழி அவருக்குக் கிடைத்தது.

1940 இன் பிற்பகுதியில் ரேயான் இழை நூல்களுக்கு அதிகத் தேவை இருந்த பொழுது ஒரு வெளிநாட்டு வணிகர் மிகப்பெரிய அளவில் இதை விற்பதற்கு முன்வந்தார். கேரளாவில் ரேயான் இழை தயாரிக்கும் நூற்பாலை அதிபரான தன் நெருங்கிய நண்பர் எம்.சிடி.எம். சிதம்பரம் செட்டியாரைச் சேர்த்துக் கொண்டார். அவருடைய 'திருவாங்கூர் ரேயான்ஸ்' இயக்குனர் குழுவில் அழகப்ப செட்டியாரும் ஒரு உறுப்பினராக இருந்தார். அவரைப் போலவே வியாபாரத் துணிவு கொண்ட எம்.சிடி.எம்.சிதம்பரம் செட்டியார் ஒரு லட்சம் பங்குகளை வாங்குவதற்கு ஒப்புக்கொண்டார். அழகப்ப செட்டியார் மீதம் இருந்த சுமார் ஒரு கோடிக்கும் மேலான பங்குகளை வாங்கினார். இருவரும் விற்ற பொழுது பணமழை கொட்டியது. சிதம்பரம் செட்டியாருக்குப் மிகப்பெரிய அளவில் இலாபம் அழகப்பச் செட்டியாருக்கு மிகப்பெரிய அளவில் இலாபம். கிடைக்கும் சந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது என்பது அழகப்ப செட்டியாரின் கொள்கையாகும். அவர் பம்பாயில் வாணிபம் செய்வதில் மும்முரமாக இருந்த போதிலும் சென்னையைத் தங்குமிடமாக வைத்துக் கொள்வதையே அவர் பெரிதும் விரும்பினார். எனவே சென்னையில் 'ராம்லால் அன் கோ' என்ற பங்குத்தரகக் கம்பெனியை ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்தினார்.

பஞ்சு நூல் வணிகத்தில் ஜப்பான் முன்னேறிச் சென்று கொண்டிருந்த காலம் அது. எனவே ஒரு ஜப்பான் வணிக நிறுவனத்துடன் பெரும் அளவில் பஞ்சு நூல் வாங்குவதற்கான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார். சரக்கு இந்தியா வந்து சேர்வதற்கு முன்பே உலகச் சந்தையில் 'விலை வானமே எல்லை' என்ற ஆனபோது பம்பாய் வணிகருக்கு அதை விற்றார். அந்த வணிகர் பாக்கியைக் கொடுக்க முடியாத பொழுது தன்னுடைய நிறுவனங்களான 'ஜுபிடர் இன்சூரன்ஸ்' "ஜுபிடர் ஏர்வேஸை" அழகப்ப செட்டியாரிடம் ஒப்படைத்தார். இவ்வாறாக முன் அனுபவம் இல்லாத இத்துறைகளிலும் துணிச்சலுடன் இறங்கி அவைகளிலும் பொருள் ஈட்டினார். தொழிற்சாலைகளுக்கான வேதிப்பொருட்களை வாங்கி விற்பது, மருந்து வணிகம், விமானப் போக்குவரத்து, பயணிகள் தங்குவதற்கான உல்லாச விடுதிகள், பம்பாயில் 'ரிட்ஸ்' போன்ற பெரிய ஹோட்டல்கள் ஆகியவற்றில் எல்லாம் முதலீடு செய்தார். இவை அனைத்தையுமே அவருக்கு முன் அனுபவம் இல்லாத புதிய தொழில்கள் என்று கூறலாம். பல தொழில்களில் மகுடம் அணியாத மாமன்னனாக செல்வாக்குடன் திகழ்ந்த அவர் தொட்டதெல்லாம் பொன்னாக ஆனது. அவர் சென்ற இடமெல்லாம் உயர்ந்து நின்றார். விபரம் புரியாத ஆபத்து நிறைந்த முயற்சிகளில் இலக்கை அடைந்தார். அவருடைய தொழில் பட்டியல் மிக நீளமானது. இந்த விபரங்கள் எல்லாம் இத்துணை தொழில்களில் இறங்கித் தன்னுடைய இலக்கை அடைவது என்பது ஒருவருக்கு எப்படி முடியும் என்று நம்மை வியக்கும் படி செய்கிறது. உண்மையில் இவர் ஒரு மாமனிதரே!.

1946 வரை பொருள் ஈட்டுவதில் மும்முரமாக இருந்த அவர் 'ஒவ்வொரு நாட்டின் அடித்தளமும் இளைஞர்களுக்கான கல்வியாகும்' என்ற நம்பிக்கையை கொண்டவராக இருந்தார்.

இதை செயல்படுத்தும் விதமாக ஒரு நிகழ்வு நடந்தது. அன்றைய சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் ஏ.லட்சுமணசாமி முதலியார் 3 ஜூலை 1947 ல் அன்னிபெசன்ட் நூற்றாண்டு விழாவுக்குத் தலைமை தாங்கினார். அவர் பேசும்பொழுது கொடைப்பண்புள்ள செல்வந்தர்களும், தொழில் அதிபர்களும் மாநிலத்தின் கல்வி நிறுவனங்களுக்கான அவசியத் தேவையை நிறைவேற்றுவதற்கு உள்ளார்வத்துடன் கல்லூரிகளைத் தொடங்க முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கல்லூரிகள் இல்லாததால் ஏராளமான மாணவர்களுக்குக் கல்வி மறுக்கப்படுவதாகக் கூறி வருந்தினார். அவருடைய இந்த வேண்டுகோள் அவையோரில் ஒருவராக இருந்த 38 வயதே ஆன அழகப்ப செட்டியாரின் மனதை உருக்கியது. அவர் உடனே எழுந்து தன்னியல்புடன் அவர் பிறந்த இராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு கலைக்கல்லூரி ஆரம்பிப்பதாகத் தெரிவித்து 5 லட்சம் ரூபாய் நன்கொடை வழங்குவதாகவும் அவ்விடத்திலேயே அறிவித்தார். விளைவுகளைப் பற்றிச் சிந்திக்காது ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற திடீர் விருப்பத்தைத் தெரிவித்தது ஒரு திருப்புமுனையாக அமைந்து அவருடைய வாழ்வில் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. அது ”தொலையுணர்வா அல்லது விழித்தெழச் செய்யும் கனவா?” என்பதை நாம் அறியோம். இத்திருப்பு முனையை அவருடைய வாழ்வில் கல்விக்கான கட்டளை என்று கருதினார். மறுதினமே 4 ஜூலை கல்லூரிக்குப் பொருத்தமான இடமாகக் காரைக்குடியைத் தேர்ந்தெடுத்தார் கல்லூரியை ஆரம்பிப்பதற்கு 7 ஜூலையில் விண்ணப்பித்ததுடன் சென்னைப் பல்கலைக்கழக இணைப்புக்கான அனுமதியையும் பெற்றார். அறிவிக்கப்பட்ட தேதியிலிருந்து ஐந்து வாரங்களுக்குள் ரூபாய் 2400/- மாத வாடகையில் காரைக்குடி நகராட்சிக்குச் சொந்தமான காந்தி மாளிகை கட்டிடத்தில் 11 ஆகஸ்ட் 1947 இல் அன்றைய கல்வி அமைச்சர் டி.அவிநாசிலிங்கம் செட்டியார் கல்லூரியை திறந்து வைத்தார். அதிலிருந்து ஒரு வருடத்திற்குள் அதாவது ஜூலை 1 1948 இல் தற்போதுள்ள ஆயிரம் ஏக்கர் பரப்பளவில் அமைந்த வளாகத்தில் மாநில முதல்வர் ஓ.பி.ராமசாமி ரெட்டியாரால் கல்லூரிக்கான சொந்தக் கட்டிடங்கள் திறந்து வைக்கப்பட்டன. அவருடைய செயல் வேகம் supersonic aircraft க்குச் சமமானது. கலைக்கல்லூரியைத் தொடர்ந்து அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, அதற்கு அடித்தளமான அழகப்பா மாதிரிப்பள்ளி, பிறகு அழகப்பா பொறியியல் கல்லூரி, அழகப்பா பல் தொழிற் கல்லூரி, குழந்தைகளுக்கான மாண்டிசோரி பள்ளி, இசைப்பள்ளி ஆகிய அத்துனை கல்வி நிலையங்களையும் இடை நில்லாமல் நிறுவினார்.

அழகப்ப செட்டியார் தன்னுடைய வளாகத்தில் ஒரு ஆய்வு மையத்தை அமைக்க விரும்பினார். அதனால் கல்லூரிகளில் ஆய்வுக்கான வழி பிறக்கும் என்பதுடன் மற்ற நிறுவனங்கள் வளர்ச்சி அடைந்து ஒரு பல்கலைக்கழகமாகவும் மாறும் என்று நினைத்தார். 1947 இல் இந்திய சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியாவின் பிரதம மந்திரி பண்டிட் ஜவர்கலால் நேரு இந்தியாவை இருளிலிருந்து வெளிச்சத்திற்குக் கொண்டுவர பல்வேறு திட்டங்களைத் தீட்டினார். அதில் நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஆய்வு மையங்களை நிறுவுவதும் ஒன்றாகும். இதையறிந்த

செட்டியார் இதற்கான முயற்சிகளில் தீவிரமாக இறங்கினார். நள்ளிரவில் பிரதமரை அவருடைய இல்லத்தில் சந்தித்து ஆய்வு மையத்துக்கான 300 ஏக்கர் நிலமும் 15 லட்ச ரூபாயும் வழங்கினார். நாட்டின் எங்கோ ஒரு மூலையில் இருந்து தன் மக்களுக்காகத் தன் இடத்தையும் பொருளையும் கொடுக்கும் ஒரு எளிய மனிதரின் கொடையுள்ளம் நேருவை மிகவும் கவர்ந்தது. நேரு தன்னுடைய சகோதரி விஜயலட்சுமி பண்டிட்டை அழைத்து அவருக்கு செட்டியாரை ஒரு "சமதர்ம முதலாளி" என்று அறிமுகப்படுத்தினார். எண்ணற்ற இடர்பாடுகளைக் கடந்து காரைக்குடியில் செக்ரி (CECRI) பிரதமர் ஜவஹர்லால் நேருவால் அடிக்கல் நாட்டப்பட்டது. இதைத் திறந்து வைத்தவர் செட்டியாரின் ஆசிரியரும் நண்பரும் இந்திய குடியரசின் துணைத் தலைவருமான டாக்டர் எஸ்.ராதாகிருஷ்ணன். இன்றும் அழகப்பா கல்லூரி, அழகப்பா பல்கலைக்கழக ஆசிரியர்கள் செக்ரியில் ஆய்வு மேற்கொள்கின்றனர்.

வள்ளல் அவர்களின் தொலைநோக்குப் பார்வைக்கேற்ப 1976 இல் செக்ரி பணியாளர்கள், பொது மக்களின் குழந்தைகளுக்காக 'கேந்திரிய வித்யாலயா' வும் இங்கு ஆரம்பிக்கப்பட்டது. அழகப்ப செட்டியார் குழந்தைகளிடம் அளவற்ற பிரியம் கொண்டவர். வெளிநாடு சென்று திரும்பும் பொழுதெல்லாம் மாண்டிச்சோரி, உறவினர் குழந்தைகளுக்காக விளையாட்டுச் சாமான்கள், பரிசுப் பொருட்கள் வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பார். இன்று கேந்திரிய வித்யாலயாவில் ஆயிரக்கணக்கான மாணவர்கள் பயில்கின்றனர்.

அக்காலத்தில் உடற்கல்விக்கான கல்லூரி என்பது மிக அரிதாக இருந்தது. சென்னையில் ஒய்.எம்.சி.ஏ கல்லூரிக்குப் பிறகு காரைக்குடியில் தான் உடற்கல்விக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது. கல்லூரியைக் கட்டுவதற்குத் திட்டமிட்டு 27 செப்டம்பர் 1955இல் அதற்கான இணைப்புக்கு சென்னைப் பல்கலைக்கழகத்துக்கு விண்ணப்பித்தார். இந்த நடவடிக்கைகளுக்குப் பிறகு அவருடைய உடல்நிலை முன்பிருந்ததை விட மோசமானதால் படுத்த படுக்கையானார். மேலும் 30 நவம்பர் 1955இல் வீசிய கடுமையான புயல் கல்லூரிக் கட்டிடங்களுக்கு நிறைய சேதம் விளைவித்தது. உடல் வேதனை, மன உளைச்சலுடன் 14 மார்ச் 1956 இல் டெல்லியில் நடைபெற்ற அறிவியல், தொழில்நுட்பக் குழுவின் ஆட்சி மன்றக் கூட்டத்திற்கு அழகப்பா கல்வி நிறுவனங்களை ஒன்றிணைத்து மத்திய பல்கலைக்கழகமாக ஆக்குவது பற்றி விவாதிக்கப் புறப்பட்டுச் சென்றார். துரதிஷ்டவசமாக அவருக்கு அங்கு விபத்து ஏற்பட்டு இடது கால் முறிந்தது. சென்னைக்குத் தூக்குப் படுக்கையில் (Stretcher) கொண்டுவரப்பட்டார். இதனால் உடற்கல்லூரித் தொடக்க விழாவில் அவருடைய வரவேற்புரையை அவருடைய புதல்வி உமையாள் ராமநாதன் வாசித்தார். அதில் செட்டியார் தெரிவித்திருந்தது: 'விளையாட்டு ஏற்ற தாழ்வுகளைச் சமன் செய்து நல்லெண்ணத்தையும் சகோதரத்துவத்தையும் ஏற்படுத்துகிறது. பிளாட்டோ (Plato) ஒரு தத்துவ ஞானி. ஒரு தத்துவ ஞானி தான் 'யுடோப்பியா' என்ற தன்னுடைய கற்பனை நாட்டின் தலைவனாக இருக்க வேண்டும் என்று அவன் விரும்பினான்.

விளையாட்டு வீரன் நாட்டின் தலைவனாக இருக்க வேண்டும் என்று நான் சொல்லலாமா? இதுபோன்ற மகிழ்ச்சியான நிகழ்வு ஒரு காலத்தில் வரும் என்று உறுதிபடக் கூறுகிறேன். விளையாட்டுக் கல்வியின் முக்கியத்துவம் பற்றி இதற்கு மேல் நான் வலியுறுத்த வேண்டியது இல்லை. எனக்கு எது நடந்தாலும் பரவாயில்லை இந்த விளையாட்டுக் கல்விக் கல்லூரியும் பெருமை பெற்ற தலைவர்களாலும் அறிஞர்களாலும் ஆரம்பித்து வைக்கப்பட்ட இந்த வளாகத்தில் உள்ள நிறுவனங்களும் இணைந்து விரைவில் ஒரு முழு வளர்ச்சியடைந்த பல்கலைக்கழகமாக வர வேண்டும் என்பது என்னுடைய பிரார்த்தனை”.

அழகப்ப செட்டியார் விளையாட்டில் மிகுந்த ஈடுபாடு உடையவர். விளையாட்டையும் விளையாட்டு வீரர்களையும் நேசித்தார். இது பல நேரங்களில் தெரியவந்துள்ளது. அவர் ஒரு முறை கூறினார் நான் உடல் ரீதியாக விளையாட்டில் பங்கு பெற முடியாதவன். ஆனால் விளையாட்டை நேசிப்பவன்'' எப்பொழுதும் குழு உணர்வை (Team spirit) வலியுறுத்தினார். ஊரில் இருக்கும் பொழுது காலை நேரத்தில் இளம் மாணவர்கள் பயிற்சி பெறுவதைக் கவனித்துக் கொண்டு உடற்கல்விக் கல்லூரியைச் சுற்றி நடை பயில்வார். மாணவர்களையும் வீரர்களையும் அன்புடன் உற்சாகப்படுத்துவார். காரைக்குடிக்கு வரும் பொழுதெல்லாம் மாணவர்களுடன் அவர் சேர்ந்து சாப்பிடுவார். எனவே மாணவர்கள் அவருடைய வருகையையும் தோழமையையும் நேசித்தனர். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விடுதியின் சமையலறையில் இருந்து சாப்பாடு தருவிப்பார். இதுவொரு தரக் கட்டுப்பாட்டு நடவடிக்கையாகும். அவர் வாழ்வில் திரும்பத் திரும்ப எப்பொழுதும் மாணவர்களுக்கு மிகச்சிறந்தது கிடைக்க வேண்டும் என்று விரும்பியதுடன் அவர்களுடைய மகிழ்ச்சியே தனக்கு எல்லாவிதமான மகிழ்ச்சியும் ஆகும் என்று கருதினார்.

ஒரு மத்தியப் பல்கலைக்கழகம் நிறுவப்பட வேண்டும் என்று அவர் விரும்பினார். அவருடைய உடல்நலம் குன்றிப் படுக்கையில் வீழ்ந்ததால் மத்தியப் பல்கலைக்கழகத்திற்கான முயற்சிகளை அவரால் மேற்கொள்ள இயலவில்லை. அந்த நேரத்தில் படுக்கையில் இருந்தபடியே மாநிலப் பல்கலைக்கழகம் கொண்டு வருவதற்கான நடவடிக்கைகளைத் தொடர்ந்தார். இந்த இலக்கை எட்டுவதற்குள் அவர் மரணம் அடைந்தார். ஆனால் அவருடைய தவப்புதல்வி உமையாள் ராமநாதனின் பெரு முயற்சியால் தமிழக அரசு அழகப்பா பல்கலைக்கழகத்தை 1985இல் நிறுவியது. இதுவே வருங்காலத்தில் மத்தியப் பல்கலைக்கழகமாக உயர்வதற்கு வாய்ப்பு உண்டு. மருத்துவக் கல்லூரி என்பது அவருடைய மற்றொரு கனவாகும். அதை நிறைவேற்றுவதற்கு அவர் எடுத்த விடாப்பிடியான முயற்சியின் பயனாக இந்திய அரசின் மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் ராஜ்குமாரி அமிர்த கௌர் 3 ஆகஸ்ட் 1954இல் உமையாள் மருத்துவமனைக்கு அடிக்கல் நாட்டினார். அதன் தொடர்ச்சியாக 30 ஆகஸ்ட் 1954இல் காரைக்குடியில் மருத்துவக் கல்லூரி நிறுவுவதற்கு சென்னை அரசாங்கத்துக்கு எழுதினார். டாக்டர் லட்சுமணசுவாமி முதலியார் தலைமையில் அரசு ‘காரைக்குடி மருத்துவக் கல்லூரி குழு’ ஒன்றை

அமைத்தது. அந்தக் குழுவும் மருத்துவக் கல்லூரியை ஆரம்பிப்பதற்கு இந்திய அரசுக்குச் சிபாரிசு செய்தது. இருப்பினும் திட்டக் குழுவால் விதிக்கப்பட்ட நிதிக் கட்டுப்பாடுகளால் மத்திய அரசும் மாநில அரசும் மருத்துவமனை அமைவதற்கான பங்களிப்புச் செய்ய முடியவில்லை. செட்டியாரும் பொருளாதார நெருக்கடியில் இருந்தார். தேவைப்பட்ட மிகையான நிதியை அவரால் அளிக்க முடியவில்லை. அவரை அழுத்திய பொருளாதாரச் சுமையிலிருந்து அவரால் மீள முடியவில்லை. இப்பகுதியில் பொது நலனுக்காக தன் சொத்து முழுவதையும் இழந்த ஒருவருக்கு உதவ எவரும் முன்வரவில்லை.

ஒளி வீசும் கல்வி நிறுவனங்களை விரிவு படுத்துவதில் மிகுந்த விருப்பம் இருந்ததால் வணிகத்தில் அவருடைய ஆர்வம் சுருங்கியது. புதிது புதிதாக நிறுவனங்களைத் தோற்றுவிப்பதற்கும் தகுதியும் திறமையும் வாய்ந்த ஆசிரியர்களைப் பல இடங்களில் இருந்து தங்கும் இட வசதிகளுடன் அதிக சம்பளத்தில் பணி அமர்த்துவதிலும், கல்லூரிகளுக்கு தேவையான உபகரணங்கள், புத்தகங்கள் வாங்குவதிலும் பெரிய அளவில் முதலீடு செய்ய வேண்டி இருந்தது. இதனால் மிகுந்த ஆர்வத்துடன் தொடங்கிய தொழில் நிறுவனங்கள் காபித் தோட்டம், ரப்பர் தோட்டம் ஆகியவற்றை ஒவ்வொன்றாகக் குறைந்த விலைக்கு விற்க வேண்டியதாயிற்று. சில நேரங்களில் நண்பர்களிடமும் தன் இனத்தைச் சேராதவர்களிடமும் இருந்து கடன் வாங்கினார். அவரைப் பொறுத்தவரை பொருளாதார ஏற்றதாழ்வுகளைச் சமமாகவே மதித்தார். கல்விக்குக் கொடுத்த பொருள் பற்று கல்வி தந்த புகழ் வரவு என்று நம்பினார்.

இந்தச் சூழலிலும் கூட 1954இல் இரண்டு பெண்கள் டாக்டர் செட்டியாரை அவருடைய இல்லத்தில் சந்தித்து, பின் தங்கிய இப்பகுதியில் மகளிர்க்கான கல்லூரி இல்லை என்று தெரிவித்து வருந்தினர். அவருடைய செல்வ வளம் குன்றியிருந்த காலம் அது. இருப்பினும் அதற்கான செயல்களைத் தொடங்கினார். அதில் வெற்றியும் பெற்றார். இத்திட்டத்துக்கு வேண்டிய பணம் எங்கிருந்து கிடைக்கும் என்று அவருக்கு நெருக்கமானவர்கள் அதிசயித்தனர். அவருடைய அலுவலர்களை மிக்க ஆவலுடன் காத்திருக்கும் படி செய்து கல்லூரித் திறப்பதற்கு சில தினங்கள் முன்பு கோட்டையூரில் அரண்மனை போன்ற அவருடைய இல்லக் கட்டிடத்தில் மகளிர் கல்லூரி இயங்கும் என்று அவர்களிடம் தெரிவித்தார். மேலும் தனக்கு வேண்டியது ஒரு படுக்கை மட்டுமே என்றும் வீடல்ல என்றும் குறிப்பிட்டார். கோட்டையூரில் அவருடைய இருப்பிடம் 'ஸ்ரீநிவாஸ்' அழகப்பா மகளிர் கல்லூரியாக மாறி ஜுன் 1954 இல் இருந்து செயல்பட ஆரம்பித்தது. பின்னாளில் இக்கல்லூரி அழகப்பா கலைக்கல்லூரியுடன் இணைக்கப்பட்டது. உண்மையான கொடைத்தன்மை என்பது உலக இன்பங்களை துறப்பது மட்டுமன்று அவசியத் தேவைகளையும் கூட என்று நிரூபிக்கும் வகையில் பவநகர் கிரிக்கெட் விளையாட்டு அரங்கத்தில் உள்ள அறைக்குக் குடிபெயர்ந்து 'குடியிருந்த வீடும் கொடுத்த விழுத்தெய்வம்' ஆனார்.

ஒரு நாள் மாலை தன்னுடைய அலுவலகத்தில் இருந்து வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்த பொழுது ஒரு பெரியவர் தன்னுடைய மகளின் திருமணத்துக்குப் பண உதவியை வேண்டினார். உடனே தன்னுடைய செயலரை அழைத்து ரூபாய் ஐயாயிரத்துக்குக் காசோலை எழுதி வரும்படி பணித்தார். கையெழுத்திட்டு அக்காசோலையை அவரிடம் கொடுக்கும் பொழுது 'நாளை காலை வங்கி திறந்தவுடன் காசோலையை மாற்றிக் கொள்ளுங்கள் சில நேரங்களில் என்னுடைய கணக்கில் பணம் இருக்காது' என்னவொரு தர்ம சிந்தனை!. தான் செய்யும் தர்மத்தின் பயன் பிறருக்குக் கிடைக்க வேண்டும் என்பது அவருடைய கொள்கை.

டாக்டர் செட்டியாருக்குத் தெரியாத துறைகளே இல்லை என்று சொல்லலாம். ஒரு முறை பத்திரிக்கையாளர் மாநாட்டில் தலைமை உரையாற்றும் பொழுது அவர் இவ்வாறு குறிப்பிட்டார். 'நிருபர் முதல் ஆசிரியர் வரை அறநெறிக் கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டும். சோதனை நேரத்தில் சமுதாய நலனுக்காக அவர்களுடைய கடமையைத் திறம்பட ஆற்ற வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இலாப நோக்கு எதுவும் இல்லாமல் குறிக்கோளுடன் கூடிய சேவையை அளிக்கும் தொழில் தங்களுடையது. அவருடைய உறவினர் எஸ்.ஏபி நடத்திய குமுதம் இதழின் கௌரவ ஆசிரியராகவும் இருந்தார். அழகப்ப செட்டியாருடைய தொழில் பற்று, இலக்கியப் பற்று கருத்துகளை நன்கு வெளிப்படுத்துவதில் ஆர்வம் இவையெல்லாம் இதழியலை ரசிக்கத் தூண்டின. அக்காலத்தில் செட்டியார்கள் இடையே பாரம்பரியமாக நடத்தி வந்த வட்டித் தொழிலில் புதல்வர்களை ஈடுபடுத்துவதற்குப் பதிலாக அவர்களுக்கு உயர்தரமான கல்வி வழங்க வேண்டும் என்று முடிவெடுத்ததற்கு அவருடைய இலக்கிய ஆர்வம் ஒரு சிறந்த காரணமாகும்.

பயணத்தின் போது புத்தகங்கள் தான் அவருக்கு உற்ற தோழர்கள். இரயிலில் அல்லது விமானத்தில் பயணம் செய்யும்போது ஒரு புத்தகத்தைப் படித்து முடித்து விடுவார். 'டாக்டர் அழகப்ப கல்வி அறக்கட்டளை' நிர்வாகி டி.வி.எஸ்.மணியன் அழகப்ப செட்டியாரின் புத்தகம் படிக்கும் வேகத்தைப் பார்த்து வியந்திருக்கிறார். அவர் படிக்கும் புத்தகங்களில் வாக்கியங்களை பென்சிலால் அடிக்கோடிட்டு அவருக்குப் பிடித்த வரிகளை நினைவில் நிறுத்திக் கொண்டு தகுந்த நேரங்களில் பேசும்பொழுதோ அல்லது கடிதம் எழுதும் போதோ அதைப் பயன்படுத்திவிடுவார். புத்தகங்களை வாங்கியவுடன் முன்பக்கத்தில் ஆர்.எம். அழகப்பன் என்று கையெழுத்திட்டு அப்புத்தகம் வாங்கப்பட்ட தேதியையும் அதில் எழுதி விடுவார். இதுபோன்ற ஏராளமான புத்தகங்கள் அழகப்பா கலைக்கல்லூரி நூலகத்துக்கு நன்கொடையாக வழங்கப்பட்டன. கர்நாடக இசை கேட்பதிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார்.

விருந்தோம்பல் டாக்டர் செட்டியாருடைய மிகச்சிறந்த பண்பாகும். வீட்டிற்கு வரும் விருந்தினர்களை அன்புடன் வரவேற்று உபசரிப்பார். அவர்கள் விடை பெற்றுச் செல்லும் போது அவர்களை வீட்டு வாசல் வரை சென்று வழியனுப்பி வைப்பார்.

தன்னுடைய வாழ்க்கையைப் பற்றி அவர் கூறியது. ‘எதிர்பாராத விதமாகக் கல்லூரி ஆரம்பிக்கும் உறுதியான முடிவை எடுத்ததற்காக கடவுளுக்கு எப்படி நன்றி செலுத்த வேண்டும் என்று தெரியவில்லை. கல்வியின் பக்கம் என் கவனம் திரும்பாமல் இருந்தால் என்னுடைய பணத்தையும் நேரத்தையும் எப்படி செலவழித்து இருப்பேன் என்பதை நினைக்கவே பயமாக இருக்கிறது. என்னுடைய வாழ்க்கை ஒரு பெருமதியான வாழ்க்கை என்பதை அது நிரூபிக்கிறது. நல்ல ஆடைகளை, உணவை, புத்தகங்களை நேசித்தார். ஆனால் தனக்காக ஒரு 100 ரூபாய் செலவழிக்கச் சம்மதிக்காத நேரமும் வந்தது. ஏனெனில் அந்த 100 ரூபாயை ஒரு சிறிய உதவித் தொகையாக வழங்கலாம். அவர் அள்ளிக் கொடுத்தது அவருடைய வருமானத்தில் மிகையாக இருந்ததை அல்ல. வருமானம் முழுவதையும் கொடுத்து தன்னையும் கொடுத்தார். அவருக்கு மனநிறைவை தந்தது அவருடைய முதலீட்டுக்கு மாணவ மாணவியர் பெற்ற இலாபப் பங்கு - ஆயிரக்கணக்கான மாணவ மாணவியர் பெற்ற கல்வியறிவு மட்டுமே.

அவருடைய வாழ்க்கை துன்பமும் துயரமும் நிறைந்த ஒரு நெடுங்கதை. அவருடைய இறுதி நாட்களில் அவர் கூறியது ‘என்னுடைய தோல் நோய்க்கும் எலும்பு நோய்க்கும் இடையில் எனக்கு எதிர்காலம் ஒன்று இருக்கிறதா என்ற சந்தேகம் வந்துவிட்டது. காரைக்குடியில் பெருமையுடன் அவர் ஆரம்பித்த கல்லூரிகள் வளாகத்துக்கு வரும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அறிவொளி வீசும் சிறந்த கல்வி மையங்களாக விளங்கி அருமையான அனுபவத்தைக் கொடுக்க வேண்டும்” என்பதுதான் அவருடைய பிரார்த்தனையும் நம்பிக்கையுமாக இருந்தது.

துணிவு, பாதிப்பில் பற்றின்மை என்ற இரண்டும் டாக்டர் செட்டியாரின் குணாதிசயங்கள் என்று கூறப்படுகிறது. நோய் விரட்டிய பொழுது தன்னுடைய இலக்கை நோக்கி அவர் விரைந்தார். மனம் உயரப் பறந்தது. உடல் அவரைக் கீழே தள்ளியது. இருப்பினும் அவருடைய அசைக்க முடியாத இறை நம்பிக்கை அவருக்கு எதையும் தாங்கும் இதயத்தைக் கொடுத்தது. துன்பத்தைச் துச்சமாக கருதுவது தான் வாழும் கலை. இக்கலையில் டாக்டர் செட்டியார் கைதேர்ந்தவர். அவருக்கு நேர்ந்த இரண்டு விபத்துகளால் ஒரு கண் பார்வை போயிற்று. கால் எலும்பு முறிந்தது. வாழ்க்கை முழுதும் வேதனையைச் சகித்துக் கொள்ள வேண்டியிருந்தது. அந்த நேரங்களில் எல்லாம் மனம் தளராமல் உறுதியுடன் இருந்தார். எஸ் ஒய் கிருஷ்ணசாமி அவரை ஒரு கண்ணில் கட்டுடன் பார்த்ததைச் சொல்கிறார் ‘கண்ணில் வலி அதிகமாக இருக்குமே’ என்று அவர் இரக்கத்துடன் கேட்ட பொழுது ‘ஆம் ஆனால் அதில் ஒரு நன்மை இருக்கிறது இந்த உலகத்தில் பாதிக் கேடுகளை மட்டுமே நான் பார்க்க முடியும்’ துன்பத்திலும் கூட அவருடைய நகைச்சுவை உணர்வு ரசிக்கத்தக்கது.

அவருடைய வாழ்வின் இறுதியில் சில வருடங்கள் பவநகர் விளையாட்டு அரங்கின் படிகளில் அமர்ந்து அவர் வாங்கிக் கொடுத்த சைக்கிள்களில் சிறு குழந்தைகள் சுற்றி

வருவதைப் பார்க்க மிகவும் விரும்பினார். விடுதியில் இருந்து வரும் உணவை தவிர வேறு எந்த உணவையும் விரும்பவில்லை. இந்த விளையாட்டு அரங்கில் இருந்து ஆற்றிய சொற்பொழிவைத் தவிர வேறு எந்தச் சொற்பொழிவையும் விரும்பவில்லை.

வணிகத்தில் கொடி கட்டிப் பறந்து கோடி கோடியாகச் சம்பாதித்ததை எல்லாம் கல்விக் கடவுளின் காலடியில் கொட்டினார். தனக்கென்று வைத்துக் கொள்ளவில்லையே என்று ஒருபோதும் வருந்தியதில்லை. வாழ்க்கையின் சிகரத்தைத் தொட்ட அவருக்கு இறுதி நாட்களில் சிரமம் ஏற்பட்ட பொழுது அதை இறைவனுடைய கட்டளை என்று ஏற்றுக்கொண்டு மரணத்தை விருப்பத்துடன் தழுவினார். இப்படி ஒரு துணிச்சல் யாருக்கு வரும்? அவருடைய வாழ்க்கை வரலாறு இன்றைய இளைஞர்களுக்கு மட்டுமல்ல பெரியவர்களுக்கும் ஒரு சிறந்த வழிகாட்டி! அவருடைய ஆன்மா தர்மத்திலேயே நிலைத்து நின்றது.

**பயன்பட்ட நூல்:**

நூல் - அழகப்பா என்னும் அழகிய மனம்
பதிப்பாளர்கள் -டாக்டர் அழகப்ப செட்டியார் கல்வி அறக்கட்டளை மற்றும் அசோகா தர்ம அறக்கட்டளை, முதல் பதிப்பு - ஏப்ரல் 2018
ஆசிரியர் - டாக்டர் ராமநாதன் வைரவன்.

******************************************



# பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் சிற்றிலக்கிய ஆய்வுகள்
## ஒரு கண்ணோட்டம்

முனைவர் எம்.எஸ். ஸ்ரீலக்ஷ்மி
மேனாள் விரிவுரையாளர்,
சிங்கப்பூர் சமூக அறிவியல் பல்கலைக்கழகம்

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை :**

தமிழ் அறிஞரும் பெரும் பேராசிரியருமான முனைவர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் நூற்று முப்பத்தைந்துக்கும் மேலான நூல்களை எழுதியவர். நாட்டுடைமை ஆக்கப்பட்ட நூல்களை எழுதிய நற்றமிழ் அறிஞர். பழந்தமிழ் இலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள், நாவல், சிறுகதை, கவிதை எனப் பல்வேறு வகைகளாகக் கிளைத்து வளர்ந்த தமிழ்இலக்கியப்பேரால மரத்தின் விழுதுகளின் மீது தம் ஆய்வுப் பார்வையைப் படரவிட்டவர். காலத்தின் தேவைக்கேற்ப அறிவியல் நூல்களைத் தமிழிலே எழுதி அறிவியல் தமிழ்வளர்ச்சிக்கும் அரும்பணி ஆற்றியவர். தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றத் தமிழில் இளங்கலைப்பட்டம் பெற்றிருக்கவேண்டும் என்ற நிலையை மாற்றிய பெருமகனார் இவர் ஆவார். வேதியியலில் இளமறிவியல் பட்டம் பெற்றிருந்தாலும் தமிழில் முதுகலை, முனைவர் ஆகியபட்டங்களைப் பெற்றுப் பெரும்பேராசிரியர்களுக்கு இணையாகத் தமிழ்ப்புலமை பெற்றிருந்தவர். இவர் காட்டிய வழியில் அறிவியல் படித்தபலரும் (இக்கட்டுரையாளர் உட்பட) தமிழ்க்காதல் மீதூரப் பெற்றுத் தமிழ் ஆராய்ச்சியில் சளைக்காது ஈடுபட்டுத தமிழ்ப்பணி ஆற்றி வந்துள்ளனர். எனவே இச்சான்றோர் வழிகாட்டியாய் விளங்கிய தலைமகன் எனலாம். மொழிபெயர்ப்புப் பணியிலும் முனைப்புடன் தொண்டாற்றியவர். கல்லூரியிலும் பல்கலைக்கழகங்களிலும் பணியாற்றி ஆசிரியப் பணிக்கு அணிசேர்த்தவர்.இவருக்கு வழங்கப்பட்ட விருதுகளும் இவர் எழுதிய நூல்களும் இவரின் பல்திறப்புலமைக்குக் கட்டியம் கூறுவனவாகும். இவரின் ஆய்வுப்பார்வைக்குப் பல்வேறு தமிழ் இலக்கியங்கள் உள்ளானாலும் இக்கட்டுரை ந. சுப்புரெட்டியாரின் சிற்றிலக்கிய ஆய்வுகள் குறித்தே அமைகிறது.

**சிற்றிலக்கிய ஆய்வுக்குக் கால்கோள் :**

“தொல்காப்பியர் காலத்தில் இடம்பெற்ற சிற்றிலக்கிய வித்து சங்ககாலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு ,ஐந்தாம் நூற்றாண்டில் அந்தாதியாகத் துளிர்த்து, ஏழாம் நூற்றாண்டில் கோவையாகிச் செடியாகி எட்டாம் நூற்றாண்டில் உலாவாக மரமாகி, ஒன்பதாம் நூற்றாண்டில் கலம்பகமாகக் கிளைத்து, பதினோராம் நூற்றாண்டில் சதகமாகவும், பரணியாகவும் அரும்பி, பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிள்ளைத்தமிழாக மொட்டாகிப் பதினான்காம் நூற்றாண்டில்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

பள்ளாகக் காய்த்துப் பதினெட்டாம் நூற்றாண்டில் குறவஞ்சியாகக் கனிந்தது" எனக் காலவாரியாகச் சிற்றிலக்கியங்கள் தோன்றி வளர்ந்ததை விவரிக்கிறார் ந.வீ.செயராமன்" (அமுதம்தமிழ் இணையத்தளத்தில் மேற்கோள்காட்டப்பட்டது). எவ்வகை இலக்கியமாயினும் அதைப் பற்றிய ஆய்வுகள் வெளிவருவது அவ்விலக்கிய மாண்பினை மக்கள் அறியச் செய்யும் முயற்சி என்பதை மறுப்பதற்கில்லை. அவ்வகையில் சிற்றிலக்கியங்கள் குறித்த எழுச்சியை ஆய்வு மாநாடுகளை நடத்தியதன் மூலம் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் தமிழகத்தில் ஏற்படுத்தியது. மாநாட்டுச் சொற்பொழிவுகளை நூல்களாக்கி வெளியிட்டுச் சிற்றிலக்கிய ஆய்வுப்பணிக்கு அன்பர் பலரை ஆளாக்கியது.

சென்னையில் 19.01.1958 இல் முதல்மாநாட்டை முத்தமிழ் வித்தகர் பண்டித, வித்வான் லெ.ப.கரு இராமனாதன் செட்டியார் தலைமையில் உலா, கலம்பம், தூது ஆகிய சிற்றிலக்கிய வகைகள் பற்றி நடத்தியது. இம்மாநாட்டில் திருக்கைலாய ஞானஉலா, திருவாரூர் உலா குறித்து புலவர் ந.ரா முருகவேள்; திருப்பூவணநாதர் உலா, மதுரைச்சொக்கநாதர் உலா குறித்து வித்வான் செ.வேங்கடராமச்செட்டியார்; திருவானைக்கா உலா, ஏகாம்பரநாதர் உலா குறித்து இராஜ.சாம்பசிவசர்மா; திருக்காளத்திநாதர் உலா, திருக்கழுக்குன்றத்து உலா பற்றி வித்வான்பாலூர் கண்ணப்ப முதலியார்; மதுரைக்கலம்பகம் , அழகர்கலம்பகம் பற்றி வித்வான்மே.வீ .வேணுகோபாலப்பிள்ளை; திருவருணைக்கலம்பகம், திருவெங்கைக்கலம்பகம் பற்றி வித்வான் ஆ.சிவலிங்கனார்; கச்சிக்கலம்பகம், திருப்பாதிரிப்புலியூர்க்கலம்பகம் பற்றி வித்வான் .வே.சிவசுப்ரமணியன்; தமிழ்விடுதூது வண்டுவிடுதூது பற்றி வித்வான் சொ.சிங்காரவேலன் ஆகிய பதின்மரால் சொற்பொழிவுகள் ஆற்றப்பட்டன..

இரண்டாவதுமாநாடு திருநெல்வேலியில் அ.மு.பரமசிவானந்தம் அவர்கள் தலைமையில் 19.04.1959 இல் நடத்தப்பட்டது. பதினாறு பிள்ளைத்தமிழ் நூல்கள் குறித்து எண்மர் ஆற்றிய சொற்பொழிவுகள் இரண்டாம் மாநாட்டில் நூலாகத் தொகுக்கப்பட்டது. மூன்றாவது சிற்றிலக்கியமாநாடு 13.03.1960 இல் திருநெல்வேலியில் நடத்தப்பட்டது. இம்மாநாட்டில் பரணி, பள்ளு குறவஞ்சி எனச் முத்திறச் சிற்றிலக்கியங்கள் குறித்த பதின்மரின் சொற்பொழிவுகள் சி.இலக்குவனார் அவர்கள் தலைமையில் நிகழ்த்தப்பட்டன.

நான்காவது சிற்றிலக்கிய மாநாடு திருநெல்வேலியில் 30.04.1961 இல் மூதறிஞர் செம்மல் வ.சுப. மாணிக்கம் அவர்கள் தலைமையில் திருச்சிற்றம்பலக்கோவை, பாண்டிக்கோவை, திருவாரூர்க்கோவை, திருவெங்கைக்கோவை, மாறன்கோவை, குளத்தூர்க்கோவை, குலோத்துங்கசோழன்கோவை, ஒருதுறைக்கோவை, தஞ்சைவாணன்கோவை, அம்பிகாபதிக்கோவை ஆகிய பத்து இலக்கியங்களைப் பற்றிய சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பட்டன. தனிநபர்முயற்சி

என்று சொல்லத்தக்க வகையில் சிற்றிலக்கியங்கள் குறித்த ஆய்வுகள் பல்கலைக்கழக முனைவர்பட்டங்களுக்காக மேற்கொள்ளப்பட்டுச் சிற்றிலக்கிய ஆய்வுகள் பல்கிப் பெருகியுள்ளன.

**கலிங்கத்துப்பரணி ஆய்வின் முன்னோடி- மு.இராகவையங்கார் :**

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சிற்றிலக்கிய மாநாடு நடத்துவதற்கு முன்னரே தனிநபர்கள் பலரும் சிற்றிலக்கியங்களில் ஆய்வுச்சிந்தனை கொண்டோராகத் திகழ்ந்துள்ளனர். உரையாசிரியராக விளங்கிய வை.மு. சடகோபராமானுஜாச்சாரியார் கலிங்கத்துப்பரணியின் இராசபாரம்பரியம் என்னும் பகுதிக்கு ஆய்வுக்குறிப்புகளுடன் உரைகண்டுள்ளார் என்பது இவண் நினையத்தக்க செய்தி. இவரை அடுத்துக் கலிங்கத்துப்பரணி ஆய்வாளர்களில் மிகமிக முக்கியமானவர் மு.இராகவையங்கார். ஆய்வுநேயம் செறிந்த இவ்வறிஞர் எழுதிய "கலிங்கத்துப்பரணிக்குறிப்புகள்"; "கருணாகரத்தொண்டைமான்" என்னும் இருகட்டுரைகள் மதுரை நான்காம் தமிழ்ச்சங்கப் பத்திரிகையான செந்தமிழில் வெளிவந்துள்ளன. பழம்பெரும் ஆராய்ச்சி அறிஞரான இவர் செந்தமிழ் பத்திரிகையின் துணைஆசிரியராகப் பணிபுரிந்தவர். இவர் எழுதிய கட்டுரைகளில் முக்கியமான முப்பத்தைந்து கட்டுரைகளைத் தொகுத்துத் தம் தந்தையின அறுபதாம் ஆண்டு மணிவிழாவின்போது ஆராய்ச்சித்தொகுதி ஞாபகப்பிரசுரமாக, முதல்பதிப்பாக 1938இல் இவருடைய மைந்தர்கள் வெளியிட்டனர். இக்கட்டுரைகள் நூலாகத் தொகுக்கப்பட்டு மீள்பிரசுரமாகப் பூம்புகார் பிரசுரத்தினரால் 2011ஆம் ஆண்டு வெளியானது. எனவே கிடைத்துள்ள தகவல்களின்படி கலிங்கத்துப்பரணி ஆய்வின் முன்னோடியாக, முதல்வராக மு.இராகவையங்கார் அவர்களைக் குறிப்பிடுவது தவறாகாது.

**கலிங்கத்துப்பரணி ஆய்வுநூல் முன்னோடி ந.சுப்புரெட்டியார்:**

மூன்றாவது மாநாட்டில் (1960) திருவாட்டி இரா.சாரதாம்பாள் என்பவர் கலிங்கத்துப்பரணி பற்றிய சொற்பொழிவு ஆற்றினார். இந்த ஆய்விற்கு முன்னதாகவே பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கலிங்கத்துப்பரணி பற்றிய முழுமையான ஆய்வைச் செய்துள்ளார். கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் இவருடைய நூல் காரைக்குடி செல்வி பதிப்பகத்தாரால் 1957 இல் வெளியிடப்பட்டுள்ளது. பின்னர் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் கலிங்கத்துப்பரணி பற்றி இவர் ஆற்றிய அறக்கட்டளைச் சொற்பொழிவு 1972இல் பரணிப்பொழிவுகள் என்னும் பெயரில் நூலுருப் பெற்றுள்ளது. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் நூல் ஆய்வு அடிப்படையில் எழுதப்பட்ட, காலத்தால் முற்பட்ட நூலாகப் பின்னாளில் வெளிவந்த ஆய்வுகளுக்கு முன்னோடியாகத் திகழும் தன்மை கொண்டது. பரணிப்பொழிவுகள் ஆய்வுக்கண்ணோட்டத்துடன் அமைந்த கருத்துகளைச் சொற்பொழிவுப் பாணியில் சொல்கிறது.

**‘கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி’ குறித்த திறனாய்வு :**

மூலநூலைத் திறனாய்வு செய்வதற்கும் திறனாய்வுநூலைத் திறனாய்வு செய்வதற்கும் சிற்சில வேறுபாடுகள் உள்ளன. பல்வேறு ஆய்வியல் அணுகுமுறைகளைப் பயன்படுத்தி ஆய்வாளர் மூலநூலை ஆராய்ச்சி செய்து ஆய்வுநூலை எழுதியிருப்பார். அவர் எங்ஙனம் அந்த ஆய்வியல் அணுகுமுறைகளைப் பயன்படுத்தி உள்ளார்? அவர்தன் காலத்துக்கு முந்தைய ஆய்வுகளிளிருந்து எவ்வாறு வேறுபட்டுள்ளார் என்பதை ஆய்வுநூலாசிரியர் குறிப்பிடாதபட்சத்தில் அந்த வேறுபாட்டைச் சுட்டிக் காட்டவேண்டிய பொறுப்பு ஆய்வுநூலை ஆய்வு செய்பவர்களுக்கு உண்டு. அதுபோல ஆய்வுநூல் ஆசிரியர் சொல்லாமல் விடுத்த செய்திகளைச் சொல்ல வேண்டிய கடப்பாடும் உண்டு. மொத்தத்தில் ஆய்வுநூலையோ அல்லது அந்த ஆய்வுநூலை எழுதிய ஆய்வாளர் குறித்தோ நிறைகுறை கூறவேண்டிய சூழலும் ஏற்படலாம். இந்த அடிப்படையில் ந. சுப்புரெட்டியார் அவர்களின் ஆய்வுநூல் பற்றிய பல்வேறுபார்வைகளின் விளைவாக இக்கட்டுரை அமைகிறது. ஐம்பதுகளில் நூலாக வெளிவந்த ஓர்ஆய்வுநூலை அறுபதுஆண்டுகள் கழித்துத் திறனாய்வு செய்வதன்மூலம் காலச்சூழல், ஆய்வுவளர்ச்சி, புதுமையான கருத்துகள் போன்ற பல அம்சங்களில் சிந்திக்கும்வாய்ப்பு பெருகி உள்ளதை எளிதில் மறுத்துவிட முடியாது.

**ரெட்டியாரும் ஆய்வியல் அணுகுமுறைகளும்:**

ஒரு திறனாய்வாளன் ஒரே அணுகுமுறையைக் கொண்டு ஆய்வுசெய்வது சலிப்பூட்டுவது மட்டுமின்றி அவனைக ˙கட்டுப்படுத்துவதும் ஆகும் என்பது வெய்னர்பூத் ( தி .சு.நடராசன், ப .12) என்பாரின் கருத்தாகும். திறனாய்வு செய்வதில் பன்முகவியம் என்னும் கொள்கை இருப்பதன் அவசியத்தை வெய்னர் வலியுறுத்துகிறார். குறிப்பிட்ட இலக்கியத்தைத் திறனாய்வு செய்யும்போது பல அணுகுமுறைகளை அவ்விலக்கியத்தின் பலவேறு பண்புகளுக்கும் பொருத்தமுற இணைத்து அவற்றின் தனித்துவம் சிதைந்து சிடாமல் செய்யும் பன்முகவியத் திறனாய்வினை சுப்புரெட்டியார் மேற்கொண்டு கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் நூலை எழுதியுள்ளார்.

**விளக்கமுறைத்திறனாய்வும் ரெட்டியாரும்:**

கலைஞன், சுவைஞன் (வாசகன்) என்னும் இருவருக்கிடையே நிகழும் தகவல் சார்ந்த செயல்பாடே இலக்கியம் என்னும் கலைப்படைப்பாகும். கலைஞன் இலக்கியத்தைக் குறியீடு அல்லது படிமமாக, உருவகமாக வெளியிடுகிறான். வேறுவிதமாகச் சொன்னால் இலக்கியத்திலே பொதிந்துள்ள உட்பொருள் உருவகமாக -குறியீடாக அல்லது படிமமாக அமைகிறது. இலக்கியம் குறிப்புநிலையில் செயல்படும்போது திறனாய்வாளன் அதனைத் தெரிநிலையாகப் புலப்படுத்துகிறான். இதற்கு அவனுக்கு உதவுவது விளக்கமுறைத் திறனாய்வாகும். பொருளைப் பொதிந்து வைத்திருக்கும் உருவகத்தை விளக்கமுறைத்திறனாய்வு வெளிப்படுத்துகின்றது. வாசிப்புமுறையின் ஒரு வகையாகக் குறிக்கப்பயன்படுவது விளக்கமுறைத் திறனாய்வு ஆகும்.

இந்த விளக்கமுறைத் திறனாய்வு என்னும் அணுகுமுறையைக் கையாண்டு கலிங்கத்துப்பரணியின் நூல் அமைப்பு, நூலின் நூல் கூறும் செய்திகள் போன்றவற்றை விரிவாகக் கூறியுள்ளார். இவ்வாறு விளக்கமுறையோடு அமைப்பியல் அணுகுமுறையயும் கையாண்டுள்ளார் ரெட்டியார்.

**அழகியல் திறனாய்வும் ஆய்வுப்பார்வையும்:**

கற்பனை நயம், யாப்பியல் சிறப்புகள், உவமைச்சிறப்பு எனக் கலிங்கத்துப்பரணியின் சிறப்புகளைச்சான்று காட்டி விளக்குகின்ற அழகியல் அல்லது முருகியல் அடிப்படையில் அமைந்த அணுகுமுறையயும் இந்த நூலில் காண்கிறோம். "கற்போரின் மனத்தை விரிந்த பார்வையில் செலுத்துவது கற்பனைத்திறன். கவிதையின்பிற பண்புகளுக்கு எல்லாம் அடிநிலமாக அமைவதும் கற்பனைதான்" ( கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, ப-26) என்றும் ரெட்டியார் கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாதது என்றும், சொற்களால் உணர்த்தமுடியாது என்றும் கற்பனைக்கு விளக்கம் தருகிறார். யதார்த்த உலகில் நிகழும் சில நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டே தம் கற்பனைத்திறனால் புதியதொரு உலகத்தைப் படைத்துகாட்டுகிறார். கலிங்கத்துப்பரணியில் இடம்பெறும் கீழ்க்காணும் பாடல்களைச் சான்று காட்டிச் செயங்கொண்டாரின் கற்பனைத்திறனை விளக்குவதை விளக்கமுறைத்திறனாய்வின் பயன் என்று வாசகர்கள் அறியத்தருகிறார் ரெட்டியார்.

"அணிகொண்ட குரங்கினங்கள்
அலைகடலுக்கு அப்பால்பாலை
மணலொன்று காணாமல்
வரைஎடுத்துமயங்கினவே"
காடிதனைக் கடத்துமெனக் கருமுகிலும்
வெண்மதியும் கடக்க அப்பால்
ஓடியிளைத் துடல்வியர்த்த வியர்வன்றோ
உருபுனலும் பணியும்ஐயோ"

இப்படி யதார்த்தத்தையும் கற்பனையையும் இணைக்கத் தற்குறிப்பேற்ற அணி உதவுவதை விளக்குகிறார். சான்றாகக் கடலில் அலை ஓயாமல் அடிப்பது திக்கு யாவைகள் அடிக்கடி தம் காதுகளை அசைப்பது வெப்பந்தணிவிக்கவே என்பதும் சூரியன் தன் மனைவி சாயாதேவியை நிலவெடிப்புகளின் உள்ளே என்பதும் நயமிக்க பகுதிகளாக ரெட்டியாரால் விளக்கப்படுகின்றன

கலிங்கத்துப்பரணியின் பதின்மூன்று இயல்களில் நான்கு மனித உலகம் பற்றியவை. ஐந்து இயல்கள் பேய்கள் உலகம் குறித்தவை. மூன்று இயல்கள் பேய்களின் தலைவியாகிய காளியைப் பற்றியவை. காளிவழிபாடுபற்றிச் செயங்கொண்டார்பாடியுள்ள திறம் ரெட்டியரால் சிறப்பாக விளக்கப்படுகின்றது. இப்பகுதிகளை ரெட்டியார் உதாரணமாகக் காட்டியுள்ளதால் திறனாய்வு மூல நூலைப் படிக்கத்தூண்டும் பணியைச் செய்வதற்கு உதவுகிறது என்று துணியலாம்.

பசுங்குருதி நீர் தெளித்துக ˙கொழுப்பாகிய மலர்களைத்தூவி பிணங்களைச்சுடும் சுடலையிலுள்ள விறகு விளக்குகளை எங்கும் ஏற்றி வைப்பர்; அவளை வழிபடுவோரின் ஒலி கடலொலிபோல் எங்கும் முழங்கும் என்று அச்சத்தையும் அருவருப்பையும் தரும் காட்சிகளைச் செயங்கொண்டார் அழகிய பாடல்களாக வடித்துள்ளதை ரெட்டியார் சான்று காட்டுவதன் மூலம் பரணியின் இலக்கிய நயம் புதிய வாசகர்களையும் ஈர்க்கும் என்பதில் ஐயமில்லை.

" சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர்
தருகவரம் வரத்தினுக்குத் தக்க தாகப்
பலியாக உறுப்பரிந்து திருத்தும் என்று
பரவும்ஒலி கடலொலிபோல் பரக்கும் மாலோ "
"அடிக்கழுத்தின் நெடுஞ் சிரத்தை அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ "

பேய்கள் கூழுண்ட மகிழ்ச்சியால் மன்னனை வாழ்த்தின . இதனை

" பொன்னித் துறைவனை வாழ்த்தினவே
பொருநைக் கரையனை வாழ்த்தினவே
கன்னிக் கொழுநனை வாழ்த்தினவே
கங்கைமணாளனை வாழ்த்தினவே"

என்று பாடுகிறார். இவ்வாழ்த்து மரபுநெறிப்பட்ட வாழ்த்தாக மட்டும் இல்லாமல் பேய்களின் நன்றியுணர்வைப் புலப்படுத்தும் வாழ்த்தாகவும் அமைகிறது. மேலும் பேய்கள் எப்படியெல்லாம் வாழ்த்துகின்றன என்பதைக் கீழ்க்காணும் பாடல்கள் விளக்குகின்றன.

" யாவ ருங்களிசிறக்கவே; தருமம்
எங்கு மென்றுமுள தாகவே
தேவ ரின்னருள்த ழைக்க வேமுனிவர்
செய்த வப்பயன் விளைக்கவே
வேத நன்னெறி பரக்க வேயபயன்
வென்ற வெங்கலிக ரக்கவே
பூத லம்புகழ்ப ரக்க வேபுவிநி
லைக்க வேபுயல்சு ரக்கவே"

பேய்கள் மனிதர்களைப்போல் செயல்படுவதையும் அவற்றின் வாழ்க்கைத் தேவைகள் மனிதர்களின் தேவைகளைப போலவே இருப்பதையும் ˙செயங்கொண்டார் பாடியதற்கான காரணத்தை ரெட்டியார் தம் ஆய்வுப்பார்வை மூலம ˙அறிந்துகூறுகிறார். மூலநூலினை ஆழ்ந்துகற்க இத்தகைய ஆய்வுப்பார்வை பயன்தரும். பரணி இலக்கிய முன்னோடியான செயங்கொண்டார் பேய்களின் செயல்கள் அனைத்தும் மனித வாழ்வைப் பிரதிஎடுத்தது போல் பாடியதற்கு "மனித உலகை ஊன்றுகோலாகக் கொண்டு பேய்கள் உலகைப் பேசுவதால் மனித உலகத்

தேவைகள்தான் பேய்கள் உலகத் தேவைகளாகக் காணப்பெறுகின்றன" ( கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி ,ப-54) என்பதே காரணம் என்கிறார்.

நூலெங்கும் விரவிக்கிடக்கின்றகற்பனைநயத்தை அணிகளைக் கையாண்டு கூறும் இடங்களைத்தவிரப் பிற இடங்களிலும் செயங்கொண்டாரின் கற்பனைத்திறன்களை ரெட்டியார் அடையாளம் காட்டி அவற்றின் சிறப்புகளைப் பேசுகிறார். " இயல்பாக உள்ள நிகழ்ச்சிகளை வரலாற்று நிகழ்ச்சியுடன் பொருத்திக்கூறுங்கால் பல கற்பனைச்சிகரங்கள் தென்படுகின்றன" (கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, ப-94) என்று தெளிவுடன் கூறியுள்ளார் ரெட்டியார். பேய்களின் இயல்புகளைக ்கூறுங்கால் நொண்டிப்பேய், முடப்பேய், குருட்டுப்பேய், ஊமைப்பேய், செவிட்டுப்பேய், குறட்பேய், கூன்பேய் ஆகிய பேய்களுக்கு உறுப்புக்குறை ஏற்பட்டதற்கான காரணங்களைக் கூறுமிடம் செயங்கொண்டாரின் கற்பனையாற்றலுக்குச் சிறந்த சான்று என முருகியல் அணுகுமுறை மூலம் பதிவுசெய்கிறார்.

" விருதராசபயங்கரன் முன்னொர்நாள்
வென்ற சக்கரக்கோட் டத்தி டைக்கொழுங்
குருதி யுங்குட ருங்கலந்(து) அட்டவெங்
கூழ்தெ றித்தொரு கண்குரு டானவும்"
" ஆனை சாயவ டுபரி ஒன்றுகைத் (து)
ஐம்ப டைப்பருவத்தப யன்பொருஞ்
சேனை வீரர்நின்றார்த்திடும் ஆர்ப்பினில்
திமிரி வெங்களத் திற்செவி டானவும்"

குலோத்துங்கன் இளமையில் போர்மேற்சென்றபோது அவன் படைவீரர்களின் ஆர்ப்பொலியைப் பொறுக்கமாட்டாது ஒரு பேயின் காதில் உள்ள ஜவ்வு கிழிந்துபோனது என்று பாடும்போது, அளவுக்கு மீறிய சப்தம் செவிப்பறையைக் கிழித்துவிடும் என்ற அறிவியல் உண்மையைச் செயங்கொண்டார் கூறியிருப்பது நம்மை வியக்கவைக்கிறது. அறிவியல் தமிழுக்குத் தம் நூல்களின் மூலம் பங்காற்றிய சுப்புரெட்டியார் இவ்வுண்மையை மறந்தது வியப்பளிக்கிறது.

குலோத்துங்கன் வடவரை வென்றபின் பாண்டியருடன் போர் தொடுத்து வென்றான். அப்போது ஏற்பட்டபுகையால் உண்டான வெம்மை அதாவது பகைவரின் காவற்காட்டின் வெம்மை பாலைநிலக் கொடுமைக்கு ஒப்பிடப்படும் கற்பனைநயமும் எண்ணி இன்புறத்தக்கது. இங்ஙனம் கலிங்கத்துப்பரணியின் கற்பனைச்சிறப்பு முருகியல் அணுகுமுறையின் மூலம் சுப்புரெட்டியாரால் புலப்படுத்தப்பட்டுள்ளது.

அழகியல் அணுகுமுறையின் மூலம் கலிங்கத்துப்பரணியில் பயின்றுவரும் உவமை நயங்களை விளக்கமாகவே ஆராய்ந்துள்ளார் ரெட்டியார். முதுபேய் காளிதேவியை நோக்கி ,

“ கொற்றவர்கோன் வாளபயன் அறிய வாழும்
குவலயத்தோர் கலையனைத்தும் கூற ஆங்கே
கற்றுவந்தார் கற்றவவன் காணு மாபோல்
கடைபோகக் கண்டருள் ரன் கல்வி என்றே “

பொருளுக்கேற்ற உவமை, உவமேயத்தின் இழிவு என்பன போன்று உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரு நோக்குகளில் செயங்கொண்டார் உவமைகளைப் பாடியுள்ளார் . பேய்களின் கைகால்கள் பனை மரங்களைப்போலவும் முதுகு“ மரக்கலத்தின் மறுப்புறம் ஒப்பன” என்றும் பேய்களின் பற்கள் “ கொட்டும் மேழியும் கோத்த பல்லின” என்றும் வருணிக்கிறார் செயங்கொண்டார். உவமேயத்தின் உயர்வுக்கு ஏற்பச் சிறந்த பொருள்களை உவமானவாகவும் உவமேயத்தின் புன்மைக்கு ஏற்ப இழிவான உவமானங்களையும் செயங்கொண்டார் கையாண்டுள்ளார். சோழநாடு அரசனை இழந்து அல்லலுற்றநிலையில் குலோத்துங்கனை ஞாயிற்றுக்கு உவமை கூறுகிறார். ஆனால் அவன் பகைவர்களை வென்று வாகை சூடியதை ஞாயிற்றின் முன் இருள் மாண்டொழிந்தாற்போல் பகைவர் ஒடுங்கினர் என்று ஞாயிற்றை உவமை கூறுவதைக் காணமுடிகிறது.

கலிங்க மன்னன் போரில் தோற்று மலைக்குவடு ஒன்றில் ஒளிந்து கொள்கிறான். கலிங்க வீரர்கள் புலப்படுத்துகிற விடியும் அளவும் காத்து நின்றதைத் தொழுவில் அடைத்த காட்டுப்பன்றியை வேடர்கள் காத்து நிற்கும் உவமையால் புலப்படுத்துகிறார். குலோத்துங்கன் காஞ்சியில் சித்திரமண்டபத்தில் அரியணையில் கொலு வீற்றிருக்க இருபுறமும் கவரி வீசப்படும் சிறப்பைப் பாற்கடலின் அலை இருபுறத்தும் நின்று பணிசெய்யும் தோற்றத்தை உவமையாக்கிப் பாடியுள்ளார். இவ்வாறே ஈதல் அறம் செய்யும் மேலோர் இயல்பு, ஈயாத உலோபியர் இயல்பு, பொருட்பெண்டிர் இயல்பு, கற்புடை மகளிர் இயல்பு முதலியவற்றைக் கூறும் உவமைகள், செயங்கொண்டாரின் புலமைத்திறம் காட்டும் போர்க்கள உவமைகள் எனப் பலதிற உவமைகள் அழகியல் கண்ணோட்டத்தின் அடிப்படையில் ரெட்டியாரால் விளக்கப்பட்டுள்ளன.

**அணி நயமும் அழகியல் நோக்கும் :**

கவிதையை அணிசெய்யும் பொருளணிகள் பலவற்றை அழகியல் நோக்கில் செயங்கொண்டார் கையாண்டுள்ளமையைப் பல சான்றுகள் மூலம் ரெட்டியார் விளக்கியுள்ளார். அதுபோலச் சொல்லணிகளுக்கும் செயங்கொண்டார் சிறப்பிடம் அளித்துள்ளமையையும் ரெட்டியார் பதிவு செய்துள்ளார். யமகம் என்னும் சொல்ல ணிக்கு

“ காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த
கலவி மடவீர் கழற்சென்னி
காஞ்சி இருக்கக் கலிங்கம் குலைந்த
களப்போர் பாடத்திறமினோ “

"ஒருகலிங்கம் ஒருவன் அழித்தநாள்
ஒரு கலிங்கம் ஒருவரும் உடுத்ததே"

என்னும் இரு பாடல்களைச்சான்று காட்டி விளக்கியுள்ளார்.

திரிபு என்னும் சொல்லணியை,

" மனுக்கோட்டம் அழித்த பிரான்
வளவர்பிரான்திருப்புருவத்
தனுக்கோட்டம் நமன்கோட்டம்
பத்து சக்கரக்கோட்டம்"
" நக்காஞ் சிக்கும் வட்மலைக்கும்
நடுவில் வெளிக்கே வேடனைவிட்(டு)
அக்கா னகத்தே உயிர்பறிப்பீர்
அம்பொற் கபாடம் திறமினோ"

என்னும் இருபாடல்களைச் சான்று காட்டி விளக்கியுள்ளார் ரெட்டியார். அழகியல் திறனாய்வின் மூலம் கவிநயம் மிக்க சிலபாடல்களை அடையாளம் காட்டி உள்ளார்.

**ரசனைமுறைத் திறனனாய்வும் ரெட்டியாரும்:**

தமிழில் ரசிகமணிடி .கே. சி ., பேராசிரியர் ஆ. முத்துசிவன் போன்றோரால் மிகவும் போற்றப்பட்ட இந்த அணுகுமுறையை மிக விரிவாக சுப்புரெட்டியார் பின்பற்றியுள்ளதைக் கலிங்கத்துப்பரணியில் இடம்பெற்றுள்ள சுவைகள் பற்றிய ஆய்வின் மூலம் அறியலாம். "கவிதை எழுதுவது ஒரு கலையானால் கவிதையை ரசிப்பதும் ஒரு கலையே; கவிதை சம்பந்தப்பட்ட மட்டிலும் என்ன என்பது விசேஷமில்லை. எப்படி என்பதுதான் விசேஷமானது " (ஆ.முத்துசிவனின் கருத்து மேற்கோளாகாகக் காட்டப்பட்டது) என்றஅணுகுமுறை ரசனைமுறைத் திறனாய்வின் அடிப்படைகளில் ஒன்று. சுவைகள் பிறந்த வரலாற்றை எழுதும் ரெட்டியார் " நாம் பொருள்களை அனுபவிக்கும்போது அப்பொருள்கள் நாம் அனுபவித்தவாறே தமது உருவங்களை நம் மனத்தில் செதுக்கிவிட்டுப் போகின்றன. இதைத்தான் அறிஞர்கள் 'வாசனை' என்று குறிப்பிடுகின்றனர். நாம் வெளியில் ஒரு பொருளைக் காணும பொழுது உள்ளே உறங்கிக்கிடக்கும் அப்பொருள்களைப்பற்றிய வாசனை மலர்கின்றது " என்றும் " காவியத்தில் சுவை காண்பதற்குப் பரம்பரை வாசனை வேண்டும் " என்றும் எழுதுகிறார். (கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, ப -98 .& 99).

காதல் சுவையைப்பற்றி ரெட்டியார் எழுதுவதை நோக்க, " கவிதைச் சுவையை யாருமே நினைத்த மாத்திரத்தில் பெற்றுவிட முடியாது " என்னும் ஆ. முத்துசிவனின் கருத்தையே இவரும் வலுவாக உடன்படுகிறார். தமிழ் இலக்கியங்களில் காதற்சுவை பெறும் இடத்தை

மதிப்பீட்டுமுறைத்திறனாய்வு என்னும் அணுகு முறையின்படி இவர்“ தமிழ் இலக்கியங்களில் காதற்சுவை உயர்ந்த பீடத்தைப் பெற்றிருக்கிறது. காதலையே ஓர் உயர்ந்த கலைபோல் வளர்த்திருக்கின்றனர் . இவ்வாறு இலக்கியங்களில் வரும் காதற்சுவையை அனுபவிக்க உள்ளத்தூய்மையும் சுவைக்கும் பழக்கமும் வேண்டும். அவை இரண்டும் இல்லாதவர்கள் கற்பனை உலகில் காணும் இன்பக் கனவுகளாகின்ற வருணனைகளை யதார்த்த உலக நிகழ்ச்சிகளுடன் ஒப்பிட்டு நம் இலக்கியங்களைக் குறை கூறுகின்றனர் “ என்று ரசனை உணர்வின்மையின் விளைவினை எழுதுகிறார்.

**ஆய்வு நோக்கில் வீரப்போரும் கலவிப்போரும் :**

பரணி இலக்கியம் போர் குறித்த இலக்கியம். இதில் உவகைச்சுவை (சிருங்காரம்) இடம்பெறுமாறு செயங்கொண்டார் பாடியுள்ளதன் காரணத்தைத் தம் ஆய்வுப்பார்வையின் மூலம் ரெட்டியார் கூறுகிறார். இராச பாரம்பரியம், அவதாரம் என்ற இரண்டு இயல்களைத் தவிர எஞ்சியவை குரூரமான அம்சங்களை வருணிப்பவை என மதிப்பிடும் ரெட்டியார் “ துறவிகளையும் கவரவல்லது சிருங்காரம் என்றும், நிமிர்ந்த செல்வமும் நிறைந்த இளமையும் உள்ள வீரர்கள் தம் காதலியரைத் துறந்து போர்க்காதலில் ஈடுபட்டார்கள் என்றால் அவர்களின் வீரம்தான் என்னே! இந்த நிலையைக் காட்டியபின் அவர்களின் வீரத்தையும் காட்டினால் அவர்களுடைய மனப்பான்மையும் உடற்பான்மையும் எளிதில் புலனாகும் என்று எண்ணித்தான் போர் பாடும் நூலில் கலவிப்போர்க் குறிப்புகளைக் கவிஞர் காட்டினார் என்று கருதுவதில் தவறில்லை” எனப்புறத்தில் அகம் பாடும் போக்கிற்கு உரிய காரணத்தை முன் வைக்கிறார். இதற்கு மற்றொரு காரணமும் உண்டு என்பது ரெட்டியாரின் கருத்து. அதனை, ” எல்லாச்சுவைகளிலும் சிறந்தது சிருங்காரம்; எல்லா உயிர்ப்பிராணிகளிடமும் பரம்பரை வாசனையாய் அமைந்து கிடப்பது; அவற்றின் இனப்பெருக்கத்துக்கும் பெருந்துணைபுரிவது; ஆண்டவன் படைப்பில் அற்புதமாக அமைந்து கிடப்பது ; படைப்பின் பெரு விசையாக உள்ளதும் இதுவே. மலர்கள் வண்டுகளின் உணவாகிய தேனையும் மகரந்தத்தையும் கொண்டுள்ளன. தம் இனப்பெருக்கத்தின் உயிர்நாடியே வண்டுகளின் உணவாக அமைந்திருப்பது படைப்பின் விந்தை என்று கருதவேண்டும். படைப்பின் இந்த ரகசியத்தை அறிந்த கவிஞர்கள் சிறுமதியினரையும் இன்பச்சுவையால் ஈர்த்துவிடலாம் என்று கருதியே தம் நூல்களில் அகப்பொருள் துறைகளை அமைத்துப் பாடினர் ( மேற்படி நூல் ப- 34,35) என்று விரிவாகவும் விளக்கமாகவும் எழுதுவதோடு இப்போக்கு கொய்னா மருந்துக்குச் சர்க்கரைப்பாகு ஊட்டிச் செய்வது போன்ற செய்கை என்று சமகாலச் செய்தியை உவமை காட்டி விளக்குகிறார். ஐம்பதுகளில் கொய்னா மருந்து தமிழகத்தில் பயன்பாட்டில் இருந்தது.

உவகைச்சுவைக் குறித்து ரெட்டியார் ஒப்பாய்வு அணுகுமுறையில் வடமொழியில் உள்ள ரசக்கோட்பாட்டோடு ஒப்பிடுகிறார். ”உவகைச் சுவையை களவு, கற்பு என்ற இருபிரிவுகளில்

எண்ணற்ற துறைகளில் அடக்கிக் காட்டுவர். வடமொழிவாணர்கள் விப்ரலம்ப சிருங்காரம், சம்போக சிருங்காரம் என்று பாகுபாடு செய்து காட்டுவர். அவையே இவை என்று சொல்ல இயலாவிடினும் அவற்றில் உள்ள செய்திகள் இவற்றிலும் வருகின்றன “ ( மேற்படி நூல், ப-100) “புறப்பொருள் அனுபவத்தை அகப்பொருள் அனுபவத்துடன் செயங்கொண்டார் பிணைத்துக்காட்டும் திறன் எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது” ( மேற்படி நூல் ,ப-101) என எழுதும் ரெட்டியார் சிருங்காரச்சுவையை மிகவும் அனுபவித்த தம் உணர்வை “ இம்மாதிரி சிருங்காரச்சுவையூட்டும் சுளைகளைக் கடைதிறப்பில் காணலாம் “ ( மேற்படி நூல் ,ப-102) என்று எழுதுகிறார்.

நகைச்சுவைபற்றி எழுதும்போது மேனாட்டார் கூறும் நகைச்சுவைக்கும் தமிழ் மரபில் உள்ள நகைச்சுவைக்கும் இடையே காணப்படும் வேறுபாட்டை விளக்குகிறார். சான்றாகக் குருட்டுப்பேய், ஊமைப்பேய், குறைமதி உள்ள பேய் ஆகியவற்றின் செயல்களைக் காட்டுகிறார்.

அழுகைச்சுவை குறித்து ரெட்டியார் “ போர்க்களத்தில் காணும் நிகழ்ச்சிகள் பல அழுகைச்சுவை பயக்க வல்லவை. துன்பத்திலும் இன்பத்தைக் காணுவதுதான் ஆன்மாவை உணர்வது என்று அறிஞர் கூறுவர். இச்சுவையை மேனாட்டார்போல நம் நாட்டவர் இறுதிவரையில் வளர்த்துக்காட்ட முனைவதில்லை“ ( மேற்படி நூல் -104, 105) என்று குறைப்பட்டுக் கொள்கிறார்.

வெகுளிச்சுவை . குறித்து “ பகைவர்கள் செய்த தீச்செயலை நினைத்து மனம் கொதிக்கும் நிலையைக் குரோதம் என்று கூறுவர். குரோதத்தின் அடிப்படையில் பிறப்பது வெகுளி “ என விளக்கம் தருகிறார். கலிங்க மன்னனின் கோபத்திற்குச் சான்றுகள் காட்டி விளக்குகிறார்.

அச்சம், இளிவரல் ஆகிய சுவைகளை விளக்கும் ரெட்டியார் வீரம் என்னும் சுவைக்குத் தரும் விளக்கம் அவருடைய சமய ஈடுபாட்டின் வெளிப்பாடாக அமைகிறது. ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் சமயத்தலைவர்களை ஆன்ம வீரர்களாகக் கருதியவை சைவ வைணவ சமயங்கள். அவற்றின் எதிரொலியாக வீரம் என்னும் பெருமிதச்சுவையை “ எந்தச் சிக்கலான சந்தர்ப்பத்திலும் மனக்குன்றாது செயலாற்றுவதை வீரம் மிக்க செயல் என்று கருதுவர். வீரனது அடையாளம் போர்க்களத்தில் முன்னணியில் நிற்பது மட்டுமல்ல; ஆயுள் முழுவதும் தன் புலன்களை அடக்கப் பாடுபடுவதும் கூட வீரம் உள்ளிருப்பதைக் காட்டுவதாகும். எனவே புலனைந்தையும் அடக்கியாண்ட முற்றுந்துறந்த முனிவரையும் சிறந்த வீரர்கள் என்று சொல்லவேண்டும். தன் உயிரைத் திரணமாக மதித்துச் செயலாற்றுவதையும் வீரம் என்று வழங்கலாம்” ( மேற்படிநூல்,ப-107) எனக் காலத்துக்கேற்ற விளக்கம் தருகிறார்.

யோகியர் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் சமநிலை அல்லது சாந்தம் என்னும் ஒன்பதாவது சுவைக்குப் பரணியில் இடமில்லை. போரை நாடுபவர்களிடம் இச்சுவை இருக்க

முடியாது என்பதே இதற்குக் காரணம் என்கிறார். மருட்கை என்னும் வியப்புச்சுவைக்கும் நகைச்சுவைக்கும் உள்ள வேறுபாட்டை நுட்பமாக எழுதுகிறார். வேண்டாதவை கூட வியப்பினை விளைவிக்கலாம். ஆனால் நகை அப்படியன்று. விரும்பும் வண்ணமே இருக்கும் . இவ்வாறு ஆங்காங்கே தம் புலமையையும் பன்னூலறிவையும் பதிவு செய்கிறார்.

**ஒப்பாய்வு அணுகுமுறையும் ரெட்டியாரும் :**

ஒப்பீட்டுமுறைத்திறனாய்வு பல கருதுகோள்களைக் கொண்டிருந்தாலும் "ஒன்றுபட்டும் வேறுபட்டும் அமைகிற பின்புலங்களிலிருந்து பார்க்கிறபோது குறிப்பிட்ட இலக்கியத்தின் பண்புகளும் கூறுகளும் தெளிவாகவும் விளக்கமாகவும் காணப்படும்" என்பதை ஒரு கருதுகோளாகக் கூறுவார் தி.சு.நடராசன். ( திறனாய்வுக்கலை, ப-25). ஒப்பாய்வின் கனிவு இன்று ஒப்பிலக்கியம் எனத் தனித்துறையாக வளர்ந்துள்ளது. இத்தகைய ஒப்பாய்வு அணுகுமுறை சுப்புரெட்டியாரின் பன்னூற்பயிற்சிக்குப் பதச்சோறாக அமைகிறது. ஒப்பீட்டு அணுகுமுறையில் கலிங்கத்துப்பரணியை ஆராய்ந்துள்ளமை ஐம்பதுகளில் குறிப்பிடத்தக்க முயற்சிஆகும். நடையறாப் பெருந்துறவியாகிய தாயுமான அடிகளும் இப்பரணிநூலின் கடைதிறப்புப்பகுதியில் உள்ளம் பறிகொடுத்து "உபயதனம் ஆசையில் " என்னும் தாழிசையைக் கையாண்டுள்ளார் என்று எழுதுகிறார். மேலும் சிருங்காரச்சுவை துறவிகளையும் ஈர்க்கவல்லது என அவர் குறிப்பிட்டிருப்பதற்கும் இதுவே காரணமாகும். உலகப் பொதுநூலான திருக்குறள், மதுரைக்காஞ்சி, முத்தொள்ளாயிரம், உலகப்பெருங்கவியாம் கம்பனின் காவியம், திருக்கோவையார், தஞ்சைவாணன்கோவை, தனிச்செய்யுட்சிந்தாமணி போன்ற பல இலக்கியங்களையும் கலிங்கத்துப்பரணிப் பாடல்களுடன் ஒப்பிட்டுள்ளார். இவை தவிர வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் உள்ள மரபுகளையும் ஆங்காங்கே ஒப்பிட்டுச்செல்கிறார். இவை ரெட்டியாரின் ஒப்பாய்வு அணுகுமுறைக்குத் தக்க சான்றாம்.



**வரலாற்று முறைத் திறனாய்வும் ரெட்டியாரும் :**

இலக்கியம் என்பது குறிப்பிட்ட காலத்தின் வெளிப்பாடு. இதனைத் திறனாய்வு செய்யும் முறைகளில் வரலாற்று அணுகுமுறைக்கும் தொடர்பு உண்டு. " வரலாற்றிற்கு அடிப்படையான காலம் காலம் இடம் என்னும் மையங்களில் காலூன்றி நிற்கும் இலக்கியம், நினைவுகளையும் நிகழ்வுகளையும் வரித்துக்கொண்டு எங்கே சுழன்றாலும் அதன் 'ஈர்ப்பு' இந்த மையங்களை நோக்கியதுதான். காலம் அடுத்தடுத்த புள்ளிகளை நோக்கி வளரும்போது சரியான ஈர்ப்புத்திறனுடைய இலக்கியமும் அதனோடு சேர்ந்து வளர்கிறது. சற்று முன்னும் பின்னும் சென்று அந்த முனைகளைத் தழுவிக்கொள்கிறது. வரலாற்றில் ஏற்படும் மாற்றங்களை சுவீகரிக்கவும் அந்த மாற்றங்களுக்குத் தானும் ஒரு காரணமாக அமையவும் கூடிய திறன் பெற்ற இலக்கியம் அதன் காரியமாகவும் அமையக்கூடியது. இலக்கியத்தை வரலாற்று

உந்துசக்திகளின் ஒளியில் தரிசிக்கும் பார்வையே வரலாற்றியல் அணுகுமுறையாகும்" என இலக்கியத்துக்கும் வரலாற்றுக்கும் உள்ள தொடர்பை வரலாற்றியல் திறனாய்வுமுறை விளக்கப்படுத்துகிறது. ( திறனாய்வுக்கலை, ப-67). வரலாற்றாய்வின் தேவை, மேனாட்டார் அதற்கு அளிக்கும் முக்கியத்துவம் , தாய்மொழியில் வரலாறுகள் எழுதப்படவேண்டியதன் தேவை ஆகியவை பற்றி எழுதும் ரெட்டியார் கலிங்கத்துப்பரணியின் வரலாற்று மூலங்களைக் குறிப்பிடுகிறார். " கலிங்கத்துப்பரணியிலிருந்து சோழர்கால வரலாற்றையும் அக்கால மக்களின் வாழ்க்கையைப் பற்றியும் ஓரளவு தெரிந்து கொள்ளலாம். அதில் காணக்கிடைக்கும் ஒரு சில செய்திகள் கல்வெட்டுக்கள் போன்ற பிற மூலங்களால் கிடைக்கும் செய்திகளைக் கொண்டு உறுதிப்படுத்தப்படுகின்றன ( கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, ப-56). இராசபாரம்பரியம் என்னும் இயல் சோழர்கால வரலாற்று மூலம் ஆகும். சோழர் குலமுறை தொடக்கம் முதல் கிளத்தப்படுகிறது. புராணகால தொடர்புடைய செய்திகள் உயர்வு நவிற்சியாக அமைகின்றன என்று ரெட்டியார் குறிப்பிடுகிறார். அவதாரம் என்ற இயல் குலோத்துங்கனின் பிறப்பு வளர்ப்பு முதலான செய்திகளைக் கூறுகின்றன. காளிக்குக் கூளி கூறியது, பேய்களைப ' பாடியது, கோயில் பாடியது, களம்பாடியது ஆகிய இயல்களில் குலோத்துங்கன் பற்றிய சித்திகளும் ,பேய்கள் பாடும் வள்ளைப்பாட்டுகளிலும், கூழ் உண்டபின் பேய்கள் பாடும் வாழ்த்துப்பாடலிலும் சோழ அரசர்கள் பற்றிய செய்திகள் உள்ளதை ரெட்டியார் குறிப்பிடுகிறார்.

**வாழ்க்கை முறைகளும் ரெட்டியார் கருத்துகளும்:**

அக்கால அரசர் இயல்புகள், அக்காலப் போர் மரபுகள், பழக்கவழக்கங்கள் போன்ற பல செய்திகளைக் கலிங்கத்துப்பரணி கூறுவதைச் சான்று காட்டி உரைத்துள்ளார் ரெட்டியார். காவடி எடுப்போர் நாக்கு, உடல் ஆகியவற்றில் அலகு குத்துதல், அரசர் போன்ற உயர்ந்தோர்க்கு விருந்திடும்போது பகல்விளக்கு வைத்தல், பரப்பிய ஆடையின் மேல் பொற்கலத்தை வைத்து அதில் உணவிடுதல், கூழுக்கு வெங்காயம் கறித்து உண்ணுதல் போன்ற பழக்கவழக்கங்கள் இருந்ததை அறிகிறோம்.

மை கொண்டும், மந்திரம் கற்றும் புதையல் காண்போரையும், நோய் தீர்ப்போரையும் "பார்வைக்காரர்" விளங்கிய செய்தி கலிங்கத்துப் பரணி கூறும் அரிய தகவலாகும். நோக்கர் என்று இக்காலத்தில் நாம் அழைப்பவருக்கும் அக்காலத்தில் நோக்கர் என்று அழைக்கப்பட்டவருக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அக்கால நோக்கர் இறந்தார் வீட்டுமுன் நீண்ட தாரையை வைத்து ஊதும் வழக்கம் கொண்டவர் என்றும் துருத்தியாளர் என்பவர் நீண்ட குழாய் வடிவமான துருத்தி என்ற கருவியில் நீரைச்சொரிபவர் எனும் அறிகிறோம்.

படுக்கைக்குப் பஞ்சசயனம் என்று பெயர் வந்ததற்கு விளக்கம் தருகிறார் ரெட்டியார். வெண்பஞ்சு, செம்பஞ்சு, இலவம் பஞ்சு. மயிர், அன்னத்தின் தூவி ஆகியவற்றைக் கொண்டு

உருவாக்கிய மெத்தைகளை அரசன் முதலியோர் படுப்பதற்காக இந்த ஐவகை மெத்தைகளையும் ஒன்றன்மேல் ஒன்றாக இடும் வழக்கம் இருந்தது.

**அமைப்பியல் ஆய்வுப்பார்வையும் ரெட்டியாரும்:**

தாழிசையால் பாடப்பட்ட முதல் நூல் கலிங்கத்துப்பரணி. பரணி நூல்களுக்கெல்லாம் தலைசிறந்த தாய் . இலக்கிய வானில் கலங்கரை விளக்கம் என்று போற்றப்படும் பெருமை கொண்டது. இதை ஒட்டக்கூத்தர் தக்கயாகப்பரணியில் “ தென் தமிழ் தெய்வப் பரணி” என்றும் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் “ பரணிக்கோர் செயங்கொண்டார் “ என்று நூலாசிரியரைப் புகழ்வதும் இந்நூற்பெருமையை உணர்த்தும். நூலின் முன்னுரையில் “ஒன்பது கட்டுரைகள் கொண்ட நூலில் ஆறுகட்டுரைகள் நூலை ஆறுவித கோணத்திலிருந்து பார்ப்பவை; நூல் முழுவதும் செல்லக்கூடிய பார்வை அவை. கற்களாலும் சுண்ணத்தாலும் எழுப்பிய மாளிகையைப் பலவிதக் கண்ணோட்டத்தால் பார்ப்பது போலச் சொற்களாலும் சுவைப்பொருள்களாலும் எழுப்பப்பெற்ற காவிய மாளிகையைப் பல்வேறு நிலையிலிருந்து, நோக்கி அனுபவித்தேன்” என்று சுப்புரெட்டியார் எழுதுவதை நோக்க இவருடைய ஆய்வுப்பார்வை புலனாகிறது.

பரணியின் பெயர்க்காரணம் குறித்துத் தொல்காப்பிய உரையாசிரியர்களின் கருத்துகளைக் கூறும் சுப்புரெட்டியார் உ.வே.சா போன்ற புலவர் பெருமக்களின் கருத்துகளையும் காட்டியுள்ளார். உ.வே.சா அவர்கள் பரணி என்ற நாள் மீன் காளியையும் யமனையும் தன் தெய்வமாகப் பெற்றது என்றும் அந்நாள் மீனால் வந்த பெயரே நூலுக்கும் பெயராக வந்தது என்றும் அவ்வாறு கொள்வதே ஏற்புடைத்து என்றும் கூறுகின்றார்கள். இதற்கு ஆதாரமாக

“ காடுகிழவோள் பூத மடுப்பே
தாழி பெருஞ்சோறு தருமநாள் போதமெனப்
பாகுபட்டது பரணிநாட் பெயரே “

என்னும் திவாகரத்தையே கொண்டார்கள். திரு ஐயர் அவர்களின் கொள்கையை நாமும் அப்படியே ஒப்புக்கொள்ளலாம்”( கலிங்கத்துப்பரணிஆராய்ச்சி,பக்கம்14) என்று எழுதுகிறார்.

பரணி இலக்கியம் விருந்து என்னும் வகை என்பதற்கு “ விருந்தே தானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே “ என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு இளம்பூரணர் “ விருந்தாவது முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது” என்னும் உரைவிளக்கத்தையும் ( கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி ,பக்கம். 15), பேராசிரியர் “ விருந்து தானும் புதிதாகப் பாடும் தொடர்நிலை மேற்று “ என்று கூறிச் சில பிரபந்தங்களை மேற்கோளாகக் காட்டி உள்ளார். நச்சினார்க்கினியரும் இவ்வாறே கூறியுள்ளார். எனவே “ இப்பொது விதியே பல புதிய பிரபந்தங்கட்கு இடனாக அமைந்துள்ளது என்று கருதுவதில்

தவறு ஒன்றும் இல்லை” ( கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி ,பக்கம். 15) என்று உரையாசிரியர்களின் கருத்தை உடன்படுகிறார்.

**ரெட்டியார் கருத்து :**

1. கலிங்கப்போர் மேற்சென்ற வீரர்கள் காலந்தாழ்த்தியது கண்டு அவர்தம் காதல் மகளிர் ஊடலால் கதவடைத்தனர். புலவர் பாடப்போகும் கலிங்கப்போர்ச் சிறப்பைக்கேட்டு மகிழ்தற்பொருட்டு கதவைத் திறக்கவேண்டுவது.

2. குலோத்துங்கன் அடைந்த கலிங்க வெற்றியைக் கொண்டாடும் விழாவுக்கு நகரத்துப் பல்வேறு மகளிரும் அதிகாலையில் எழுந்து ஒருவரை ஒருவர் துயில் எழுப்புவது.

இந்த இரண்டிலும் முன்னது அமைவுடையதன்று; வீரர் காலம் தாழ்த்தியமையால் பெண்கள் கவலைகொண்டு கதவடைத்திருந்தனர் என்று கருதுவதற்குச் செய்யுள்களில் யாதொரு குறிப்பும் காணப்படவில்லை. மாறாக மகளிர் தம் கொழுநருடன் ஊடலிலும் கூடலிலும் மகிழ்கின்ற நிலையில் அம்மகளிரைக் கடைதிறக்கும்படி வேண்டும் பாடல்கள் மிகுதியும் காணப்படுகின்றன. மகளிரின் கலவி புலவிகளை எடுத்துக்கூறி அவர்களை விளித்தல் அசம்பாவிதம். ஒருவேளை கற்பனைக்கதையுள்ள இலக்கியத்தில் அவ்வாறு கொள்ளல் மரபே ஆயினும் வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்ட இலக்கியத்தில் அவ்வாறு மரபாகக் கொள்ளுதல் சிறிதும் பொருத்தமன்று. அதிலும் சயங்கொண்டார் அத்தகைய சூழ்நிலையை உருவாக்க ஒருப்பட்டார் என்று கருதுவது அபவாதமாகும்.

தக்கயாகப்பரணி, இரணியவதைப்பரணிகளில் வரும் கடைதிறப்புகளில் வரும் வானர மகளிர், நீரர மகளிர், மேரு கயிலைகளில் வாழும் மகளிர் விளிக்கப்படுகின்றனர். கவிஞரே அவ்வாறு விளிப்பதாகக் கொண்டால் ஒட்டக்கூத்தரும் இரணிய வதைப்பரணி ஆசிரியரும் வானம், மேரு, கயிலை முதலிய இடங்களுக்குச்சென்று அவ்விடங்களில் தூக்கத்தினால் பகலில் கதவடைத்திருக்கும் மகளிரைக் கதவு தட்டுபவராகக் கூறவேண்டும். இது எவ்வகையிலும் பொருந்தாது. அன்றியும் இரவில் நிகழ்ந்த ஊடல் கூடல் முதலிய செய்கைகளால் அயர்ந்து ,துயில் எழாது வைகறையில் உறங்கிக் கிடக்கும் மகளிரை அவர்கள் செயல்களைப் பலபடியாகவும் அசதியாடிக் கூறித் துயிலுணர்த்தும் உரிமை “தாமே அவரே“ என்ற வேற்றுமையின்றிப் பழகும் தோழியர்க்கு அன்றி அவர்களுடன் அங்ஙனம் பழக வாய்ப்பே இராத ஆடவர்க்கு யாங்ஙனம் இயலும்? என்று எழுதுகிறார். இரண்டாவது கருத்தே ஏற்புடையது என்பதன் காரணத்தை திருப்பாவை திருவெம்பாவையைச் சான்றுகாட்டி உறுதிபடக்கூறுகிறார்.

**முடிவுரை:**

· கலிங்கத்துப்பரணி நூலை ரெட்டியார் விளக்கமுறைத் திறனாய்வு, ஒப்பீட்டு முறைத் திறனாய்வு, ரசனைமுறைத் திறனாய்வு, முருகியல் முறைத் திறனாய்வு , மதிப்பீட்டுமுறைத் திறனாய்வு எனப் பல கோணங்களில் அணுகியுள்ளார்.

· திறனாய்வு மூலநூலைப் படிக்க உதவும் என்பதற்குச் சான்றாக அமைகிறது கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் நூல்.

· பரணிப்பொழிவுகள் என்னும் நூல் கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் நூலின் சொற்பொழிவு வடிவமாக வெளிவந்துள்ளது.

· ஆய்வு மாணவர்கள் ஆய்வாளர்கள் ஆய்வில் புதிய செய்திகள் கூறப்படவேண்டும் என்பதை அறிந்துகொள்ளக் கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்னும் நூலைப் படித்தால் ஆய்வில் கொள்ளவேண்டியவை யாவை எனவும் தள்ளவேண்டியவை யாவை எனவும் அறிந்துகொள்ளலாம்.

**துணை நூற்பட்டியல் :**

1.இராகவையங்கார்,மு., ஆராய்ச்சித்தொகுதி, பூம்புகார் பதிப்பகம்,செப்டம்பர்2011, சென்ன, முதற்பதிப்பு

2.சதாசிவப் பண்டாரத்தார் ,தி.வை., பிற்காலச்சோழர் வரலாறு, பூம்புகார் பதிப்பகம், ஆகஸ்ட் 2011, சென்னை, முதற்பதிப்பு.

3.நடராசன்,தி.சு.,திறனாய்வுக்கலை கொள்கைகளும் அணுகுமுறைகளும், மே2016, நியூ சென்சுரி புக் ஹவுஸ், சென்னை, பத்தாம் பதிப்பு.

4.ராஜேந்திரன்., மு., சோழர்காலச்செப்பேடுகள்,அகநி வெளியீடு,செப்டெம்பர் 2014, சென்னை, மூன்றாம் பதிப்பு.




****************************************

# நினைவுக்குமிழிகள் ~ ஒரு வரலாற்று ஆவணம்

**முனைவர். த.விஷ்ணுகுமாரன்**
**இணைப்பேராசிரியர்**
**தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்புத்துறை**
**திராவிடப்பல்கலைக்கழகம், குப்பம்**
**ஆந்திரமாநிலம்**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மிகப் பரந்த மனிதவாழ்க்கை வரலாற்றைப் பொறுத்தவரை மனிதகுலம் தோன்றிய காலம் முதல் இன்றுவரை, மக்கள் வாழ்வியலில் எவ்வளவோ மாற்றங்கள், வளர்ச்சிகள் நிகழ்ந்துவிட்டன. மனிதர்களிடையே வரலாற்றுணர்வு எழத் தொடங்கிய காலம்தொட்டு தமக்கெட்டிய அறிவை வைத்துக்கொண்டு அவ்வக்கால நிகழ்வுகளைத் தமக்குத் தெரிந்த விதத்தில் பதிவுசெய்துள்ளனர். வரலாறு என்பது அமைப்பு சார்ந்த ஓர் அறிவுமுறையாக மாறியபோது வரலாற்றின் முக்கியத்துவம் உணரப்பட்டது . குறிப்பாக, கழிந்த கால வரலாறுகள் தற்கால வாழ்வுக்கும் தேவைப்படுவனவாக மாறிவிட்டன. அதன்மூலம் பாடங்கள் பெற்றுக்கொண்டு எதிர்காலத்திற்கான திட்டமிடல்கள் நிகழ்த்தப்பெறுகின்றன. ஆனால் ஆவணங்களைப் பயன்படுத்தி உருவாக்கப்பட்ட மனிதகுல வரலாறு எல்லா உண்மைகளையும் பதிவு செய்திருக்கிறாதா என்றால் இல்லை என்றே கூறமுடிகிறது. வரலாற்றைக் கட்டமைப்பதற்குத் தேவையான பல தரவுகள் இன்னமும் வரலாற்று நூற்களுக்கு வெளியிலேயே காணப்படுகின்றன. எனவே ஒரு பெரும் நிகழ்வு நடந்திருக்கும்போது அது பற்றிய கூடுதலான விளக்கங்களைப் பெற, வரலாற்று நூல்களல்லாத முந்தைய கால இலக்கியங்கள் அல்லது புராணங்கள் அல்லது அகழாய்வுப்பொருட்கள் அல்லது வாய்மொழி வழக்காறுகள் போன்ற வேறுவகையான ஆவணங்களைப் பார்க்க வேண்டியுள்ளது. இவற்றுடன் சுயசரிதை எழுத்துக்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

அதுபோலவே வரலாற்றைக் கட்டமைக்க அதாவது வரலாற்று நூல்களை எழுத ஆவணங்கள் , இலக்கியங்கள், அகழ்வாராய்ச்சி, பழம்பொருட்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள் என பல்வேறு ஆவணங்கள் வரலாறு எழுதுவோருக்குப் பயன்பட்டாலும் சுயசரிதை நூல்கள் உண்மைக்கு நெருங்கியவனாகக் கருதப்படுகின்றன. காரணம் வரலாற்றுப் பிரக்ஞை கொண்டவர்களால் தான் சுயசரிதை எழுத முடியும்.

ஆக சுயசரிதை நூற்கள் வரலாற்றைக் கட்டமைக்க உதவும் ஆவணமாகவும் பயன்படும் அதேவேளை வரலாறு தொடர்பான கூடுதல் செய்திகளைப் பெறவும் உதவுகின்றன. அந்த
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வகையில் ஆனந்தரங்கம் பிள்ளையின் நாள்குறிப்பு, வ.உ.சாமிநாதையரின் என் சரித்திரம், பாபரின் பாபர் நாமா போன்ற நூல்கள் வரலாறு எழுத பயன்படுவதோடு ஒரு குறிப்பிட்ட காலத்தை அறிவதற்கான வரலாற்று நூல்களாக திகழவும்செய்கின்றன. இது போன்ற நூற்களின் வரிசையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகள் எனும் சுயசரிதையையும் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளலாம்.

தற்போது கிடைக்கும் சுயசரிதை நூற்களை இவ்வாறு வகைமைப்படுத்திக் கொள்ளலாம் :

1. தனிமனிதர் தினந்தோறும் தன் தினசரி வாழ்க்கையைப் பதிவு செய்கின்ற டைரி அதாவது நாட்குறிப்பு. இது உள்ளதை உள்ளபடி பதிவுசெய்வது. ஆனந்தரங்கம் பிள்ளை நாள்குறிப்பு இவ்வகையைச் சேர்ந்தது.

2.. ஒரு குறிப்பிட்ட வயதை அடைந்ததும் தன் வாழ்க்கையைத் தனது ஞாபகத்திலிருந்து கோர்வையாகச் சொல்லுகின்ற முறை. மகாத்மாகாந்தியின் சத்தியசோதனை நூல் இவ்வகைக்குச் சான்று.

3. தன் வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகள் பற்றி மட்டும் சொல்லுகின்ற தன்மை. அல்லது தான் பின்பற்றும் கருத்துகளுக்கு அல்லது இயக்கத்தைத் தழுவுவதற்கு இதுதான் காரணம் என தனது வாழ்க்கையனுபவத்தைக் கூறி விளக்கும் பாங்கு. இதற்கு எடுத்துக்காட்டாக, உயர்பதவி வகித்தோர் அல்லது குறிப்பிட்ட துறை சார்ந்த வல்லுனர் தனது அனுபவங்களை அல்லது குறிப்பிட்ட விவகாரங்களைக் கையாண்ட விதம் போன்றவற்றை எழுதுவது . எடுத்துக்காட்டு- Native Life in Travancor என்ற நூல் எழுதியவர் Samuel Mateer என்பவர்.

இவற்றுள் டைரி வகையிலான வாழ்க்கைப் பதிவுகள் நம்பத்தகுந்தன. காரணம் அந்தந்த நாள்களில் நடந்தவற்றைப் பதிவு செய்வதை மட்டுமே அவை நோக்கமாகக் கொண்டிருக்கும். வேறு நோக்கமற்றவை. இவை குறைந்த அளவிலேயே நமக்குக் கிடைக்கின்றன.

இரண்டாம் வகையிலான சுயசரிதை நூற்களைப் பொறுத்தவரை , எழுதுவோர் குறிப்பிட்ட வயதில் தமது நினைவுகளைக் கோர்வையாக்கி எழுதப்படுபவை. இவை பெரும்பாலும் இவற்றை எழுத வேண்டும் இவற்றை எழுதக்கூடாது என்ற சுயக்கட்டுப்பாட்டின் மூலம் எழுந்தவை. என்றாலும் கூட உண்மையை நெருங்கி எழுதப்படுபவை . இந்தவகையில் எழுதப்பட்டதுதான் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரது சுயசரிதையான நினைவுக்குமிழிகள் எனும் நூல்! இது இருபதாம் நூற்றாண்டுக்குரிய பரந்துபட்ட வரலாற்றின் ஒரு சிறுபகுதியைப் பதிவுசெய்யும் ஆவணமாகவே திகழ்கிறது என்று சொல்லமுடிகிறது.

வரலாறு என்பது ஒரு சமூகத்தினுடைய பொது நிகழ்வுகளை அல்லது நாட்டில் நிகழக்கூடிய பொதுநிகழ்வுகளைச் சுட்டுவதாக இருக்கும். அந்தப் பொதுநிகழ்வு தொடர்பான நுண்ணியச் செய்திகளை அல்லது தனிப்பட்டச் செய்திகளை வரலாறு காட்டாது. பொது நிகழ்வுகள் தொடர்பான செய்திகளைப் பார்க்க வேண்டுமென்றால் தன்வரலாற்று நூல்களில் மற்றும் அந்த காலத்தில் உள்ள நாட்டுப்புறப் பாடல்களிலும் கதைகளிலும் மட்டுமே பார்க்க முடியும். எடுத்துக்காட்டாக ,1881 இல் முதன் முதலில் திருவிதாங்கூரில் மக்கள் தொகை கணக்கெடுப்பு நடந்ததாகச் சொல்லப்படுகிறது. வரலாற்று நூல் அதோடு முடித்துக் கொள்ளும். மக்கள் தொகை கணக்கெடுப்பு நடத்தப்பட்ட காலத்தில் மக்கள் எந்த மாதிரியான மனநிலையை கொண்டிருந்தார்கள், அங்கு நடந்த குழப்ப நிலை என்ன என்பதை எல்லாம் தனிநபர்கள் வாழ்க்கைக் குறிப்புகளிலும்தான் பார்க்க முடியும். எனவே சுயசரிதை நூற்கள் வரலாறு தொடர்பாக நுணுக்கமான தகவல்களைத் தருவதைப் புரிந்துக்கொள்ள முடிகிறது. அந்தவகையில் நினைவுக்குமிழிகள் நூல் வரலாறு தொடர்பாக கூடுதல் செய்திகள் தருவதாக அமைந்திருப்பதோடு இருபதாம் நூற்றாண்டில் 1916 ஆம் ஆண்டு தொட்டு சுமார் 80 வருடகாலம் ஏறத்தாழ இரண்டு மூன்று தலைமுறைகள் காலகட்டம் எவ்வாறு இருந்தது என்பதைப் பதிவுசெய்திருப்பதோடு வரலாற்று ஆவணமாகவே திகழ்கிறது. பொதுப்படையான வரலாற்றில் இருந்து அவரது தனிப்பட்ட வாழ்க்கை எவ்வாறு இருந்தது என்பதையும் பொது வரலாறு பதிவு செய்த தவறியவற்றையும் நினைவுக்குமிழிகளில் காண முடிகிறது.

பேராசிரியர் வாழ்ந்திருந்த கிராமங்களின் அமைப்பு, பழக்கவழக்கங்கள்.. கல்விமுறை, கல்விநிறுவனங்கள், அரசு அலுவலகங்கள்..சமூகப் பண்பாடு, நம்பிக்கைகள், அரசியல்தலைவர்கள், இலக்கிய ஆளுமைகள், முக்கியமான நகரங்கள் மற்றும் வாழ்வியல் போன்ற பல்வேறு செய்திகள் பதிவாகியுள்ளன. இந்த செய்திகள் இரண்டு நிலைகளில் பயனாகின்றன. 1-பேராசிரியர் அடையாளப்படுத்தும் பண்பாட்டு நிகழ்வுகள் இப்போது நீடித்திருக்கின்றனவா என்பதையும் அவர் வாழ்ந்த காலத்திலிருந்து தற்கால சமூகம் அல்லது நாடு எந்த அளவிற்கு மாறி போயிருக்கிறது என்பதை அறிய முடியும் 2.முக்கிய ஆளுமைகள் பற்றி இதுவரை தெரியாத புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ளமுடியும் .

இந்த சுயசரிதையான நினைவுக்குமிழிகள் தமிழக அரசின் சிறந்த நூல்களுக்கான விருதையும் பெற்றுள்ளது என்பதை இவண் சிறப்பாகச் சுட்டிக்காட்டியாக வேண்டும். இந்நூல் பாகம் 1,2,3,4 என நான்கு பகுதிகளாக வெளிவந்துள்ளது.

இனி நினைவுக்குமிழிகள் பதிவுசெய்துள்ள சமூக உண்மைகளுள் தேர்ந்தெடுக்கப்பட்டவற்றை மட்டும் விளக்கலாம். இதன் மூலம் அவரது சுயசரிதை வரலாறு சார்ந்தும் பயன்படும் என்பது உறுதியாகிறது.

**I**) பண்பாட்டுச் செயல்பாடுகள்- ஒரு சமூகமக்கள் ஒன்று சேர்ந்து எவ்வாறான திருவிழாக்கள் நடத்தியுள்ளர் என்பதை நினைவுக்குமிழிகள் பதிவுச்செய்துள்ளமை கவனிக்கத்தக்கது -

1. முயல்வேட்டைத்திருவிழா. பெரகம்பி ஊரின் கிழக்கு பக்கத்தில் அரிஜன மக்கள் ஏராளமான பேர் வாழ்ந்திருந்தனர். ஒற்றுமை மிகுந்த அவர்கள் நிலச்சுவான்தார்களைச் சார்ந்து வாழ்ந்தார்கள். ஆண்டுதோறும் சித்திரை மாதம் அன்று இவர்கள் நடத்தும் முயல் திருவிழா கண்கொள்ளா காட்சியாக இருக்கும். அவர்கள் ஆட்டமும் பாட்டமுமாக சிலம்பாட்டம் விளையாடுவதும் கத்தி வீச்சும் செய்வது காண்போர் கண்களுக்கு விருந்தாக இருக்கும்.

2. காமன்பண்டிகை. காமன் பண்டிகை இக்காலத்தில் கொண்டாடப்படுவதில்லை. ஆனால் கழிந்த காலத்தில் சிறப்பு பெற்றிருந்த இப்பண்டிகை எந்த மாதத்தில், எந்த முறையில் கொண்டாடப்பட்டது என சிறப்பாக விளக்கப்படுகிறது.

இந்த பண்டிகை வாவணி என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது. மாசி மாதம் இது பெரகம்பி ஊர் வட்டாரத்தில் நடைபெற்று வந்தது. நேராக உள்ள கரும்புகளின் தோகைகள் வெளியில் தெரியுமாறு வைக்கோல் பிரியைச் சுற்றி ஒரு தூண் போலாக்கி நட்டு அதைச் சுற்றிலும் ஒரு பீடம் அமைக்கப்படும். அது எரிக்கப்படும் வரை நாள்தோறும் விளக்கேற்ற பெற்று தீபாராதனை செய்யப்படும். மன்மதன் ரதி வேடம் போட்டுக்கொண்டு நாள்தோறும் பொருத்தமான பாடல்களை பாடிக் கொண்டு வீடு தோறும் நிதிவசூலித்து வருவார்கள். இந்த வசூலை கொண்டு தான் விழா நடத்தப்பட வேண்டும். விழாவின் இறுதி நாளன்று தென்னை இளங்குருத்தோலைகளாலான ஒரு பெரிய தேர் வேயப்பட்டு வைக்கப்பட்டிருக்கும். பிறகு காமன் தீக்கொளுத்தப்படுவான். அதாவது வைக்கோல் பிரியாமல் சுற்றப்பட்ட கரும்பு தீவைக்கப்படும். பிறகு ரதி வேடம் போட்டவர் புலம்பி அழுகிற ஒப்பாரிப்பாடல் பாடுவார். இதைக் கேட்பதற்கு ஊர் மக்கள் பெருமளவு திரண்டிருப்பர். இந்நிகழ்விற்குப் பிறகு வாதம் புரிகிற நிகழ்ச்சி நடக்கும். எரிந்த கட்சி எரியாத கட்சி என்ற இரு பிரிவாக பிரிந்து வாதம் புரிவர். எரிந்த கட்சியினர் மன்மதன் அழிந்து போய்விட்டான் என்று வாதம் புரிவர். எரியாத கட்சியினரோ மன்மதன் கண்ணுக்கு புலனாகாமல் இன்றும் வாழ்கிறான் என்று சாதிப்பார்கள். இருதரப்பினருமே தங்கள் பாடல்கள் பாடி தங்கள் வாதங்களை முன் வைப்பர். விடியும் வரை இந்த நிகழ்ச்சிகளை மக்கள் உறங்காமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள். (பக்.51. பாகம்1)

3. திருவிழாக்கள்- கோவில் திருவிழாவைப் பொறுப்பேற்று நடத்துவது அந்தஸ்தாக இருந்துள்ளது. கோவில்களில் திருவிழா நடத்துவது தொடர்பாக இருவேறு சாதிகளிடையே மோதல்கள் நிகழ்ந்துள்ளன.தங்கள் தரப்புக்கு நீதிகிடைக்க போலிஸ் ஸ்டேஷனுக்கும் நீதிமன்றத்திற்கும் அலைந்துள்ளனர். அதற்காகப் பெரும் பணம் செலவழித்துள்ளனர்… ரெட்டியார்களுக்கும் அரிசனங்களுக்கும் விவசாயம் தொடர்பாக மோதல் போக்கு

நிலவிவந்துள்ளது.. அதைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தரகர்கள் அரிசனங்களிடமிருந்து பணம் உறிஞ்சி வந்துள்ளனர்.ரெட்டியார்களும் அரிசனங்களும் சமாதானமாகி விட்டால் தங்களுக்கு வரும்படி குறைந்துவிடும் என்று போலிசார் செயல்பட்டிருக்கின்றனர்.

4. திருமணம் .ஒரு திருமணமே சமூகத்தில் நடமுறையிருந்தாலும் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் அந்த காலத்தில் இருந்துள்ளது. திருமணமாகி சில ஆண்டுகள் குழந்தை பேறு இல்லாமல் போனால் அந்தப் பழியைப் பெண் மீது போட்டுவிட்டு ஆண்கள் இரண்டாம் தாரம், மூன்றாம் தாரம் வரை திருமணம் செய்து கொள்வது உண்டு .

**II**) உணவுமுறை .. இருபதாம் நூற்றாண்டில் திருச்சி வட்டாரத்தில் பெரிய செல்வந்தர்கள் உள்பட மதிய உணவானது கம்பு,கேழ்வரகு ஆகியவற்றின் மாவினால் தான் தயாராகியுள்ளது.. அரிசிச் சோறு அபூர்வமாகவே உண்டு வந்துள்ளனர். இதற்கு அதிகக் காய்கறி தேவையில்லை என்பதற்காக இருக்கலாம் . மறுநாள் பழையதுக்கும் சுகமாக இருக்கும் என்ற எண்ணத்திலும் இப்படி பயன்படுத்தியிருக்கலாம்.

**III) பழக்கவழக்கங்கள்:**

1) .நீந்தக்கற்றல். இன்றைய காலத்தில் நீச்சல் பயிற்றுவிப்பதற்கு எத்தனையோ முறைகள் உள்ளன. ஆனால் 1920 களில் நீச்சல் பயிற்றுவித்த முறையை வாசிக்கும் போது வியப்பேற்படுகிறது….இதை பேராசிரியர் கூற்றாகவே பார்ப்போம்.. ‘’ஐந்து வயது முதல் அல்லது ஆறு வயது முதலே என் தாய்மாமன் எனக்கு நீந்தக் கற்றுக்கொடுத்து விட்டார். சுரைக்குடுக்கையை வலைப் பின்னலால் மூடி அதை முதுகுப்புறமாக இடுப்பில் கட்டி கிணற்றில் இறக்கி விடுவார். நான் காலையும் கையையும் எப்படி இயக்க வேண்டும் என்று சொல்லித் தருவார். சில நாட்கள் வரை இப்படி நடைபெறும். அடுத்து இடுப்பளவு உள்ள தண்ணீர் உள்ள கிணற்றில் சுரைகுடுக்கையின்றி நீந்தவிடுவார். இதில் தேர்ச்சி பெற்றதும் சற்று ஆழமாக உள்ள நீர் கிணறுகளில் இந்த பயிற்சி நடைபெறும். ஒன்றிரண்டு மாதங்களில் நன்றாக நீந்தத் கற்றுக் கொண்டேன். சிற்றூர்களில்அந்த காலத்தில் நீந்தத் தெரியாதவர்களே இலர்!!

2.) சிறுவர் விளையாட்டுப் பொழுதுப்போக்குகள்

இளமையில் விளையாட்டுகளைக் கடந்துவராத மனிதனே எனலாம். தற்காலத்திலிருந்து முற்றிலும் வேறுபட்ட பரம்பரையான விளையாட்டுகள் இருபதாம் நூற்றாண்டில் இருந்துள்ளன.

கிட்டிப்புள் விளையாட்டு, பம்பர விளையாட்டு ,பிள்ளையார் பந்துவிளையாட்டு, ஆட்டைப் பிடிப்பேன் கோனாரே,கால் தூக்கும் கணக்கப்பிள்ளை,பீச்சுக்குழல் விளையாட்டு, உருவம் அமைத்தல் என்பன போன்ற விளையாட்டுகளைப் பதிவு செய்துள்ளார் பேராசிரியர்

பெருந்தகை!! இந்த விளையாட்டுகள் எல்லாம் எப்படி விளையாடப்பட்டன என்று நினைவு குமிழிகள் நூலில் அறிந்து கொள்ள முடிகிறது. (நினைவுக்குமிழிகள் பாகம் 1 பக். 55, 56, 57).

பொன்வண்டு எனப்படும் ஒருவகையான வண்டைப் பிடித்து வீட்டில் பொழுதுபோக்காக வளர்த்தல் மற்றும் பட்டம் பறக்கவிடுதல் போன்றன சிறுவர்களுக்கு வழக்கமாக இருந்துள்ளன. ஒரே நேரத்தில் பல பொன்வண்டுகள் வைத்திருக்கும் வழக்கம் இருந்தது. அவற்றிற்கு இரையாக இலைகளைக் கொடுக்கும் வழக்கம் இருந்தது.( பாகம்1 பக்.157.)

### IV) ஆசிரியரும் முறையும், கல்வியமைப்பு முறையும்:

திண்ணை பள்ளிக்கூடம் அந்த காலத்தில் அதாவது 1920 களில் நடப்பில் இருந்துள்ளது. விடியற்காலை ஐந்தரை மணிக்கு வகுப்பு தொடங்கி விடும். முதல் வருடம் மணலில்தான் கைவிரலால் எழுதி தமிழ் எழுத்து நெடுங்கணக்கையும் ஒன்று முதல் நூறு வரையிலான எண் வாய்பாடுகளையும் மாணவர்கள் படித்துக் கொண்டனர். ஒவ்வொரு திங்கள் கிழமை தோறும் மாணவர்கள் தாங்கள் எழுதிப் பழகிய மணலை மாற்றி புதிய மணலைப் பரப்ப வேண்டும் இரண்டாம் அல்லது மூன்றாம் ஆண்டில் தான் கற்பலகை) மற்றும் பலப்பம் ஆகியன எழுதப் பயன்படுத்தப்பட்டன. அடுத்த ஆண்டு நோட்டுப்புத்தகத்தில் பென்சிலைக் கொண்டு எழுதப் பழகினர்.எழுதுவதில் கை தேர்ந்ததும் அடுத்த ஆண்டு சநடநைக மை பதித்த பேனாவால் நோட்டில் எழுதப் பழுகினர். எழுதுவதற்கான மை ஆசிரியராலே தயாரிக்கப்படும். கடுக்காயைக் காய்ச்சி அதிலிருந்து தயாரிக்கப்பட்ட மையை சிறிய சுடுமண்ணாலான மைக்கூட்டினுள் வைத்திருப்பர். மையில் தொட்டு தொட்டு மாணவர்கள் நோட்டுப் புக்கில் எழுதிக் கொள்வார்கள். இந்த நோட்டுப் புத்தகங்கள் நான்கு வரி மூன்று வரி இரண்டு வரி ஒற்றை வரி என நான்கு வகையாக இருந்தன. தொடக்கத்தில் நான்கு வரி நோட்டிலும் பிறகு மூன்று வரி நோட்டிலும் பிறகு இரண்டு வரிநாட்டிலும் கடைசியில் ஒற்றைவரி நோட்டிலும் மாணவர்கள் எழுதிப் பழகிக் கொண்டார்கள். மணலில் எழுதும்போதும், கற்பலகையில் பலப்பத்தால் எழுதி பழகும் போதும், நோட்டில் பென்சிலால் எழுதிப்பழகும் போதும் ஆசிரியர் எழுத்தில் கவனம் செலுத்தி மாணவர்களைச் சரிப்படுத்துவார். இதனால் எழுத்துக்களின் சரியான வடிவம் மாணவர்களின் மனதில் சரியாக நிலை நின்று விடும். எழுத்துக்களுக்கு இடையிலேயும் வரிகளுக்கு இடையேயும் அமைய வேண்டிய இடைவெளிகளை எடுத்துச் சுட்டுவார். இதனால் முத்து போன்று அழகான எழுதுவதில் மாணவர்கள் திறம்பெற்றனர் .

ஆசிரியர் பனையோலையால் செய்யப்பட்ட தடுக்கு ஒன்றில் நேராக உட்கார்ந்து இருப்பார்(பக்20: பாகம் 1). இந்த நிலையிலேயே எல்லாவற்றையும் கண்காணித்துக் கொண்டிருப்பார். அந்த காலத்தில் கா.நமச்சிவாயம் முதலியார் என்பவரால் எழுதப்பட்ட நூல்கள்தான் பாடமாக வைக்கப்பட்டிருந்தன. அவர் எழுதிய பாடநூற்கள் பிறமொழிகளிலும்

மொழிபெயர்க்கப்பட்டு அவை பாடநூல்களாக வைக்கப்பட்டிருந்தன. அறிவியல் புவியியல் சமூகவியல் போன்ற பாடங்கள் திண்ணைப் பள்ளியில் இல்லை. ஆசிரியர்கள் உலகநீதி, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, விவேக சிந்தாமணி போன்ற நூல்களைக் கற்பித்தனர்.

மேல் சட்டை அணியும் பழக்கம் கொண்டிருந்தாலும் மேல் சட்டை அணியாத ஆசிரியர்களும் அந்த காலத்தில் இருந்தனர். தொடக்க பள்ளி மாணவர்கள் பலரும் மேலாடை அணியாமலே பள்ளி வந்தனர். பேராசிரியர் சுப்புரெட்டியார் தான் சிறு வயதில் தொடக்கப் பள்ளியில் மேல்சட்டை அணியாமலேயே பள்ளிக்குச் சென்றதாகக் குறிப்பிடுகிறார்.(,பாகம்1 பக் 85). அக்கால ஆசிரியர்கள் கூடுதல் தகுதிகள் கொண்டிருந்தனர். ஜோதிடக்கலையிலோ அல்லது சித்த மருத்துவத்திலோ தேர்ச்சி கொண்டிருந்தனர். அதுபோலவே பிறருக்கு எழுதிக் கொடுக்கும் வழக்கம் கொண்டிருந்தனர். இது போன்ற செயல்கள் மூலமும் அவர்களுக்கு வருமானம் கிடைத்து வந்தது.

கல்வி முறை 1940 கள் வரை முதலாம் படிவம் இரண்டாம் படிவம் மூன்றாம் படிவம் நான்காம் படிவம் என்றிருந்தன. மூன்றாம் படிவம் என்பது 8 ஆம் வகுப்பைக் குறிக்கும். நான்காம் படிவம் என்பது 9 ஆம் வகுப்பைக் குறிக்கும். தனிநபர்கள் நடுநிலைப்பள்ளி தொடங்க வேண்டும் என்றால் அரசு கணக்கில் 10 ஆயிரம் ரூபாய் டெபாசிட் செய்யப்பட வேண்டும். பதிவு பெற்ற குழு ஒன்றை அமைத்து அந்த குழுவின் கீழ் கல்விநிர்வாகம் செயல்பட வேண்டும். மாணவர்கள் விளையாட ஐந்து ஏக்கர் பரப்பு கொண்ட நிலம் பள்ளிக்கு இருக்க வேண்டும். அரசு வகுத்துள்ள திட்டப்படி ஆசிரியர்களுக்குச் சம்பளம் அளிக்க வேண்டும்.

இலவசக் கல்வி அன்றைய காலத்தில் இல்லை.1941 இல் ஒன்று முதல் மூன்று படிவம் வரை படிக்கும் மாணவர்களின் கல்விக்கட்டணம் 2ரூபாய் 75 பைசா! நான்கு முதல் ஆறு படிவம் வரையில் படிக்கும் மாணவர்களுக்குக் கல்வி கட்டணம் 5 ரூபாய் 25 பைசா! இது தவிர ஒவ்வொரு பருவத்திலும் நூலகக் கட்டணம் 8 பைசா, விளையாட்டுக் கட்டணம் 12 பைசா, தேர்வுக்கட்டணம் 1 ரூபாய் ஆகியவற்றை மாணவர்கள் செலுத்த வேண்டியிருந்தது.

வக்கீல் அலுவலகங்களில் எழுத்தர்ப்பணிக்கு மூன்றாம் படிவம் படித்து இருந்தாலே போதும். அதாவது எட்டாம் வகுப்பு! இந்தப் பணியை ஐந்தாம் வகுப்பு படித்தவர்கள் பார்த்து வந்தார்கள்.

**VI) சமூகங்கள் பற்றிய பதிவு-**

இன்றைய காலத்தில் சமூகங்கள் பற்றி மிகவும் புகழ்ந்து பேசப்படுகின்றன.. ஆனால் பிறிதொரு சமூகம் பற்றி குறிப்பிடும் போக்கு குறைவாகவே உள்ளது. ஆனால் பல்வேறு சமூகம்

சார்ந்த உயர்ந்த மனிதர்கள் பற்றி வெளிப்படையாகவே நினைவுக்குமிழி பேசுகிறது. தனி மனிதர்களை அவர்கள் சார்ந்த சாதியின் பெயரால் ரெட்டியார் அவர்களே, செட்டியார் அவர்களே என்பன போன்று அழைப்பது அக்கால வழக்கமாக இருந்துள்ளது.

கோமுட்டிச் செட்டியார் மற்றும் செட்டியார்கள் பற்றிய சுவையான செய்திகள் பல உள்ளன. கோமுட்டிச் செட்டியார் சமூகம் பற்றி தனது அனுபவத்தை முன்னிறுத்தி பேசுகிறார் பேராசிரியர் . " நான் என் தாய் மாமன் வீடு திரும்பும் போது ஒரு கோமுட்டிச் செட்டியார் சிறந்த முறையில் தயாரிக்கும் நெய் பிசுகோத்தை (வெண்ணெய்) வாங்கி வந்து என்னிடம் தந்து விட்டுப் போவார்."

பிராமண சமூகத்தவர்களுள் மிகுந்த நேர்மையும் பிறருக்கு உதவும் தன்மை கொண்டவர்களும் இருந்துள்ளன்னர். அதேவேளை நிறைய பிராமணர்கள் குறுகிய மனப்பான்மையிலேயே இருந்துள்ளனர். பிராமணர்களுள் பலர் ஆதிக்க மனப்பான்மையுடன் இருந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. பிராமணர்களது கோட்டை தகர்க்கப்பட வேண்டும் என்றும் அதற்காகப் பெரியார் நெடுங்காலம் வாழவேண்டும் என்று பதிவு செய்கிறார் பேராசிரியர்.

திருச்சி மாவட்டத்தில் ரெட்டியார் சமூகத்தில் 1930 களில் மூன்று பேர் மட்டுமே பட்டதாரிகள். மூவரும் சட்டம் படித்தவர்கள். ஜமீந்தார் குடும்பத்தவர். ரெட்டி நலச்சங்கம் என்ற அமைப்பு மாணவர்கள் படிப்புக்கு உதவிவந்தது.

### VII) பாம்பு கடித்தல்:

இந்திய சமூக அடையாளத்துள் பாம்புக்கும் ஒரு பங்குண்டு. பாம்பை வழிபடுதல் தவிர பாம்பு கடித்தல் இந்தியாவில் சகஜமாக நிகழ்ந்துவந்துள்ளமையை வெளிநாட்டினர் குறிப்புகளும் இந்திய மருத்துவக்குறிப்பேடுகளும் சுட்டிக்காட்டுகின்றன. நாகேந்திரன் பாம்புப்புற்று, சர்ப்பதோஷம் ,பாம்பாட்டி பாம்பு வித்தை என்பதெல்லாம் நம் சமூகத்தில் சாதாரண விஷயம்.. பாம்பு கடித்து இறந்தவர்கள் நிறைய பேர்.. பாம்பாட்டிகளின் நாடு இந்தியா என்று சொல்லப்படுவதுண்டு.. அதை உறுதிப்படுத்துவது போல பேராசிரியரின் குறிப்பு உள்ளது.. பாம்பு கடித்து இறந்து போனவர்கள் பற்றி அவர் பேசுகிறார்."பெரகம்பி நண்பர்களில் வரகுப்பாடி கிருஷ்ணசாமியும் மொட்டை ரெட்டியார் வீட்டு ரங்கசாமியும் பாம்பு கடித்து இறந்தார்கள். இவர்களைத் தவிர வேட்டக்குடித்தம்பு என்ற பணக்காரர் ஒருவரும் வேறு சிலரும் பாம்பு கடித்தே மரித்தனர் என்ற செய்தியும் எனக்கு எட்டியது. இந்த செய்திகள் அடிக்கடி என் கனவில் வரும்."

**VIII) பொருள்களின் விலை:**

இருபதாம் நூற்றாண்டில் விலைவாசிகள் எவ்வாறு இருந்தன என்பதை நினைவுக்குமிழி மூலம் அறிந்துக்கொள்ளமுடிகிறது. 1930 களில் பொருட்களின் விலைகள் எவ்வாறு இருந்தது, கல்விக்கட்டணம் எவ்வாறு இருந்தது என்பன போன்ற செய்திகளைப் பெறமுடிகிறது. நினைவுக்குமிழியில் பல இடங்களிலும் விலைகள் பற்றி பேசப் படுகின்றது. சைக்கிள் விலை 28 ரூபாய்!! ஒரு அறைக்கு மாத வாடகை 3 ரூபாய்! இருவர் தங்கும் அறைக்கு 5 ரூபாய்! காரின் விலை 1500 ரூபாய்! ஒரு காலன் பெட்ரோல் விலை 14 அணா, அதாவது 88 பைசா! ஒரு சவரன் பவுன் விலை 12 அல்லது 13 ரூபாய். ஆங்கில பத்திரிகையான ர்னௌெர வுக்கு மாத சந்தா 4 ரூபாய். கல்லூரியில் பயில ஆண்டொன்றுக்கான கல்விக்கட்டணம் 90 ரூபாய்! உணவு விடுதியில் மாதம் 10 ரூபாய்க்கு இரு நேரம் உணவு சாப்பிடலாம்.! நார்க்கட்டிலின் விலை 2 ரூபாய். 1940 இல் கொசுவலையின் விலை 6 ரூபாய்!! கல்லூரி விடுதியில் இருப்பிடம் மற்றும் உணவுக்காக மாதம் 25 ரூபாய் வசூலிக்கப்பட்டது.. சென்னையில் உள்ள மாம்பலம் மற்றும் சைதாப்பேட்டை இடையே மின் இரயிலில் பயணம் செய்ய 3 பைசா ஆகும். நடுநிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் பணிக்கு மாதம் 40 ரூபாய் சம்பளம்! பள்ளி மாணவர் விடுதியில் சமையல் செய்த பிறகு மாத சம்பளம் ரூபாய் 25! 1950 களில் திருச்சியில் இருந்து காரைக்குடிக்கு இரயில் மூலம் பயணநேரம்-3மணி 15 நிமிடம்

**IX) நம்பிக்கை:**

மக்கள் சோதிடத்தில் பெரும் நம்பிக்கை வைத்திருந்தனர்.சோதிட ஆலோசனை பெற பணம் நிறைய செலவழித்துள்ளனர். ஜோதிடர்கள் கூறியது போலவே வாழ்க்கையிலும் செயல்பட்டு வந்துள்ளனர்.பேராசிரியர்.ந.சுப்புரெட்டியாரது மைத்துனர் வாழ்க்கை அதற்கு உதாரணமாகத் திகழ்கிறது. ஜோதிட நம்பிக்கைகளை வைத்து பிறரை ஏமாற்றி இருக்கிறார்கள். தமது குடும்பமும் அவ்வாறு பாதிக்கப்பட்டது என்பதை பேராசிரியர் பதிவு செய்துள்ளார். தனது சாதகத்தைப் பார்த்தவர்கள் தனக்கு மக்கள் பேறு கிடையாது என்றும் 37 வயதில் இறந்து விடுவேன் என்றும் கணித்ததாகக் குறிப்பிடுகிறார்

**X) ஆளுமைகளுடனான அனுபவங்கள்:**

இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த பெரும் தலைவர்கள் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. அவர்களை நேரடியாகப் பார்த்து பதிவு செய்திகளாக உள்ளன. பன்மொழி திறம் கொண்ட கா. அப்பாத்துரை அவர்கள் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் படித்தவர்.அவரது ஆசிரியப் பயிற்சிக்கான கட்டணத்தை சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகமே செலுத்தியுள்ளது. ஆனாலும் குறிப்பிட்ட காலத்தில் பணம் தராததால் கஷ்டப்பட்டு இருக்கிறார்

அப்பாதுரை அவர்கள். பருத்த உடலும் குள்ளமான உடல் தோற்றமும் கொண்டவர் அப்பாதுரை. 40 வயதை நெருங்கிய வேளையில் தான் ஆசிரியர் பயிற்சி பெற்றிருக்கிறார். விளையாடும் போது கீழே விழுந்து இருபது நாட்கள் ஆஸ்பத்திரியில் இருந்திருக்கிறார். தமிழ் இந்தி ஆங்கிலம் என மூன்று மொழிகளில் சரளமாக உரையாடும் திறன் கொண்டவர்.

பாரதிதாசன் பற்றிய நேரடி அனுபவம் பதிவாகியுள்ளது.. பாரதிதாசன் அன்றைய காலத்தில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பணியாற்றிய பள்ளியில் உரை நிகழ்த்தியுள்ளார். கவிதை இயற்றுவதில் பல அனுபவங்களையும் சுவையுடன் எடுத்துக்காட்டிக் கேட்போரை அனுபவிக்கச் செய்தார்.

மாலை நேரங்களில் பாரதிதாசனும் பேராசிரியர்.ந.சுப்புரெட்டியாரும் பல இடங்களுக்கும் நடந்தே போவார்கள். சமுதாய சீர்திருத்தத்திற்கான திட்டங்கள் பற்றி பல பேசுவார் பாரதிதாசன். அவையெல்லாம் பயங்கரமானவை.நம் நாட்டிற்கு சிறிதும் ஒவ்வாதவை.

### XI) அரசு அலுவலகங்கள்:

1940 களில் அரசு அலுவலகங்களில் லஞ்சம் வாங்கும் வழக்கமிருந்தது. அதுபோலவே இலஞ்சம் ஏற்காமல் நேர்மையோடு வாழ்ந்தவர்கள் இருந்துள்ளனர்.. பதினைந்து நாட்கள் இராமச்சந்திர ஐயர் வீட்டில் தங்கியிருக்கும் போது அவரது குடும்பநிலை அன்றாட வாழ்க்கையைச் சிரமத்துடன் நடத்தியது போன்ற விவரங்களை அறிந்தேன்.அவருக்கு ஆறு புது வேட்டிகளை அனுப்பி வைத்தேன். இராமச்சந்திர ஐயர் எதையும் ஏற்றுக்கொள்ளார் என்பதை நான் நன்கு பழகி இருந்ததால் அறிவேன் .கைசுத்தமான ஒருவரை அக்காலத்தில் கண்டது வியப்பிலும் வியப்பாக இருந்தது. அன்றைய நிலையில் மேல் மட்டத்தில் இருந்து கீழ்மட்டம் வரை வந்தாலும் நடைபெற்று வரும் கையூட்டு கூத்துக்களை நினைக்கும் போது ராமச்சந்திர ஐயரின் நல் தொண்டு இமயமலை அளவு உயர்ந்து காணப்பெறுகின்றது. (பக் 112 . பாகம் 2)

### XII) தகுதியான அரசியல்வாதிகளை அல்லது இலக்கிய வாதிகளை அடையாளப் படுத்தல்..

அரசியல் காரணங்களுக்காக ஒரு தலைவரை புகழ்வதும் தாழ்த்துவதும் அரசியல் உலகில் சகஜம். அரசியலுக்கு அப்பால் நின்று ஒரு அரசியல்வாதியைப் புகழ்வதுதான் சரியான ஒன்றாக இருக்கமுடியும். அந்த வகையில் காமராஜரை பற்றி இப்படி அடையாளப்படுத்துகிறது நினைவுக் குமிழிகள்-"1962 வரையில் ஒரு சிறு முற்போக்கு வகுப்பினர் கல்விக்கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. பெருந்தலைவர் -மக்கள் நிலையை நன்கறிந்த மாண்புமிகு முதலமைச்சர் காமராசர் ஆட்சியில் இவர்கட்கும் சலுகை ஏற்பட்டது. அவர் ஆட்சிக்காலத்தில் உயர்நிலை மாணாக்கர்கள் சில சிறப்புக் கட்டணங்களை தவிர கல்வி பெறுவதற்கான சிறப்பு கட்டணம்

செலுத்த தேவையில்லை என்ற நிலை ஏற்பட்டது. முற்போக்கு சாதியை சேர்ந்த பெற்றோர்களின் வாய்கள் இன்றும் திருமகனை வாழ்த்திக் கொண்டே இருக்கும்.(பக் 116,117 பாகம் 2).

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் எம் ஏ தமிழ் தொடங்குவதற்கு காங்கிரஸ் அமைச்சரவை உதவுவதாக இல்லை. திராவிட ஆட்சி காலத்தில் தான் கலைஞர் முதல்வராக இருந்த காலத்தில்தான் அதற்கான மானியம் கிடைத்தது. திருப்பதியில் தமிழில் உயர் கல்வி ஆய்வு போன்றவைகளுக்கு வழியமைந்தது.

**XIII) நீதிமன்றங்கள்:**

நீதிமன்ற வழக்குகள் மிகுந்த செலவுபிடித்த்தாக இருந்துள்ளன. அன்றைய காலத்தில் நீதிமன்றங்களில் சாட்சி சொல்லுவதையே தொழிலாகக் கொண்ட கள்ளச்ச்சாட்சியாளர்கள் இருந்தனர். 1940 களிலேயே மானநஷ்ட வழக்கு போடும் வழக்கத்தில் இருந்துள்ளது. அக்காலத்திலேயே கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் நீதிமன்றங்கள் மூலம் ஜீவனாம்சம் பெற்றிருக்கிறார்கள்.

**XIV) தமிழ்க்கல்வியாளர்கள்:**

பல இடங்களிலும் தமிழில் புலமைபெற்ற அறிஞர்களை அடையாளப்படுத்துகிறது. மறைமலையடிகள் கல்விநிறுவனங்களில் சொற்பொழிவாற்ற பெற்ற ஊதியம் மிகவும் அதிகமாக இருந்தது.

1940-50 களில் பாரதியார் போன்றோரது தற்காலக் கவிதைகளைப் புலவர்கள் அதிகமாக மதிப்பதில்லை.பெரும்பான்மையான புலவர்கள் பத்தாம் பசலிகளாக இருந்தனர். பண்டை இலக்கியங்கள், பிற்கால காவியங்கள், சிற்றிலக்கியங்கள் இவைதான் கவிதைகள் என்று எண்ணியிருந்தனர். கிணத்துத் தவளைகளாக இருந்த அவர்கள் குளத்தையும் பார்க்க முடியவில்லை.

**XV) இந்திய விடுதலை:**

இந்தியநாடு விடுதலை பெற்றதும் காங்கிரஸ் கட்சித் தொண்டர்கள் எந்த மாதிரியான மனோநிலையைக் கொண்டிருந்தனர் என்பதைப் பதிவு செய்கிறது. புதிதாகச் சுதந்திரம் பெற்ற நாடாதலால் காங்கிரஸ் காரர்கள் சீதையைக் கண்டறிந்த அனுமன் வந்த பிறகு வானரங்கள் மதுவனத்தில் புகுந்து அட்டகாசம் செய்பவர்கள் போல காணப்பட்டனர். காங்கிரஸ் தொண்டர்களிடம் கூட ஆணவம் தலை தூக்கிநின்றது. பணிவோ பண்பாடோ அவர்களிடம் காணப்படவில்லை. தங்கள் தான் சுதந்திரம் வாங்கி தந்த மாமேதைகள் என்று கருதிக் கொண்டிருந்தனர். ( பாகம்- 2 , பக் 222 )

இந்திய நாடு விடுதலை அடைவதற்கு முன்புள்ள நிலை இவ்வாறு குறிப்பிடப்படுகிறது. நாடு அடிமையாக இருந்த போது அரசு அதிகாரிகள் நடந்து கொள்ளும் போக்கிற்கும் இப்போது அரசு அதிகாரிகள் நடந்து கொள்ளும் போக்கிற்கும் மலையளவு வேறுபாடள்ளது . அக்காலத்தில் அரசு அதிகாரிகள் மிக நேர்மையுடன் நடந்து கொண்டனர். இப்போது ஒவ்வொரு நிலையிலும் அரசு குறுக்கிடுவதால் தலைமை ஆசிரியர்களைக் கூட கலவியதிகாரிகள் கண்டு அஞ்சுகின்றனர்.(பக்.228. பாகம் 2)

வெள்ளையர் ஆட்சியில் காரியம் நிறைவேற செல்வாக்கும் கையூட்டும் தேவைப்பட்டன. இவை அதிகாரிகளின் மட்டத்திலேயே நடைபெற்று வந்தன. நாடு விடுதலை பெற்ற பிறகு அதிகாரிகள் மட்டத்திலிருந்து செல்வாக்கு படிப்படியாக அரசியல்வாதிகளின் மட்டத்திற்கு மாறியது. முதலில் செல்வாக்கால் செயல்கள் நடைபெற்றன. நாளடைவில் கையூட்டும் தலையெடுக்க தொடங்கியது.

விடுதலைக்குப் பிறகு இந்தியாவில் காங்கிரஸின் செல்வாக்கு தான் ஓங்கி நின்றது. ஒவ்வொரு மாநிலத்திலும் தனிப்பட்ட ஒருவர் அல்லது ஒரு சிலர் மிக்க செல்வாக்குடன் திகழ்ந்தனர். கட்சி மட்டத்தில், இவர்களே அரசு மட்டத்திலும் செல்வாக்கைச் செலுத்தி செயல்களை நிறைவேற்றி வைத்தனர். தொடக்க காலத்தில் இலாபமற்ற உதவியாக தோன்றியது. படிப்படியாக பண உதவியாக மாறியது. அரசியல் உலகில் பணம் மூட்டைகள் பெருகலாயின. முதலில் இச்செயல் பொதுமக்களுக்கு விளங்காப் புதிராகவே இருந்து வந்தது. (பாகம் 2 பக் 262

**XVI) தொழில்கள்-**

1.) விவசாயம் மற்றும் கால்நடை வளர்ப்பு அந்த காலத்தில் விவசாயம், கால்நடை வளர்த்தல், போன்றவை எவ்வாறு நிகழ்ந்தன என்பது ஆங்காங்கே குறிக்கப்படுகிறது. விவசாயம், கால்நடை வளர்த்தல் போன்றன எவ்வாறு வாழ்வாதரமாக இருந்தன என்பதை நினைவுக்குமிழி விவரிப்பதன் மூலம் ஓரளவு நிலபுலன் கொண்ட குடும்பங்கள் எவ்வாறு விவசாயம் மற்றும் கால்நடை சார்ந்து வாழ்ந்திருந்தன என்பது புலனாகிறது.

‘’தானியங்கள் ,வெல்லம், பயறு வகையறாக்கள் தேவைக்கு மேல் உள்ளவை விற்கப்பெற்று பணமாக்கப்படும். குறைவான விலை காரணமாக ஓராயிரம் ரூபாய் கூட கிடைக்காது. மிளகாய் தோட்டத்திலும், கறிகாய்கள் பிற இடங்களிலும் ஏராளமாகக் கிடைத்தன. பறங்கி, பூசணி சர்க்கரைப் பரங்கி, பழங்கள் மாடி முழுவதும் நிறைந்து கிடக்கும். அவரை ,புடலை,பீர்க்கன் ,வெண்டை, கொத்தவரை, பாகற்காய் இவை அவ்வப்பொழுது விற்கப்பெற்று அன்றாட செலவுக்குப் பணமாக பயன்படும். பரங்கி முதலியவை சேர்ந்தார் போல் விற்கப்படும்.

வீட்டில் கறவை மாடுகள் இல்லாத நாட்களில் இரா. பேராசிரியர் நினைவு கூறும் வகையில் இரண்டு பசுக்களும் மூன்று எருமைகளும் கறந்தன. ஆயர்பாடி போல அவரது தாய்மாமா வீடு திகழ்ந்தது. பால் தயிர் மோர் நெய் இவற்றிற்கு எப்பொழுதுமே குறையில்லை. பெரும்பாலும் ஊர் தேவையானவர்கள் இலவசமாகவே பெற்றுச் செல்வார்கள். மூன்று வயது இருக்கும் போது ஒரு டம்ளரில் நாட்டு சர்க்கரை அளவாக போட்டு அவரது பாட்டி அவரை பசு மாட்டிடம் அனுப்புவார்கள். அவரது தாய் மாமன்தான் பால் கறப்பார். முதலில் அவரது டம்ளர் நிறைய பாலைக் கலந்து விடுவார்கள். அப்படியே சிறிது வெப்பத்துடன் பாலைப் பருகுவார்.

இது போன்ற விவரணங்கள் அக்காலத்தில் இருந்த ஓரளவு வசதியான வீட்டு வாழ்க்கையை நம் கண்முன் நிறுத்துகின்றன

2) வெல்லம் தயாரித்தல்- சர்க்கரை தயாரிக்கும் தொழில் தனிநபர்களால் மேற்கொள்ளப்பட்டு வந்தமை பேசப்படுகிறது. பேராசிரியரின் தாய்மாமன் சர்க்கரை தயாரிக்கும் தொழிலையும் செய்துவந்துள்ளார். அவரைப் பற்றிய சித்தரிப்பின் மூலம் பின்வரும் விபரங்களைப் பெறமுடிகிறது. ”கரும்புப்பாலை காய்ச்சி பாகாக்கி நல்ல பதத்தில் இறக்கி அச்சுக் குழியில் இறக்கி சிறு சிறு அச்சுக்களாலான வெல்லம் தயாரிக்கப்படும். இப்பணியில் தொட்டியில் உள்ள பாகு அச்சாக்கப்பெறும் போது காலதாமதம் ஏற்படும். அப்போது தொட்டியில் உள்ள பாகின் இறுதிப் பகுதியில் ஆடை கட்டும்.

வீட்டுச் செலவுக்கும் பிறவற்றிற்கும் சுமார் மூன்று கொப்பரை வெல்லம் தேவைப்படும். இதற்குரிய கரும்புப்பால் ரஸ்தாளி என்ற வகைக் கரும்பினின்று நன்கு வடிகட்ட பெற்று அதில் ஏலம் கிராம்பு ஜாதிக்காய் இவற்றின் பொடியை கலந்து வெல்லம் தயாரிக்கப்படும். (நினைவுக்குமிழி பாகம்-1 பக் 14,15’)’

**XVII). நகரங்கள் ,கோவில்கள்,சிற்றூர்கள் பற்றிய குறிப்புகள்:**

பேராசிரியர் பல்வேறு நகரங்களுக்கும் திருத்தலங்களுக்கும் பயணம் செய்த அனுபவத்தை விவரிப்பது அக்கால பயணத்தையும் இக்கால பயணத்தையும் ஒப்பிட்டுப் பார்க்க பெரிதும் உதவும். மட்டுமல்ல அவர் சென்றுள்ள திருத்தலங்களின் சிறப்பு மற்றும் அவர் சென்ற காலகட்டத்தில் அந்த திருத்தலம் காணப்பட்ட நிலைமைகளையும் சுட்டிக்காட்டுவது நம்மை அந்த காலத்திற்கே இட்டுச்செல்கிறது. எடுத்துக்காட்டாக, கன்னியாகுமரியில் விவேகானந்தர் சிலை அமைக்கும் முன்பு பாறைகளைச் செதுக்கிக் கொண்டிருந்ததாகச் சுட்டுவார்.

அது போலவே இப்போதுள்ள கன்னியாகுமரியில் இருந்து திருவனந்தபுரம் போகும் சாலையை பேராசிரியர் விளக்கும் பாங்குமுக்கியமானது. இப்போதையநிலையில் நாகர்கோவில்-திருவனந்தபுரம் சாலையின் இருபுறங்களிலும் சில பகுதிகள் தவிர பெரும்பாலும் வீடுகளும்

வியாபார நிறுவனங்களுமாகவே காணப்படுகின்றன. இதே சாலை 60 வருடங்களுக்கு முன்பு எப்படி இருந்திருக்கும் என்பதை யோசிக்கத்தான் முடியும். நினைவுக்குமிழி அந்த பாதையைப் பற்றி பின்வருமாறு விவரிக்கிறது." நாகர்கோவில் வந்து திருவனந்தபுரம் புறப்படுகின்றோம் பேருந்து மூலம்! பேருந்து திருவனந்தபுரத்தை நோக்கிச் செல்லுங்கால் சாலையின் இருபுறமும் அடர்ந்த தோப்புகள், ஓங்கி உயர்ந்த மலை குன்றுகள், பாங்குடன் திகழும் மணல்மேடுகள், பூங்கொத்துகள் குலாவும் குளிர்ச்சோலைகள், குறுக்கும் நெடுக்குமாக வலைப்பின்னல் போன்றுள்ள பாய்ந்து செல்லும் சிற்றாறுகள், கால்வாய்கள் இவற்றைக் கண்டு களிக்கின்றோம். இரு மருங்கும் காணப்படும் ஓங்கி உயர்ந்த பலாமரங்களில் குலை குலையாக தொங்கும் பலாக்கனிகள் நம் உள்ளத்தை கொள்ளைக் கொள்கின்றன. நாகர்கோவிலில் இருந்து சுமார் 50 கல் தொலைவில் உள்ள திருவனந்தபுரம் வரையிலும் இதே சூழ்நிலை தான். சில இடங்களில் பகலவன் கதிர்களும் உள்புகாநிலை!

சில விளக்கங்கள் நினைவுக்குமிழிகளில் நமக்குத் தெரியாத பல விசயங்கள் சுட்டப்படுகின்றன. அதன்மூலம் புதிய விளக்கங்கள் கிடைக்கின்றன. எடுத்துக்காட்டாக- 'வீரப்பாண்டிய கட்டபொம்மன் சிவந்த மேனி கொண்டவர். அதனால் அவரை செவத்தையா என்ற பெயரில் அழைத்துள்ளனர். அவரது தம்பி ஊமைத்துறை கறுத்த மேனி கொண்டவர். அதனால் அவரை கருத்தையா என்று அழைத்து வந்துள்ளனர்.' என்ற விளக்கத்தைச் சுட்டலாம்.

### XVIII) அக்கால அன்றாட வாழ்வியல்:

நினைவுக்குமிழிகளில் பேராசிரியர் தனது வாழ்வை விவரிக்கும்போது அன்றைய கால வாழ்வியல் சூழலில் நம்மை பிணைத்துச் செல்கிறது. அவ்வகையில் அவர் தலைமையாசிரியர் பொறுப்பேற்ற காலகட்டத்தில் நிகழ்ந்த சிறு சம்பவத்தை சற்று இவண் சுட்டிக் காட்டி அவரது சுயசரிதை நூலின் போக்கை அடையாளப்படுத்தலாம்

''நான் பள்ளியில் தலைமையாசிரியராகப் பதவியேற்ற ஒன்றிரண்டு நாட்களில் நடைபெற்ற ஒரு சிறு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. சிறு வயதில் எனது பெற்றோர்கள் எனக்கு வைத்த பெயர் சுப்புரெட்டி என்பது!! நான் திண்ணைப் பள்ளியில் பயின்ற காலத்தில் என்னுடன் போஜரெட்டி நல்லப்பரெட்டி பாப்புரெட்டி முத்துரெட்டி என்ற பெயருடைய நான்கு மாணவர்கள் பயின்றனர் .துறையூரில் உயர்நிலை தொடக்கப்பள்ளியில் ஆசிரியராக சேரும் போது (1930..31) என் பெயர் என் மனதை நெருடியது. வயது முதிர்ந்த கிழவன் என்பது போன்ற வளர்ச்சியை இப்பெயர் உண்டாக்குவதாக எண்ணினேன். என்னைப் பள்ளியில் சேர்க்க வந்த என் ஆசிரியர் பெருந்தகை விகே அரங்கநாத ஐயரிடம் ரெட்டி என்ற சாதி குறிப்பை வெட்டி விடுமாறு வேண்டினேன். அவரும் என் மனக்குமுறலை நன்குணர்ந்து சுப்பு என்ற பெயரிலேயே என்னைப் பள்ளியில் சேர்த்துவிட்டார். தொடக்கத்தில் பள்ளி விட்டதும் நடராச அய்யர் விடுதியின் சிற்றுண்டிக்காக ஒரு கல்

தொலைவிலுள்ள ஊரை நோக்கி மிதிவண்டியில் மெதுவாகச் சென்று கொண்டிருந்தேன்.நான் ஊருக்கு புதியவனாதலால் ஒன்றிரண்டு நாட்களில் ஊரார் என்னை அறிந்து கொள்ள வாய்ப்பில்லை . மிதிவண்டியில் வந்தவர் எதிரில் வந்த சிறுவர்களிடம் ”யாரப்பா உங்கள் தலைமையாசிரியர் ?” என்று வினவ , சிறுவர்கள் சுப்பு என்று சொல்ல அதனைக் கேட்ட அவர் நடராசர் ஐயர் இட்லிக்கடை சுப்பா? முன்குடுமி சோழியன் கடை கா.ஃ.பி ஆற்றுகிற சுப்புவா? என்று நக்கலாகச் சொல்ல மாணாக்கர்கள் கொல்லென்று சிரித்து சென்றதைக் காணநேர்ந்தது. அன்று மறுநாளே பள்ளியில் உள்ள ஆசிரியர் பதிவேட்டில் சுப்பு ரெட்டியார் என்று பெயரை பதிவேட்டில் மாற்றி எழுதிக் கொண்டேன். ரெட்டி என்ற பின்னொட்டு கிழவன் என்ற உணர்ச்சியைத் தருகின்றதே என்று வெறுத்து அதனை வெட்ட தூண்டிய என் மனம் இப்போது கிழவன் என்ற உணர்ச்சியை விரும்பி ஏற்றிருப்பதைச் சிந்திக்கின்றேன்.''

ஆக ,மொத்தநிலையில் நினைவுக்குமிழிகள் நூலை ஆராயும்போது அது வரலாற்றைப் பதிவு செய்வதாகவும் வரலாற்று ஆவணமாகவும் திகழ்வதைக் காணமுடிகிறது. அதேவேளை தமிழிலுள்ள சிறந்த சுயவரலாற்றுநூல் என்பதை உறுதியாகக் கூறமுடிகிறது.

**பயன்பட்ட நூற்கள்:**


1. ந.சுப்புரெட்டியார். - நினைவுக்குமிழிகள் - பாகம் 1
பாரிநிலையம்,சென்னை 1988.),
2. மேலது, பாகம் 2
பாரிநிலையம்,சென்னை 1989.)
மேலது, பாகம் 3
பாரிநிலையம்,சென்னை 1989.)
மேலது, பாகம் 4.
பாரிநிலையம்,சென்னை 1989. ,





*********************************************

# ந. சுப்புரெட்டியார் சிந்தனை வெளிப்பாட்டில் அறிவியல் பயிற்றும் முறை

**முனைவர் வீ. ரேணுகாதேவி,**
**தகைசால் பேராசிரியர்,**
**மதுரை.**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மாணவர்களை அறிவியல் திறனுடைய, சமூகத்திற்குப் பயன்படும் அறிவியல் சிந்தனைகள் உள்ளவர்களாக உருவாக்குவதே ஆசிரியரின் பயிற்று முறையின் முதன்மை நோக்கமாக இருக்க வேண்டும். மாணவர்களிடையே ஒரு கருத்தினை பல செயல் விளக்கங்களுடன் தெளிவுபடுத்தும் விதமாக அறிவியல் கற்பித்தல் முறை அமைதல் வேண்டும் என்பதாக ந.சுப்புரெட்டியார் (ந.சு) முன் வைக்கும் அறிவியல் பயிற்று முறையாக அமைந்துள்ளது.

ந.சுப்புரெட்டியார் அவர்கள் மாணக்கர்களிடையே இக்காலத்தில் மிகவும் வேண்டப்பெறும் "அறிவியல் மனப்பான்மையை" உற்சாகத்துடன் உருவாக்கும் பொருட்டு யாக்கப் பெற்ற நூல் என்னும் முன் மொழிவுடன் "அறிவியல் பயிற்றும் முறை" என்னும் இந்நூலை ஆக்கித் தந்துள்ளார். இதன் முதன் பதிப்பு 1957லும் மூன்றாம் பதிப்பு 2018லும் வெளியிடப்பட்டுள்ளது.

இந்நூல் பதினைந்து இயல்களாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. ஒவ்வொரு இயலிலும் எவையெல்லாம் விவாதிக்கப்பட்டுள்ளன என்பதைப் பற்றி ஆசிரியரே முன்னுரையில் விரித்துரைத்துள்ளார். இவ்விசாரணை ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி மட்டுமே தெரிந்துகொள்ள விரும்பும் வாசகர்களுக்கு, மாணவர்களுக்கு ஒரு திறவு கோலாக அமைந்துள்ளது. அவரது கூற்றின்படி (ப.9)

· முதல் இயலில் பள்ளிகளில் அறிவியல் பயிற்ற வேண்டிய இன்றியமையாமையும்.

· இரண்டாம் இயலில் அது பயிற்றப் பெறுவதின் நோக்கங்களும் ஆராயப்பெறுகின்றன.

· மூன்றாவது, நான்காவது இயல்களில் முறையே அறிவியல் பாடத்திற்குரிய பொருள் அறுதியீடு, அறிதியிடப் பெற்றவற்றைப் பல்வேறு முறையில் பாடத்திட்டமாக அமைத்தல் ஆகியவை கூறப்பெற்றுள்ளது.

· ஐந்தாவது இயலில் அறிவியல் பாடத்திற்கே சிறப்பானதும், அறிவியல் துறையிலேருந்தே தோன்றியதுமான "அறிவியல் முறை" பற்றி விரிவாக விளக்கப் பெற்றுள்ளது.

· ஆறாவது, ஏழாவது இயல்களில் அறிவியல் பயிற்றுவதற்கு மேற்கொள்ளப் பெறும் பல்வேறு முறைகள் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளன.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

· ஒன்பதாவது, பத்தாவது இயல்களில் முறையே ஆய்வகம் அமைத்தல், ஆய்வகத்துள் துணைக்கருவிகள், துணைக்கருவிகளைப் பாதுகாக்கும் முறைகள் ஆகியவை விளக்கமாகக் கூறப்பெற்றுள்ளன.

· பதினென்றாவது, பன்னிரண்டாவது இயல்களில் அறிவியல் பாடத்தைச் சுவையுடன் பயிற்றும் விதிகளும் சாதனங்களும் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன.

· பதின்றாவது இயல் அறிவியலைப் பிறபாடங்களுடன் பொருத்திப் பயிற்றலை விளக்குகின்றது.

· பதினான்காவது இயல் அறிவியல் பாடத்தில் மேற்கொள்ளப் பெறும் பழைய முறை புதிய முறைத் தேர்வுகளை எடுத்துரைக்கின்றது.

· பதினைந்தாவது இயலில் அறிவியல் ஆசிரியருக்குத் தேவையான நடைமுறை குறிப்புகள் தரப்பெற்றுள்ளன.

ஒரு பாடத்தை எவ்வாறு மாணவர்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டும் என்பதை தெளிவாக எடுத்துரைத்துள்ளார். இவர் கூறும் இப்பயிற்று முறைகள் இன்றளவும் பின்பற்றுவதற்கு ஏற்றவையாக அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நூலின் பின்னிணைப்புக்களாக நூலில் மேற்கொள்ளப்பெற்றுள்ள கலைச்சொற்கள், மேற்கோள் நூல்களின் பட்டியல், பெருட்குறிப்பு அகராதி, மாதிரிப்பாடக் குறிப்புக்கள் ஆகியனத் தரப்பட்டுள்ளன. இன்று ஆய்வேடுகளில் மேற்கோள்கள் இடம்பெற்ற நூல்கள் பெரும்பாலும் சரியாகத் தொகுக்கப்பெறுவதில்லை. அன்றைய காலக்கட்டத்தில் இவற்றின் இன்றியமையாமையை எண்ணி அவற்றையும் பின்னிணைப்புகளாகத் தந்துள்ளது மிகச் சிறப்பு.

அறிவியல் எவ்வாறு பயிற்றுவிக்கப் பட வேண்டும் என்பதை விளக்குவதற்காக எழுதப்பட்ட நூலுக்கு பயன்பட்ட நூல்களாக தமிழ் இலக்கியங்களான கம்பராமாயணம், நாலடியார், காஞ்சிபுராணம், திருமந்திரம், திருக்குறள், பத்துப்பாட்டு, பாரதி கவிதைகள், பாரதிதாசனார் கவிதைகள், திருவிளையாடற்புராணம், திருவாசகம் தனிப்பாடல் திரட்டு போன்றவையும் நூல் எழுதப்பயன்பட்ட நூல்களாக பட்டியலிடப்பட்டுள்ளன. இ∴து வியப்பிற்குரியதாக உள்ளது. சுப்புரெட்டியார் அறிவியல் மற்றும் இலக்கியங்களில் ஆழ்ந்த வாசிப்பும், அறிவும் கொண்டிருந்தார் என்பதை அறிய முடிகின்றது.

இங்கு பக்க வரையறையை கருத்தில் கொண்டு “ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்” என்னும் பழமொழிக்கேற்ப அறிவியல்முறை, என்னும் ஒரு இயல் மட்டும் உற்று நோக்கி திறனாய்வு செய்யப்பட்டுள்ளது. ஆசிரியர் அறிவியல் பயிற்றும் நோக்கங்களை மனத்திற்கொண்டு எவற்றை, ஏன் கற்பிக்க வேண்டும் என சிந்திக்க வேண்டும் என்கிறார். எந்த முறைகளை

மேற்கொண்டாலும் அவை அறிவியலைப் புரிந்து கொள்வதில கொண்டு செலுத்தும் இறுதி நோக்கத்தைக் கொண்டிருக்க வேண்டும்.

ஆங்கிலத்தில் சயன்ஸ் (science) என்ற சொல் "அறிவு" எனப் பொருள்படும் கிரேக்கச் சொல்லிருந்து பிறந்ததாகும். அச்சொல் இன்றைய காலச் சூழலில் அகிலத்தைப் பற்றியும் அறியும் அறிவு என்ற பொருள் விளக்கத்துடன் வழங்கப்படுகின்றது என சொல் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

விலங்கியல், வானநூல், வேதியியல் போன்று பல பிரிவுகளை உள்ளடக்கியது அறிவியல் என்பது ந.சு.வின் கருத்து இன்று அறிவியல் தாவரவியல், உயிரியல், கணினியியல், உயிரி தொழில்நுட்பம், கணிதவியல், இயற்பியல் என எண்ணிலடங்காப் பிரிவுகளை உள்ளடக்கியதாக உள்ளது. உண்மையான அறிவைத் திரட்டும் முறையே "அறிவியல்" என்று வழங்கப்படுகின்றது.

அறிவியல் முறையில் பல பிரிவுகள் உள்ளன. அவை ஒரே நேரத்தில், ஒரே காலத்தில் ஒரே நேரத்தில் கண்டறியப்பட்டவை அல்ல. எனினும் கூர்ந்து நோக்கும் கால் அறிவியல் முறையில் மூன்று நிலைகள் உள்ளன எனக் கூறுகிறார் ந.சு.அவர்கள்.

முதல்நிலை : அரிஸ்டாட்டிலும் (கி.மு.384-322) ஃபிரான்சிஸ் பேக்கனும் (கி.பி.1561-1628) கண்டறிந்த முறைகள் முதல் நிலையில் உள்ளவை. இம்முறை "உற்று நோக்கல் முறை" என்பதாகும். தொடங்கும் நிலை தெளிவாகவும் பிரச்சனை எளிதாகவும் இருத்தல் வேண்டும். குழந்தைகளுக்கு ஏற்றபடிநிலை இதுவாகும்.

இரண்டாம் நிலை: கலிலியோ (கி.பி.1564-1642) கண்டறிந்த முறை இரண்டாம் நிலை ஆகும். இதை "முயற்சி முறை" (Method of Trial) என்று கூறலாம். இந்நிலையில் பிரச்சனையை தெளிவாகவும், எளிதாகவும் கூறி பரிசீலனை செய்தல் வேண்டும் என்பது நியதி.

மூன்றாம் நிலை: மேற்கூறிய இரண்டு முறைகளும் பயன்படாத போது இந்நிலையை மேற்கொள்ளலாம் என்கிறார் ந.சு. இதை ஐசக் நியூட்டன் (கி.1642-1727) கண்டறிந்த முறை என்பதைக் குறிப்பிடத் தவறவில்லை. இம்முறை "அனுமானங்களை சோதிக்கும் முறை" எனப்படுகின்றது. இம்முறையில் பிரச்சனைக்குத் தொடர்புடைய தகவல்களைத் திரட்டி, அவற்றிலிருந்து விடைகளைக் கண்டு, மிக முக்கியமானவற்றைப் பொறுக்கியெடுத்து, விடைகள் சரியானவையாக இருந்தால் அவற்றின் விளைவுகள் இவ்வாறு இருக்கலாம் என்று உரைப்பது மூன்றாம் நிலையாகும். இங்கு அனுமானங்கள் சோதனைகள் மூலம் பரிசீலிக்கப்பட்டு கிடைக்கும்

விடைகளைப் பிறிதொரு செயலிலும் பொருந்திப் பார்க்கலாம். இம்முறை இன்றைய ஆய்வு நெறிமுறையில் முன்னர் நடைபெற்ற ஆய்வுகளை ஆய்ந்து அதிலிருந்து கருதுகோள்களை உருவாக்கும் நெறிமுறையை ஒத்திருப்பதைக் காணலாம்.

அறிவியல் மூன்று நிலைகளாக யாரால் உருவாக்கப்பட்டு, எவ்வாறு வளர்ந்தது. அவற்றின் படிநிலைகள் என்ன என்பதை தெளிவாக எடுத்துரைக்கும் ந.சு.அவற்றை விரிவாகவும் தெளிவாகவும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் விளக்கிச் செல்கிறார். அவை,

1. பிரச்சனைகளை கையாளப் பெறும்மொழி அறிவித்தல்
2. பிரச்சனைகளைப் பாகுபாடு செய்தல்
3. பிரச்சனைக்குரிய விடைகளின் தொடர்பான தகவல்களைத் திரட்டுதல்
4. தகவல்கள், எடுகோள்கள் விளக்கம்
5. கருதுகோள்கள்
6. முடிவு காணலும் விதிகளை ஆக்கலும்
7. விதிகளைப் புதிய இடங்களில் கையாளுதல்

புதியபாடப் பகுதிகளைக் கற்றல் என்னும் தலைப்புகளில் ஒரு பிரச்சனையை எடுத்துக்கொண்டு அதைப் படிப்படியாக அணுகி ஆராய்ந்து எவ்வாறு தீர்வினைக் கண்டறிவது. கண்டறிந்த தீர்வு அல்லது முடிவுகளை நடைமுறை வாழ்க்கையில் பொருத்திப் பார்க்க வேண்டும் என்னும் விபரங்களைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார். இவற்றை விளக்குவதற்கு அவர் எடுத்துக்கொண்ட பிரச்சனை "இரும்பு துருப்பிடித்தல்" என்பதாகும். இப்பிரச்சனையை மையமாகக் கொண்ட ஒரு அறிவியல் செய்தியை எவ்வாறு மாணவர்களுக்கு கற்பிக்க வேண்டும் என்பது இந்த இயலின் சாரமாகும்.

வீட்டுக் கூரை வேய்வதற்குப் பயன்படும் இரும்புத் தகடுகள் ஏன் துருப்பிடிக்கின்றன என்பது ஏழு நிலைகளில் ஆராயப்படுகின்றது. மாணவர்களின் இடையே உரையாடலைத் தொடக்கி மையப் பிரச்சனையின் மீது கவர்ச்சியைத் தூண்டி அப்பிரச்சனையை அணுக செய்ய வேண்டும். பிரச்சனைகள் மாணவர்களில் அறிவு நிலைக்கு உகந்ததாக "சுருங்கச் சொல்லி விளக்க வைத்தல்" என்னும் முறையில் அமைதல் வேண்டும் என்கிறார் ந.சு.

அறிவியலில் மொழியும் முக்கியம் என்பதையும் வலியுறுத்துகிறார். இன்றைய அறிவியல் பயிற்றுவித்ததில் மொழியைப் பற்றி நாம் கவலை கொள்வதே இல்லை. அறிவியல் துறையில் கையாளப்பெறும் மொழி தெளிவானதாக இருக்க வேண்டும். பயன்படுத்தப்படும் கலைச்சொற்கள் திட்டமானவையாக இருக்க வேண்டும் என உரைக்கும் ந.சு.வின் மொழிநடையும் எளிமையாக தெளிவாக அமைத்திருத்தலை புத்தகம் முழுவதும் காணமுடிகின்றது. மயக்கும் சொற்களையோ, வரிகளையோ எங்கும் பன்படுத்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. தன்னுடைய கருத்துக்களை தானே பின்பற்றும் பாங்கு சிறப்பு. பிரச்சனையைத் தேர்ந்தெடுத்த பின் அவற்றிற்கான

விடையினைக் காண்பதில் எவ்வாறு கருத்தினைச் செலுத்த வேண்டும் என்பதை இந்த இயலின் பிற்பகுதியில் விரிந்துரைக்கின்றார்.

இரும்புத் தகடு துருப்பிடித்தல் என்னும் பிரச்சனையை எவ்வாறு பாகுபாடு செய்யலாம் என்பது இரண்டாவதாக அலசி ஆராயப்பட வேண்டும் என வலியுறுத்தும் இவர் அடுத்து பிரச்சனைக்குரிய விடைகளின் தொடர்பான தகவல்களைத் திரட்ட வேண்டும் என்கிறார் அவ்வாறு தகவல்களைத் திரட்டுவதற்கான அடிப்படைத் திறன்களையும் பட்டியலிட்டுக்காட்டுகிறார்.

திரட்டப்பட்ட தகவல்களிலிருந்து அவற்றை ஆராய்ந்து எடுகோள்களை தீர்மானிக்க வேண்டும். அவ்வாறு தீர்மானிக்கப்பதற்கு மூன்று விதிமுறைகளைக் கையாளலாம் அவை விதிவிளக்குமுறை, விதிவருமுறை, ஒப்புநோக்கு முறை என்பனவாகும். இதில் எந்த ஒரு முறையை கையாண்டாலும் அது காரண காரியத்துடன் இருக்க வேண்டும், விழிப்புடன் கையாள வேண்டும்.

அடுத்து கருதுகோள்கள் பற்றி விளக்கிச் சொல்கிறார். அறிவியல் முறை முன்னர் கூறியபடி தான் அணுக வேண்டும் என்பதல்ல அதுவும் ஒரு அணுகுமுறை. இதைத் தவிர சிலப்பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு "கருதுகோள்கள்" என்னும் படியையும் மேற்கொள்ளலாம் என்பது ந.சு.வின் கருத்து.

கருதுகோள்கள் எடுகோளுக்குப் பின்னர் பேசப்பட்டாலும் கருதுகோள்களே எடுகோள்களைத் திரட்டும் படிக்கு முற்பட்டதாகும் என்கிறார். பிரச்சனை அறிவிப்பு, கருதுகோள், எடுகோள்களைத் திரட்டுதல், எடுகோள்களின் விளக்கம், விதிகளை உண்டாக்குதல், விதிகளைப் புதிய செயல்களில் பொருத்திப் பார்த்தல் ஆகியவை அறிவியல் முறையின் படிநிலைகளாகும். இப்படிகளை விளக்க "பனி உண்டாதல்" என்னும் பிரச்சனையை எடுத்துக்கொண்டு விளக்குகிறார்.

கருதுகோளுக்கு அடித்தபடி முடிவு காணுதலும், அவ்முடிவுகளிலிருந்து விதிகளை ஆக்குதலும் ஆகும். கருதுகோளுக்கும் இதற்கும் நிறைய தொடர்பு உண்டு. பெரும்பாலும் சோதனைகளின் முடிவுகள் ஒரு பொது விதிக்கு அரணாகத்தான் அமைய வேண்டும். ஆசிரியர்கள் மாணவர்களுக்கு சோதனையின் முடிவுகளை இனப்படுத்துவதற்கு பயிற்சி அளிக்க வேண்டும். பொது விதிக்கு அரணாக அமையாத முடிவுகளையும் புதியதொரு விதியை உண்டாக்குவதற்குப் பயன்படுத்தலாம் எனக் கருதுகிறார் ந.சு.

இங்கு எடுத்துக்கொள்ளப்பட்ட பிரச்சனை (problem) இரும்புத்துருப்பிடித்தல் என்பதாகும். வீட்டு கூரைகளில் வேயப்பட்டிருக்கும் இரும்புத்தகடுகள் துருப்பிடித்தால் வீட்டின் அழகு கெட்டு விடும். எவ்வாறு துருப்பிடிக்காமல் தடுப்பது என்னும் உரையாடலை மாணவர்களிடையே

உருவாக்கி அதை எவ்வாறு நீக்குவது என்று கண்டறியப்படுகின்றது என்பது பல படிநிலைகளில் விளக்கப்பட்டிருக்கின்றது.

சோதனைகளிலிருந்து காற்று துருப்பிடித்தலைத் தூண்டுகிறது. எனவே காற்றுக்கும் இரும்புக்கும் தொடர்பில்லாமல் செய்ய வேண்டும். அதை எவ்வாறு செய்ய வேண்டும். துரு ஏறாத உலோகப்பூச்சினை இரும்பு மேல் பூச வேண்டும். அவ்வாறு செய்யும் போது அப்பூச்சு இரும்பை காற்றிலிருந்து பாதுகாக்கின்றது. எனவே இரும்பு துருப்பிடிப்பதில்லை. இரும்பு துருப்பிடிப்பதற்கு காரணமாக மற்றொரு தகவலும் முன் வைக்கப்படுகின்றது. அதாவது கூரை வேய்பதற்குப் பயன்படும் இரும்புத் தகட்டில் கீறல் இருந்தாலும், வெட்டு வாயில் பூச்சு இல்லாதிருந்தாலும் அத்தகட்டிற்கு அப்பகுதிகளில் பாதுகாப்பில்லை. எனவே அப்பகுதிகளில் துரு ஏறுகின்றது. வண்ணம் பூசுவதால் இரும்புத் தகட்டில் காற்று படுவதில்லை. இயன்ற வரை தகடுகளில் கீறல்கள் ஏற்படாமலும், ஆணித் துவாரங்களை அதிகமாகப் போடமலும் பார்த்துக் கொண்டால் இரும்பு துருப்பிடிப்பதில்லை. இவை பரிசோதனைகள் வழியாகப் பெறப்படுகின்றது. இங்கு எழும் அடுத்த வினா இரும்புத் தகட்டின் மீது பூசப்பெற்ற வேறு உலோகம் யாது என்பதே.

அதற்கு விடையாக அந்த வேறு உலேகாம் துத்தநாகம், ஈயம், காரீயம், அலுமினியம் எனக் கூறலாம். இவற்றில் துத்த நாகமே பூச்சிற்குப் பயன்படுத்தப்படுகின்றது என்பதை ஆசிரியர் விளக்கலாம். இவ்வாறு வேறு உலோகம் பூசப்பட்ட கூரை வேயப்பயன்படுத்தப்படும் இரும்புத் தகடுகள் “நாகப்பூச்சிரும்பு” (Galvanished iron) என்று வழங்கப்படுகின்றது என விளக்க வேண்டும்.

இவ்வாறாக வினாக்கள், சோதனைகள், பிற சான்றுகள், தகவல்கள் ஆகிய அனைத்தையும் ஒன்று சேர்த்து எடுத்துக் கொண்ட மையப்பிரச்சனைக்குத் தீர்வு காண வேண்டும் என்பதை மிகத் தெளிவாக விளக்கிச் சொல்லும் ந.சு.வினை கற்பித்தல் முறை படிநிலைகளில் இன்றும் அறிவியல் பயிற்றும் முறையில் பின்பற்றத் தக்கதாகும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை.

விதிகளைக் கற்றால் மட்டும் போதாது அவற்றை புதுப்புது இடங்களில் பயன்படுத்தியும் பார்க்க வேண்டும். அவ்வாறு செய்தால் தான் பள்ளிகளில் பெறும் வகுப்பறைச் சூழ்நிலைகளுக்கும் வெளியுலகில் காணும் வாழ்க்கைச் சூழ்நிலைகளுக்கும் உள்ள இடைவெளி நீங்கும். வாழ்க்கைக்குப் பயன்படாத கல்வியால் மனித சமுதாயம் எவ்வித முன்னேற்றமும் அடைய முடியாது.

காட்டாக ஒரு மாணவன் இரும்பு ஏன் துருப்பிடிக்கின்றது. அதை எவ்வாறு துருப்பிடிக்காமல் காப்பது என்பதை மட்டும் தெரிந்து கொண்டால் போதாது அதை அவன்

அன்றாட வாழக்கையிலும் பயன்படுத்த வேண்டும் அப்பொழுது தான் ஒரு மாணவன் கல்வி கற்றதன் பயனைப் பெற முடியும்.

இங்கு இரும்பு துருப்பிடித்தல் பிரச்சனையால் பெறப்பட்ட முடிவுகள் புதிய இடங்களில் பயன்படுத்தலாம். அவை இரும்புத் தகடுகள் நீண்ட நாட்கள் உழைக்க வேண்டுமானால் அவற்றைக் கருத்துடன் கையாள வேண்டும், துத்தநாகம் பூச்சின் மீது வண்ணம் பூசினால் அது மேலும் அரணாக அமையும் என்பதும், இரும்பல்லாத பிற உலோகத் தகடுகள் நீண்ட நாட்கள் உழைக்கும் என்பதும், பூச்சு வேண்டாத, துரு ஏறாத அலுமினியத்தைப் பயன்படுத்தலாம். அலுமினியம் பல ஆண்டுகள் உழைக்கும் திறன் கொண்டதும் என்பதும் வாழ்க்கைச் சூழலில் பயனுள்ளதாக மேற்கொள்ள வேண்டும் என்பதாகும்.

ஒரு குறிப்பிட்ட அறிவியல் துறையில் விதிகளை நன்கு கற்றுக்கொண்டால் "அறிவியல் முறை"யால் பெறும் திறன்கள் பிறத் திறன்களும் கைவரப் பெறுவதற்கு உறுதுணையாக இருக்கும் என்பது தவறான கொள்கை என்கிறார் ந.சு.

பாடப் பகுதிகளை மனப்பாடமாக கற்றால் திறன்கள் கைவரப்பெறா அறிவியல் கற்றலால் ஓரளவு திறன்கள் அமையும் எனினும் அவற்றை அறிவியல் முறைப்படி கற்றால் தான் அத்திறன்கள் நிரந்தரமாக ஒருவரிடம் அமையும் என்பதை உறுதிபடக் கூறலாம். சிந்திக்கும் ஆற்றலே அறிவியல் கற்பதற்குத் தேவையானது. அவ்சிந்திக்கும் ஆற்றல் முறையாகக் கற்பதினால் தான் ஏற்படும்.

இரும்புத் துருப்பிடித்தல் என்ற பாடம் பிறப்பாடப் பகுதிகளைக் கற்பதற்குக் கொண்டு செல்லும். எனவே மேலும் மேலும் பிரச்சனைகளை கண்டறிந்து அவற்றிற்குத் தீர்வு காண்பதற்கான சிந்தனைகள் தூண்டப்பெறும். அறிவியல் கற்றலும், கற்பித்தலும் தொடர்ந்து கொண்டிருக்கும்.

இறுதியாக, அறிவியல் எவ்வாறு பயிற்றுவிக்க வேண்டும் என்பதை ந.சுப்புரெட்டியார் அவர்கள் மிகத் தெளிவாக விளக்கிச் செல்கிறார் அறிவியல் பயிற்றுவிக்கும் முறையில் முதலில் பிரச்சனையை கண்டறிய வேண்டும். அது எவ்வகையானப் பிரச்சனை என்பதை பாகுபாடு செய்ய வேண்டும். பின்னர் அப்பிரச்சனைக்கான தகவல்களைத் திரட்ட வேண்டும். அத்தகவல்களிலிருந்து எடுகோள்கள் கண்டறியப்பட வேண்டும். அதற்கு முன்னர் கருதுகோள்களை உருவாக்க வேண்டும். பல பரிசோதனைகளின் முடிவுகளைக் கண்டு விதிகளை ஆக்க வேண்டும் விதிகளை ஆக்கினால் மட்டும் போதாது அவற்றை வாழ்க்கைச் சூழலிலும் பயன்படுத்தத் தெரிந்து கொள்ள வேண்டும். அறிவியல் முறைப்படி கற்றுக்கொண்ட பாடங்கள் புதியப் பாடங்களைக் கற்றுக் கொள்ளவும் அடிப்படையாக அமையும் என்பதை அறிவியல் முறைப்படியே விளக்கிச் செல்லும்

ந.சுப்புரெட்டியாரின் அறிவியல் பயிற்று முறை ஒவ்வொரு பாடசாலையிலும் பின்பற்றினால், திறனுள்ள மாணவர்களை உருவாக்க முடியும். "ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது" என்று ஒரு பழமொழி உள்ளது. இன்றைய சூழலிலும் படித்துப் பட்டம் பெற்றவர் பலர். ஆனாலும் வேலைக்கேற்ற திறன் படைத்தவர்களாக இல்லை. எனவே வேலைகள் இருக்கின்றன, பட்டம் பெற்றவர்களும் இருக்கின்றார்கள், வேலையில்லாத் திண்டாட்டமும் இருந்து கொண்டிருக்கின்றது. பயிற்றும் முறை தான் எல்லாவற்றிற்கும் அடிப்படையாக அமைகின்றது. வேலைகளுக்கு ஏற்ற திறன் படைத்த மாணவர்களை உருவாக்கும் பயிற்று முறையே இன்றைய தேவை. அதற்கான நல்லதொரு பயிற்று முறையை ந.சுப்புரெட்டியார் தந்திருக்கிறார் என்றால் அது மிகையாகாது.

****************************************



# வள்ளுவரும் வள்ளலும்

முனைவர் எஸ். சிவசங்கரி
கௌரவ விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அழகப்பா அரசு கலைக்கல்லூரி
காரைக்குடி 630 003

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை**

கரையில்லாக் கல்விப்பணியைச் செம்மையாகச் செய்து அள்ள அள்ளக் குறையாத செல்வத்தைப் பெற்ற அழகப்பர் வழங்கிய செல்வங்கள் ஏராளம். அத்தகைய சிறப்புகளைக் கொண்டமைந்த கோடிகொடுத்த கொடைஞன் டாக்டர். வள்ளல் அழகப்பரின் கல்விப் பணியையும் வாழ்வியலையும் குறளோவியமாக எடுத்து இயம்புவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**வள்ளலின் வாழ்வியல்**

*“இயல்பினான் இல்வாழ்க்கைவாழ்பவன் என்பான்*
*முயல்வாருள் எல்லாம் தலை”*[1]

இல்லறத்தோடு நல்வழிசெல்பவன் மற்ற எவ்வழியில் செல்பவர்களிலும் மேம்பட்டவன் ஆவான் என்ற பொருளைக்கிணங்க 25.10.1952 - இல் பாரதரத்தினம் ச. இராசகோபாலாச்சாரியார் அழகப்பா கல்லூரிப்பேரவையில் சொற்பொழிவாற்றுங்கால் பணம் சேர்க்கின்ற ஒருவழியே பலருக்கும் தெரியும், சேர்த்தபணத்தை எல்லோர்க்கும் பகுத்துக் கொடுக்கின்ற மறுவழி ஒருவர்க்கும் தெரியாது, இரு வழியும் தெரிந்தவர் அழகப்பர் என்று போற்றினார்.

*“அன்றுஅறிவோம் என்னாதுஅறம் செய்க:மற்றுஅது*
*பொன்றுங்கால் பொன்றாத் துணை”*[2]*(36)*

நல்லகாரியங்களை உடனே செய்யவேண்டும் பிறகுபார்த்துக் கொள்ளலாம் என்றுதள்ளிப்போடாமல் அப்படிசெய்கின்ற நல்ல காரியங்கள் தான் உயிர்போகும் காலத்தும் அதனைப்புகழோடு காத்து நிற்கும். அழகப்பர் தன் 1947 சென்னைப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர்.ஆ.லட்சுமணசாமிமுதலியார், “புதியகல்லூரிகள் நிறுவபலர் முன் வரவேண்டும்” என்றுஆர்வத்தோடு வேண்டுகோள் விடுத்தார். உடனே டாக்டர் அழகப்பர் எழுந்திருந்து அப்போது (காரைக்குடி இராமநாதபுரமாக இருந்த காலகட்டம்) இராமநாதபுரத்தில் ஒருகல்லூரி நிறுவுவேன் என்று உரைத்து அதற்கான பணிகளை ஒருமாத காலத்திற்குள் ஏற்பாடு செய்து காரைக்குடியில் புதியகல்லூரி உருவானது.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

*“தம்மின்தம்மக்கள் அறிவுடைமை,மாநிலத்து*
*மன்உ யிர்க்கு எல்லாம் இனிது”*[3]

தம்மைவிடதாம் பெற்றமக்கள் அறிவாற்றல் உள்ளவராக இருப்பதுவாழும் உயிர்க்கெல்லாம் இன்பம் தருவதாகும் என்பதைஉணர்ந்தவள்ளல் பெருந்தகை.இங்குதொடக்கப்பள்ளியில் வந்துசேர்ந்தஒருகுழந்தைஎல்லாக் கல்வியும் பெற்றுத்தொழிற்படிப்பும்சேர்ந்து நன்றாக வாழும் தகுதியோடுவெளியேறலாம்.அவ்வளவு படிப்பிற்கும் ஏற்ற பள்ளிகள் இங்குள்ளன.கடையேழு வள்ளல்களும் கல்விகேள்விகளில் சிறந்தவர்களுக்குபொருள் வழங்கினார்கள். ஆனால் அழகப்பரோபாமரமக்கள் கல்விகேள்விகளில் சிறந்துவிளங்கவேண்டும் எனத்தன் செல்வத்தை வழங்கிவள்ளல் ஆனார்.

*“தாமின் புறுவது உலகின் புறக்கண்டு*
*காமுறுவர் கற்றறிந்தார்”*[4] *(399)*

கல்விஅறிவால் தாம் பெற்ற இன்பத்தாலும் உலகம் பெறுகின்றபயனையும் மகிழ்வையும் கண்டுஅறிவில் சிறந்தபெரியோர்மேலும் அத்தகைய கல்வியைப் பெறவிரும்புவர்.வள்ளல் அவர்களும் இக்குறளுக்கு ஏற்பதான் பெற்றஅறிவால் உலகமக்களை சந்தித்ததின் பயனாக பலமுன்னேற்றங்களைஅடைந்துள்ளதை நினைத்து காரைக்குடிபகுதியில் உள்ளமக்களும் உயர்நிலையைஅடையமுனைந்தவர் அழகப்பர்.

*“காலத்தினாற் செய்தநன்றிசிறிதுஎனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது” (102)*

உற்ற காலத்தில் தக்கசமயத்தில் செய்த உதவியானது அளவில் சிறிதெனினும் அதன் பயன் இவ்வுலகைவிடப் பெரியது அளவிடற்கரியது ஆகும்.தாம் திரட்டிய செல்வத்தை எல்லாம் வாரிவாரி வழங்கி உருவாக்கிய நிறுவனங்கள் எல்லாம் ஒருசரமாக இணைந்து பல்கலைக்கழகம் ஆக தோற்றம் பெற்று இன்று வளர்ச்சி அடைந்துள்ளது. அன்றுஅழகப்பர் என்னும் வள்ளல் தக்கசமயத்தில் செய்த மாபெரும் செயல்களால் இன்றுகாரைக்குடிகல்விக்குடியாகமாறியுள்ளது.

*“பயன்தூக்கார் செய்தஉதவிநயன்தூக்கின்*
*நன்மைகடலின் பெரிது” (103)*

பிரதிபலனைக் கருதாது உதவி செய்கின்றவர் தம் அன்பின் அளவுகடலை விடப் பெரியது கரை காண முடியாதது. கல்விக்காக பல்வேறு உதவிகளை பல்வேறுமக்களும் தலைவர்களும் செய்தாலும் நல்லகாரியங்களுக்குப் பெரும் பெரும் தொகைகளைத் தாராளமாக வழங்கியது வெள்ளம் மடைதிறந்து வரத்தொடங்கியது அழகப்பரிடம்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பொறியியல் கல்லூரி ஒன்றை நிறுவத்தானே வலிய முன்வந்து நன்கொடையாக ஐந்து இலட்சரூபாய்களை வழங்கினார்.சென்னை

பல்கலைக்கழகத்திற்கு ஐந்து இலட்சம் ரூபாய் நன்கொடைஅளித்தார்.அதனை ஏற்று நன்றி பாராட்டும் வகையில் அவர் பெயரால் சென்னையில் அழகப்பச் செட்டியார் தொழில்நுணுக்ககல்லூரி நிறுவப்பட்டது.

அன்று பிரதிபலனை எதிர்பாராமல் கல்விக்காக வள்ளல் கொடுத்த பல்வேறு நிதிகள் இன்று கல்விக்கான பணிகளில் அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு முனைவர்பட்ட ஆய்வாளர்களுக்கும் செம்மொழிநிதிஉதவி ,அன்னைதெரசா நிதி உதவி,தமிழ்நாடு கல்வியியல் கல்விநிதி உதவி, இராஜீவ்காந்திநிதிஉதவி, சுப்புரெட்டியார் நிதி உதவி எனப் பல்வேறுவகையில் ஆய்வு மாணவர்களுக்கு நிதி உதவி கிடைக்கிறது.

*“அன்பறிவுதோற்றம் அவாவின்மை இந்நான்கும்*
*நன்குடையான் கட்டேதெளிவுஅன்பு”(513)*

அன்பு, அறிவு, தெளிவு, அவா இல்லாமை ஆகிய நான்கு குணங்களையும் நிலையாகப் பெற்றிருப்பவனை நல்லவன் என்று கொள்ளலாம், இத்தகையகுறளுக்குச் சொந்தக்காரர் வள்ளல் அழகப்பரேஆவார்.கேட்பவருக்குஅன்பால் உள்ளம் மகிழ்ந்துகொடுப்பவர்,தம் அறிவுத் திறத்தால் கல்விக்குடியைஉருவாக்கியவர். தெளிவுள்ளத்தால் குறிக்கோள்களில் அடைந்தவெற்றி ஆசை இல்லாததால் இன்றுகுடியிருந்தவீடும் கொடுத்தவிழுத்தெய்வம் என்றபட்டம் எல்லாம் அழகப்பரையேசேரும்.

**முடிவுரை:**

*“நாச்செற்றுவிக்குள்மேல் வாராமுன் நல்வினை*
*மேற்சென்றுசெய்யப் படும்”*

வாழ்க்கையின் நிலையாமையை உணர்ந்து நம் உயிர் இருக்கும் போதே உயர்ந்த நற்பணிகளை ஆற்றிட முனைய வேண்டும் என்ற குறள்படிஅழகப்பர் பிறந்தநாள் 6.4.1909 முதல் 5.4.1957 வரை48 ஆண்டுகளே வாழ்ந்தாலும் உயர்ந்த நற்பணிகளை கல்விக்கு ஆற்றி வள்ளல் என்ற கொடை பெயருக்குத்தக்கவன் ஆனார்.அழகப்பர் இவ்வாற்றிய விழுத்தொண்டினை மதிக்கும் வகையில் குடியரசுதலைவர் 26.1.1957-இல்பத்மபூஷண் என்னும் தாமரைஅணியினை வழங்கினார்.

*“முதலாளிமார்களிலேமுழுமுதலைக்*
*கல்விக்கேமுடிந்துவைத்தவரை*
*சதிகாரசாவே!இதமானஆள்*
*வேண்டும் என்றஎம்பெருமானை*
*எடுத்துச் சென்றாய?”*

-என கவி பாடினார் கண்ணதாசன்.

**********************************

# முத்தொள்ளாயிர விளக்கத்தில் ந. சுப்புரெட்டியார்

**முனைவர் மோ.கோ. கோவைமணி**
**துறைத்தலைவர்**
**ஓலைச்சுவடித்துறை**
**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர் - 613 010.**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

முத்தொள்ளாயிரம் என்ற நூலினைத் தொல்காப்பிய உரையாசிரியர்களின் உரைகள் மூலம் அறியமுடிகிறது.

*"அங்கதப் பாட்டளவவற்றோடொக்கும்"*
(தொல்.பொருள். செய்.நூ.152)

என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரைஎழுதிய பேராசிரியர்

"கைக்கிளைச் செய்யுள் முத்தொள்ளாயிரத்துட் போல"

என்றுமுத்தொள்ளாயிரம் என்ற சொல்லை முதன் முதலில் பயன்படுத்தியுள்ளார். அதன் பிறகு நச்சினார்க்கினியர்,

*"நெடுவெண் பாட்டேகுறுவெண் பாட்டே*
*கைக்கிளைபரிபாட் டங்கதச் செய்யுளோ*
*டொத்தவையெல்லாம் வெண்பாயாப்பின"*
(தொல்.பொருள்.செய்., நூ.114)

என்ற நூற்பாவின் உரையில் முத்தொள்ளாயிரம் என்றொரு நூல் இருந்தது என்பதைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் உரையிலும் உரைமேற்கோளாகவும் காட்டியிருந்தாலும் புறத்திரட்டில் தான் பெரும்பாலான பாடல்கள் கிடைத்துள்ளன. குறிப்பாக 109 பாடல்கள் கிடைத்திருந்தாலும் சேர,சோழ, பாண்டியர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு ஒவ்வொருவருக்கும் 900 பாடல்கள் வீதம் மொத்தம் 2700 பாடல்கள் பாடப்பட்டதால் இந்நூலுக்கு முத்தொள்ளாயிரம் என்றுபெயர்பெற்றது என்பர். ஆனால், பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை அவர்கள்,சேர,சோழ,பாண்டியர்களுக்கு முறையே முந்நூறு வீதம் தொள்ளாயிரம் பாடல்கள் மட்டுமே இருக்கும் என்ற விளக்கத்தினை இலக்கியதீபம் என்ற தனது நூலில் எடுத்துரைத்துள்ளார்.

அதாவது, "இலக்கணவிளக்கப் பட்டியல் உரையில் "பாட்டுடைத் தலைவன் ஊரினையும் பெயரினையும் உவந்துஎண்ணாலே பத்துமுதல் ஆயிரமளவும் பொருட் சிறப்பினாலேபாடுதல் அவ்வவ்வெண்ணாற் பெயர் பெற்றுநடக்கும் எண் செய்யுளாம். அவை முத்தொள்ளாயிரம், அரும்பைத் தொள்ளாயிரம் முதலியன எனக் காணப்படுகிறது. இங்கே எண் செய்யுளென்று
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வகைப்படுத்தப்பட்ட ஒரு நூலே உணர்த்தப்படுகிறது. இதன் கண் வரும் செய்யுட்களின் பேரெல்லை ஆயிரமாகும். அஃ.தாவதுஆயிரத்தின் விஞ்சுதல் கூடாது. இத்தனையென்பது நூற்பெயரால் அறியப்படும். முத்தொள்ளாயிரம் என்பதில் தொள்ளாயிரம் என்பது அவ்வெண்ணாதலின் அத்தனை செய்யுட்கள் இருத்தல் வேண்டுமேயன்றி அதனின் மிகுதிப்பட்ட செய்யுட்கள் கொண்டதாக இந்நூலைக் கருதுதல் கூடாது. ஆகவே முத்தொள்ளாயிரத்தில் தொள்ளாயிரஞ் செய்யுட்களே உள்ளன என்பதும் சேர,சோழ,பாண்டியர்களுள் ஒவ்வொருவர்மீதும் முந்நூறு பாடல்களே இயற்றப்பெற்றனவென்பதும் அறியத்தக்கன" என்கிறார்.

புறத்திரட்டு நூலில் உள்ள பாடல்கள் அறத்துப்பால்,பொருட்பால்,காமத்துப்பால் என்று மூன்றுபெரும்பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. முப்பாலில் ஒன்றான காமத்துப்பாலில் இடம்பெற்றுள்ள கைக்கிளைப் பாடல்கள் 65ம் முத்தொள்ளாயிரப் (கைக்கிளை) பாடல்களாக அமைந்துள்ளன. ஏனைய பாடல்கள் பொருட்பாலைச் சார்ந்தவையாக அமைந்துள்ளன. புறத்திரட்டில் சேர்க்கப்பெறாத முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்று இளம்பூரணர் உரையில் இடம்பெற்றுள்ளது. அப்பாடல்,

*"ஏற்றூர்தியானுமிகல் வெம்போர்வானவனும்*
*ஆற்றலுமாள்வினையுமொத்தொன்றினொவ்வாரே*
*கூற்றக் கணிச்சியான் கண்மூன் றிரண்டேயாம்*
*ஆற்றல்சால் வானவன் கண்"*

என்றவாறுஅமைந்துள்ளது.

**முத்தொள்ளாயிரப் பதிப்புகள்:**

முத்தொள்ளாயிரத்தை முதன்முதலில் மதுரைத் தமிழ்ச் சங்கவெளியீடான செந்தமிழ்த் தொகுதி மூன்றின் பகுதிகளில் தன்னுடைய குறிப்புரையுடன் 105 வெண்பாகளை இரா. ராகவையங்கார் வெளியிட்டுள்ளார். பின்னர் இவ்விதழ்ப் பதிப்பு 1905ஆம் ஆண்டு செந்தமிழ் வெளியீடு 14 ஆவதாக 1905ஆம் ஆண்டுவெளிவந்துள்ளது. இதன் இரண்டாம் பதிப்பு1935ஆம் ஆண்டு மேலும் மூன்றுபாடல்கள் சேர்த்து 108 பாடல்களுடன் வெளிவந்துள்ளது. அதன் பிறகு1938ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழக வெளியீடான எஸ். வையாபுரிப்பிள்ளையின் புறத்திரட்டிலும்,1972ஆம் ஆண்டுபெரும்புலவர் இரா. இளங்குமரன் வெளியிட்டபுறத்திரட்டிலும் இந்நூற் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூற் பாடல்களுக்குப் பலர் உரை வரைந்திருக்கின்றனர். ந. சேதுரகுநாதனின் உரையைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1946, 1952, 1958, 1964, 1970, 1973, 1975,1981ஆம் ஆண்டுகளில் முறையே வெளியிட்டுள்ளது. ரெ. முத்துகணேசரின் உரையைப் பாரிநிலையம் 1957, 1965, 1997 (4ம் பதிப்பு) ஆகியஆண்டுகளிலும் வெளிவந்துள்ளது.இரசிகமணிடி.கே. சிதம்பரநாத முதலியார் 1943ஆம் ஆண்டு 99 பாடல்களுக்கு உரையும் ஏனைய 9 பாடல்களை உரை இல்லாமலும் பொதிகைமலைப் பதிப்பாகவெளியிட்டுள்ளார். இதன் இரண்டாம் பதிப்பு1947ஆம் ஆண்டும்,

மூன்றாம் பதிப்பு1957ஆம் ஆண்டும் வெளிவந்துள்ளது. வே. கபிலனின் உரைவிளக்கம் 1958ஆம் ஆண்டும். ந. சுப்புரெட்டியாரின் உரை1965ஆம் ஆண்டும், கண்ணதாசனின் உரை 1978ஆம் ஆண்டும், ஆ. நாராயணவேலுப் பிள்ளையின் உரை1992ஆம் ஆண்டும்,ராஜேந்திரனின் உரை1998ஆம் ஆண்டும் வெளிவந்திருக்கின்றன. கழகப் பதிப்பிலும் அதற்குப் பிறகு வெளிவந்தபதிப்புகளிலும் 130 பாடல்கள் இடம்பெற்றிருக்கின்றன (பருவ இதழ்களில் சுவடிப் பதிப்புகள்,பக்.401-402).

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகப் பதிப்பிற்கு முன்புவரைவெளிவந்த முத்தொள்ளாயிரப் பதிப்புகளில் 108 பாடல்களே இடம்பெற்றிருக்க ந. சேதுரகுநாதன் அவர்கள் மேலும் 22 பாடல்கள் சேர்த்து 130 பாடல்களாகப் பதிப்பித்துள்ளார். கூடுதலாக அவர் பதிப்பிலுள்ளபாடல்கள் பற்றிஅவர், "இற்றைக்கு ஐந்நூறியாண்டுகட்கு முன்னர் புறத்திரட்டு என்னுந் தொகைநூல் தொகுத்த சான்றோர், அந்நூலின்கண் இடையிடையே மிளிரவைத்துப் போந்த நூற்றெட்டு முத்தொள்ளாயிரச் செய்யுட்களைப் பெற்று, அவற்றைப் பயின்று இன்பந் துய்த்துத் தன்னைமறந்து உவகை எய்தும் பேறும் கிடைத்துள்ளது. கிடைக்கப் பெற்ற விழுமியபாடல்களின் விழுமிய சுவையானது தூண்ட இனிமேலும் இத்தகைய பாடல்கள் கிடைக்கும் கொல்லோ என ஆராய்ந்து வெல்வுழிப் பழைய உரைகளினிடையே பயின்று கிடந்தனவாய இருபத்திரண்டு பாடல்கள் இவற்றோடு ஒத்த இயல்பினவாய்க் காணப்பட்டமையின் அவையும் இவற்றோடு சேர்த்து உரையெழுதி வெளியிடப் பெறுவனவாயின" என்கிறார் (முன்னுரை,ப.6). இதன் இரண்டாம் பதிப்பு1952ஆம் ஆண்டுவெளிவந்துள்ளது.

ந. சுப்புரெட்டியார், ஞா. மாணிக்கவாசகன், வே. கபிலன், இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் போன்றோர் இரா. ராகவையங்கார் பதிப்பித்த 108 பாடல்களுக்குத் தங்களுடைய உரை விளக்கங்களுடன் மேற்கூறியவாறு பதிப்பித்திருக்கின்றனர். இவற்றில் ந. சுப்புரெட்டியார் பதிப்பித்த முத்தொள்ளாயிர விளக்கத்தில் சுப்புரெட்டியாரை அடையாளப்படுத்தும் விதமாக இக்கட்டுரைஅமைகிறது.

**கோடிவீட்டுச் சீமான்**

ஓரூரில் செல்வத்தில் திளைக்கும் சீமான் ஒருவர் இருந்தார். அவர் அந்த ஊரில் கட்டிய வீடுகள் பல. எல்லாம் அவருக்குச் சொந்தமே. அவர்மட்டும் ஒருதெருவின் கோடியில் உள்ள ஒருபெரியவீட்டில் குடியிருந்தார். அவர் பலவீடுகளைக் கட்டினாலும், பலவீடுகளுக்கு அவர்உரியவராக இருந்தாலும் ஊரார் அனைவரும் அவரைக் 'கோடிவீட்டுச் சீமான்' என்றே வழங்கி வந்தனர். இதே பெயர் எங்கும் பரவலாயிற்று. இதனால் அவருக்கு வேறு வீடுகள் இல்லையென்றும் வேறு வீடுகளைக் கட்டவில்லையென்றும் உண்மைக்கு மாறாகப் பெறப்படுவதாயிற்று.

இந்த உலகில் உத்திராடம், திருவோணம் போன்ற நாட்களில் பிறந்தவர்களை முறையே உத்திராடத்தான், திருவோணத்தான் என்று கூறுவது மரபுதான். ஆயின், ஆதிரையில் பிறவாத சிவபெருமானை ஆதிரையான் என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும்? ஒருநாமம் ஒருருவம் இல்லாத இறைவனை இந்தப் பைத்தியக்கார உலகம் ஆயிரம் நாமங்களையும் திருவுருவங்களையும் கற்பித்து அல்லவா வழிபடுகின்றது? "இது பலவீடுகளைக் கட்டியசீமானைக் 'கோடிவீட்டுச் சீமான்' என்று சொல்வதைப் போல்லவா இருக்கின்றது" (பக்.3-4) என்று கவிஞரின் பார்வையில் ஆராய்கின்றார் சுப்புரெட்டியார்.

**குடைநாட்கோள்:**

"ஓர்அரசன் மாற்றரசனோடு தண்டெடுத்துச் சென்றுபோர்செய்து வெல்வதற்கு ஒருநன்னாள் பார்த்துப் புறப்படுவது என்பது நடைமுறையில் மேற்கொள்ளமுடியாத ஒன்று. அதனால் அந்தஅரசன் தன் குடையையோ, வாளையோ,கொடியையோ ஒருநல்லநாளில் ஒருகுறித்த ஓரையில் பட்டத்துயானையின்மீது வைத்துப் போக்கிவேறு இடத்தில் வைப்பதுவழக்கம். பிறகுஅரசன் போர்செய்யச் செல்வான். குடையைஓர்அரசன் அனுப்பினால் அதுகுடைநாட்கோள் என்றுவழங்கப்பெறும்" (பக்.16-17). இந்தக் குடைநாட்கோள் வைப்பதற்கு ஆணை பிறப்பித்தவுடனே அக்காலத்தில் அந்நாட்டுக் குறுநிலமன்னர்கள் தங்கள் வாழ்நாட்கோளாக அல்லவாமுடியும் என்றுஅஞ்சிவரிசைக்கட்டித் திறைப்பொருட்களைவழங்கிச் செல்வதை

*"நிறைமதிபோல் யானைமேனிலத்தார்மாறன்"* (முத். பா.4)

எனும் பாடல் உணர்த்துவதை தனக்கேஉரியபாணியில் சுப்புரெட்டியார்உரைவிளக்கம் தந்துள்ளார்.

**ஒப்பீட்டுமுறைவிளக்கம்:**

இறையோ (முத்.பா.4:9),முறையோ (முத்.பா.4:13) என்பனவற்றிலுள்ள ஓகாரங்கள் மாற்றரசர்கள் சேய்மையிலிருந்துகொண்டு கூவுவதை உணர்த்துகின்றன என்று கூறும் சுப்புரெட்டியார் நம்மாழ்வாரின் "ஓஒஉலகினதியல்பே" (திருவாசிரியம் 6ஆம் பாசுரம்) என்பதற்கு "ஓஒ" என்று இருந்தார் இடமெல்லாம் செவிப்படும்படி கூப்பிடுன்றார் என்ற பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானப் பகுதியை ஒப்பிட்டுநோக்குக என்று ஒப்பீட்டுமுறைவிளக்கத்தைச் சுட்டிச் செல்கின்றார்.

*"அரசர்தம், முன்முன்னாவீழ்ந்தமுடிகள்"* (முத்.பா.6:8-11)

என்ற வரிக்குவிளக்கம் தரும்போது எதிர்மன்னர்களின் தலையில் உள்ள தங்கக் கிரீடங்கள் வீழ்ந்தநிலையில் அக்கிரீடங்களைக் குதிரைகள் காலால் இடறிச் செல்வதைப் பார்த்த கவிஞர்மாவின் குளம்புகள் பொன்னுரைத்தகட்டளைக் கற்களைப் போன்றாகின்றனஎன்கின்றார். இதற்கு விளக்கம் வரைத்த சுப்புரெட்டியார் கம்பராமாயண பாலகாண்டத்தில் சந்திரசயிலப் படலத்தில் உள்ள8ம் பாடலான,

*“தெருண்டமேலவர்சிறியவர்ச் சேரினும்,அவர்தம்*
*மருண்டபுன்மையைமாற்றுவர்எனும்இது வழக்கே;*
*உருண்டவாய்தொறும்,பொன்உருள் உரைத்துரைத் தோடி*
*இருண்டகல்லையும் தன்நிறம் ஆக்கிய இரதம்”*

என்ற பாடலில் தேரின் பொன்னாலியன்ற சக்கரங்கள் இரண்டுகல்லையும் பொன்னிறமாக்கியடு செய்தி கூறப்பெற்றிருப்பதைத் தக்க இடத்தில் ஒப்பிட்டுக் காட்டப்பெற்றுள்ளதைஉணரமுடிகிறது.

மன்னனுடைய கொல் யானைகளை நீர்த்துறைக்குச் செல்லவிடுங்கால் முன்னர்அதன் வருகையைப் பறைஅறைந்துஅறிவித்தல் பண்டையவழக்கம். இதனை “பறைநிறைகொல்யானை” (முத்.பா.14) எனத் தொடங்கும் பாடலில் எடுத்துரைக்கும் பாடலாசிரியரின் கருத்தினை,

*“நிறையழிகொல்யானைநீர்க்குவிட் டாங்கும்*
*பறையறைந் தல்லதுசெல்லற்கஎன்னா*
*இறையேதவறுடையான்”* (குறிஞ்சிக்கலி,பா.20)

எனும் குறிஞ்சிக்கலி சுட்டிவதைத் தன்னுடைய உரைவிளக்கத்தில் ஒப்பிட்டுக் காட்டுகின்றார்.

**நூற்பாடல்களை ஒப்பிடும் தன்மை**

ஒரேநூலுக்குள் ஒருபாடலின் கருத்து வேறொருபாடலின் கருத்தோடு ஒத்திருப்பதைப் பல இடங்களில் சுப்புரெட்டியார் சுட்டிக் காட்டியுள்ளார். குறிப்பாக,பகைப்புலம் பழித்தல் காட்சியை

*“வாகைவனமாலை”*

எனத் தொடங்கும் 13ம் பாடல்,

*“இரியல் மகளிரிலைஞெமலுளீன்ற”*

எனத் தொடங்கும் 66ம் பாடலோடுஒத்திட்டிருப்பதையும்,

*“எலாஅமடப்பிடியே”* (முத்.பா.26)

என்றபாடல்,

*“நணிலத் தார்வளவ”* (முத்.பா.69)

என்றபாடலோடுஒத்திட்டிருப்பதையும் சுட்டிக் காட்டுகின்றார்.

பண்பாட்டுக் கூறு வெளிப்படுத்தும் தன்மை

*“நிறைமதிபோல் யானைமேனிலத்தார்மாறன்”*

எனத் தொடங்கும் முத்தொள்ளாயிரம் 4ம் பாடலில் குடைநாட்கோள் என்பதற்குவிளக்கம் அளிக்கும்போது சுப்புரெட்டியார் தமிழரின் பண்பாட்டைச் சுட்டிக் காட்டியதன்மை வெளிப்படுகிறது. அதாவது, செட்டிநாட்டில் வாழும் தனவணிக மரபினருக்கும் மற்றைய ஒருசில மரபினருக்கும்

மலேசியா, சிங்கப்பூர், பர்மா முதலிய தொலைவிலுள்ள நாடுகளுடன் வாணிகத் தொடர்பு உண்டு. ஆதலால் அவர்கள் அடிக்கடி அந்தநாடுகளுக்குப் பெரும்பாலும் கப்பல் மூலம் பயணம் செய்வர். அவ்வாறு புறப்படும்போது நல்லநாள் பார்த்துப் புறப்படுவர். ஆனால் கப்பல் நல்லநாள் பார்த்துப் புறப்படுவதில்லை. அதனால் "செட்டிநாட்டுப் பகுதிகளிலிருந்து கப்பல் பயணம் செய்து தொலைநாடுகட்குச் செல்கின்றவர்கள் நல்லநாள் பார்த்தே பயணத்தைத் தொடங்குவது வழக்கம். கப்பல் புறப்படும் நாளுக்கு முன்னதாகவே ஒருநல்ல நாளில் தம் சொந்தவீட்டைவிட்டுப் புறப்பட்டு ஒருநெருங்கிய உறவினர் வீட்டுக்குச் சென்று அங்குத் தங்கிவிடுவர் அல்லது தமது மரபினர்க்கென்று கட்டப்பெற்ற ஒருபொது விடுதியில் தங்கிவிடுதலும் உண்டு. அவ்விடத்திலிருந்து கொண்டேதாம் கப்பலேறும் வரைதம் உள்நாட்டு அலுவல்களைக் கவனித்துவருவர். இந்தவழக்கம் செட்டிநாட்டுப் பகுதியில் இன்றும் நடைமுறையில் இருந்துவருகிறது" (ப.16) என்று செட்டிநாட்டு வணிகர்களின் பழக்கத்தைத் தம்முடைய விளக்கவுரையில் நயமாகப் புகுத்தியிருக்கின்றார்.

**தற்குறிப்பேற்ற அணி:**

திறைப்பொருள் தராத குறுநிலமன்னர்களிடம் பாண்டியப் பேரரசின் தூதுவன் எச்சரிக்கைதரும் பாணியில் தேவர்களும் எங்கள் அரசின் ஆணைக்கு அஞ்சிநடுங்கும்போது நீங்கள் எம்மாத்திரம்?" என்று

*"நேமிநிமர்தோணிலவுத்தார்த் தென்னவன்"* (முத்.பா.4)

என்றபாடலில் இயல்பாகவேகால் நிலம் தோயாததேவர்கள் பாண்டியனின் ஆணைக்கு அஞ்சித்தான் நிலத்தில் காலைவைத்திலர் என்றுதன் உளக்குறிப்பை ஏற்றிப் பேசுவதிலும்,

*"அடுமதில் பாய"* (முத்.பா.10)

எனத் தொடங்கும் பாடலில்,

*"கோட்டைப்,பிடிமுன் பழகழிதல் நாணி"*

என்பது தன்னுடைய வலிமையான கொம்புகளைக் கொண்டு எதிரியின் மதில்களை அழித்ததாலும் எதிரியின் மார்புகளைக் கிழித்ததாலும் களிறின் கொம்பு உடைந்துஅழகற்று உள்ள நிலையில் அக்களிறு பெண் யானைமுன் வருவதற்கு நாணிநின்ற கூற்றையும் தற்குறிப்பேற்ற அணியாகச் சுட்டிக் காட்டுகிறார் சுப்புரெட்டியார்.

மேற்கோள் பாடல்களில் உள்ளவற்றைச் சுட்டும் தன்மை

*"ஆதிரையானா திரையான் என்றென் றயருமால்*
*ஊர்திரைநீர்வேலியுலகு"* (முத்.பா.1)

என்ற கடவுள் வாழ்த்துப் பாடலின் பின்னிரண்டடிகள் நீலகேசிதெருட்டுக் கடவுள் வாழ்த்துரையில் சமயதிவாகரமுனிவர்டீ மற்கோளாகக் காட்டியுள்ளார் என்பதை எடுத்துரைத்துள்ளார்.

**மேற்கோளில் பிற நூல் கருத்துக்களை கையாளும் தன்மை**

கந்தனுக்குக் கடம்பமாலை சூட்டுவதுபோல் தென்னவனாகிய பாண்டியனுக்குப் பாமாலை சூட்டுவோம் என்றகருத்தமைந்த

*“மடங்காமயிலூர்தி”* (முத்.பா.17)

எனத் தொடங்கும் பாடலுக்கு உரைவிளக்கம் தரும்போது முருகவழிபாடு பண்டிருந்து இன்றுவரைதமிழர்களின் இதயத்தைக் கொள்ளை கொண்டிருக்கிறது. முருகன் வழிபாட்டைப் பற்றிய செய்திகளை முருகன் அல்லது அழகு” என்னும் நூலில் விரிவாக திரு.வி.க. எடுத்துரைக்கப் பெற்றுள்ளதை அறியலாம் என்று ஏனைய நூற்பொருளைத் தன்னுடைய விளக்கவுரையில் நயமாக எடுத்துரைக்கும் தன்மையைஅறியமுடிகிறது.

புராணக் கருத்தைவெளிப்படுத்தும் தன்மை

*“செங்கணெடியான்மேற்”* (முத்.பா.18)

எனத் தொடங்கும் பாடலில் பாண்டியன் அத்தாணிமண்டபத்தில் கொலுவீற்றிருக்கும் போதுபலசிற்றரசர்கள் அவனை வந்து வணங்கி அவரவர்தம் இருக்கையில் அமர்கின்றனர். அவர்கள் தலைதாழ்த்தி வணங்கும் பொழுது தத்தம் முடிகளில் அணிந்திருந்ததம் நாட்டுப் பூக்கள் பாண்டியனின் காலடியில் விழுந்ததைக் கொண்டே எந்தநாட்டு மன்னர்கள் வந்துள்ளனர் என்பதைப் தென்னவனாகிய பாண்டியன் உணர்ந்து கொள்வான் என்பதை எடுத்துக்கூற வந்த சுப்புரெட்டியார் அவர்களுக்கு பாரதக் கதையில் உள்ள ஒருவரலாற்றுக் கதையை எடுத்துரைக்கின்றார். அதாவது, ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் நடைபெற்ற கடும்போரில் அருச்சுனன் மகன் அபிமன்னனைச் சூழ்ச்சியால் கன்னன் ,துரோணன், சயத்திரதன் ஆகியோர் சூழ்ச்சிசெய்து சயத்திரதனால் இரையாக்கப்படுகிறான். இதனை அறிந்த அருச்சுனன் புத்திரசோகம் அடைகின்றான். தன் மகன் அபிமன்னனைக் கொன்ற சயத்திரனின் ஆவியை நாளை அந்திபடுவேளைக்குள் கவரேனேல் வெந்தழலில் வீழ்வன் என்று சூளுரைத்து ஆகாரமற்று இருக்கும் வேளையில், கண்ணன் ஆகாரம் செய்யச் சொல்ல, கண்ணுதலோதனைப் பூசைபுரியாமல் ஆகாரம் செய்வது எப்படி என்றதால், கண்ணன் யானும் அரனும் ஒருவரே என்பதை அருவரையடைந்ததும் காண்பாய் என்று சொல்ல, தனஞ்செயனும் மாயனை மலர்தூவி வணங்கி கனியுண்கின்றான். பின்னர் கயிலை சென்று கண்ணுதலோனைப் பணியும் வேளையில், தான் கண்ணனின் முடியிலேற்றிய மலர்கள் கண்ணுதலோனின் அடித்தலத்தில் கிடத்தலைக் கண்டு இறும்பூது அடைகின்றான் என்ற புராணவரலாற்றுச் செய்தியை இப்பாடலுக்கு எடுத்துக்காட்டுக் கதையாகக் காட்டிய தன்மையை அறியமுடிகிறது.

**பாடவேறுபாட்டு விளக்கம்:**

"கொடித்தலைத்தார்த் தென்னவன் தோற்றான்போல்நின்றான்"
"கொடித்தலைத்தார்த் தென்னவன் தேற்றான்போல்நின்றான்"

பாடலெண் 15:1இல் தோற்றான் போல் என்பது பாடமாகவும், தேற்றான் போல் என்பது பாடவேறுபாடாகவும் கொள்ளப் பெற்றுள்ளது. இதற்கு உரைகண்ட சுப்புரெட்டியார், உச்சியில் வெற்றிக்கொடி கட்டிய வேலாயுதத்தை உடைய பாண்டியனாகிய தென்னவன் வென்றும் வெல்லாததுபோல் இருந்தான் என்று கூறுகின்றார். தேற்றான் போல் என்பது பாடமாகக் கொண்டால், தெளியாதவன் போல், அஃதாவது ஒன்றும் புரியாதவன் போல் இருந்தான் என்றும் பொருள் கொள்ளலாம் என்கின்றார். இவ்விருஉரை விளக்கங்களும் ஒத்த பொருண்மை கொண்டதாகவே இப்பாடமும் வேறுபாட்டுப் பாடமும் அமைந்திருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றார்.

**பாடவேறுபாடுகள்**

முத்தொள்ளாயிர விளக்கத்தில் சுப்புரெட்டியார் ஒவ்வொரு பாடலுக்கும் அடிக்குறிப்பில் கிடைத்த பாடவேறுபாடுகளை எடுத்துரைத்து சிலபாட வேறுபாடுகளுக்கு விளக்கங்களும் தந்திருக்கின்றார். பெரும்பாலும் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் கொண்ட பாடவேறுபாடு இவர் குறிப்பிட்டுள்ளார். பாடவேறுபாடுகளைக் குறிக்குமிடத்து கொடுக்கப்படும் எண்ணானது அவ்வப் பக்கத்தின் அடிக்குறிப்பில் சொற்களின் எண்களைக் குறிபிடுகின்றார். அதாவது, இப்பாடல் நான்குஅடிகள் கொண்ட வெண்பாயாப்பில் அமைந்திருக்கும் 15 சீர்களுக்கான எண்களைப் பாடவேறுபாடு எண்ணாகக் கொண்டுள்ளார். இம்முறையை பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை கையாண்டுள்ளார். உ.வே.சா. போன்ற பதிப்பாசிரியர்கள் இவ்வாறு அடிக்குறிப்பில் எண்களைப் பயன்படுத்தால் பாடல் பகுதியில் உடுக்குறி இட்டோ எண்களிட்டோ அடிக்குறிப்பில் சுட்டுவர் என்பது இங்கு எண்ணத்தக்கது. சுப்புரெட்டியாரின் முத்தொள்ளாயிர விளக்கவுரையில் சுட்டப்பெற்ற சிலபாட வேறுபாடுகள் பின்வருமாறு:

என்றென் - என்றே (1:11)
றயருமால் - றயர்வுறுமீ; அறையுமால் (1:12)
குவிமொட்டும் - கருவிமொட்டும் (2:4)
ரிளங்கமுகின் - ரிளங்கமுகம் (2:6)
போற்றோன்றும் - போற்றோன்று (2:10)
செம்மற்றே - செம்மைத்தே (2:11)
சேறிழுக்கி - சேறுழக்கி (3:7)
லாகிய - லாகாத (3:10)
நிமிர்தோண் - நிமர்தோள் (4:2)
ஏம - தீவ (4:9)
அரவுறழ்ந் - உருவுறழ்ந் (5:8)
வீழ்ந்த - வீழ்ந்தார் (6:10)
உருத்தகு - திருத்தகு (7:5)
அடுமதில் - அடிமதில் (10:1)
வழிந்தன - வழிந்ததன் (10:3)

குடரால் - குடையாள் (10:10)
சேட்கணித்தாய் - சேய்த்தணித்தாய் (11:9)
ஏனைய - ஏனையார் (12:1)
யானையெலாம் - யானையும் (12:8)
தாங்கண் - தன்கண் (12:11)
புதைத்தவே - புதைத்தது (12:12)
பல்யானை - பல்வாயார் (12:13)
யட்ட - பட்ட (12:14)
யுயர்மாடத் - யுறைமாடத் (13:6)
நாடு - வீடு (13:15)
பறைநிறை - பறைநின்ற (14:1)
பஞ்சவற்குப் - பஞ்சவர்க்குப் (14:3)
யாயீன்ற - யான்யின்றே; போயின்றே; யாயிற்றே (14:12)
கொடுத்தலைத்தார்த் - கொடுத்தலந்தார்த் (15:1)
தோற்றான்போல் - தேற்றான்போல் (15:3)
களிறணையாக் - களிறனையாற் (15:11)

**இலக்கணக் குறிப்புணர்த்துதல்:**

முத்தொள்ளாயிர விளக்கவுரையில் சுப்புரெட்டியார் அவர்கள் பல இடங்களில் உரைக்குள் இலக்கணக் குறிப்புகளைச் சுட்டிச் சென்றிருக்கின்றார். அவற்றுள் சிலபின்வருமாறு:

உலகு (1:15) - ஆகுபெயர்
பொங்கா (6:7) - செய்யாஎன்னும் வாய்பாட்டுவினையெச்சம்.
முன்முன்னா (6:9) - அடுக்குப் பன்மை
மருப்பூசியாக (7:1-2),மார்போலையாக (7:6-7) - உருவகஅணி
பூந்தொடி (19:5) - அன்மொழித்தொகை

**கலைச்சொல் விளக்கம்:**

முத்தொள்ளாயிர விளக்கவுரையில் சுப்புரெட்டியார் அவர்கள் பல கலைச்சொற்களைப் பயன்படுத்தி அதற்கான விளக்கத்தினையும் சுட்டியுள்ள தன்மையைக் காணமுடிகிறது. எடுத்துக்காட்டுக்கு ஒருசில இங்குச் சுட்டப்பெறுகிறது.



கனலி (1:3) - கனலுதலைச் செய்வதுகனலி. இதுஞாயிற்றுக்குக் காரணப் பெயர். பௌதிக இயலில் ஊயடழசநை என்றுவரும் கலைச்சொல்லிற்றுக் கனலிஎன்றதமிழ்ச்சொல் பெரிதும் பொருந்தும்.

சாலேகம் (25:13) - சாளரம்;பலகணி. வடமொழியில் ஜாலகம் என்றசொல் பலகணித்துளையைக் குறிக்கும். அச்சொல் இங்குசாலேகம் எனத் திரிந்துவந்துசாளரம் எனப் பொருள்பட்டது.

**உரைவிளக்க மேற்கோள்கள்**

முத்தொள்ளாயிர விளக்கவுரையில் சுப்புரெட்டியார் அவர்கள் தன்னுடைய உரைக்கு வலிமைசேர்க்கும் வகையில் பலமேற்கோள்களை பல்வேறு நூல்களில் இருந்து பரவலாகக் கையாண்டிருக்கின்றார்.குறிப்பாக, திருக்குறள், சீவகசிந்தாமணி, திருவாய்மொழி, நறுந்தொகை, பட்டினத்தார்பாடல்கள், கம்பராமாயணம், தமிழ்நாவலர்சரிதை, கலித்தொகை, பெரியதிருமொழி,

திருச்செந்திற் கலம்பகம், புறநானூறு, நளவெண்பா, கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, தொல்காப்பியம் பொருளதிகாரம் நச்சினார்க்கினியம், தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், அகநானூறு, பழமொழிநானூறு. கலிங்கத்துப் பரணி, சிலப்பதிகாரம் போன்ற இலக்கண இலக்கிய நூல்களில் இருந்து பரவலாக மேற்கோள் பாடல்களைத் தக்க இடத்தில் பயன்படுத்தி இருக்கும் பான்மையை விளக்கவுரை முழுமையும் காணமுடிகிறது.

**தொகுப்புரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எத்துறை நுழையினும் அத்துறையில் வித்தகராக விளங்கும் பான்மை பெற்றவராக விளங்குகின்றார் என்பது முத்தொள்ளாயிர விளக்கவுரையால் தெள்ளிதில் விளங்கும். மேற் காணும் நிலைகளில் இவ்விளக்கவுரை முழுமையும் தொகுத்தும் பகுத்தும் ஆய்வதற்கான களம் நிறைய இருப்பதால் பெருந்திட்ட ஆய்வாக எதிர்காலத்தில் மேற்கொள்ள இக்கட்டுரை முதற்படியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

**துணைநூற் பட்டியல்:**


1. இலக்கியதீபம், எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரிநிலையம்,சென்னை, 1955.
2. தொல்.பொருள். இளம்பூரணம்,கழகவெளியீடு,சென்னை.
3. பருவ இதழ்ச் சுவடிப் பதிப்புவரலாறு, முனைவர்மோ.கோ. கோவைமணி, தமிழ்ப் பல்கலைக்கழகம்,தஞ்சாவூர், 2010.
4. புறத்திரட்டு, எஸ். வையாபுரிப்பிள்ளை, சென்னைப் பல்கலைக்கழகம்,சென்னை, 1938.
5. முத்தொள்ளாயிரம்,டி.கே. சிதம்பரநாத முதலியார் (உரை),பொதிகைமலைப் பதிப்பகம்,திருக்குற்றாலம், 1957.
6. முத்தொள்ளாயிரம் மூலம், இரா. ராகவையங்கார் (பதி.),மதுரைத் தமிழ்ச் சங்கவெளியீடு,மதுரை, 1905.
7. முத்தொள்ளாயிரம் மூலமும் உரையும், ந. சேதுரகுநாதன் (உரை),சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை, 1946.
8. முத்தொள்ளாயிரவிளக்கம், ந. சுப்புரெட்டியார், ஸ்ரீவெங்கடேஸ்வரா பல்கலைக்கழகத் தமிழ்த்துறை, திருப்பதி, 1965.


**********************************

# வள்ளல் அழகப்பர் ~ சீர்திருத்தச் செம்மல்

முனைவர் சி. பரமேஸ்வரி,
உதவிப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி 630 003.

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வள்ளல் அழகப்பர் கல்விக்கனி எட்டாது வாடிய ஏழை உள்ளங்களுக்கு அறிவுத் தீப ஒளியை ஏற்றிய உன்னத உத்தமர். இவருக்குப் பத்மபூஷண் விருது வள்ளல் தன்மைக்குக் கிடைத்தது என்பதைவிட இவரின் மானுடப் பண்பிற்கு, பிறரை மதிக்கும் இயல்பிற்குக் கிடைத்தது என்பதுதான் பொருந்தும். இவர் ஆயிரமாயிரம் நற்பண்புகளால் ஆக்கப்பட்டவராகத் திகழ்ந்தார். 'தாமரை இலைத் தண்ணீர் போல, தடாகத்து நீரில் ஒட்டியும் ஒட்டாமலும் வாழவில்லை. மாறாக, ஒரு தனி மலராகத் தடாகத்திற்கெல்லாம் எழில் ஊட்டினார். உடலால் நலிவுற்ற போதிலும் தனியொரு மனிதனாகத் திகழ்ந்து தன் ஆற்றலால் சாதிக்கக் கூடியனவற்றையெல்லாம் உலகிற்கு உணர்த்திய விந்தை மனிதர். வள்ளல் அழகப்பரின் வாழ்க்கை, காலத்தால் சிறிதெனினும் ஞாலம் போற்றும் செயல் திறத்தால் மானப் பெரிதாகும்.

**ஆணவம் அகற்றல்**

அழகப்பர் பங்குவணிகம் காரணமாகப் பம்பாய் சென்றார். அங்கு மேலைநாட்டு முறையில் நடத்தப்பெற்று வந்த ரிட்ஸ் விடுதிக்குச் சென்றார். அங்கிருந்த மேலாளரிடம் 'தங்குவதற்கு அறை இருக்கிறதா? ' எனக் கேட்டார். அழகப்பரை ஏற, இறங்கப் பார்த்த விடுதி மேலாளர் உடனே ஆணவத்துடன் 'இங்கே அறைகள் காலியாக இல்லை' என்றார். உடனே அழகப்பர் 'என்ன வாடகை வேண்டுமானாலும் தருகிறேன் கட்டாயம் தங்குவதற்கு இடம் வேண்டுமென வற்புறுத்தினார். மேலாளரின் ஆணவப் பார்வையும் ஏறவே அழகப்பரும் ஏறிட்டுப் பார்த்தார். இதைக் கவனித்த மேலாளர் 'ஹோட்டலையே விலைக்கு வாங்கி விடுவது போலப் பார்க்கிறீரே! என்று குத்தலாகக் கேட்டது உண்மையில் அழகப்பரின் உள்ளத்தைக் குத்திவிட்டது. அழகப்பர் ரிட்ஸ் ஹோட்டல் உரிமையாளரின் வீடு தேடிச் சென்றார். அவரிடம் ஹோட்டலைக் கையோடு வாங்க வந்திருப்பதாகவும் நல்ல விலை கொடுப்பதாகவும் கூறியவுடன் விற்கச் சம்மதித்தார். ஹோட்டல் உரிமையாளர், மேலாளருக்கு ஹோட்டலை விற்ற செய்தியைக் கூறி, தொடர்ந்து மேலாளராக வேலை பார்க்க விரும்பினால் புதிய முதலாளியைச் சந்திக்கவும் என்று கூறினார். உடனே மேலாளர், அழகப்பரிடம் ஓடிவந்து தன் நடத்தைக்காக மன்னிப்புக் கேட்டார். அழகப்பர் புன்னகையுடன் "உமது அகம்பாவம் எனக்கு ஒரு நொடியில் இத்தனை இலட்ச ரூபாய் செலவு
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வைத்து விட்டது. இனிமேல் யாரிடமும் இப்படி ஆணவமாக நடந்து கொள்ளாதீர்”[1] என்று அறிவுறுத்தினார்.

இவ்வுலகில் மானிடராகப் பிறந்த அனைவரும் சமமானவர். உயர்வு, தாழ்வு என்பது கிடையாது. ஆனால் மேலாளர், வள்ளல் அழகப்பரை ஆணவத்தோடு நோக்கியது அறிந்து, தான் மேலாளருக்கு எவ்விதத்திலும் சளைத்தவர் அல்லர் என்பதை நிருபிக்கும் வகையில் ரிட்ஸ் ஹோட்டலை விலைக்கு வாங்குகிறார்.

ஆணவம் என்பது செருக்கு, இறுமாப்பு, அகந்தை, அகங்காரம், அகம்பாவம், கர்வம், சுயகவுரவம், தலைக்கனம், தற்பெருமை, திமிர், ‘நான்தான்’ என்னும் எண்ணம் மேம்படுதலாகும். மனிதனிடம், தான் தனித்தன்மையோடு சிறந்த நிலையில் இருக்கிறோம் என்ற எண்ணம் தோன்றுமிடத்து மிகப்பெரிய அளவில் முன்னேறியதாகக் கருதுகிறான். ‘நான்’ என்ற எண்ணம் மனிதனின் அறிவில் கலக்கின்ற கொடிய நஞ்சு. இதுவே ஆணவத்தின் ஆணிவேர். ஒருவரின் ஆணவம் அழிவதற்கு,

*‘கற்றது கைம்மண்ணளவு கல்லா*
*துலகளவு”*

என்னும் ஔவையாரின் பொன்மொழியை நினைவில் கொண்டால் மனிதன் தன் வாழ்க்கையில் எவ்வளவு பெற்றிருந்தாலும் ஆணவம் துளிர் விடாது. மனச் செருக்கால் ஒருவர் நமக்குத் தீமை செய்தவழி பொறுமைத் தகுதியால் வென்றுவிட வேண்டுமென்பதை,

*“மிகுதியான் மிக்கவை செய்தாரை தாம்தம்*
*தகுதியான் வென்று விடல்”(குறள்: 158)*

என்பர் வள்ளுவர். இக்கருத்தை ஒப்பு நோக்கும் விதத்தில் வள்ளல் அழகப்பர் திகழ்கிறார்.ஒருவர் ஆணவமாக நடந்து கொள்ளுமித்து தான் அவருக்கு எந்நிலையிலும் தகுதியில் குறைந்தவரல்லர் என்பதை நிரூபிக்கும் எண்ணம் தோன்றும். அந்நிலையில் இருவருக்கும் மனக்கசப்பு ஏற்படும். ஆனால் வள்ளல் அழகப்பர் தன்னுடைய தகுதியை நிலைநாட்டி யாரிடமும் ஆணவமாக நடந்து கொள்ளக்கூடாது என்று அறிவுறுத்தியமை புலனாகிறது

**நம்பிக்கையுணர்வு**

வள்ளல் அழகப்பர் 1952 பிப்ரவரியில் பவநகர் அரங்கத் திறப்பு விழாவினை நடத்திய பின் தொழில் காரணமாகக் கண்டனூருக்குச் சென்றார். அங்கு ‘வெஸ்டர்ன் இந்தியா பிளைவுட்ஸ்’ என்னும் மர அறுவை ஆலையைப் பார்வையிட்டு வந்தார். அப்போது மாடி வராந்தாவிலுள்ள பால்கனிப் பக்க அடைப்பு உடைந்திருந்தது அறியாமல் அதன் மேல் சாய்ந்ததால் நிலை

தடுமாறி விழுந்து விட்டார். தலை உச்சியில் அடிபட்டு நினைவற்ற நிலையில் பல நாட்கள் இருந்தார். மேலூர் மருத்துவமனையில் தீவிர சிகிச்சை அளிக்கப்பெற்று, ஓரளவு நலம் பெற்றுக் கோயம்புத்தூரில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். காரைக்குடியில் பொறியியல் கல்லூரியைத் தொடங்க வேண்டி அதற்கான அனுமதியைப் பெற பல்கலைக்கழகத்திற்கு மறுபடியும் விண்ணப்பித்தார். அப்போது 'நம் கையில் பணம் இல்லையே பிறகு பார்த்துக் கொள்ளலாமென்று அன்பர்கள் கூறியபோது "எல்லாம் சேர்ந்து வந்தால் தான் நல்ல காரியத்தைச் செய்ய முடியும் என்றால், எந்த நல்ல காரியத்தையும் செய்ய முடியாது. பணம் போதிய அளவு இருந்தால்தான் செய்ய முடியும் என்றால், அதிலே நமக்கும் சாதாரண மனிதனுக்கும் என்ன வித்தியாசம்?. பணம் கையிலே இல்லாமலே பொறியியல் கல்லூரியைத் தொடங்க நினைக்கிறோமே அதுதான் விசேடம். காரியத்தைத் தொடங்குவோம், நல்ல காரியத்திற்குப் பணம் எப்படியும் வந்து சேரும்..."[2] என்று கூறினார்.

காரைக்குடியில் பொறியியல் கல்லூரி தொடங்குவதற்காகப் பல்கலைக்கழகத்திற்கு அனுப்பவேண்டிய விண்ணப்பப் படிவத்தில் அறநிலையத் தாளாளர் கையெழுத்திட வேண்டியிருந்தது. தாளாளரிடம் கையெழுத்துப் பெறும் வரை கூடப் பொறுக்க மனமில்லாமல் அவருக்காகத் தலைவர் என்ற முறையில் தானே கையெழுத்தும் இட்டார். இக்கல்லூரியைத் தொடங்கும் வேலை எவ்வளவு வேகமாக நடக்கிறதோ அவ்வளவு துரிதமாக நானும் குணம் பெறுவேன்"[3] என மொழிந்தார்.

செய்யும் செயல் நற்செயலாக இருந்தால் அக்காரியம் இனிது நிறைவேறுமென்றும் ஒரு செயலைச் செய்யத் தொடங்கிவிட்டால் அதனை எப்பாடுபட்டாவது இனிது நிறைவேற்ற இயலும் என்ற நம்பிக்கையுணர்வும் கொண்டவர்.

இவ்வாறு வள்ளல் அழகப்பர் "கருதிய ஒன்றை எப்படியும் நிறைவேற்றத் துடிக்கும் ஊக்கமும் உழைப்பும் கொண்டவர்"[4]. மேலும் "வேகத்தாலும் அழுத்தத்தாலும் விமானமானது காற்றிற்கு எதிரூன்றிப் பறப்பது போல, இடர்ப்பாட்டிலும் இன்னலிலுமே அவர் எதிர்நீச்சலிட்டு விரைந்தார்"[5] என்று சு.குழந்தைநாதன் குறிப்பிடுவர்.

**தொழில் மயமாக்கல்**

வள்ளல் அழகப்பர் வந்த பொருளும் வரு பொருளும் கல்விக்கென்று துணிந்தவர். தொழில்துறை நுட்பங்களை நுணுகி அறிந்தவர். உலகத்தோடு சமமாக இந்தியா நிலவ வேண்டுமெனில் உழவொடு தொழிலும் ஏற்றம் பெறவேண்டுமென்பதை உணர்ந்தவர். லண்டன் ஒய்.எம்.சி.ஏ. மாணவர் சங்கத்தில்,'இந்தியாவில் தொழில் நுட்பப் பயிற்சி அளிப்பு' என்னும் தலைப்பில் பேசியபோது "இந்தியா இதுகாறும் விவசாயப் பொருளாதாரத்தையே நம்பி இருந்தது;

கச்சாப் பொருள்களை மட்டுமே ஏற்றுமதி செய்து வந்தது. விடுதலை பெற்ற இந்தக் குடியரசு நாட்டில் இப்போது புதிய பிரச்சினைகள் எழுந்துள்ளன. குறிப்பிட்டதொரு காலக்கெடுவுக்குள் இந்த நாடு தொழில் மயமாக வேண்டும். தொழில்களைத் திட்டமிட்டு அமைத்துச் செல்வாதாரங்களையும் வேலை வாய்ப்புகளையும் பெருக்கவேண்டும்; இதற்கேற்றவாறு தொழில்நுட்பப் பயிற்சிகளைப் பல்வேறு நிலைகளில் அளிப்பதற்கான கல்வி நிறுவனங்களையும் பயிற்சிக் கூடங்களையும் அமைக்க வேண்டும். இந்தப் பாதையில் இப்போது சுதந்திர இந்தியா அடி எடுத்து வைத்திருக்கிறது”[6] என்றுரைத்தார்.

மனிதன், வாழ்க்கைக்கான தேவைகளைப் பெற்றுக்கொள்வதற்கு தொழிற்கல்வி இன்றியமையாததாகும். தொழிற்கல்வியானது மனிதன் தன்னுடைய திறன் ஆளுமைக்கேற்பவும் தொழில் விளைதிறனை வெளிப்படுத்தும் முகமாகவும் கற்றுக் கொள்ளுதலாகும்.

*‘கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்*
*கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்’*

என்ற நாமக்கல் வெ.இராமலிங்கம்பிள்ளையின் கூற்றிற்கிணங்க மனிதனுக்குத் தொழிலானது வாழ்க்கை முழுதும் தேவையான ஒன்றாகும்.

*“சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்*
*செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்!”*
*(பாரதியார் கவிதைகள் : தமிழ்த்தாய் - 11 : 3-4)*

என்ற பாரதியாரின் பாடல் வரிகள் பல தேசங்களிலிருந்து கலை இலக்கியங்களைக் கொண்டு வருதல் மட்டுமல்லாது தாம் செல்லுகின்ற பகுதிகளிலுள்ள உயர்ந்த பண்புகளையும் அங்கு சிறப்புற்று விளங்குகின்ற தொழில்களையும் நம் நாட்டிற்குக் கொண்டு வர வேண்டுமென்ற நோக்கமும் உள்ளடங்கியுள்ளது.

இவ்வகையில் வள்ளல் அழகப்பர் உடல் உழைப்பை மதிக்காத அறிவுக் கூர்மையால் பலனில்லை. இதயத்தோடு அறிவையும் மூளையோடு கைகளையும் இணைத்துக் கற்று புதிய தொழில்நுட்பங்களை வளர்க்க வேண்டுமென்பதில் முனைப்புடன் திகழ்ந்தார்.

**ஆக்கபூர்வமான செயல்**

வள்ளல் அழகப்பர் தமது செல்வம், சிந்தனை, உழைப்பு, ஓய்வு ஆகிய அனைத்தையும் கல்விப் பணிக்கு அர்ப்பணித்தார். ஆரம்ப காலகட்டத்தில் ‘எதற்காக இவ்வளவு சம்பாதிக்கிறோம்?’ என்ற தேக்க நிலைக்கு ஆட்பட்டார். பிறகு கல்லூரிப் பணிகளைச் செம்மையாக நிலைநிறுத்த மென்மேலும் பொருள் தேட வேண்டுமென்ற தணியாத ஆசைக்கு ஆட்பட்டார். தன் உடல்நலத்தைக் கூடப் பொருட்படுத்தாது கல்லூரிப் பணிகளை நிறைவேற்ற வேண்டுமென்ற

ஆசைக்குத் தன்னையே அர்ப்பணித்தார். இதனை, "நான் பல ஆண்டுகளாகப் பணத்தைச் சேர்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் 'எதற்காக நாம் பணம் சம்பாதிக்கிறோம். மேலும் மேலும் பணம் வேண்டுமென யாருக்காக உழைக்கிறோம்' என்பது எனக்குப் புலப்படாமலிருந்தது. ஆனால், காரைக்குடியில் கல்லூரிகளைத் தொடங்கிய நாள்முதல், பணம் சம்பாதித்தே தீர வேண்டும். இல்லாவிட்டால் கல்லூரிகளை முன்னேற்றி நிலைநிறுத்துவது இயலாது என்பது தெளிவானதால், புதிய ஊக்கம் பிறந்தது. இவ்வாறு கல்விக்காகச் செலவிடுகையில் நான் அடைந்துவரும் நிம்மதியை வேறெதிலும் அடைந்ததில்லை.இக்கல்லூரிகளை நான் ஆரம்பித்திராவிட்டால் பணத்தை எவ்வாறெல்லாம் செலவு செய்திருப்பேனோ என்று இப்பொழுது எண்ணிப் பயப்படுகிறேன்"[7] என்பதன் வழி அறியமுடிகிறது.

பணம் என்பது மக்கள் தங்களுக்கான தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கான, எளிதில் பரிமாறிக் கொள்வதற்கான ஒன்றாகும்.

*"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை*
*எல்லாரும் செய்வர் சிறப்பு" (குறள்: 752)*

இத்தகையச் சிறப்பு வாய்ந்த பணத்தை அளவுக்கு அதிகமாகச் சம்பாதித்தார் வள்ளல் அழகப்பர். இவரின் உள்மனம் ஏன் இவ்வளவு சம்பாதிக்கவேண்டும். பணத்தைச் சேமிப்பது சாதனையாகாது, புகழாகாது என்பதை உணர்ந்தார். ஏழை மாணவர்களின் கல்விக் கண்ணைத் திறக்க, கல்லூரியைத் தொடங்க முற்பட்டார். ஏழை மாணவர்களின் கல்வி நலனுக்காகப் பணத்தைச் செலவழிக்கும்போது மென்மேலும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. கல்லூரியைத் தொடங்காவிட்டால் பணத்தை ஆக்க சக்திக்குப் பயன்படுத்தாமல் போயிருக்கக்கூடும் என்ற நிலையை எண்ணி உள்ளத்தால் வேதனைப்பட்டார். இவ்வாறு புதுநோக்கொடு, பொது நோக்கொடு ஈதற்கெனவே பொருளீட்டினார். "பணமும், குறிக்கோள் நாட்டமுடைய மனமும் அழகப்பரிடம் ஒன்றாக இணைந்திருந்தன. பணத்தைச் சம்பாதிப்பதற்கு அறிவும் உழைப்பும் இருந்தால் போதும். ஆனால் தக்க வழியில் அதைச் செலவிடுவதற்கு ஒன்றிய உள்ளமும் குன்றாத எண்ணமும் வேண்டும். இந்நலங்களும் அவரிடம் வேரூன்றியதால், பணத்திற்கு மனத்தை அடிமைப்படுத்தாமல், தம் மனத்திற்குப் பணத்தை அடிமைப்படுத்தும் ஆக்கவழி கண்டார்"[8] என்று சு.குழந்தைநாதன் மொழிவர்.

இக்கருத்தை ஒப்புநோக்கும் விதத்தில் நல்லதைச் செய்தால் இன்பம் கிட்டும். மற்ற செயல்களைச் செய்யுமிடத்து இன்பம் போன்று தோன்றினாலும் இன்பம் கிட்டாது. அதனால் புகழும் இல்லையென்பதை,

*"அறத்தான் வருவதே இன்பம்மற்று எல்லாம்*
*புறத்த புகழும் இல" (குறள்.39)*

என்ற வள்ளுவரின் குறள் அமைந்துள்ளது.

**துணிவொடு செயல்படல்**

வள்ளல் அழகப்பர் கல்லூரி வட்டத்தில் குடியிருக்கும் ஆசிரியர்கள், பணியாளர்கள் இல்லங்களுக்கு முன்னறிவிப்பின்றி சென்று பெருமைப்படுத்துவது வழக்கம். ஒருமுறை தம் செயலர் திரு.டி.வி.எஸ்.மணியனை அழைத்துக்கொண்டு ஒரு ஆசிரியரின் வீட்டிற்குச் சென்றார். ஆசிரியர் பையனுடைய பயிற்சி ஏட்டைக் கொண்டு வரச்சொல்லி புரட்டிப் பார்த்தார். அப்பையனின் பயிற்சி ஏட்டிலுள்ள பிழைகள் சரிவரத் திருத்தப்படாதது அறிந்தார். உடனே சம்பந்தப்பட்ட ஆசிரியர் வேலை பார்க்கும் பள்ளியின் தலைமை ஆசிரியருக்கு விளக்கம் கோரிக் கடிதம் எழுதினார். அக்கடிதத்தில் ஆறாம் வகுப்புப் படிக்கும் பையனின் பயிற்சி ஏட்டினைச் சரிவரத் திருத்தப்படாமை கண்டு திடுக்கிட்டேன். பையனிடம் விசாரித்ததில் இம்மாதிரிப் பயிற்சிகளில் 'ஆசிரியர்கள் வெறுமனே கையெழுத்து மட்டும்தான் போடுவார்' என்ற விடை வந்தது. அதைக் கேட்டதும் அதிர்ச்சி அடைந்தேன். சம்பந்தப்பட்ட ஆசிரியர் தன் கடமையைச்சரிவரச் செய்யவில்லையென்று குறிப்பிட மிகவும் வருந்துகிறேன். 74 வயதினைத் தாண்டிய மூதறிஞர் ராஜாஜி, தமக்கு அரசாங்க அதிகாரிகள் அனுப்பும் கோப்புகளில் எழுத்துப் பிழை, இலக்கணப் பிழை இருந்தால் அவற்றைக் கூட திருத்துகிறார். "பயிற்சிப் புத்தகங்களின் இறுதியில் தன் கையெழுத்தினை மட்டும் போடுவதுதான் ஆசிரியர் வேலை என்றால் இதைச் செய்ய ஆசிரியர் வேண்டியதில்லை. ஒரு எழுத்தரை இதற்கெனத் தனியாக நியமித்து விடலாம். பண்படுத்தித் திருத்த மனமில்லாத ஆசிரியரின் கையெழுத்தினை மட்டும், 'ஆட்டோகிராப்' எனப்படும் அரிய கையெழுத்துப் போலப் பேணி வைக்க எந்த மாணவனும் விரும்பமாட்டான். மாணவர் செய்யும் பிழைகளைத் திருத்தித் திருத்தி உயர்த்துவதே ஆசிரியப்பணி. எந்த ஆசிரியராவது தன்னால் இவ்வாறு செய்ய இயலாது எனக் கருதினால் நம்மைப் பொறுத்தவரை அவரது பணி நமக்கும் தேவையில்லை எனச் செய்துவிடலாம்"[9] என்று கண்டிப்புடன் எழுதினார்.

மாணவர்களுக்கு வாழ்க்கைப் பாடத்தைக் கற்பித்து உண்மையான வழிகாட்டிகளாக விளங்குபவர்கள் ஆசிரியர்கள். ஆசிரியர் பணி வெறும் ஊதியத்திற்கான பணியல்ல. உயிரோட்டமான பணி. வருங்காலச் சமூகத்தை உருவாக்கக் கூடிய அறப்பணி.கருங்கல்லைச் செதுக்கிச் செதுக்கிச் சிற்பங்கள் உருவாக்குவது போல மாணவர்களின் அறிவைச் செதுக்கி, அவர்களின் வாழ்க்கையைச் சிற்பங்களாக ஆக்க வேண்டியது ஆசிரியர்களின் கடமை. அப்படிப்பட்ட திறம் வாய்ந்த ஆசிரியர்களே தமக்குத் தேவை என்பதில் உறுதியுடன் நின்றார். இவ்வாறு சமுதாயத்தைச் சீர்திருத்தும் நோக்கில் துணிவுடன் செயல்பட்டார்.

**பிறரின் துன்பத்தைப் போக்கல்**

வள்ளல் அழகப்பர் 'சமதர்ம முதலாளி' மட்டுமல்ல, சமுதாயவாதியுமாவர். குடிமக்கள் தத்தமது கடமையைச் செய்து கவலையின்றி வாழும் சூழ்நிலையும் அதற்கேற்ற சமவாய்ப்பும், ஒருவருக்கொருவர் நல்லுறவு பூணும் நாகரிகமும் வளர வேண்டும் என்பதை வற்புறுத்துபவர். 19.07.1955 -இல் லண்டன் பி.பி.சி வானொலியில் 'தமிழோசை' நிகழ்ச்சியில் இப்பண்புடைமைக்காக லண்டன் நகர மக்களை வாயாரப் பாராட்டியவிடத்து,"…ஈசன் படைத்த இவ்வுலகில் மனிதன் கோடிக்கணக்கான மக்களிடையே வாழ்கிறான். இப்படி வாழும் நாட்களில், ஒவ்வொருவனும் தான், தனக்கு என மட்டும் வாழ்வது மிகவும் தவறு. சமூகத்தில் ஒருவனாக வாழவேண்டும். தன்னால் சமூகத்திற்கு உபகாரம் வேண்டும். மற்றொருவனுடைய துன்பத்தைக் குறைத்து இன்பத்தை அதிகரிக்க முயலவேண்டும்என்பதை உணர்வதே வாழ்க்கை ரகசியத்தை அறிந்ததாகும். இதுதான் உண்மை வேதாந்தம். இதை மிக அருமையாக, மிகத் தெளிவாக உணர்ந்திருக்கிறார்கள் லண்டன் நகரவாசிகள் …"[10] என்றும் "…ஒவ்வொரு மனிதனும் ஒரு அளவிற்கு இன்பமாக வாழ உரிமையுண்டு என்ற மகத்தான தத்துவத்தைப் பிரிட்டிஷ் மக்கள் வாழ்க்கையில் நிரூபித்துக் காட்டிக்கொண்டேயிருக்கிறார்கள். இதைப் பார்க்கப் பார்க்க ஆனந்தம் பொங்குகிறது. அப்படியே மற்ற தேசங்களிலும் ஆனந்தம் பொங்க இறைவன் அருள்புரிவாராக…"[11] என்பர்.

மனிதன் தனக்காக மட்டும் வாழாமல் பிறரின் நலனில் அக்கறை கொண்டு வாழ வேண்டும். மக்களின் வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் ஒன்றுக்கொன்று தொடர்பானவை, இயல்பானவை. இவற்றை அனுபவித்துத்தான் வாழ்க்கைப் பயணத்தில் வெற்றி பெறுகின்றனர். ஆனால் வாழ்க்கையே துன்பமாக மாறி விடக்கூடாது. பிறரின் வாழ்க்கைத் துன்பத்தைக் கண்டு, தன்னால் இயன்ற உதவியைச் செய்து அவர்களின் வாழ்க்கைப் பாதையை இன்ப மயமாக்க வேண்டும்.ஈசன் படைத்த இவ்வுலகில் வாழ்க்கையானது நிரந்தரமற்றது, நிலையில்லா இவ்வுலகில் வாழப்போவது குறைந்த காலம். அத்தகைய காலகட்டத்தில் மக்கள் மிக்க மகிழ்ச்சியோடு இல்லாவிட்டாலும் ஓரளவிற்காவது இன்பத்துடன் வாழவேண்டுமென்ற உன்னதப் பண்பினை உணர்த்தும் விதத்தில் வள்ளல் அழகப்பா் திகழ்வது பெறப்படுகிறது.

**பண்பாட்டுணர்வு**

"பண்பாடு என்பது பண்பட்ட, பக்குவப்பட்ட, ஒழுக்கம் சார்ந்த வாழ்க்கை முறை. பண்படுவது பண்பாடு. பண்படுதல் சீர்ப்படுதல் அல்லது திருந்துதல், திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும், திருந்திய தமிழைப் 'பண்பட்ட செந்தமிழ்'

(தனிப்பாடல்) என்றும், திருந்திய வுள்ளத்தைப் பண்பட்ட வுள்ளமென்றும், சொல்வது வழக்கம்"[12] என்பர் ஞா. தேவநேயப் பாவாணர்.

அழகப்பர் கல்லூரியில், அனைத்துக் கல்லூரிகளும் இணைந்து முத்தமிழ் விழா நடத்தியமை வரலாற்றுப் புகழ் பெற்றவை. இவ்விழாவின்போது இரு கல்லூரி மாணவர்களிடையே வளரவேண்டிய ஆக்கம் தரு போட்டியானது ஆகாப் பிணக்காக முடிந்துவிட்டது. இச்சிறு பிணக்கு பெருநெருப்பாக வருவதையறிந்து அழகப்பா் பதைத்து நினைவெல்லாம் கல்லூரியாக ஓடோடி வந்தார். கலை விழாக் கண்ட மாணாக்கரிடையே ‘எது பண்பாடு’ என்ற தலைப்பில் ‘மாணவ உறவுநிலை’ மற்றும் ‘வாழ்க்கைக் கலை’ பற்றிப் பொழிந்த கருத்துகள் சம்பந்தப்பட்டோர் உள்ளங்களில் பதிந்தன."…பண்பாடு என்பது நம் ஒவ்வொருவரிடமும் அமைந்துள்ள சிறந்த இயல்புகளை ஊக்குவிக்கிறது. உயர்ந்த கருத்து, விழுமிய சிந்தனை இவை மட்டும் பண்பாடு ஆகிவிடா. சிறந்த பண்பாடு என்றால் அது வாழ்வின் செயல்களாக இலங்கவேண்டும். பண்பாடுடையவன் எனக் கருதப் படுபவன் - தனக்குப் பெருமை தருவதும் பலர் கண்ணில் படுவதுமான பெரிய காரியங்களில் மட்டும் ஆரவார அக்கறை காட்டினால் போதாது. பிறர் கண்ணில் படாத அற்பக் காரியங்களில் கூட அவன் நயப்பாட்டுடன் நடந்துகொள்ளவேண்டும். இத்தகையவன் தன் வாழ்வையே கலையாக்கிக் கொள்வான். அவ்வாறு வாழ்வில் கலையுணர்வு கொள்ளாதவனால் கலைத்துறைக்கும் பயனில்லை; வாழ்வு நெறிக்கும் பயனில்லை. கலைத்துறைகள் எல்லாம் அத்தகையவனுக்கு வாழ்க்கை நம்பிக்கையைத் தரமாட்டா;நான்குபேர் மதிக்கும் அலங்காரப் பொருள்களாகவே கலை அவனோடு சிலகாலம் பொருந்தி இருக்கும். இது வாழும் முறையாகாது; கலைகளைத் தேறும் முறையும் ஆகாது; இசை, நடனம், நாடகம் எல்லாம் பயனுள்ளவைதான். ஆனால் நம் நம்பிக்கைகளை வலுப்படுத்தி, ஒழுக்கத்தை மேம்படுத்த உதவும் இன்றியமையாத பிறவாழ்க்கைக் கலைகளைப் புறக்கணிக்கத் தூண்டும் அளவுக்கு இவை முக்கியமானவை அல்ல…"[13] என்பர்.

இதன் மூலம் வள்ளல் அழகப்பர் வாழ்க்கையை கலையாகக் கொண்டு தனக்குப் பெருமை தரக்கூடிய செயல்களில் மட்டும் அக்கறை காட்டாது அற்ப காரியங்களில் கூட ஈடுபட்டு மேம்பாட்டுடன் திகழ வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர் என்பது பெறப்படுகிறது.

**இலட்சியப் பயணம்**

வள்ளல் அழகப்பர் 7.12.1955 - இல் இராசாசிக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்கூறி கடிதம் எழுதினாா். அக்கடிதத்தில் "… நோய் காரணமாகப் படுத்த படுக்கையிலிருந்தே இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதுகிறேன் … அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில அறிவுச்சுடர்களால் சரித்திரத்தின் ஏடுகள் ஒளிவீசித் திகழ்கின்றன. ஜனக் கூட்டத்தின்

மிரட்டலையோ, தலைவர்களின் எதிர்பார்ப்பையோ, பண்பட்ட விசுவாசமுள்ள சீடர்களின் ஆதரவின்மையையோ பொருட்படுத்தாது தங்களுடைய உயர்ந்த இலட்சியங்களைக் கைவிடாமல் உறுதியுடன் நின்ற வீரர்களால் தான் சரித்திரம் சிறப்பை அடைந்திருக்கிறது. உங்களுடைய சாதனையும் அப்படிப்பட்டதுதான். சாக்ரடீஸ் உண்மையே பேசத் துணிந்தார் என்பதற்காக அவருக்கு நஞ்சைக் கொடுத்தார்கள். தம்முடைய அந்தராத்மாவின் குரலுக்குச் செவிசாய்த்ததற்காக ஏசுநாதரைச் சிலுவையில் அடித்தார்கள். சகிப்புத் தன்மையையும் அன்பையும் உபதேசித்ததற்காக அகிம்சா மூர்த்தி சுட்டுக் கொல்லப்பட்டார். தாங்கள் அத்தகைய தனிச்சிறப்பு வாய்ந்த வீரர்களின் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்... உங்கள் காலத்தில் நான் வாழ்ந்துவரக் கொடுத்து வைத்திருப்பதை எண்ணிப் பரவசமும் பெரு மகிழ்ச்சியும் அடைகின்றேன்”[14] என்றார்.

ஒவ்வொருவரும் தங்களின் வாழ்க்கையில் இலட்சியப் பயணத்தை நோக்கிச் செல்ல வேண்டும். அவ்வாறு சென்றால்தான் தங்களின் வாழ்க்கையில் சாதனைக் கனிகளை ஈட்டமுடியும்.

**தொகுப்புரை**

வள்ளல் அழகப்பர் ஆணவத்தினை அகற்ற வேண்டுமென அறிவுறுத்தல், நல்ல காரியம் தடையில்லாது நிறைவேறுமென்று நம்பிக்கை கொள்ளல், மாணவர்களின் எதிர்கால வாழ்க்கையை ஒளி பெறச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தால் தொழிற்கல்வி நிறுவனங்களை உருவாக்கல், பணத்தை ஆக்கபூர்வமாகச் செலவழித்தல், மாணவர்களின் எதிர்கால வாழ்க்கை ஆசிரியரிடத்துள்ள நிலையில் திறமிக்க ஆசிரியர்களே தமக்குத் தேவையென்பதில் உறுதியுடன் நிற்றல், சமுதாயத்தில் மக்கள் இன்புற்ற உள்ளத்துடனும் பண்பட்ட உள்ளத்துடனும் இலட்சிய நோக்குடனும் திகழ வேண்டுமென்ற எண்ணம் கொண்டவர். இத்தகைய வள்ளல் அழகப்பர் 6.4.1909 - இல் பிறந்து 5.4.1957 - இல் தம் வாழ்க்கைப் பயணத்தை நிறைவேற்றிக் கொண்ட நிலையில் எண்ணற்றோர் வாழ்க்கைப் பாதைக்கெல்லாம் ஒளியூட்டிக் கொண்டிருக்கும் சீர்திருத்தச் செம்மல் என்பதில் ஐயமில்லை.

**சான்றெண் விளக்கம்**

1. சு.குழந்தைநாதன், கோடி கொடுத்த கொடைஞன் (வள்ளல் அழகப்பர் வாழ்க்கை வரலாறு), ப.34
2. மேலது, ப.67
3. மேலது, ப.67
4. மேலது, ப.137
5. மேலது, ப.137
6. மேலது, ப.64
7. மேலது, பக். 73-74

8. மேலது, ப.44
9. மேலது, ப.80
10. மேலது, ப. 84
11. மேலது, ப. 84
12. ஞா.தேவநேயப் பாவாணர், பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், பக். 13–14
13. சு.குழந்தைநாதன், கோடி கொடுத்த கொடைஞன் (வள்ளல் அழகப்பர் வாழ்க்கை வரலாறு),பக். 128-129
14. மேலது, ப. 141

**********************************



# எட்டாம் வள்ளல் அழகப்பர்

**முனைவர் க. அமுதா,**
**உதவிப் பேராசிரியர்,**
**தமிழ் உயராய்வு மையம்,**
**அழகப்பா அரசு கலைக்கல்லூரி,**
**காரைக்குடி 630 003.**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை**

"குணங்களால் சிறந்தபலரை நம் வாழ்வில் சந்திக்கிறோம். ஆனால்,பிறர் எவரிடமும் எளிதில் காணமுடியாதஅருள் குணம் ஒன்றுஅமையப் பெற்றவர் அழகப்பர். நல்லமனிதர் என நாடேவியக்க அமைந்துள்ள அந்தச் சிறப்பையே குறிப்பிடுகிறேன். நல்லதையே நாடிச்செய்யும் இந்தஉயரிய இயல்பு அவருடைய முகத்திற்கே களையூட்டிப்பொலிகிறது இந்தநன்மை என்னும் நன்னீரால் அவர் எத்தனையோ கல்வி வித்துக்களை முளைக்கச் செய்துவருகிறார். அவருடைய முயற்சிகள் வாழ்க என்று போற்றினார்" சர்.சி.வி.இராமன். அழகப்பரை, 'இந்தியாவின் ஒளியுடையப்பெருமகன்' எனபோற்றலாம்' என்றார் பொறியியல் மேதை டாக்டர். எம் விசுவேசுவரய்யா. இது போன்று மகாத்மாகாந்தியடிகள், ஜவர்கலால் நேரு, மூதறிஞர் இராஜாஜி, பெரியார் போன்றோரால் பாராட்டப்பட்டவர் வள்ளல் அழகப்பர். அவரின் வள்ளல் தன்மையையும் வாழ்வினையும் விளக்கும் முகமாக இக்கட்டுரை அமைகிறது.

**வள்ளலின் கல்வி**

கோட்டையூரில் பாரம்பரியப் புகழ்பெற்ற க.வீ.அள. குடும்பத்தில் இராமநாதன் செட்டியாருக்கும் உமையாள் ஆச்சிக்கும் திருமகனாக 06.04.1909-ஆம் நாள் அவதரித்த அழகப்பருக்கு, இளமைமுதலேகல்வியில் நாட்டம் மிகுந்திருந்தது.ஏட்டுப் படிப்பைத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் முடித்து, பக்கத்துநகரமாகிய காரைக்குடியிலுள்ள ஸ்ரீமீனாட்சிசுந்தரேஸ்வர வித்யாலயா உயர்நிலைப்பள்ளியில் சேர்ந்துபடித்தார். மேற்படிப்புக்காகக் கல்லூரி செல்லவேண்டும் என்று எண்ணியிருந்தபோது அப்பாவின் கட்டளைப்படி மலேசியாவிற்குப் பயணம் மேற்கொண்டார். கப்பல் பயணத்தின்போது அவருக்குக் காய்ச்சல் ஏற்பட்டதால் நாகப்பட்டினத்தில் இறங்குகிறார். பிறகு அப்பச்சியின் உதவியுடன் சென்னை பிரசிடென்சி கல்லூரியில் கல்வி கற்றார். தனது அப்பச்சி, உமையாள் ஆச்சி, அருமைத்தந்தை இராமநாதன் செட்டியார் என்று உடன் இருந்த அன்புச்சொந்தங்களின் இழப்பு அழகப்பரை வருத்தினாலும் தான் கல்வியின்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

மீதுகொண்ட ஈடுபாட்டால் அண்ணனையும் குடும்பத்தாரையும் சமாதானம் செய்து பி.ஏ.,ஆங்கில இலக்கியம் கற்றார்.

அழகப்பனின் வாழ்வில் அவருக்கு நடந்த ஒவ்வொரு நிகழ்வுமே அழகப்பரின் வருங்காலத்தை இறைவன் வகுத்துக் கொடுத்து இளமையிலிருந்தே வாழ்வில் ஒவ்வொரு தருணத்திலும் உருவாக்கியதை அவரது வாழ்க்கைப்பயணம் காட்டும்.'விளையும் பயிர் முளையிலேதெரியும்' என்பதற்குஏற்பவாழ்ந்தவர்.அவர் கல்லூரியில் படிக்கும் போதுஅவருடைய ஆசிரியர் இந்தியத்தத்துவமேதை டாக்டர்.எஸ்.இராதாகிருஷ்ணன் அவர்களோடு தொடர்பு ஏற்பட்டது. அவர் இந்தியக் குடியரசுத் தலைவராக உயர்ந்தபோதும் சிறந்த நண்பராக நட்புத் தொடர்ந்தது.

அழகப்பர் சரளமாக ஆங்கிலம் பேசுபவர் "திருவல்லிக்கேணி விவாதக்கழகம்"அமைத்து அங்குப் பல்வேறு தலைப்புகளில் விவாதம் நடத்தித் தானும் அதில் பங்குகொண்டார். அதற்கான செலவுகளை அழகப்பர் செய்தார்.மாணவப் பருவத்திலேயே அழகப்பர் இந்தியவிடுதலைப் போராட்டங்களில் ஆர்வத்துடன் கலந்து கொண்டவர்"1930 ஆம் ஆண்டுதன் 21-ஆம் வயதில்பி.ஏ.ஆனர்ஸ் பட்டம் பெற்றார். செட்டிநாட்டார் சமுதாயத்திலேயே முதன் முதலாக முதுகலைப்பட்டம் பெற்ற இளைஞன் என்பது வரலாற்றுப் பதிவு.'அதுபோலசட்டம் பயின்று'நகரத்தார் சமுதாயத்தின் முதல் 'பார் - அட் -லா' வாகத்திரும்பிய அழகப்பர் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்குரைஞராகப் பதிவுசெய்துகொண்டார். ஆயினும் அவர் மனம் வழக்குதொழிலில் நாட்டம் கொள்ளவில்லை. மேனாட்டில் கற்ற வங்கிநடைமுறைகள், பங்குவணிகம் தொழில் முதலீடுகள் முதலானவை சார்ந்த துறைகளில் ஈடுபடவே அவர் உள்ளம் விரும்பியது. அழகப்பரின் நண்பர் சர்.ஆர்.கே.சண்முகம் செட்டியார், கொச்சிசமஸ்தானத்தின் திவானாகப்பணியாற்றி வந்தார். அவரின் ஆலோசனையின்படி 1937-இல் திருச்சூருக்கு அருகில் 'கொச்சின் டெக்ஸ்டைல்ஸ்' என்னும் ஒரு நூற்பாலையைத் தொடங்கினார். 'உமையாள் நெசவாலை' தொடங்கினார். அழகப்பர் வாழ்வில் ஒவ்வொரு தருணத்திலும் தன் மனதில் இருக்கும் மக்கள் மீதுகொண்ட அன்பினால் சமூகத்திற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு இருந்துகொண்டேயிருந்தது.

**வள்ளலின் பன்முகச் சிறப்பு**

*"வையத்துள் வாழ்வாங்குவாழ்பவன் வான் உறையும்*
*தெய்வத்துள் வைக்கப்படும்"*[1]

என்கிறார் வள்ளுவப் பெருந்தகை. வள்ளல் அழகப்பர் இளமைக்காலம் தொடங்கி வாழ்வில் ஒவ்வொரு இக்கட்டானதருணங்களில் எல்லாம் தன்னைத்தானே செதுக்கிக் கொண்டு தன் வாழ்நாளில் ஒவ்வொருநொடிப் பொழுதிலும் வள்ளல் குணத்தோடு வாழ்ந்தவர்.

“அழகப்பரைப் போல வேறுஎவர்க்கேனும் இவ்வளவு உடற்பிணிகள் வந்திருந்தால், அவர்கள் சமுதாயத்தை மறந்து, தமக்கே நலமும் சுகமும் தேடியிருந்திருப்பார்கள். ஆனால் அழகப்பர் தம் உடல் உபாதைகளைக் கூடப்பொருட்படுத்தாமல், ஏதோஒரு வெறிகொண்டவர் போல் உலகம் வியக்கப் பணிபுரிகிறார். எட்டு ஆண்டுப் பணிகளால் அவர் உருவாக்கியுள்ள இந்த அற்புத உலகத்தைப் பல்கலைக்கழகம் என அழைக்கலாம் போல் தோன்றுகிறது”[2] என்று கூறிய மாநிலஆளுநர் ஸ்ரீபிரகாசாவின் ஒவ்வொரு வார்த்தைகளும் வள்ளலின் உள்ளத்தை வெளிக்காட்டும்.

சிறந்த தந்தையின் நிறைந்த மகனாய், தன் அன்பு மகளுக்கு இறைவனே நேரில் வந்து தந்தையாய் அமைந்தது போன்ற பாசத்தந்தையாய்த் தன் மகளுக்கு சிறந்த வழிகாட்டியாய், சிறந்தகல்வியாளராய், சிறந்த சிந்தனையாளராய், சிறந்ததொழில் வித்தகராய், செய்கின்றதொழில் அனைத்திலும் கருணை உள்ளம் கொண்டவராய், சமூகத்திற்கு தான் கல்வி ஒளிகொடுக்கும் வித்தகராய் வாழ்நாள் தோறும் சொல்லமுடியாத வள்ளல் குணம் கொண்டவராய், தீர்க்கமான முடிவுகளை நேர்த்தியாய் எடுப்பவராய், எல்லாமக்களின் மீதும் அளவற்ற அன்பு கொண்டவராய் வாழ்ந்தவர் வள்ளல் அழகப்பர். பக்க எண்ணிக்கைக்குள் வள்ளலை எழுதுவது இயலாத செயலாகும். அன்று தொடங்கி இன்று வரை எண்ணற்ற குடும்பங்களுக்கு ஒளியாகத் திகழ்பவர் வள்ளல் அழகப்பர். அவருக்கு இணைஅவரே.

**வள்ளல் அழகப்பரின் கொடையுள்ளம்**

“அழகப்பர் என் எண்ணமெல்லாம் கல்லூரியையும் அங்குப்பயிலும் மாணவர்களையுமே பற்றிச்சுழல்கிறது. அங்கு ஒரு கருவூலத்தைத் தொகுத்து வைக்கலாம் என்று எண்ணியுள்ளேன். கருவூலம் என்றால் பணம் அல்ல; காரைக்குடிக்கே பயன் தருகின்ற, மதிப்பு நிறைந்த பல அனுபவங்களும் தொடர்புகளும் நிறைந்ததே அந்தக் கருவூலம்”[5]என்று கூறுகின்றார்.

“நான் பல ஆண்டுகளாகப் பணத்தைச் சேர்த்திருக்கிறேன் அப்போதெல்லாம், ‘எதற்காகப்பணம் சம்பாதிக்கிறோம். மேலும் மேலும் பணம் வேண்டுமென யாருக்காக உழைக்கிறோம்’ என்பது எனக்குப் புலப்படாமலிருந்தது. ஆனால் காரைக்குடியில் கல்லூரிகளைத் தொடங்கியநாள் முதல், பணம் சம்பாதித்தே தீரவேண்டும். இல்லாவிட்டால் கல்லூரிகளை முன்னேற்றி நிலை நிறுத்துவது இயலாது என்பது தெளிவானதால், புதிய ஊக்கம் பிறந்தது. இவ்வாறு கல்விக்காகச் செலவழிக்கும் போதுதான் அடையும் நிம்மதியை, வேறெப்போதும்

அடைந்ததில்லை, இக்கல்லூரிகளை நான் ஆரம்பித்திராவிட்டால் பணத்தை எவ்வாறெல்லாம் செலவு செய்திருப்பேனோ என்று இப்பொழுது எண்ணிப் பயப்படுகிறேன்." என்கிறார்.

கடையெழுவள்ளல்களின் கொடைத்தன்மை உலக உயிர்களின்மீது கொண்ட இரக்கத்தினை வெளிப்படுத்திகிறது. அவ்வுள்ளமே வள்ளலிடமும் இருந்தது. அவர் தான், தன் குடும்பம் என்றில்லாமல் தன்னைச் சுற்றிலும் வாழும் அனைத்து மக்களையும் பார்க்கிறார். அவர்கள் வாழ்வில் வளம் பெற என்னசெய்தால் அவர்களும் வாழ்ந்து தலைமுறையும் வாழும் என்பதைப்பார்த்து "மக்களின் கல்வித்தர உயர்வினாலேயே சமுதாயம் வளர்ச்சியடைய முடியும். மற்றவர்களைவிட, ஆசிரியர் உயர்ந்தவர். சமுதாய உழைப்பாளி. அவருடைய திறமை மதிக்கப்பட்டு உரிய அந்தஸ்து அளிக்கப்படவேண்டும். திறமையுடையவர்கள் ஆசிரியர்களாகவரக்கூடிய சூழ்நிலையை உருவாக்கி, அத்தொழிலை மதிப்புவாய்ந்ததாக உயர்த்த வேண்டும்."[6] இவ்வாறு அவர் கூறக்காரணம் குழந்தைகள் கல்விபெற நல்லாசிரியர்கள் வேண்டும் என்று எண்ணியதேயாகும்.

கடையெழுவள்ளல்கள் பிறஉயிர் கொண்ட துன்பம் அறிந்து இரக்க உணர்வு மேலிட தன்னிடம் இருப்பதை வைத்து எப்படி அவ்வுயிரைத துன்பமின்றிக் காக்கலாம் என்று எண்ணிய எண்ணத்தால் வள்ளல் ஆயினர். வள்ளல் அழகப்பரும் இதனையே செய்தார். வாடியிருந்த தன்னைச் சுற்றிலும் வாழ்ந்த மக்கள் மீது அன்புகொண்டு தந்தையின்றி, தாயின்றி, உணவின்றி, வாடிநிற்கும் மக்களுக்கு அவர்கள் ஊன்றுகோலாய் கல்வியைக் கொடுத்தால் இவ்வுலகினைப் பார்ப்பர், தன்னை அறிவர், சிறந்து வாழ்வர், வாழ்வில் உயர்வர் ,பிறரையும் வாழவைப்பார் என்று எண்ணியே கல்விக்கென கொடைவழங்கினார் வள்ளல்.

"ஏழை மாணவர்களுக்காக இலவசமதிய உணவு வழங்கிய முதல்வர். அழகப்பாவள்ளலே என்ற செய்திக்கு ஆவணச் சான்று உண்டா வரலாற்றுக் குறிப்பு ஏதேனும் உண்டா என்று தேட வேண்டாம்; அந்த மதிய உணவுச்சாப்பாடு ஐந்தாம் வகுப்பிலிருந்து எட்டாம் E.S.L.C பொதுத்தேர்வுவரை படித்துத் தேறிய ஏழைமாணவனாகிய நானே சாட்சி" என்கிறார் அய்க்கன்.

வள்ளல் அழகப்பருக்கு நிகர் அவரே. கொடைகளின் தலைவன். நிறைந்த வாழ்வு வாழ்ந்தவர். இல்லங்கள் தோறும் வணங்கும் தெய்வம் அவர். 'கோபுரதரிசனம் கோடிப்புண்ணியம்' என்கிறது பழமொழி காரணம் இறைச்சிந்தனை உள்ளத்தில் வரவேண்டும் என்பதற்குத்தான். வள்ளல் அழகப்பரை எண்ணினாலே கோடிப்புண்ணியம் கிடைக்கும் தன் வாழ்வில் ஒளிபிறக்கும்.

**வள்ளுவமும் வள்ளலும்**

தமிழர்களின் பெட்டகங்களில் பாதுகாக்கப்படவேண்டிய நூல் திருக்குறள். இந்நூலில் தனிமனிதன் தொடங்கி சமூகம் வரை அனைத்து மக்களுக்குமான பல்வேறு சிறப்பான கருத்துக்கள் எழுதப்பட்டுள்ளன. தனிமனிதன் எவ்வாறு வாழவேண்டும் என்று கட்டமைக்கப்பட்ட கருத்துக்களின் அடிப்படையில் கூறப்பட்ட பலகுறள்களின் கருத்துமைவிற்கேற்ப வாழ்ந்தவர் வள்ளல் அழகப்பர் .'நிலையற்ற இவ்வுலகத்தில் அழியாமல் நிலைபெற்று விளங்குவது. சிறந்தோங்கும் புகழ் ஒன்றேயல்லாமல் பிறிதொன்றுமில்லை.

*"ஒன்றாஉலகத்துஉயர்ந்தபுகழல்லால்*
*பொன்றாதுநிற்பதொன்று இல்"*[7]

என்பதற்கேற்ப நிலைத்த புகழைச் செய்திட்டவர் வள்ளல்.

சங்கு அழிந்தபிறகும் மங்கலப் பொருளாகும். ஈகை செய்பவர் செத்தாலும் வாழ்வர்.

*"நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்*
*வித்தகர்க்குஅல்லால் அரிது"*[8]

என்பதற்கேற்ப வாழ்ந்தவர் வள்ளல்.*'தோன்றின் புகழொடு தோன்றுக"*[9]

என்ற வள்ளுவவரிகளுக்கு ஏற்ப,அழகப்பர் எண்ணமும் செயலும் உயர்ந்தவனவாகவே இருந்தன. உயர்ந்த எண்ணங்களுக்கு வலிமை அதிகம். அது விதையாகி விருட்சமாகும் என்பதற்கு அழகப்பரின் வாழ்க்கையும் எண்ணமும் நற்சான்றாகும். ஒருநல்ல செயலைச் செய்யஎண்ணும் போது எல்லாம் அமைந்து விடுவதில்லை. தொடங்கினால் இயல்பாக அமைந்துவிடும் என்பது அழகப்பரின் எண்ணம்.

"எல்லாம் சேர்ந்து வந்தால் தான் ஒரு நல்லகாரியத்தைச் செய்ய முடியும் என்றால், எந்தநல்ல காரியத்தையும் செய்யமுடியாது. பணம் போதியஅளவு இருந்தால்தான் செய்யமுடியும் என்றால், அதிலேயே நமக்கும் சாதாரண மனிதனுக்கும் என்னவித்தியாசம்? பணம் கையிலே இல்லாமலேயே பொறியியல் கல்லூரியைத் தொடங்க நினைக்கிறோமே அதுதான் விசேடம்....காரியத்தைத் ' தொடங்குவோம் நல்லகாரியத்துக்குப் பணம் எப்படியும் வந்துசேரும்"என்று அவரின் கருத்து. வள்ளுவம் சுட்டுவது,

*"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்*
*மற்றையஎல்லாம் பிற"*[10]

என்று 'ஒருவனது மனதிலுண்டாகும் திட்பமே அவனுடைய செயல் திட்பமாக வெளிப்படும். பிறயாவும் திட்பமெனக் கூறுத்தக்கன அல்ல என்று குறள் கூறும் கருத்திற்குப் பொருத்தமாய் அமைவது வள்ளலின் எண்ணமாகும்.

**கடையெழுவள்ளல்களும் வள்ளல் அழகப்பரும்:**

தமிழர்களின் பண்பாட்டில் தடம்பதித்தவர் பலர். அவர்களில் பிற உயிர்கள் மீதுகொண்ட அன்பினாலும் கொடைப் பண்பினாலும் உயர்ந்து நிற்பவர் சிலர். சிறுபாணாற்றுப்படை கூறும் கடையெழுவள்ளல்களில்

1. *"கானமஞ்ஞைக'குக் கலிங்கம் நல்கிய….பெருங்கல் நாடன் பேகன்."*
2. *"சிறுவீமுல்லைக்குப் பெருந்தேர் நல்கிய…பறம்பின் கோமான் பாரி"*
3. *"ஈர நன்மொழி இரவலர்க்குஈந்த…கழல் தொடித் தடக்கைக் காரி"*
4. *"ஆர்வநன்மொழிஆய்"*
5. *"அமிழ்துவிளைதீங்கனிஔவைக்குஈந்தஅரவக் கடல்தானைஅதிகனும்"*
6. *"முட்டாதுகொடுத்த முனை விளங்குதடக்கைநளிமலைநாடன் நள்ளி"*
7. *"குறும்பொறைநல்நாடுகோடியர்க்குஈந்த…ஓரிக் குதிரைஓரி"(சிறுபாணாற்றுப்படை-84-113)*
8. *"கோடிகொடுத்தகொடைஞன் குடியிருந்தவீடும் கொடுத்தவிழுத்தெய்வம்"-வள்ளல் அழகப்பர்*

கடையேழு வள்ளல்களைப் பார்க்கவில்லை. ஆனால் நாம் வாழும் காலத்தில் வாழ்ந்து மிகப்பெரிய கொடைக்குணம் கொண்டவராய் வாழ்ந்தவர் வள்ளல். கடையேழு வள்ளல்களின் கொடை பெற்ற உயிர்கள் குறிப்பிட்ட கால அளவில் உள்ளது. ஆனால்,

*"ஒருமைக்கண் தான் கற்றகல்விஒருவற்கு*
*எழுமையும் ஏமாப் புடைத்து"*[4]

என்ற ஏழு பிறவியிலும் உடன் வரும் கல்வியை எண்ணிலடங்கா மாணவச் செல்வங்களுக்கு மழலை தொடங்கி உயர் கல்வி பெறும் வரை அள்ளிக்கொடுத்து பலரின் வாழ்வில் ஒளி ஏற்றிய எட்டாம் வள்ளல் அழகப்பர் எனும் குன்றாவிளக்கு.

**முடிவுரை**

*"நிலவரைநீள்புகழ் ஆற்றின் புலவரைப்*
*போற்றாதுபுத்தேள் உலகு"*[11]
*"தோன்றின் புகழோடு தோன்றுக"*[12]
*"ஈதல் இசைபட வாழ்தல்"*[13]

போன்ற வள்ளுவரின் மனித மாண்பு மிக்கப்பண்புகளைக் கொண்டவர் வள்ளல் அழகப்பர். பிறந்தது முதல் வாழ்வின் கடைசிவரை ஈடு இணையற்ற செம்மாந்த வாழ்வினைக கொண்டவர் வள்ளல். இவ்வுலகம் உள்ளளவும் அவரின் கொடையால் வளர்ந்து நிற்கும் புகழ் வாழும்.

வள்ளல் அழகப்பரின் வழி நடப்பதும், பிறருக்கு உதவிசெய்து வாழ்வதும் நாம் அவருக்குச் செய்யும் சிறப்பாகும்.

**சான்றெண் விளக்கம்**

1.குறள்.எண்.50
2.அய்க்கன்,அழகப்பர், ப.108
3.சிறுபாணாற்றுப்படை.84-113
4.திருக்குறள் எண்.398
5.அய்க்கன்,அழகப்பர் - ப.103
6.மேலது, ப.104
7.திருக்குறள். எண்.233
8.திருக்குறள். எண்.235
9.திருக்குறள். எண்.236
10.திருக்குறள். எண்.661
11.திருக்குறள். எண்.234
12.திருக்குறள். எண்.235
13.திருக்குறள். எண்.231

**************************************************



# சுப்பு ரெட்டியார் பார்வையில் கம்பன்

**முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்**
**உச்ச மற்றும் உயர் நீதிமன்ற வழக்குரைஞர்**
**தமிழக அரசின் அயல் நாட்டுத் தமிழறிஞர் விருதாளர்**
**ஆஸ்திரேலியா**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தமிழ் அறிஞர்கள் இலக்கிய அறிவு, இலக்கண நுணுக்கம், காப்பியங்கள்படைப்பு, திறனாய்வு செய்தல் போன்ற பல துறைகளிலும் திறமை பெற்றவர்களாக இருப்பவர்கள். ஆனால், பேராசிரியர் சுப்புரெட்டியார் தமிழ்சார்ந்த துறைகளில் மட்டுமன்றி, பல்வகையான வேறுபட்ட துறைகளிலும் ஈடுபட்டு, அத்துறைகளில் ஆழ்ந்த அறிவும், அதன் தொடர்ச்சியாக ஆய்வுகளும்செய்ததன்மூலம் தன்னுடைய பெயரைப் பதித்த பெருமையுடையவர்.

சுப்புரெட்டியார் அவர்களின் 1977 ஆண்டு நடந்த பிறந்தநாள் கொண்டாட்ட விழாவில் அவரைப் பாராட்டிக் கம்பன் அடிசூடி அவர்கள்,

“சுப்புரெட்டியாரா, சுறுசுறுப்பு ரெட்டியாரா?“ என்ற கேள்வியுடன் எண்பத்து ஏழாண்டான வயதில் இவர்கள் உழைப்பும் முயற்சியும் நம்மை வியக்க வைக்கின்றன. அவர் வணங்கும் அந்த வேங்கடவனை, வேண்டுவார்க்கு வேண்டுவன ஈந்து நலந்தரும் நாராயண நாமத்தானை, அவர் நூற்றாண்டு கண்டு, இன்னுமொரு நூறு நூல்கள் தமிழ் இலக்கிய உலகிற்கு விருந்தாகச் செய்தளிக்கப் பிரார்த்திப்பது அல்லால், வேறென் செய்ய வல்லோம்? என்பதுடன்,

‘‘அடியார்கள் வாழ! அரங்கநகர் வாழ சடகோபன் தண்தமிழ்நூல் வாழ! - கடல்சூழ்ந்த மண்உலகம்வாழ வேங்கடம் உறைரெட்டியே! இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்! இனிய தமிழ்ப்பிழிவாய் உன்னிலிருந்து இன்னும் ஒருநூறு நூல்கள் வரும்: ‘சரணம்’ - எனக் கூறிப் போற்றுகிறார்.

சுப்புரெட்டியார் பலதுறைகளில் தனது அறிவைப் பெருக்கியதுடன் மட்டும் நிற்காது மற்றவர்களுக்கும் தான்பெற்ற அறிவைப் பகிர்ந்து அளித்தவர் என்றால் மிகையாகாது. குறிப்பாக தமிழ், அறிவியல், கல்வியியல் போன்ற துறைகளில் சுப்புரெட்டியார் அவர்களின் பங்களிப்பு ஒரு முன்னோடியாகவே அமைந்துள்ளது. கற்பித்தல் நோக்கில் இத்துறைகளில் பலசாதனைகளையும் ,படைப்புகளையும் நமக்களித்தவர்.

கல்வியைப் பொறுத்த வரைக்கும் உளவியல் சார்ந்த அணுகுமுறையை அவரது படைப்புகள் வற்புறுத்துகின்றன. கற்பிப்போர் தாம்கற்போருக்கு அளிக்கவேண்டிய தகவல்களை, அவைகற்பவரைச சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் கட்டமைக்காமல் கற்பவர்களின்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

கற்றல்ஆற்றலைபுரிந்துகொண்டு, கற்பவர் திறமைக்கேற்ப அந்தத் தகவல்களைக் கட்டமைக்க வேண்டும் என்பதே பேராசிரியர் சுப்புரெட்டியாரின் கற்பித்தல் அணுகுமுறையாக இருந்துள்ளது. கற்பித்தலை வகுப்பறைக்குள் மட்டுமே அடக்காமல் அவைகுறித்த விடயங்களைக் கண்டு, பார்த்து, உணர்ந்து, காட்சிகளைத் தெளிந்து படித்தலே கற்றலை ஊக்குவிக்கும் சிறப்பான முறை என்பது அவரின் பார்வையாகும்.

இவைதவிர, மொழிபெயர்த்தல், தொடர்பான அவரது பங்களிப்பு அளப்பரியது. அறிவியலில், குறிப்பாக இயற்பியல் மற்றும் உயிரியல் இலக்கியங்களின் மொழிபெயர்ப்பு, வாழ்வியல் மொழிபெயர்ப்பு, திறனாய்வு மொழிபெயர்ப்பு ஆகியவை பேராசிரியரின் ஆர்வத்தினை வெளிப்படுத்தி நிற்கும் துறைகளாகும்.

**இளமையில் எழுத்து**

இவர்தனது பள்ளிக்காலத்திலேயே 1931 கையெழுத்துப் போட்டி, கட்டுரைப்போட்டி முதலியவற்றில் பங்கு கொண்டு பல பரிசுகளைப் பெற்றவர். இந்த எழுத்துப்பழக்கமே அவரை சிறந்ததாக எழுத்தாளராக உருவாக்கியுள்ளது என்றே எண்ண வேண்டியுள்ளது.

காரைக்குடி, ஆசிரியர் பயிற்சி பள்ளி கல்லூரியில் பணியாற்றியபோது தினமணி ,கலைமகள் கலைக்கதிர் போன்ற இதழ்களில் கட்டுரை எழுதும் பழக்கத்தை மேற்கொண்டார். திருப்பதியில் பணியாற்றும்போது மணிவிழா மலர், திருக்கோயில் குடமுழுக்கு விழா மலர்கள், மற்றும் சிறப்பு மலர்களுக்கும் கட்டுரைகள் பலவற்றைப் படைத்துத் தன் எழுத்துத் திறமையை மேம்படுத்திக்கொண்டார்.

சுப்புரெட்டியார் அவர்களின் பின் புலம் அவரது கல்வி மற்றும் எழுத்துப் பணிக்கு கட்டியம் கூறுவதாக உள்ளது. அவர் எழுதிய 'மலரும் நினைவுகள்' என்ற நூலில் சுப்புரெட்டியார், அவர் ஆசிரியர் கூறுவதாக "சுப்பு நல்ல மாணாக்கன். படிப்பில் ஆர்வமுள்ளவன். பள்ளியில் முதல்வன்" என்பதை பதிவு செய்திருப்பதுடன், பொருளாதாரத் தடைகளை மீறி படித்ததாகவும் கூறுகிறார். இதனால் தான் அவருக்குக் கல்வியூட்டுவதிலும் ஆர்வம் இருந்திருக்கவேண்டும்.

பொதுப்பணியாளர் வேலைக்கு முயன்று கிடைக்காமல், முடிவில் ஆசிரியப்பயிற்சி கல்லூரியில் 1940 இல் சேர்த்து கற்கத் தொடங்கியவர், படிப்பு முடிந்த பின் துறையூர் பள்ளியில் பணியாற்றத் தொடங்கினார். பின் தமிழ் வித்வான் பட்டமும் இளங்கலைபட்டமும் பெற்றுஅதன் பின் மீண்டும் தமிழ் இளங்கலைபட்டமும் படித்துக் காரைக்குடி அழகப்பா கல்லூரியில் 1950 இல் பேராசிரியப் பணியைத் தொடங்கியவர். காரைக்குடி கல்லூரி வாழ்க்கையின் போதே தான் முதுகலை கற்றதாகவும், அதனால் அதிகமான நூல்களைப் படிக்கத் தனக்கு

வாய்ப்புக்கிட்டியதாகவும், பல்துறைவித்தகராக மிளிர்வதற்கு இந்தக்கல்லூரிக் காலமே துணைபோனது என்பதையும் குறிப்பிடுகிறார்.

அதன்பின் திருப்பதியில் திருவேங்கடவன் பல்கலைக்கு ஆய்வு மேற்கொள்ள வழி பிறக்கும் என்ற உணர்வோடு இணைந்திருக்கிறார். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-ல் தமிழ்த்துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றினார். அங்கு ஆழ்வார்கள் தொடர்பான முனைவர்பட்ட ஆய்வை மேற்கொள்ளவும், பல கட்டுரைகளை' சப்தகிரி' இதழுக்கு எழுதவும் வாய்ப்பும் கிட்டியுள்ளது. பின்னர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் விண்ணப்பித்தும் இவருக்கு அங்குவேலை கிடைக்காது போனது தன்னை 'ஏழுமலையான் தடுத்தாட்கொண்டதே' காரணம் என்று நம்புகிறார். சைவப்பின்னணியில் திருச்சியில் பிறந்தபோதும் அவரது வைணவ ஈடுபாடு அவரின் நூல்கள் மூலம் உலகத்தால் அறியப்பட்டதும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பலகாலம் பேராசிரியராக இருப்பதற்கு அவருக்கு வேங்கடவன் அருள்கூடியதும் கூடுதல் பெருமை. "என்னுள்ளே என் இதயத் தேரை இயக்கி நன்னெறிப்படுத்தி வரும் ஏழுமலையான், 'குன்றம் ஏறிக்குளிர்மலைக்காத்தான்', தன்னை இலக்கியம் சமயம், அறிவியல் மெய் விளக்கப்பணி இவற்றில் ஈடுபட வைக்குமாறு வேண்டி ஒரு கோரிக்கையை வைத்திருக்கிறார்.

வைணவ இலக்கியங்கள், பயண இலக்கியங்கள், எனப் பலபடைப்புகளை எழுதி இந்த உலகிற்கு வழங்கியதுடன் தன்னுடைய பணிக்காலம் முடிந்தபின்னரும், இந்த துறைகளில் எல்லாம் தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு பல படைப்புகளை இயற்றி, கிட்டத்தட்ட 135 இலக்கியங்களை நமக்கு தந்திருக்கின்றார். குறிப்பாக வைணவ இலக்கியங்களை மணிப்பிரவாள நடையில் இருந்து மாற்றி அழகு தமிழில் எழுதிய பெருமை பேராசிரியரைசாரும். வைணவ இலக்கியங்களில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் கூட சைவ இலக்கியங்களையும் படைத்து பெருமைப்படுத்தியவர் பேராசிரியர். சங்க இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள் இவற்றைக் குறித்த ஆய்வேடுகளை 'சிலம்பில் அறம்', 'உலகப் பொருளாதாரம்', புறப்பொருளில் இல்லறவியல்' தமிழ் இலக்கியங்களில் நீதி', என இலக்கியங்களை வெறுமனே ஆய்வுசெய்யாமல், அவற்றை நவீனஉலகின் பல் நோக்கு அணுகு முறையில் ஆராய்ந்து படைத்தவர்.

அவரின் படைப்புகள், கல்வியின் நோக்கில் மட்டுமல்லாது, ,பொதுவாசகர்களும் வாசிப்பதை ஊக்குவிப்பதற்கு வழிவகுத்தன என்பதில் மாற்றுக்கருத்து இருக்கமுடியாது. இனிய, எளிய முறையில் வாசிப்பவர் மனதில் கருத்தைப்பதிக்கும் நோக்கத்துடன் கடித முறையில் அமைந்த நூல்களைப் படைத்துப் பயன்படுத்தியவர் பேராசிரியர். சுப்புரெட்டியார் 'இல்லறநெறி' , 'வேலனுக்குவேங்கடத்தான்', 'என் கடிதங்கள்' போன்ற கேள்வி பதில் முறையில் அமைந்த

இலக்கியங்களைப் படைத்து படிப்பதற்கு இலகுவாக கருத்துக்களைத் தொகுத்து கொடுத்தார்.அதுபோலவே சொற்பொழிவுகளை இலக்கிய நூல்களாக படைத்த பெருமையும் பேராசிரியர்க்கு உரியது. இவருடைய முதல் வெளியீடாக ஆங்கில முகவுரையுடன் வெளிவந்த, ‘முத்தொள்ளாயிர விளக்கம்’ என்ற நூல் 1965ஆம் ஆண்டுவெளியிடப்பட்டது., பின்னாளில் 135 நூல்களை இவர் எழுதுவதற்கு இதுவே வழிவகுத்தது .

**வைணவநெறியும் கம்பனில் கொண்ட காதலும்:**

பேராசிரியர் வைணவமத நம்பிக்கையில் வளர்ந்தவர் என்பதையும் அவருக்கு வைணவ இலக்கியங்களில் இருந்த ஈடுபாட்டையும் 'ஆராவமுது' தொடங்கி 'பாணர் குலவிளக்கு', 'பக்திசாரர் என்று திருமழிசையாழ்வார்' பற்றியும் 'தொண்டரடிப்பொடி ஆழ்வார்', 'குலசேகரப் பெருமாள்'என ஆழ்வார்கள் பற்றி இவர் ஆற்றிய சொற்பொழிவுகளை அடக்கியநூல்களின் பதிப்புகளில் இருந்து உணரமுடிகின்றது. சுப்புரெட்டியார் ,தனது முனைவர் பட்டஆய்வினை' - Religion and Philosophy of Nalayira Divya Prabandham with Special Reference to Nammalvar" - ‘நாலாயிரம் திவ்ய பிரபந்தம் - நம்மாழ்வார் தத்துவம்’ என்ற தலைப்பில் ஆய்வு செய்தார். பின்னர் அதனைச் சார்ந்து எளியதமிழில் ‘பாசுரங்களில பக்திச்சுவை’ என்ற தலைப்பில், கிட்டத்தட்ட ஆயிரம் பக்கங்களில் ஒருநூலைப படைத்து பல்கலைக்கழக வெளியீடாகவும் பொதுவெளியில் உள்ள மக்களுக்கு பயன்படும் வகையிலும் வெளியீட்டார். இதன்மூலம் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்யதேசங்கள் குறித்து பின்னால் வரப்போகும் ஆய்வுகளுக்கு முன்னோடிவழி சமைத்தவர். அப்படி அவர் வைணவ நெறியில் ஈடுபாடு கொண்டதால் பிறந்த ஆய்வுகளும், நூல்களும்பல. வைணவநெறியில் பல நூல்களை எழுதியுள்ள இவர் கம்பனைப் பற்றி, கம்பரின் இராமாயணத்தைப் பற்றி, கம்பன் கதாபாத்திரங்களைப் பற்றி நூல்களை எழுதியிருக்கிறார். அவற்றில் 'பண்பாட்டு நோக்கில் கம்பன்காவியம்', 'கம்பனில் மக்கள் குரல்', 'அண்ணல்அனுமன்', 'கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்' ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இந்த ஆய்வில், இந்தநான்கு படைப்புகளும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

**அண்ணல்அனுமன்**

சொல்லின் செல்வன், நேர் இலாஅறிவன், செறிபெருங் கேள்வியன் என்னுமளவுக்கு, பேரறிவாளன் அனுமன் ஆவான். பேராசிரியர் அவர்கள் மாருதியை இந்நூலில் நுணங்கிய கேள்வியனாய் வடித்துச் சொல்லும் பதினெட்டுக் காரணங்களை மிக அழகாகத் தொகுத்துச் சொல்கிறார். குணக்குன்றன் என்ற கடைசிப்பகுதியில் சமயோசித புத்தி என்ற தலைப்பில், அநுமன் பேருருவம் கொண்டகாட்சிகளைத் தொகுத்துக் கூறிய முயற்சி இதுவரை அனுமனைப்பற்றி யாரும் சிந்தித்திராத விதத்தில் அமைந்துள்ளன. எங்கெல்லாம் அனுமன் பேருருவம் எடுத்தநிகழ்வு நிகழ்ந்ததோ அவற்றையெல்லாம் தொகுத்து படிப்போருக்கு ஆர்வமூட்டும்

வகையில், காட்சிப்படுத்தி அனுமனைக் கண்முன் நிறுத்தும் விதத்தில் தருகிறார். அத்தகைய பேருருவின் நயம்மிக்க விளக்கத்தை காட்டியுள்ளது ரெட்டியா அவர்களுக்கே உரித்தான அரிய ஆய்வு திறன் ஆகும். அனுமனை வெவ்வேறு புதுக்கோணங்களில், யாரும் கண்டிராத, காட்டியிராத புதுமுயற்சியாக பேராசிரியர் ரெட்டியாரவர்கள் வெளிச்சமிட்டு இருப்பது அவருக்கே உரித்தான, இலக்கியத்தை உள்வாங்கும் திறனும், சிந்தனையும், மொழிஆளுமையும் கூடியகலையாகும்.

“கவிக்கு நாயகன்', 'சிந்தனைச் செம்மல்', 'இராம பக்தன்“ என்னும் பகுதிகள் அனுமனின் மனபலத்தையும், 'சொல்லின் செல்வன்“, “இராம தூதன்“, “குணக்குன்றன் என்னும் பகுதிகள்அனுமனின் வாக்கு பலத்தையும், அஞ்சா நெஞ்சன், “விழையும் உருவினன் என்பன அனுமனின் உடல் பலத்தையும், காட்டும் விதத்தில் அமைக்கப்பட்டுள்ள இந்நூலின் ஓவ்வோர் இயலும், ஒவ்வொரு கோணத்தில் அநுமனை முழுவதுமாய்க் காட்டிடும் புதிய அணுகு முறையாகும். ஆசிரியரின், கம்பன் படைப்பை முழுப்பார்வையில் அள்ளிக்கொள்ளும் முயற்சிகள், பேருருவ தரிசனங்களில் அவரது பார்வை வீச்சுகளின் பரிமாணங்கள், அவற்றை உள்வாங்கி எழுத்தாகப் பரிமாறும் ஆற்றல் இவையெல்லாம் மொத்தத்தில் அநுமனின் பேருருவைக் கண்ட மகிழ்ச்சியையும் அனுபவத்தையும் நம்முள் உண்டாக்குவன.

“கவிக்கு நாயகன் என்ற தலைப்புடைய முதல் இயலில˙“இராகவன் புகழினைத் திருத்தும்' என்ற தொடருக்கு, 'இராமகாதை மங்களகரமாய் முடியக் காரணனாய் அமைந்தவன் அனுமன் என்பது குறித்த விளக்கத்தை 'பேராசிரியரின் ஆய்வுநிலை நாட்டுவது சிறப்பாகும். அநுமன் இல்லாவிட்டால் , இராமசரிதம் நடைபெற்றுக் கொண்டிருந்த முறையில், அது துன்ப நிலையில் முடிவதாக அமைந்திருக்கும். அநுமனே அதில் நடைபெற்ற கோணல்களை நிமிர்த்திக் கதை மங்களகரமாக முடியக் காரணமாக இருந்தவன் என்பதே பேராசிரியரவர்களின் விளக்கமும், வாதமும் ஆகும்.

பேராசிரியர் மாருதியை' நுணங்கிய கேள்வியனாய்' வடித்துச் சொல்வதற்கான பதினெட்டு காரணங்களைக் குணக்குன்றன் என்ற கடைசிப்பகுதியில் சமயோசித புத்தி என்ற தலைப்பில், மிக அழகாகத் தொகுத்துச் சொல்கிறார்.

‘சொல்லின் செல்வனின்' வாக்கு வன்மைக்குச் சான்றாகத் திகழ்பவை, இராமனைப் பற்றியும் அவனது பெருமையைப் பற்றியும் சுக்கிரீவனிடம் கூறுகின்ற போதும், இராமனுக்கு வாலியைப்பற்றி எடுத்துச் சொல்லும் போதும், இலங்கையில் அனுமன் பிராட்டியைக் கண்டு சீதை குற்றமற்ற நிலையில் இருப்பதை மறைமுகமாகத் தெரிவித்து இராமனுக்கு செய்தி சொல்லும் நுட்பத்தையும் தீக்குளிக்கத் தயாராக நெருப்பில் விழும் நிலையிலிருந்த பரதனிடம் இராமன் வருகையைத் தெரிவிக்கவரும் அனுமன் இராமன் வந்து கொண்டிருக்கும் செய்தியை சொல்லும் விதத்தையும் பற்றி ரெட்டியார் ஆய்வு அணுகு முறையில் அனுமனின் சிறப்பை

எடுத்துச் சொல்லும் விதம் நயம் மிக்கது. அனுமனின் பேச்சில் பக்குவமான சொற்களைக் காண முடிகின்றது என்பதையும் பேராசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். தக்க முறையில், தக்க சொற்களைக் கொண்டு பணிவான முறையில் அனுமன் தன் கருத்தை இலக்குவன் முன் வைத்ததனால், அவன் சீற்றம்தணியப் பெறுகின்றதையும், இந்திரசித்தன் இகழ்ச்சிக்குறிப்புடன் பேசுகின்ற போதும் அனுமன் மிக அமைதியாக பதில் சொல்வதையும், குறிப்பிட்டுக்கூறுகின்றார்.

இவற்றையெல்லாம் காரணம் காட்டி ‘செவிக்குத்தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்’ என்று கம்பன் சொல்வதையே சொல்லி ரெட்டியார் அனுமனைப் போற்றுகிறார். பல இடங்களில் இராமனுக்குப் பல விடயங்களை அனுமன் எடுத்து சொல்லியிராவிட்டால், இராம காதை அவலத்தில் முடிந்திருக்கும். அனுமனால் மருந்து மலையை இரண்டுமுறை கொண்டுவரப்படாமல் இருந்திருந்தால் இராமகாதை துன்பக்கதையாக முடிந்திருக்கும் என்பதையெல்லாம் கம்பன் பாடல்களின் வழியிலேயே சென்று உறுதி செய்கிறார் ரெட்டியார்.

அனுமனின் சிந்தனை திறம் குறித்து பேசும் ரெட்டியார், அதுகுறித்துப் பலசான்றுகளை முன்வைக்கிறார். இராமலக்குமணரைக் கண்ட சுக்கிரீவன் முதலிய வானரர்கள் அவரை வாலியைச் சேர்ந்தவர் என அஞ்சி ஒளிந்துகொள்ள முயல, அனுமன் அவர்களைத் தேற்றிய பின், ஒரு பிரம்மச்சாரி கோலம்கொண்டு அவர்களை சந்தித்து தெளிகிறான். கும்பகருணனைக் கண்டு இவன் இராவணன் இல்லை என்பதை, அவனை நெருங்கிச் சென்று, தன்நுண் உணர்வினால், சிந்தனைத் தெளிவினால் அடையாளம் காண்கிறான். அது போலவே இந்திரசித்துவைக் காண்கின்ற போதும் அவனை எடை போடும் அனுமனது சிந்தனையில் இராமஇலக்குவனர்க்கும் இவனுக்கும் பல நாள் போர் நடைபெறும் என்பதையும் சிந்தித்து உணர்கின்றான். இவை போன்ற நிகழ்வுகளைக் குறிப்பிடுவதன்மூலம் அனுமனின் சிந்தனை திறத்தைக் குறித்த பேராசிரியரின் வியப்பு வெளிப்படுகின்றது.

‘எவரைக் கண்ட மாத்திரத்தில் காரணமின்றி அனுமனுக்கு அளவற்ற பேரன்பு உண்டாகின்றதோ, அவரையே திருமால் என்பதாக அறிக” என்ற வாயுதேவன் வாக்கின்படி, இராமனை முதன் முதலில் பார்க்கும் போது தன்னை ஒரு மாணியாக உருமாற்றிக் கொண்டு முதல் உருவ மாற்றம் கொள்ளும் அனுமனைக் காட்டும் கம்பன் பாடல்களில் தொடர்ந்து 'விழையும்உருவினன்' என்ற வகையில், அனுமனின் பேருருவங்கள் பன்னிரெண்டையும் பட்டியலிட்டு, அனுமன் இராமகைங்கரியத்தில் அவன் திறமையாகச் செயலாற்றுவதை சிறப்பாகத்தொகுத்து, எடுத்தியம்புகிறார் பேராசிரியர்.

பேராசிரியர் ,அனுமனின் சமயோசித புத்தியைப் பலசந்தர்ப்பங்களைச் சுட்டிக்காட்டி நிறுவுகிறார். கார்காலம் கழிந்தவுடன் வருவதாகச் சொன்ன சுக்கிரீவன், சொன்னபடி வாராததால் சினம்கொள்ளும் இலக்குவணனைஆற்றுப்படுத்தும்போதும், சரணடைய வந்த வீடணனைத் தம்

பக்கம் சேர்த்துக் கொள்ளலாமா என இராமன்அனுமனைக் கேட்கும்போதும்,அனுமனின் புத்திபலம் பேசப்படுகின்றது. கம்பன் இவனை "நுணங்கியகேள்வியான்" என்று குறிப்பிடுவதிலிருந்தும், அநுமனைப் பொறையுடைமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறுகிறார் பேராசிரியர். அதுபோலவே, தூதனுக்குரியத் தகுதிகளாக கம்பன்கூறும் பண்புகளை அனுமன் பின்பற்றுவதையும், அனுமனது வரப் பண்புகளையும் எடுத்துக்காட்டிமிக எளிய முறையில் சிக்கலான பாடல்களை எல்லாம் எடுத்துக்கூறி வாசிப்பவருக்கு கம்பராமாயணத்தில் ஈடுபாடு தோன்றும் வகையில் படைத்திருக்கிறார்.

**கம்பனில் மக்கள் குரல்:**

'கம்பனில் மக்கள் குரல்' என்ற நூல் ஆசிரியரின 66 ஆவது அகவை நிறைவுநூலாக அமைந்துள்ளது. இதில் நீதிபதி சு. இரத்தினவேல்பாண்டியன் வழங்கியுள்ள அணிந்துரை, "கம்பனை ஆழ்ந்துகற்ற பேராசிரியர் சுப்புரெட்டியார் எழுதிய பதினோரு கட்டுரைகளின் தொகுப்பு என்ற விளக்கத்துடன் தொடங்குகிறது.

முதற் கட்டுரையில் முடியாட்சியின் முடிவில் குடியாட்சி உருவான நயத்தை விளக்குகிறார் ஆசிரியர். நான்கு அரசு முறைகளை பேராசிரியர் சுட்டிக்காட்டுவதுடன் மக்கள் அரசுகள் குறித்த திறனாய்வுகளையும் முன்வைக்கின்றார். 'காவியத்தம்பி' என்று இலட்சுமணன் பற்றிய சிறப்புக் கட்டுரையாகவும்,'அறங் கடந்த செயல்'என்ற கட்டுரையில 'ஆணவத்தின 'விளைவுகளைக் கூறுவதாகவும் அமைத்துள்ளார். 'கம்பனின் குழந்தை இன்பம்' என்ற கட்டுரையில்ஏன் குழந்தை பிறந்ததால் வந்த இன்பம் பற்றி எங்கும் பெரிதாகப் பேசப்படவில்லை? என்ற கேள்வியை முன்வைக்கிறார். 'மலைக்காட்சி' என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையில் குறிஞ்சிநிலம் குறித்த பல காட்சிகள் இடம் பெற்றுள்ளன. 'விளையும் பயிர்' என்ற கட்டுரையில் மேகநாதனின் சிறப்புகளைப் போற்றுகிறார் பேராசிரியர். 'சிறை வைத்த காதல்' கட்டுரையில் சீதை என்ற பெண்ணை இராவணன் மனச்சிறையில் வைத்தது முதல் யுத்தகாண்டத்தில் அந்தக் காதல் எப்படி அவன் இதயத்திலிருந்து வெளியேறியது என்பது வரைபேசுகிறார். 'கவிநாயகன்' என்ற தலைப்பில் கம்பனுடன் அனுமனையும் 'இணைத்து இருவரின் சொல்வலிமையையும் குறித்து பேசுவதுடன், குறிப்பாக இராமனது காடுறை வாழ்க்கை அனுமன் வாயிலாக எப்படி மாண்புபடுத்தப்படுகிறது என்றெல்லாம் எடுத்துரைக்கிறார். குறிப்பாக இராமன் வாழ்வின் சறுக்கல்களையும் அனுமன் அவற்றினைச் செம்மைப்படுத்தியதையும் இயம்புகிறார். 'கம்பன் காட்டும் மேழிச்செல்வம்' என்ற கட்டுரையில் உணவு, உணவுசார்வணிகம், உணவுப் பற்றாக்குறை பற்றிய புதுமைக்கருத்துக்களை முன்வைக்கிறார். கம்பனில் உருக்காட்சிகள் என்ற கட்டுரை, கம்பன் பற்றிய ஆழ்ந்ததிறனாய்வாக அமைந்துள்ளது. கம்பன், கம்பனின் பாத்திரங்கள், கம்பனின் கருத்துக்கள் பற்றிய பல்வேறு அணுகுமுறைகளை அவர் படைத்த பாத்திரங்கள் மற்றும்

காட்சிகள் வாயிலாக தனக்கே உரிய சிறப்புப்பார்வையுடன் பேராசிரியர் இந்நூலில் படைத்திருக்கிறார்.

மேலும், இந்நூலில், தான் இப்படைப்புகள் யாவற்றையும் தனது ஆன்ம நிறைவுக்காகத்தான் படைத்துக் கொண்டதாகக் குறிப்பிட்டுள்ளார். தனக்கும் கம்பனுக்கும் உள்ள உறவு 'ஐம்பது ஆண்டுகட்கும் மேற்பட்டது. அந்த உறவுக்குக் காரணமாக இருந்தவர்கள் பலர். அவர்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கவர்கள் புலவர் உலக ஊழியனார், புலவர் ஜகவீரபாண்டியனார், தேசபக்தர் சா. கணேசன், தமிழ்க்கடல் ராய சொக்கலிங்கம், சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா, ரசிகஞானிடி.கே.சி, கலெக்டர் தொ.மு. பாஸ்கரத்தொண்டமான், ஜஸ்டிஸ்எஸ். மகராஜன் ஆகியோர். இவர்கள் எல்லோரையும் நினைந்து போற்றுகின்றேன்.' என்று சொல்வதுடன் 'இந்த இலக்கியப் பணி என் ஆன்ம நிறைவுக்காக ஆற்றிய இலக்கியப் பணி; நான் இதனைத் தெய்வப்பணியாகக் கொள்வேன்.' என்று தனது கம்பன் குறித்த ஆய்வுகளை எல்லாம் தெய்வத் தொண்டாகவே போற்றுகின்றார்.

நம்மாழ்வாரின் ''வண்டமிழ்நூற்கநோற்றேன்'' ''தொண்டர்க்குஅமுதுண்ணச் சொல் மாலைகள் சொன்னேன்'' ''அவை அடியார்க்கு இன்பமாரியே'' என்ற பாடலைக் குறிப்பிட்டு, தன் பணிகள் குறித்து மகிழ்கின்றார் பேராசிரியர். அதில் 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்ற முதுமொழிக்கு ஏற்ப, கம்பனுக்கு யான் ஆற்றிய வினையால் (தொண்டால் சென்னைக் கம்பன் கழகம் "ஏவி.எம். அறக்கட்டளைச் சொற்பொழிவு (1996)'' நிகழ்த்துமாறு கம்பன் அடி சூடி மூலம் 8.3.96 நாளிட்டஅழைப்புக் கடிதத்தை 14.3.96 அன்று பெற்றேன். அவருக்கும் கழகத்தலைவர் நீதியரசர் மு.மு. இஸ்மாயில் அவர்கட்கும் என் இதயம் தோய்ந்த நன்றி.' என்று கம்பன் கழகத்துக்கும் நன்றி தெரிவிக்கின்றார். இவையெல்லாம் கம்பன்பால் பேராசிரியர் கொண்ட காதலைக் காட்டுகின்றன.

இந்நூலில் ரெட்டியார் அவர்கள், மக்கட்பாசம், சகோதர வாஞ்சை, மக்கட்பண்புகள், நம்பிக்கைகள், பரம்பொருள் ஏற்றம் என ஐந்து தலைப்புகளில் கட்டுரைகள் படைத்திருக்கிறார்.

கம்பன் வைணவனா? என்ற முதல் வரியுடன் முதல் கட்டுரை தொடங்குகின்றது. கம்பனை வைணவர் என்று நிலைப்படுத்த 'திருப்பாற்கடலைக் கடைந்து தேவர்க்கு அமுதம் ஈந்தவன் திருமால். அந்தத் திருமாலிடம் இணையற்ற பக்தி கொண்ட கம்பநாடன் அவன் அவதாரமாகிய இராமனின் திருக்கதையை விருத்தம் எனும் ஒண்பாவால் அமைத்து மானிடர்களாகிய நமக்குத் தமிழ் அமிழ்தம் ஈந்துமிகு புகழ் பெற்ற வரலாறே போதும் அவன் வைணவன் என்பதற்கு' என்ற சான்றை முன்வைத்து தம் கொள்கையை நிறுவுகிறார்.

அந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு, கம்பனின் பாத்திரங்களான, விராதன் இந்திரன், கவந்தன் ஆகியோரின் வாக்காக வரும் பாடல்களைத் தேர்ந்தெடுத்து இருக்கிறார். அவற்றில் இருக்கக் கூடிய ஆழ்வார் பாசுரங்களின் தாக்கத்தினைத் தெளிவாக்கி கம்பனின் வைணவ நிலைப் பாட்டை நிறுவுகிறார். அத்தோடு 'கம்பன் ஏதோ பத்தரை மாற்றுத்தங்கம் போல தனது கவிதைகளை நமக்கு வைத்துப் போனான். "செம்புபோன்ற உலோகத்தைச் சேர்த்து பணிப்பொன் ஆக்குவதுபோல், சமயச்சார்புடைய புலவர்கள் பாடபேதத்தைச் சேர்த்து, தமக்கு வேண்டியவாறு பொருளுரைத்துக்கொள்வர்.' என்றும் கம்பன் படைப்பின் தூய தன்மையைப் பேசுகிறார்.

**இராமனது பரத்துவம்**

அது போலவே இராமனிடம் பேராசிரியர் கொண்டுள்ள பற்றினையும் கம்பனை முன்னிறுத்தி அவர் இராமனது பரத்துவம் பற்றி பேசுவது மூலம் உறுதி செய்யப்படுகிறது.

சீதையை தேடப்புகும் வானரர்க்கு அருந்ததிமலை குறித்து 'அரண் அதிகன் உலகளந்த அரி அதிகன்' என்று சுக்ரீவன் வாயிலாகக் கம்பன்கூற்றைப் பேரசிரியரும்' ஒற்றுஉலகளந்தஅரி எனும் மாலே பரம்பொருள்' என்ற கருத்தை முன்வைக்கின்றார். அது போல மகரக்கண்ணன் இறந்த பின் இந்திரசித்துவிடும் மலரவன் கணையில் இலக்குவன் வீழ்ந்ததைக் கேட்ட இராமன் மூர்ச்சையடைந்து பின் மீண்டபோது தேவர்கள் இராமனின் உண்மை சொரூபத்தை சொல்வதைக் கம்பன் ஏழு பாடல்களால் சொல்வதை பேராசிரியர் பரத்துவத்துக்கு ஆதாரமாக எடுத்துக் காட்டுகிறார். இந்திரசித்து எய்த மலரவன் கணையை எதிர்த்த இலக்குவணன், எவர்க்கும் தீங்கு விளைக்காது அரக்கன் விடுத்த கணையை மட்டுமே அழிக்கும் கணையைத் தொடுத்ததை தேவர்கள் பாராட்டுகின்றபோது சிவபெருமான் இராம இலக்குமணர்களின் பெருமையைத் தேவர்கட்கு சொல்வதாகக் கம்பன் படைத்த நான்கு பாடல்களை சுட்டுகிறார். கடவுளான நாராயணரின் அவதாரமான இராமஇலக்குவணர், வினை கடந்தவர், மறை நான்கிற்கும் அப்பாற்பட்டவர் புராணபுருடர்கள்" என்கிறது இப்பாடல்கள். .இந்திரசித்து இராவணனிடம் இராமலக்குமணர்களைப் புகழ்கின்ற பாடல் ஒன்றும் உள்ளது. நாராயணரை முழு முதற்காரணப் பொருளாய் கதாபாத்திரங்களின் வாய்வழியாக சொல்வது பேராசிரியருக்கு மிக்க மகிழ்ச்சியை தருகிறது என்பதை உணரக் கூடியதாக உள்ளது. கம்பன் சொல்லவரும் கருத்தும் தம்முடைய கருத்தும் இதுவே என்பதை உறுதிப்படுத்தும் விதத்தில் அவற்றைக் காணும்போது தாமும் மகிழ்ச்சிஅடைவதாகக் கூறி மகிழ்கிறார்.

**மக்கட்பாசம்**

கம்பன் காட்டும் பாசத்தினைக் காட்சிப்படுத்த தசரதன் இராமனை இழந்து வருந்துவது, இந்திரசித்து, அதிகாயன், அட்சய குமரன், கும்பகர்ணன் ஆகியோர் இழப்பால், தசரதன், இராவணன், மண்டோதரி, தானிய மாலினி ஆகியோரும் பிள்ளைகள் இழந்து தவிப்பதையும்,

வீடணனின் புலம்பல், இராவணனின் பத்துத்தலைகளும் புலம்புவது ஆகிய சூழ்நிலைகளைக் காட்டும்கம்பன் பாடல்கள் பேராசிரியர் கையிலெடுத்த நுட்பங்களாகும்.

பிள்ளைகளை இழந்து தவிப்பதை கம்பன் பெரிதுபடுத்திக் காட்டியிருப்பதை சுட்டி, குறிப்பாக மக்கட்பேறின்றி தசரதன் வருத்தியதைச ' சொல்லி, பிள்ளைகளை இழந்த கதாபாத்திரங்களின் பாசம் கம்பனால் வெளிப்படுத்தப்பட்ட அளவுக்கு பிள்ளைகள் பிறந்தபோது தசரதன் மகிழ்ச்சியை கம்பன் ஏன் கொண்டாடவில்லை' என்ற கம்பனின் அணுகு முறைகுறித்த கேள்வியை முன்வைக்கிறார் ரெட்டியார். பின் அவரே அந்தக் கேள்விக்குப் பதிலாக ,அதற்கான காரணத்தையும் 'ஒரு வேளை கம்பன் அம்பிகாபதியை இழந்த பாதிப்புகாரணமாக பிள்ளையை இழந்த சோக நிலையில்தான் அனுபவித்த புத்திரபாசத்தை எடுத்துக்காட்டுவது போல் படைத்திருக்கிறானோ என்ற ஒருகருத்தையும் முன்வைக்கிறார் பேராசிரியர். கம்பனில் ஆழ்ந்துதுய்த்த ஒருவரால் மட்டுமே இப்படி சிந்திக்கமுடியும்.

**சகோதர வாஞ்சை**

இராமன் சகோதரர் நால்வர்பால் கொண்ட சகோதர வாஞ்சையை விரிவாகவும் விளக்கமாகவும் கூறும் ரெட்டியார், வேடர்குலகுகன், வானரகுலசுக்ரீவன், அரக்கர் குல வீடணன் என ஏனையோருடன் இராமன்கொண்ட சகோதர வாஞ்சை குறித்து கம்பன் காட்டும் பாசத்தைப் பேராசிரியர் தனது ஆரம்ப கால ஆய்வுப் பொருண்மையில் ஒன்றான முத்தொள்ளாயிரம், திருமங்கையாழ்வார் பாடல்கள் ஆகியவற்றுடன் தொடர்புபடுத்திப் பார்க்கிறார்.

இராவணன், கும்பகர்ணன், வீபிடணன் ஆகியோரிடையே உள்ளபாசமும் அவர்கள் இரவணன்மீது கொண்டுள்ள அக்கறையையும் இராவணன் மாண்டபின் பின்புலம்புவது மூலம் காட்டியுள்ளார். இந்திரசித்தன் தன்சகோதரர்கள் இறந்துபோனபோது துயர்தாளாது தந்தையைத்தூற்றுவது மூலம் பாசத்தை வெளிப்படுத்துகிறான். இவற்றையெல்லாம் தெளிவாகவும் ,விரிவாகவும், இயல்பாகவும் கூறும் பேராசிரியர் கம்பன் கருத்தும், படைப்பும் தன் கருத்துக்களே என்பதுபோலம கிழ்கின்றார்.

**கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்**

இராமகாதையில் சிறு பாத்திரங்கள் என்ற தலைப்பில் அவர் குமரி என்ற இதழில் எழுதிய கட்டுரை ஒன்றின் விரிவாக்கமாகவே கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள் என்ற நூல் படைக்கபட்டிருக்கவேண்டும். அவரது சிறு பாத்திரப்படைப்புகள் பற்றிய ரெட்டியாரின் கருத்துக்கள் பின்வருமாறு தொகுக்கப்பட்டுள்ளன .

'ஒரு கவிஞனின் பேராற்றல் சிறுபாத்திரப்படைப்புகள் மூலமே வெளிப்படும். காவியங்கள் மாளிகை என்றால் அதில் உள்ள பாத்திரங்கள் பலகணிகள் ஆகும் என்கிறார். மேலும் ,அவர், 'இப்பாத்திரங்கள் மூலம் காவியத்தில் நிகழும் காட்சிகளை நாம் காண முடிகிறது.

சிறுபாத்திரப்படைப்புகள ‘மூலமே காவியத்தலைவன் குணங்கள் வெளிப்படுத்தப்படுகின்றன’ என்றெல்லாம் அவற்றின் முக்கியத்துவம்பற்றி பேசுகிறார். சிறுபாத்திரப்படைப்புகளின் நோக்கம், கதை வளர்ச்சிக்குத்துணை போவதும், காவியத்தின் திருப்பு முனையையும், கதைநகர்த்தலையும் முடுக்கி விடபயன்படும் என்றும் காவியத்தலைவனின் குணநலன்களைப் புலப்படுத்தபயன்படும்’ என்றும் சொல்கிறார்.

இராமகாதையில் உள்ள துணைப்பாத்திரங்களைப் பட்டியலிட்டு, அந்த பாத்திரங்கள் எப்படி கதைவளர்ச்சிக்குத் துணை போகின்றன என்பதை தடாகை, மாரீசன், விசுவாமித்திரர், போன்ற பாத்திரங்கள் கதை நகர்த்தி செல்வதைக் குறிப்பிட்டு பேசுகிறார். மந்தரை, சூர்ப்பணகை இருவரும் கதையில் திருப்பு முனைகளை கொண்டு வருவதன் மூலம் கதையில் நீட்சியும், விறுவிறுப்பும் ஏற்படுவது குறித்தும் பேராசிரியர் சுட்டிக்காட்டுகின்றார். சூர்ப்பனகையின் வரவே இராமனை யுத்தகாண்டம் வரை இழுத்துச் செல்வதாகவும், மாரீசன் இறப்பு கதை விறுவிறுப்பாக செல்ல உதவுவதையும் சொல்கிறார்.

காவியத் தலைவனின் குண நலன்களில் துணைப்பாத்திரங்களின் பங்களிப்புகுறித்து, இராமனின் அருங்குணங்களை முதலில் வெளிப்படுத்துவதற்கு குகனின் பாத்திரம் பயன்படுத்தப்பட்டுள்ளது. மாரீசனை மாயமான் வேடம் புனைய இராவணன் வேண்டும் போது, இராமன் அரக்கர் குலத்தையே அழித்து விடுவான் என்று எச்சரிக்கை செய்கிறான். இது பின்னால் வரும் அழிவைச் சொல்லக் கம்பன் மாரீசனைப் பயன்படுத்தி இருப்பதைக் காட்டுகின்றது என்பதையெல்லாம் சுட்டிக்காட்டுகிறார் பேராசிரியர்.

அதன் மூலம் பாத்திரங்கள் எவ்வாறு காவியத்தை மிளிரச் செய்கின்றன என்றும் ’சிறுபாத்திரங்களைக் காவியத்தில் இருந்து விலக்க முடியாது. அப்படி விலக்கினால் அவை குறையுண்டாக்கி காவியத்தில் நிறையின்மையை உருவாக்கி விடும்’ என்பதையும் ரெட்டியார் குறிப்பிட்டு சொல்கிறார். இப்படி தன் நான்கு படைப்புகளிலும் கம்பனை தானும் சுவைத்து மற்றவரும் சுவைக்க எளிமையாகப் படைத்துள்ள பேராசிரியர் , கம்பனைப்பற்றி பேசும் போது,

‘காவியப்போக்கிலும் கருத்து வளத்திலும் கம்பன் எனது மனதைக் கவர்ந்தது போல் வேறு யாரும் கவரவில்லை. இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் இராஜ நடையில் கம்பீரமாகச் செல்லுவதை அறிந்தேன். “நவில்தொறும் நூல் நயம்போலும்” என்ற உண்மையை வள்ளுவனிடத்திலதான் காணமுடிந்தது. ஓதுதற்கெளிதாயும் உணர்தற்கெளிதாயுமிருப்பதைத் திருக்குறளில் தான் கண்டேன்.’ என அவருள் வள்ளுவரையும் , இளங்கோவையும் விடக்கம்பனே கோலோச்சுகின்றான் என்று உறுதி செய்கிறார்.

தன் கம்பன் படைப்பின் நோக்கத்தை ‘பொதுவாக இலக்கியத்தில் ஒரு சுவையையும் சிறப்பாகச் சங்க இலக்கியத்தில் ஒரு விருப்பத்தையும் ஊட்டிவிட்டால், எவரும் அவற்றை விரும்பிப் படிப்பார்கள் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அந்த எண்ணமே இந்த நூல் தோன்றக்காரணம்.’ என்றுசொல்கிறார்.

**துணை நின்ற நூல்கள்:**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எழுதிய

1. ’இராமகாதையில்சிறு பாத்திரங்கள்’ - குமரி 1955 மார்கழி
2. பண்பாட்டு நோக்கில் கம்பன்காவியம்
3. கம்பனில் மக்கள் குரல்
4. அண்ணல்அனுமன்
5. நினைவுக்குமிழிகள்-( 1-2 பாகங்கள்)
6. மலரும்நினைவுகள்
7. வைணவமும்தமிழும்

*****************************



# மூவர் தேவாரம் ~ புதிய பார்வை தந்த புகழறிஞன்

முனைவர் மா. முத்துராமன்
கௌரவ விரிவுரையாளர்
மன்னர் துரைசிங்கம் அரசு கலைக்கல்லூரி
சிவகங்கை

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தமிழ் இலக்கிய வரலாற்றில் தனக்கெனத் தனித்த இடத்தினைப் பெற்ற தமிழறிஞர்களுள் மிகவும் புகழ்பெற்றவர் ந. சுப்புரெட்டியார் ஆவார். இவர் நூற்றிற்கும் மேலான நூல்களை எழுதித் தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கிய சிறப்பினைக் கொண்டமைந்தவர். இலக்கணங்கள், சங்க இலக்கியங்கள், காப்பிய இலக்கியங்கள், அற இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், அறிவியல் நூல்கள் என எண்ணற்ற தளங்களில் இயங்கிய பெருமை மிகக் கொண்டவர். சுப்புரெட்டியார் நூல்களின் அருமை கருதித் தமிழக அரசு இவரது நூல்களை நாட்டுடைமை ஆக்கியுள்ளது. இத்தகைய சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டமைந்த சுப்புரெட்டியார் திருமுறைகள் என்னும் தொகுப்பினுள் முதன்மையானதாக வைத்துப் போற்றப்படும் தேவாரம் குறித்த தனது பார்வையினைப் பதிவு செய்வதாய் மூவர் தேவாரம் - புதிய பார்வை என்னும் நூலினைப் படைத்துள்ளார். இந்நூல் உணர்த்தி நிற்கும் சுப்புரெட்டியாரின் அறிவுத் திறன், தமிழ் உணர்வு, இசை, இலக்கிய, இலக்கணப் புலமை போன்றின்னவற்றை ஆய்ந்து வெளிப்படுத்துவதாய் இக்கட்டுரை அமைகின்றது.

**தேவாரம்:**

‘தேவாரம்’ என்கிற பகுதியில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்ற மூவருடைய தேவாரப் பதிகங்கள் இடம்பெற்றுள்ளன. இவை முறையே ஏழு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளது. ந. சுப்புரெட்டியாரின் ‘மூவர் தேவாரம் - புதிய பார்வை’ என்னும் நூலின் முதல் பகுதி தேவார மூவர்களின் பாடல்களுள் இன்றியமையாத பாடல்களை எடுத்துரைத்து அப்பாடல்கள் தோன்றிய களங்கள். அப்பாடல் எழுவதற்கான காரணிகள், அப்பாடல்கள் பாடப்பற்ற தலங்களின் சிறப்பில்புகள், அப்பாடல்கள் பாடப்பெற்றமையால் ஏற்பட்ட விளைவுகள் என்றின்னவற்றை வாசிக்கும் அனைவருக்கும் எளிதில் விளங்கும் வண்ணம் எடுத்துரைப்பதாய் அமைந்துள்ளது.

**திருமுறையும் தேவாரமும்:**

‘திருமுறை’ என்னும் இப்பெயர் மூவர் திருப்பதிகங்கட்கு மட்டுமே வழங்கிய பெயர் ஆகும். திருமுறைகளைத் தொகுத்தளித்த நம்பியாண்டார் நம்பியின் காலத்திற்குப் பின்னரே திருவாசகம்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

முதலிய ஏனைய நூல்கட்கும் வழங்கப்பெற்றது என்பதனைத் திருமுறை கண்ட புராணம் தெற்றென விளக்கம் செய்யும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் போன்றோர் பாடியருளிய பதிகங்களைத் ‘தேவாரம்’ என்னும் பெயரால் முதன்முதலில் சுட்டியவர்கள் உலா பாடிய இரட்டையர்கள் ஆவர். இவ்வழக்கு முதன்முதலாக ‘ஏகாம்பரநாதர் உலா’ வில்தான் காணப்பெறுகின்றது.இதனை,

“மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரஞ் செய்த திருப்பாட்டும்” ( ஏகாம்பர நாதர் உலா: கண்ணி: 78)

எனக் குறிக்கும். இத் தொடரில் ‘தேவாரஞ் செய்த திருப்பாட்டு’ எனுமிடத்து ‘தேவாரம்“’ எனப் பெயராகக் குறிக்காமல் ‘தேவாரம் செய்த’ என வினை நிலையில் வைத்துரைத்தலால் ‘திருப்பாட்டு’ என்பது மூவர் செய்த திருப்பாடல்களையும் ‘தேவாரம் செய்த என்பது அத் திருப்பாடல்களை இசைப்படுத்திப் பாடிய தொழில் நிலையையும் குறித்து நின்றன எனக் கொள்ள வேண்டியுள்ளது எனக் குறிக்கின்றார் ந. சுப்புரெட்டியார். மேலும் மூவர் திருப்பதிகங்களையும் ‘தேவாரம்’ என்ற பெயரால் முதன் முதல் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்கியவர் சைவ எல்லப்ப நாவலர் ஆவர் என்பதனையும் சைவ எல்லப்பநாவலர் பாடியருளிய திருவருணைக் கலம்பகத்தில் இடம்பெற்றுள்ள,

“சைவத்தின் மேற்சம யம்வே
நிலையதில் சார்சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் இல்லெனும்
நான்மறைச் செம்பொருள்வாய்
மைவத்த சீர்திருத் தேவார
மும்திரு வாசகமும்
உய்வைத் தாஞ்செய்த நால்வர்
பொற்றாள் உயிர்த்துணையே” ( திருவருணைக் கலம்பகம்: 4)

என்ற பாடலையும் சான்று காட்டி நிறுவுவார் ந. சுப்புரெட்டியார். சுப்பு ரெட்டியாரின் கூற்றிற்கிணங்க மேற்கண்ட பாடலின் மூன்று, மற்றும் நான்காவது அடிகளில் மூவர் திருப்பதிகங்களும் என்ற திருப்பாட்டும் பின்னவர் குறிப்பிட்ட தேவாரமும் ஒன்றே பெயரால் குறிக்கப் பெற்றிருத்தல் காண முடிகின்றது.

**தேவாரம் - புதிய ஆய்வுத் தளத்தைச் சுட்டல்:**

‘தேவாரம் என்னும் சொற்தொடருக்குத் தமிழ்ச் சான்றோர் பலர் எண்ணற்ற விளக்கங்களை நல்கியுள்ளனர். இதனைத் தேவ + ஆரம் எனப் பிரித்து இறைவனுக்கு மாலையாயது எனப் பொருள் உரைப்பர். தேவார ஆசிரியர் மூவரும் இறைவனுக்கு அணியும் பாமாலைகளாகிய அழகிய திருப்பதிகங்களைப் பாடிப் போற்றிய தன்மையைச் சிலர் தங்கள்

கூற்றிற்கு சான்றாக்குவர். தே + வாரம் எனப் பிரித்து தெய்வத்தினிடத்து அன்பை விளைவிப்பது எனப் பொருள் கூறுவர் சிலர், “வாரமாகித் திருவடிக்குப் பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே“ (7.59 திருவாரூர்ப்பதிகம்) என வரும் சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் ‘வாரம்’ என்னும் சொல் இறைவன்பால் மெய்யடியார்கள் வைத்த பேரன்பு என்னும் பொருளில் வழங்க பெறுதல் ஈண்டு கருதுவதற்கு உரியதாகும். 11, 12-ஆம் நூற்றாண்டுகளில் வரையப் பெற்ற சோழ வேந்தர் கல்வெட்டுகளில் ‘தேவாரம்’ என்ற சொல் ‘வழிபாடு’ என்ற பொருளில் வழங்கப் பெற்றுள்ளது. மூவர் திருப்பதிகங்களும் இறை வழிபாட்டில் பாடப்பெற்று வந்தமை பற்றி கி.பி.14-ஆம் நூற்றாண்டு முதல் அப் பதிகங்கள் தேவாரம் என்ற பெயரால் வழங்கப்பெற்று வருகின்றன என்றும் அதற்கு முன்னர் அவை அவ்வாறு வழங்கப்பெற்று வந்தன என்பதற்குக் கல்வெட்டுகளிலோ பிறவற்றிலோ சான்றுகள் கிடைக்கவில்லை என்றும் ஆராய்ந்து கூறுவர் தி.வை சதாசிவ பண்டாரத்தார் (சதாசிவ பண்டாரத்தார் தி.வை: தமிழிலக்கிய வரலாறு (13, 14, 15ஆம் நூற்றாண்டுகள்) - பக் 66 ) அவர் காட்டியபடி ‘தேவாரம்’ என்ற பெயர் சோழர் கல்வெட்டுகளில்தான் முதன்முதல் காணப்பெறுகின்றது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டுக்குமுன் ‘தேவாரம்’ என்ற சொல் ‘வழிபாடு’ என்னும் பொருளில் வழங்கியது என்பதற்கு இலக்கியச் சான்றோ கல்வெட்டுச் சான்றோ கிடைக்கவில்லை. ‘‘சோழர் மன்னர் ஆட்சிக் காலத்தில் ‘வழிபாடு’ என்னும் பொருளில் வழங்கப் பெறுவதர்குரிய காரணம் யாதென ஆராய்வது இன்றியமையாதது.’’ (மூவர் தேவாரம் - புதிய பார்வை : பக்: 15 – 16) எனச் சதாசிவப்பண்டாரத்தாரைச் சான்று காட்டி நிறுவும் தன்மையானது பிற அறிஞர்களின் கருத்தினை ஏற்றுப் போற்றும் சுப்புரெட்டியாரின் பண்பினை வெளிப்படுத்தி நிற்கின்றது. மேலும் தேவாரம் என்னும் சொல் வழிபாடு என வழங்கப்பட்டமைக்கான காரணத்தை ஆய்தல் இன்றியமையாதது என்ற சுப்புரெட்டியாரின் கூற்று ஆய்வாளர்களுக்கான புதிய ஆய்வுக் தளத்தை அறிமுகம் செய்வதாய் அமைந்துள்ளது. .

தேவாரம் புதிய பார்வை என்னும் இந்நூலின் இண்டாவது பகுதி தனது பெயருக்கு ஏற்ற வண்ணம் பல புதிய செய்திகளை உள்ளடக்கியதாய் அமைந்துள்ளது. தேவாரப் பாடல்கள் இறைவன் மாட்டுப் பாடிப் பரவுதலை அடிப்படை நோக்கமாகக் கொண்டடைந்தவை ஆகும். எனவே இவை இசைப்பாடல்களாய் அமைந்துள்ளன. இத்தகைய காரணத்தின் அடிப்படையில் இப்பாடல்கள் ‘பண் சுமந்த பாடல்கள்’ என்று அழைக்கப்படுகின்றன. ந. சுப்புரெட்டியார் தனது நூலின் இரண்டாவது பகுதிக்கு ‘பண்சுமந்த பாடல்கள்’ என்பதனைத் தலைப்பாக வைத்துள்ளார்.

நீண்ட நெடிய இசை மரபினைக் கொண்ட மொழி தமிழ்மொழி ஆகும். தமிழர்கள் திணை வாழ்க்கை முறையினை வகுத்தமைத்த பொழுதே அத்திணைகளுக்குரிய பண் வடிவங்களையும் இசைக் கருவிகளையும் சுட்டியுரைத்தனர். தமிழின் முதற் காப்பியம் எனும் சிறப்பினைத் தன்னகத்தே கொண்டமைந்த சிலப்பதிகாரம் தமிழரின் இசைமரபின் சிறப்பினைத் தெற்றென

விளக்கி நிற்கும். ஆனால் அத்தகைய இசைமரபுகள் தமிழர்கள் மறந்திருந்த காலத்து தேவார மூவர் தோற்றம் பெற்று இசை மரபினை வளர்த்தெடுத்தனர். தமிழ் இசை மரபின் தாய் எனப் போற்றப்படும் காரைக்கால் அமைமையார் தொடங்கி பின் வந்த தேவார மூவர் காலத்து தமிழ் இசை மரபு மிகப்பெரும் செல்வாக்குப் பெற்றது எனலாம். இறைவனை,

"ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய்" ( 7: 51:10)

எனப் போற்றிக் கொண்டாடியது தேவாரம். மேலும் இறைவன் தமிழ் இசைப்பாடலுக்கு இணங்கி அருளும் வண்ணம் அமைந்த பிரான் என்பதனை,

"நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக்கு
அரையனும் பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை" ( 7: 67:5)

என எடுத்துரைப்பார் சுந்தரர். ஞானசம்பந்தர் இறையுணர்வை இசைத்தமிழ் வாயிலாகப் பரப்பிய பெருமைக்குரியவராய் விளங்கினார்..

இசைத்தமிழ் நூலார் கூறும் 103 பண்களில் ஞானசம்பந்தர் 22 பண்களில் திருப்பதிகங்களை அருளியுள்ளார். தாம் அருளிய தேவாரத் திருப்பதிகங்களைப் பண்ணொன்றப் பாடிப் போற்ற வேண்டுமென ஞானசம்பந்தர் அறிவுறுத்துவதை அவர் திருமுறைகளில் பல இடங்களிலும் காண முடிகின்றது. புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகத்தில்,

"பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள்" ( 2: 43:8)

"கீதத்தை மிகப்பாடும் அடியார்கள்" ( 2: 43:5)

எனவும் கூறியருள்கிறார். திருவலஞ்சுழித் திருப்பதிகத்தில்,

"வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னாவதும் எந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடும் ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே" ( 2: 2: 11)

என்றும், திருக்கோழம்பம் திருப்பதிகத்தில்,

"தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம்பந்தன்நம் பான்உறை
விண்பொழிற் கோழம்பம்மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல்லார்க்கில்லை பாவமே" ( 2: 13: 10).

என்றும், திருமணஞ்சேரித் திருப்பதிகத்தில் ,

"பண்ணாரப்பாட வல்லார்க்கு இல்லை பாவமே" ( 2: 16:10)

என்றும் போற்றி நிற்பார். மேலும் கடிக்குளம் திருப்பதிகத் திருக்கடைக்காப்பில்,

"தனமலிபுகழ் தயங்குபூந் தராயவர் மன்னன்நற் சம்பந்தன்
மனம லிபுகழ் வண்தமிழ் மாலைகள் மாலதாய் மகிழ்வோடும்
கனம லிகட லோதம்வந் துலவிய கடிக்குளத் தமர்வானை
இனமலிந்திசை பாடவல் லார்கள்போயிறைவனோ டுறைவாரே" ( 2: 104: 11)
.

எனவும் உரைத்தருள்கிறார்.

இசை, நல்லிசை, மெல்லிசை, வல்லிசை என மூவகைப்படும். அவற்றுள், நல்லிசை என்பது பாடலுக்கான இசை என்ற அடிப்படையில் பாட்டின் பொருளைக் கேட்போர் உளங்கொளத்தக்க வகையில் பாடப் பெறுவதாகும். நல்லிசையே இருமைக்கும் பயன் தருவது. இன்னிசையும் இதுவேயாகும். இவ்வரிசையில் ஞானசம்பந்தர் நல்லிசையாளர். அதுமட்டுமல்ல புல்லிசை கேளாதவர். இதனை அவரே பந்தணைநல்லூர் திருப்பதிகப் பாடல் ஒன்றில்,

"நல்லிசையாளன் புல்லிசை
கேளா நற்றமிழ் ஞானசம்பந்தன்" ( 3: 121: 11)

என்றருளுகிறார். இந்நல்லிசையிலேயே ஞானசம்பந்தர் தேவாரம் அருளிச் செய்துள்ளார் என்பதைச் சுந்தரர், 'நல்லிசை ஞானசம்பந்தன்' எனக்கூறும் தேவாரத் தொடராலும் அறியலாம்.

திருஞானசம்பந்தர் போன்றோர் அறிவுறுத்தியும் கூடத் தமிர்கள் இத்தகைய உயரிய இசை மரபினை மறந்து பிற மொழி இசையினைக் கேட்கும் தாழ்நிலையினை அடைந்து தவித்து வருகின்றனர். இத்தகையோருக்குத் தமிழ் இசைமரபின் தொன்மை விளக்கும் வகையான் ந. சுப்புரெட்டியார் 'பண்சுமந்த தேவாரப்பாடல்கள்' என்னும் பகுதியை அமைத்துள்ளார்.

**திருஞானசம்பந்தர் தேவாரம் முதலில் வைக்கப்பட்டமைக்கான காரணம்:**

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்னும் பாடியருளிய பதிகங்கள் தேவாரம் எனச் சுட்டப்படுவதுடன் அவை முதல் ஏழு திருமுறைகளாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அவ்வாறு தொகுக்கும் காலத்துத் திருஞானசம்பந்தருடைய தேவாரத்தை முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் தேவாரத்தை நான்கு, ஐந்து, ஆறாவது திருமுறைகளாகவும், சுந்தரரின் தேவாரத்தை ஏழாம் திருமுறையாகவும் தொகுத்துள்ளனர். தேவாரம் பாடியருளிய மூவருள்ளும் திருநாவுக்கரசரே வயதாலும் அனுபவத்தாலும் மூத்தவர். எனவே அவரே முதன்முதலில் சிவப்பரம்பொருளை போற்றிப் பாடியருளி இருக்க முடியும். ஆனால் அவரின் பதிகங்களை முன் வைக்காது அவரினும் வயதாலும் அனுபவத்தாலும் இளையராகிய திருஞானசம்பந்தர் பதிகம் முன் வைக்கப்பட்டதற்கு யாது காரணம்? என்றொரு ஐயம் எழாமல்

இல்லை. ஆனால் இதற்கு அறிஞர்களால் பல்வேறு விளக்கங்கள் தரப்படினும் அவை பொருந்துமாறு இல்லை. ஆனால் இதற்கான பதிலை மிகத் தெளிவாகவும் நுட்பமாகவும் தருகின்றார் சுப்புரெட்டியார். இத்தகைய பதில்,

"ஆளுடைய பிள்ளையார் முதன் முதல் அருளியது தோடுடைய செவியன்" (1.1) என்னும் முதற்குறிப்புடைய பிரமபுரத் திருப்பதிகமாகும். எல்லையிலா மறைகளுக்கெல்லாம் முதலாக அமைந்தது 'ஓம்' என்னும் எழுத்தாகிய பிரணவம் ஆகும். 'ஓம்' என்பதிலுள்ள ஓகாரத்தினை 'தமிழ்' என்பதன் முதல் எழுத்தாக அமைந்த தகர மெய்யுடன் இணைத்துத் தோன்றிய சிறப்பு 'தோடுடைய செவியன்' என்ற இத்திருப்பதிகத்துக்கு உண்மையால் முதல் திருமுறையில் முதல் திருப்பதிகமாக முறைப்படுத்தப் பெற்றது." (மூவர் தேவாரம்: புதிய பார்வை பக். 137 – 138) என்பதாக அமைகின்றது. இது சுப்புரெட்டியாரின் அறிவுத் திறனையும் திருமுறைகளின்பால் அவருக்கு இருந்த ஈடுபாட்டினையும் விளக்கி நிற்கின்றது.

**திருமுறைப் பதிகங்களின் அமைப்பிற்குக் காரணம் காட்டல்:**

முதல் திருமுறையில் நட்டபாடை, தக்க ராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, யாழ்முரி என ஏழு பண்களில் அடங்கிய நூற்று முப்பத்தாறு பதிகங்கள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன. இவை முறைப்படுத்தப்பட்மைக்கான காரணத்தினைச் சுப்புரெட்டியார் தெளிவான விளக்கம் செய்வார், 'தோடுடைய செவியன்' என்னும் முதல் திருப்பதிகத்திற்கு உரிய பண் தைவளம் என்பதாகும். இது தற்காலத்து 'நட்டபாடை' என வழங்கப்படுகின்றது. முதன் முதலில் திருஞானசம்பந்தர் பாடியருளிய திருப்பதிகத்தில் அமைந்த பண் நட்டபாடை யாதலின், பிள்ளையார் நட்டபாடைப் பண்ணில் பாடியருளிய திருப்பதிகங்கள் யாவும் 'தோடுடைய செவியன்' என்ற திருப்பதிகத்தை யொட்டி முதல் திருமுறையில் முதற்கண் வைக்கப் பெற்றன. அடுத்து நிகழ்ந்த அற்புதச் செயல் கோலக்காவில் பிள்ளையார் பெருமானால் அளிக்கப் பெற்ற பொற்றாளம் ஆகும். இந் நிலையில் பாடிய திருப்பதிகம் 'மடையில் வாளை பாய' (1.29) என்பதாகும். இது 'தக்கராகம்' என்று பாடப் பெற்றதாதலின், தக்கராகப் பண்ணமைந்த திருப்பதிகங்கள் யாவும் இதனைச் சார வைக்கப் பெற்றன. தக்கராகப் பண்ணுடன் பெயரால் ஒற்றுமையுடையது பழந் தக்க ராகம் என்ற பண்ணாகும். எனவே பழந்தக்கராகப் பண்ணமைந்த பதிகங்கள் தக்க ராகப் பதிகங்களை அடுத்து வைக்கப் பெற்றன. 'தக்க கைசிகம்' என்ற பெயரே தக்கேசி எனத் திரிந்தது என்பர். இப்பெயர் ஒற்றுமை கருதி தக்கேசிப் பண்ணமைந்த பதிகங்கள் பழந்தக்கராகப் பண்ணமைந்த பதிகங்களை அடுத்து வைக்கப்பெற்றன. இனி, பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள் நானிலத்து ஐந்திணையொழுக்கங்களுக்குச் சிறப்புடையனவாகப் பகுத்துரைத்த பழைய தமிழ்ப்பண்களுள் குறிஞ்சிப் பண்ணிலமைந்த பதிகங்கள் தக்கேசி அமைந்த பதிகங்களைச் சார வைக்கப்பெற்றன. குறிஞ்சியொடு பெயர் ஒற்றுமையுடைய பண்கள்

வியாழக் குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி என்பனவாகும். இவ்விரு பண்களிலும் அமைந்த பதிகங்கள் குறிஞ்சிப் பண்ணுக்குரிய பதிகங்களை அடுத்து முறைப்படுத்தப் பெற்றன. எடுத்த இயலும் இசையும் இடையே முரிந்து மாறுபடும் இயல்புடையதாய் அமைந்த இசைப்பாடல் முரி எனப்படும். இத்தகைய முரிப்பாடல்களாக அமைந்தது 'மாதர் மடப்பிடி' (1.136) என்னும் முதற் குறிப்புடைய பதிகமாகும். இயல் இசைத் திறத்தில் வேறுபாடுடைமையால் யாழில் இசைத்தற்கு அடங்காத நிலையில் யாழ்முரி எனப்பெற்ற இத்திருப்பதிகம் முதல் திருமுறையில் இறுதித் திருப்பதிகமாக வைக்கப்பெற்றது. எனவே, முதல் திருமுறையாகிய இதன்கண் நட்டபாடை, தக்க ராகம், தக்கேசி,குறிஞ்சி, பழந்தக்கராகம், யாழ்முரி, வியாழக் குறிஞ்சி என்னும் என்னும் ஏழு பண்களில் அடங்கிய நூற்று முப்பத்தைந்து திருப் பதிகங்களும் யாழ்முரி என்ற திருப்பதிகம் ஒன்றும் ஆக நூற்று முப்பத்தாறு பதிகங்கள் முதல் திருமுறையில் இடம்பெற்றுள்ளன எனக் குறிப்பார் சுப்புரெட்டியார். ( மூவர் தேவாரம் : புதிய பார்வை: பக்.136 – 139) இவ்வாறே ஏனைய திருமுறைப் பதிகங்களின் அமைப்பிற்கும் காரணம் சுட்டுவார். இதன்வழி பதிக அமைப்பு முறையினை மட்டும் குறிக்காமல் அதற்கான காரணத்தினையும் விதந்து சொல்லும் சுப்புரெட்டியாரின் நுட்பம் வெளிப்பட்டு நிற்கின்றது.

**இசை, இலக்கண அறிவு:**

சுப்புரெட்டியாரின் இசை அறிவினையும் இலக்கணப் புலமையினையும் வெளிப்படுத்துவதாய் மூவர் தேவாரம் - புதிய பார்வை என்னும் நூல் அமைந்துள்ளது. சான்றாகத் தேவாரப் பதிகங்களிலே, "தட்ட பாடை தக்கேசி, தக்க ராகம், குறிஞ்சி, பழந்தக்க ராகம், வியாழக் குறிஞ்சி, யாழ்முரி என்ற ஏழு பண்கள் அடங்கிய நூற்று முப்பத்தாறு பதிகங்கள் முறைப்படுத்தப்பட்டிருப்பதைத் தெற்றென விளக்குவதுடன் இந்தப் பண்கள் இசைவாணர்களால் பாடப்படும்போது அதற்கு ஆதாரமாகத் தாளக் கட்டோடு அமைந்திருப்பதனை "தன்னா தன தானா, தானா தனதானா, தானன தான தனா" என்பது போன்று எடுத்துக்காட்டி இருப்பது சிறப்பானதாகும். இதன்வழி சுப்புரெட்டியாரின் இசை அறிவு வெளிப்பட்டு நிற்கின்றது. மேலும் தேவாரத் திருமுறைகளின் ஒவ்வொரு பண்ணிலும் அமைந்த திருப்பதிகங்கள் யாப்பு வகைகளிலே கட்டளை வழங்குகிறது என்கிற மரபை,

"இயலிசைத் தமிழாகிய, தேவாரத் திருமுறைகளில் ஒவ்வொரு பண்ணிலும் அமைத்த திருப்பதிகங்களின் யாப்பு வகையிளைக் 'கட்டளை' என வழங்குதல் மரபு, கட்டளை என்பது மாத்திரையளவும் எழுத்தியல் நிலையும் பற்றிச் செய்யுட்களில் அமைந்த ஓசைக் கூறுபாடாகும். சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை உரையில் ஆடல் பாடல் இசையே தமிழே என வருவதில் "தமிழ் என்பதற்கு 'வடலெழுத்தொரீஇ வந்த எழுத்தாலே கட்டப்பட்ட ஓசைக் கட்டளைக் கூறுபாடுகளும் என அரும்பதவுரையாசிரியர் விளக்கவுரை கூறுவர். இதனைக் கூர்ந்து

நோக்குங்கால் இசைத் தமிழில் வழங்கும் ‘கட்டளை’ என்ற சொல் செய்யுட்களில் அமைத்த ஓசைக் கூறுபாட்டினையே குறிப்பதென்பது நன்கு துணியப்படும் ஓசைவகையாகிய இக்கட்டளை அமைப்பின் அடியொற்றியே இசைப் பாடல்களின் தாளம் முதலிய பண்ணீர்மை அமைதல் இயல்பு இந்நுட்பம் கட்டளைய தேக்குறிப்பும் என வரும் பழம் பாடல் தொடரால் நன்கு புலனாதல் கண்டு மகிழலாம்'' ( மூவர் தேவாரம் - புதிய பார்வை: ப. 158) என விளக்கம் செய்யும் பொழுது அவரின் இலக்கண அறிவும் வெளிப்பட்டு நிற்கின்றது.

ந. சுப்புரெட்டியாரால் எழுதப்பெற்ற மூவர் தேவாரம் என்னும் இந்நூல் அவரின் திருமுறைத் தோய்வினையும், ஆராய்ச்சி நுட்பத்தினையும், புதிய ஆய்வுகளுக்கு வழிகோலும் செம்மையையும், தமிழறிஞர்களைப் போற்றும் பண்புடைமையையும் இசை, இலக்கண புலமையினையும் வெளிப்படுத்தி நிற்பதனை ஆயும் வழி அறிய முடிகின்றது.

**துணை நின்ற நூல்கள்:**


1.ந. சுப்புரெட்டியார் மூவர் தேவாரம் - புதிய பார்வை
நிவேதிதா பதிப்பகம்
அசோக் நகர்
சென்னை – 600083

2..இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் ( மூலமும் உரையும் )
உ.வே. சாமிநாதையர் ( ப. ஆ)
இரண்டாம் பதிப்பு – 1920
கமர்சியல் அச்சுக் கூடம் - சென்னை

3. சுந்தரர் – சுந்தரர் தேவாரம்
ஞானசம்பந்தம் பதிப்பகம்
தருமபுர ஆதீனம் - மயிலாடுதுறை
இரண்டாம் பதிப்பு – 1997

4. திருஞானசம்பந்தர் – திருஞானசம்பந்தர் தேவாரம்
ஞானசம்பந்தம் பதிப்பகம்
தருமபுர ஆதீனம் - மயிலாடுதுறை
இரண்டாம் பதிப்பு – 1997
இரண்டாம் பதிப்பு – 1920

5. திருநாவுக்கரசர் – திருநாவுக்கரசர் தேவாரம்
ஞானசம்பந்தம் பதிப்பகம்
தருமபுர ஆதீனம் - மயிலாடுதுறை
இரண்டாம் பதிப்பு – 1997

6..திருவள்ளுவர் - திருக்குறள் ( பரிமேலழகர் ( உ. ஆ )
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
சென்னை 1941

7. தொல்காப்பியர் - தொல்காப்பியம் - பொருளதிகாரம் ( இளம்பூரணர் உரை )
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு –
சென்னை - முதற்பதிப்பு 1947


*******************************************

# அறிஞனின் நினைவுக் குமிழியில் கொடைஞன்

**முனைவர் மு. மரகதவல்லி**
**தமிழ் உதவிப்பேராசிரியர்**
**அழகப்பா அரசு கலைக்கல்லூரி**
**காரைக்குடி 630 003**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

தமிழில் வாழ்க்கை வரலாறு என்னும் இலக்கிய வகை பிறர் வரலாறைத் தான் எழுதுதல் மற்றும் தன் வரலாறைத் தானே எழுதுதல் என்னும் இரு நிலைகளில் உள்ளன. முன்னதற்கு வ.ரா, சாமிநாதசர்மா, ம.பொ.சி போன்றோர் எழுதிய வாழ்க்கை வரலாற்று நூல்களைச் சான்றாகக் குறிப்பிடலாம். பின்னதற்கு உ.வே.சா, திரு.வி.க, நாமக்கல்கவிஞர் போன்றோர் எழுதிய தன் வரலாற்று நூல்கள் சான்றாக உள்ளன. அதிலும் குறிப்பாக திரு.வி.க.வின் வாழ்க்கை குறிப்புகள் என்னும் நூலில் அறிஞர்கள், சான்றோர்கள், தலைவர்கள், தொண்டர்கள் பற்றிய செய்திகள் நிறைந்து காணப்படுகின்றன. திரு.வி.கவைத் தொடர்ந்து முனைவர் ந.சுப்புரெட்டியார் எழுதிய நினைவுக்குமிழிகள் என்னும் வாழ்க்கை வரலாற்று நூலில் தனது வாழ்வியல் செய்திகளை மட்டுமில்லாமல் தன் சமகாலத்திய மனிதர்களையும் நிகழ்வுகளையும் பதிவு செய்துள்ளார். ந.சுப்புரெட்டியாரின் காரைக்குடி வாழ்வை மையமிட்டு எழுதப்பட்ட நினைவுக்குமிழியில்-3 வள்ளல் அழகப்பர் குறித்த செய்திகளை வெளிக்கொணர்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழ்ச் சூழலில் புனைகதைகளை ஒப்பிடும்போது வாழ்க்கை வரலாறுகள் எழுதப்படுவதும், வாசிக்கப்படுவதும் குறைவாக இருப்பதைக் காணலாம். ஒரு படைப்பாளியின் வாழ்க்கையை நோக்கும் போது அவர் வாழ்ந்த காலமும் இடமும் அவரைச் சார்ந்தவர்களின் வாழ்க்கையும் கவனிப்பிற்கு உள்ளாகின்றன. ஒரு நல்ல வாழ்க்கை வரலாறு எழுதுவதற்கு தேவையானவை குறித்து,

> *“ஒன்று யாருடைய வாழ்வு எழுதப்படுகிறதோ அவரே விட்டுச்சென்ற எழுதிய புத்தகங்கள், கடிதங்கள், நாட்குறிப்புகள், ஒலி நாடாக்கள் முதலியன. இரண்டு அவருக்கு எழுதப்பட்ட கடிதங்கள் முதலியன. மூன்று, அவரது சமகாலத்தவர் அவரைப்பற்றி எழுதியவை அல்லது கூறியவை. நான்கு, அவரைப் பற்றிய அரசு, தனியார் ஆவணங்கள். ஐந்து, அவரைச் சார்ந்தவர்கள், நண்பர்கள், எதிர் நின்றவர்கள், முன்னோர்கள், வழிகாட்டிகள் பற்றிய செய்திகள். ஆறு, அவரைப்பற்றி வந்த செய்திக் குறிப்புகள். ஏழு, அவரது காலத்து சமூக இலக்கிய அரசியல் வரலாற்றுச் சூழல்களைப் பற்றிய புத்தகங்கள், செய்திகள், ஆவணங்கள்.*
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

*கடைசியாக, வரலாறு எழுதுபவனின் சொந்தப் பார்வை, ஒரு நல்ல வாழ்க்கை வரலாறு இவை ஒன்று கலந்து சுருதி தவறாமல் ஒலிக்கும் இசை''*[1]

என்று ப.அனந்த நாராயணன் தமிழில் வாழ்க்கை வரலாறுகள் என்ற கட்டுரையில் விவரிக்கிறார்.

தமிழில் மீனாட்சி சுந்தரம்பிள்ளை, புதுமைப்பித்தன், வ.வே.சு.ஐயர், ஜீவா, கல்கி, கண்ணதாசன், கலைஞர் கருணாநிதி, ஜெயகாந்தன் என இப்பெருமக்களின் வாழ்க்கை வரலாற்று நூல்கள் வெளிவந்துள்ளன. அவ்வரிசையில் ந.சுப்புரெட்டியாரின் வாழ்க்கை வரலாற்று நூலான நினைவுக்குமிழியும் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற சிற்றூரில் எளிமையான வேளாண் குடும்பத்தில் பிறந்து (27.08.1916), தனது கல்வியறிவாலும், கடின உழைப்பாலும் படிப்படியாக முனனேறி தமிழுலகம் போற்றும் தமிழறிஞராக மிளிர்ந்தவர் பேராசிரியர் முனைவர் ந.சுப்புரெட்டியார் ஆவார். துறையூர் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகத் தன் பணியைத் தொடங்கி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றி திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-இல் தமிழ்த்துறையை நிறுவி 17 ஆண்டுகள் பணியாற்றி தமிழகத்திற்கும் வெளியே தமிழ்த்தொண்டாற்றிய பெருமகனார். இதனை,

*''மொழிவழி மாநிலங்கள் பிரிந்தபின் வடவேங்கடபகுதிகளில் தமிழ் கொஞ்சம் கொஞ்சமாக சாவதைப் பார்த்து இப்பகுதிகளில் எப்படியாவது தமிழ்மக்கள் தமிழ் உணர்வோடு வாழவேண்டும் என எண்ணி பாக்காலா, சித்தூர், திருப்பதி, புத்தூர், நகரி, குந்தக்கல் ஆகிய இடங்களில் படிப்படியாகத் தமிழ்ச்சங்கங்களை எற்படுத்தி அங்குள்ள தமிழர்களை ஊக்குவித்திருக்கிறார். பேராசிரியர் அவர்கள் இத்தமிழ்ச் சங்கங்களைத் தமக்கு சிறந்த இலக்கிய மேடைகளாகப் பயன்படுத்திக் கொண்டதோடு நில்லாது இவைகளைத் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை ஏற்படத் துணைக்கருவிகளாகவும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்''*[2]

என்று தேவ சங்கீதம் கூறுவதிலிருந்து அறியமுடிகிறது.

ந.சுப்புரெட்டியார் ஏறத்தாழ 135 நூல்களை எழுதி தமிழன்னைக்கு அணி செய்துள்ளார். மேலும் இவரது நூல்கள் 2008-2009 ஆம் ஆண்டில் நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளதையும் அறியலாம்.

திருச்சி டி.எஸ்எஸ் ராஜனின் நினைவலைகள், கல்வியாளர் நெ.து.சுந்தரவடிவேலுவின் நினைவலைகளைத் தொடர்ந்து ந.சுப்புரெட்டியாரும் தம் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளைத் தொகுத்து “நினைவுக்குமிழிகள்” என்ற தலைப்பில் நூலாக எழுதி உள்ளார். 1916 முதல் 1941 வரை உள்ள காலகட்டத்தில் பல்வேறு இடங்களில் நிகழ்ந்தவைகளை நினைவுக்குமிழிகள்-1லும்; 1941-1950 கால கட்டத்தில் துறையூர் வாழ்வை நினைவுக்குமிழிகள்-2லும்; 1950-1960 காலத்தில் காரைக்குடி வாழ்வை நினைவுக்குமிழிகள்-3லும்; 1960-1977 காலத்தில் திருப்பதி வாழ்வை நினைவுக்குமிழிகள் - 4லும் பதிவு செய்துள்ளது புலனாகிறது.

தெளிவுறவே அறிந்திடுதல் மற்றும் தெளிவு தர மொழிந்திடுதல் என்னும் பாரதியின் வாக்கிற்கிணங்க தான் அறிந்தவற்றை கற்பவரும் எளிதில் புரியும் வண்ணம் தொய்வின்றி வாசிப்பதற்கு ஏதுவாக இனிய எளிய நடையில் ந.சுப்புரெட்டியார் எழுதியுள்ளார்.

ந.சுப்புரெட்டியார் “நினைவுக்குழிகள்” என்ற தலைப்பினைத் தேர்ந்தமைக்கு,

> *“நீர்ப்பரப்பில் மழை சிறு தூறலாக விழும்போது குமிழிகள் தோன்றுவதில்லை. பெருந்துளிகளாக விரைந்து விழும்போது மட்டுமே அழுத்த மிகுதியால் குமிழிகள் தோன்றுகின்றன. பேராசிரியர் ரெட்டியாருடைய வாழ்க்கைப் பரப்பில் எண்ணத்தில் நிற்கின்ற அழுத்தமான நிகழ்ச்சிகள் மட்டுமே இங்குக் குமிழிகளாக உருப்பெற்றன. அதனுள் நமது உருவத்தையும் காணமுடியும். அதேபோல இந்நூற்குமிழியைப் படிக்கும் போது பேராசிரியர் ரெட்டியாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் அந்த வயதில் நம்முடைய வாழ்வில் நடந்தவையும் நம் மனதிற்குள் நிழலாடவே செய்யும்”*[3]

என்று சிலம்பொலி சு.செல்லப்பனார் கூறுகிறார்.

ந.சுப்புரெட்டியார் (1950-1960) ஆண்டுகளில் காரைக்குடியில் வாழ்ந்த காலகட்டத்தில் தம் மனதில் அசைபோட்ட நினைவுகளை “நினைவுக்குமிழிகள்-3” ஆக வடித்துள்ளார். இதனை,

> *“நினைவுக்குமிழிகள் -3 ஆசிரியரின் வாழ்வில் சிறந்த பகுதியாகிய காரைக்குடி வாழ்வு மலரும் நினைவுகளாகின்றது. காரைக்குடி நகரில் தாம் வாழ்ந்த காலங்களை எண்ணி நினைவலைகளைப் பதிவு செய்கிறார் அறிஞர் சுப்புரெட்டியார். ஒவ்வொரு நினைவுக் குமிழியிலும் ஒரு பெரிய அல்லது ஒரு சிறிய நிகழ்ச்சி அமைந்திருக்கும். ரெட்டியாரின் கைவண்ணத்தால் அவை உயிரோவியம் ஆகின்றன. காரைக்குடியின் கரையினை பெருமக்கள் வாழ்வினை, கல்வி நிலையங்களின் வளர்ச்சியினை*

*சான்றோர்களின் சால்புகளை, அறிஞர்களின் அறிவுரைகளை கவிதை அழகுடன் கல்வெட்டுகளாக்கித் தருகிறார்கள்''*[4]

என்று ச.மெய்யப்பன் கூறுவதிலிருந்து புலனாகிறது.

இங்கு கட்டுரைச் சுருக்கம் கருதி ஆசிரியரின் வாழ்வியல் செய்திகள் தவிர்த்து ஒரு சில நிகழ்ச்சிகள் மட்டும் கட்டுரையில் இடம்பெறுகின்றன. தமிழகத்தில் ஆசிரியர் பயிற்சிக்கென தொடங்கப்பெற்ற தனியார் கல்லூரிகளில் முதன்மையானது அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி. அக்கல்லூரியில் 1950 இல் துறையூர் உயர் நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த ந.சுப்புரெட்டியார் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்தார்.

கல்வியாளர்களும் சிந்தனையாளர்களும் வசித்த நகரம் காரைக்குடி. அக்காரைக்குடியில் ந.சுப்புரெட்டியார் வசித்தபோது தன்னுடன் நெருங்கிப் பழகிய இலக்கிய நண்பர்களை நினைவுக்குமிழியில் நினைவு கூறுகிறார். வள்ளல் அழகப்பர், கம்பன் அடிப்பொடி சா.கணேசன், காந்தி பிள்ளைத் தமிழ் பாடிய ராய. சொக்கலிங்கம் சீர்திருத்தத் தொண்டரும் குமரன் இதழை நடத்தியவரான சொ.முருகப்பா, அழகப்பா கலைக்கல்லூரியின் முதல் தமிழ்ப்பேராசிரியரான ஆ.முத்துசிவன், க.தேசிகன், பூ.அமிர்தலிங்கம், சொக்கலிங்கம்பிள்ளை, இலக்கிய பதிப்பகம் சோமய்யா, அ.லெ.நடராஜன், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வர் ஐ.என்.மேனன், கலைக்கல்லூரியின் முதல்வர் ஏ.என்.தம்பி, திருவேங்கடாச்சாரி, உலகம் சுற்றிய தமிழரான சோம. லெட்சுமண செட்டியார் என பல அன்பர்களையும் அவர்களுடனான சந்திப்புகளையும் அப்பெருமக்களின் நல்ல பண்புகளையும் தமது நினைவுக்குமிழியில் பதிவு செய்துள்ளதைக் காணலாம்.

பாரதியாரால் பாடல் பெற்ற இந்துமதாபிமான சங்கம் காரைக்குடியில் இருந்ததை,

*''சற்றேறக்குறைய அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் காரைக்குடியிலுள்ள சில இளைஞர்கள் ஒன்று கூடி இச்சங்கத்தைத் தோற்றுவித்தனர். இந்த இளைஞர்களில் சொ.முருகப்பர், ராய.சொக்கலிங்கம், சா.கணேசன் முக்கியமானவர்கள். இந்த சங்கத்திற்கு தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார் வந்திருக்கின்றார். சங்கத்தின் மீது ஏழு பாடல்கள் பாடியுள்ளார்''*[5]

என்று ந. சுப்புரெட்டியார் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

கம்பனின் புகழை எங்கும் பரவச் செய்தவா் கம்பன் அடிப்பொடி சா.கணேசன் ஆவாா். காரைக்குடியில் தமிழ் அன்னைத் திருக்கோயில், கம்பன் மணி மண்டபம் நிறுவுவதற்கு அரும்பாடுபட்டவா். அழகப்ப வள்ளலுக்கும் கல்லூரிகளை நடத்துவதில் பெருந்துணையாக இருந்தவா்.

அழகப்பா கலைக்கல்லூரி 1947 ஆகஸ்டு 11 இல் நகராட்சி கட்டடமாகிய காந்தி மாளிகையில் தொடங்கப்பெற்றது. 6 அறிவியல் துறைகளுடன் 5 மானிட இயல துறைகளுடன் தொடங்கப்பெற்றது. வள்ளல் தம் கல்லூரிக்குத் தேவையான இருக்கை வசதிகளையும் ஆசிரியா் நியமனத்தையும் விரைந்து செயலாற்றியதை,

*“கல்லூரிக்கு வேண்டிய இருக்கை வசதிகள் அசுர வேகத்தில் தயாராகி முடிந்தன. எங்களுக்கு “மயன்படைப்பு” தான் நினைவுக்கு வந்தது. எல்லாம் தேக்கு மரத்தாலானவை. வரையாது வழங்கும் வள்ளலின் பொருளுதவியும் திறமைமிக்க தச்சுத் தொழிலாளா்களின் இடைவிடாத உழைப்பும் இவை தயாரானமைக்கு முதற்காரணமாக அமைந்தன. அரசு கூட இவ்வளவு விரைவாகச் செயற்பட முடியாது. ‘அது இல்லை’, ‘இது இல்லை’ என்ற குறையையே நாங்கள் எப்பொழுதும் உணரவில்லை. ஆசிரியா்கள் பற்றாக்குறையை நிறைவு செய்ய வள்ளல் முன் வந்தமை தமிழகத்தின் தவப்பயனாகும். ஆசிரியா்கள் பற்றாக்குறையை நிறைவு செய்ய வேண்டிய பொறுப்பை அரசின் விருப்பத்திற்கிணங்க வள்ளல் மேற்கொண்டு நிறைவேற்றியமையும் தமிழா்களின் தவப்பயனாகும். இப்பொறுப்பை அரசு மேற்கொண்டிருந்தாலும் இவ்வளவு திறமையாகக் கல்லூரியை உருவாக்கி பயிற்சி பெற்ற ஆசிரியா்களை வெளிக்கொணா்ந்திருக்க முடியாது”*[6]

என்கிறாா் ந.சுப்புரெட்டியாா்.

வரையாது வழங்கும் வள்ளலின் நல் உள்ளத்தை வெளிக்காட்ட ஒரு சம்பவத்தை நினைவு கூா்கிறாா் ந.சுப்புரெட்டியாா். கம்பனின் புகழைப்பாடி கன்னித்தமிழ் வளா்த்த காரை மாநகரில் இராமகாதை-பாலகாண்டம் (உரையுடன்) நூல் வெளியீடு 1953 இல் மீனாட்சி மகளிா் உயா்நிலைப்பள்ளியில் நடைபெற்றது. இநநூலுக்கு பண்டிதமணி மு.கதிரேசன் செட்டியாா் முகவுரையும், பேராசிரியா் எஸ்.வையாபுரிப்பிள்ளை அணிந்துரையும் வழங்கினாா். இவ்விழாவிற்கு பேராசிரியா் எஸ் வையாபுரிப்பிள்ளை தலைமை தாங்கினாா். அழகப்பா் இந்நூலை வெளியிட்டாா். ராய.சொவுக்கு இந்நூல் உரிமையாக்கப்பட்டது. சோ.முருகப்பா் 150 சவரன் தங்கத்தை பாலகாண்டம் நூலுக்கு அட்டையாக்கித் தந்தாா்.

எனினும் மக்கள் நூலை வெளியிட்ட வள்ளல் அழகப்பர் தான் தங்கத்தைத் தந்திருப்பாரோ என நினைக்கலாம் என்று கருதி நூலை வெளியிட்ட வள்ளலே தாம் சவரன் அளிக்கவில்லை என்றும் சொ.முருகப்பர் அவர்களே தம்மிடமிருந்த தங்கத்தை நூலின் அட்டையாக்கிக் கம்பனைப் பெருமைப்படுத்தினார் என்றும் தெளிவுபடுத்தினார் (பக்.56, 57)

ந.சுப்புரெட்டியார் பயிற்சிக்கல்லூரியில் பணியேற்ற பிறகு பெற்ற அனுபவங்களின் அடிப்படையிலும் சென்னைப் பல்கலைக்கழகம் பேரவைத் தீர்மானத்தின் படியும் எழுதப்பட்ட முதல்நூல் ந.சுப்புரெட்டியாரின் "அறிவியல் பயிற்றுமுறை" அந்த நூலை வள்ளல் அழகப்பருக்கு அன்புப்படையலாக்க விரும்பினார். அவ்வமயம் வள்ளல் நோய்வாய்ப்பட்டு சென்னையில் தனியார் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சைப் பெற்றுக்கொண்டிருந்தார். அழகப்பா அறக்கட்டளையின் துணை மேலாளராக இருந்த திரு. பத்மநாபனுக்கு ,

*"நலங்கிளர் ஊக்கம் எனும்புனல் பெய்து*
*நாள்தொறும் அன்புற வளர்த்த*
*பொலங்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த*
*பொருளெனும் நறுமலர் கொய்து*
*புலங்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே*
*பொற்புற அணிந்துளம் களிக்கும்*
*வலம்கிளர் டாக்டர் அழகப்ப வள்ளல்*
*மலரடிக் குரியதிந் நூலே"*[7]

என்று ந.சுப்புரெட்டியார் அழகப்பருக்கு எழுதிய அன்புப் படையலை அனுப்பி வைத்தார். இப்பாடலை உடல்நலன் குன்றிய நிலையிலும் வள்ளல் அடிக்கடி பத்மநாபனை பாடக்கேட்டு மனம் மகிழ்ந்தார் என்பதை நினைவுக்குமிழிகள் வழியாக அறியமுடிகிறது. எனினும் நூல் முழுமையடைந்து வெளி வருவதற்கு முன்பே 05.04.1957இல் வள்ளல் அழகப்பர் திருநாடு அலங்கரித்ததை மிகவும் வருத்தத்துடன் பதிவு செய்கிறார் ந.சுப்பு ரெட்டியார். மேலும்,

*"வாழ்க்கையில் அமைத்த செயல்கள் அனைத்தையும் ஒருவித வேள்வியாகச் செய்கின்றவர்கட்குத் தொடக்கத்திலும், துன்பம் இல்லை; இடையிலும் துன்பம் இல்லை; இறுதியிலும் துன்பம் இல்லை; ஒன்றையும் எதிர்பாராது கொடுத்துக்கொண்டே இருப்பவருக்கு கொடைக்கு வேண்டிய பொருள் தானே*

*வந்தமைகின்றது. அத்தகைய மனநிலை அட்சயபாத்திரமாகின்றது. ஆகையால் அதில் துன்பம் இல்லை. இதுதான் படைப்பின் மேலான திட்டம். அநுட்டித்துப் பார்ப்பவருக்கு இவ்வுண்மை விளங்கும். வள்ளல் அழகப்பர் வாழ்க்கையை வேள்வியாக நடத்தி வந்தவர். இதனால் அவரிடம் ஆக்கமே அதிகரித்து வந்தது. வேள்வி சிறப்பீனும் செல்வமும் ஈனும் முக்தி ஈறாக அனைத்தையும் ஈனும். இதனை நன்கு அறிந்தவர் அழகப்பர். பகவத்கீதையின் தாத்பரியமும் இதுவே''*[8]

என்று வள்ளல் அழகப்பரை கர்மயோகி என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

நிறைவாக வள்ளல் அழகப்பர் பூமியில் வாழ்ந்த காலங்கள் குறைவாக இருப்பினும் அவர் ஆற்றிய அறப்பணிகள் என்றென்றும் அவரது புகழ் பாடிநிற்கும். ந.சுப்புரெட்டியாரின் காரைக்குடி நிகழ்வுகளை அசைபோட்ட நினைவுக்குமிழிகள் வாயிலாக (1950-60) காலகட்டத்தில் காரைக்குடி நகரில் வாழ்ந்த தமிழறிஞர்களையும், அக்காலத்திய நிகழ்வுகளையும் குறிப்பாக வள்ளல் அழகப்பரையும் அறிந்து கொள்வதற்கு பெருந்துணை செய்கிறது என்பதை அறியமுடிகிறது.

**குறிப்புகள்**

1. பா.மதிவாணன், உ.சேரன் (ப.ஆ), ப.389
   தமிழ் இனி 2000, காலச்சுவடு, நாகர்கோவில், 2007 (2ஆம் பதிப்பு)
2. தேவ.சங்கீதம், நினைவுக்குமிழிகள்- 4, அணிந்துரை
3. சிலம்பொலி சு.செல்லப்பன், நினைவுக்குமிழிகள்-1, அணிந்துரை
4. மெய்யப்பன், நினைவுக்குமிழிகள்-3, அணிந்துரை
5. ந.சுப்புரெட்டியார், நினைவுக் குமிழிகள்-3, ப.105
   ந.சுப்புரெட்டியார் - 100 நூற்றாண்டு விழா குழு பதிப்பகம், சென்னை, 2018 (2ஆம் பதிப்பு)
6. மேலது, ப.38
7. மேலது, ப.153
8. மேலது, ப.185



***********************************

# ந.சுப்பு ரெட்டியாரின் வைணவமும் தமிழும்
## ஒரு பாராட்டுத் திறனாய்வு

**பேராசிரியர் முனைவர் மு.இராசேந்திரன் / Professor Dr.M.Rajantheran**
**முனைவர் க.சில்லாழி / Dr.K.Silllalee**
**இந்திய ஆய்வியல் துறை,**
**மலாயாப் பல்கலைக்கழகம், மலேசியா**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

**முன்னுரை**

விண்வெளியில் எங்கும் பரந்திருக்கும் தன்மையை உடையதும் உலகத்தின்கண்ணாகத் திகழ்கின்ற சிறப்பை உடையதுமான சூரியனைப் போல ஒளிமயமாய்த் திகழ்கின்ற விஷ்ணுவினுடைய பரமபதத்தை நித்திய சூரிகளாகிய சித்தர்கள் எப்போதும் தரிசனம் செய்கின்றனர் என்று இருக்கு வேதம் திருமாலைப் போற்றுகிறது (இருக்கு வேதம்: 1.555.5)

யஜுர் வேதத்தில் மங்களம் நிறைந்த நாராயணனே மும்மூர்த்தியாகவும், இந்திராதி தேவர்களாகவும், என்றும் உள்ள பொருளாகவும், மனம் வாக்கு ஆகிய இரண்டிற்கும் எட்டாதவனாகவும் இருப்பதாகக் குறிப்பு வருகின்றது. சாமவேதம் விஷ்ணுவே உலகைப் படைத்து எங்கும் நிறைந்து உள்ளார் என்கிறது. அதர்வண வேதம் “ஓம்” எனும் பிரணவ மந்திரத்தைப் பிரித்து அதனை எட்டெழுத்து மந்திரமாக ஓதுபவனுக்குப் பரமபதம் எனப்படும் முக்தி கிட்டும் என்கிறது. இதனால் விஷ்ணு வழிபாடானது வேத காலத் தொண்மையை உடையது என்பதை அறியலாம் (இராசேந்திரன், சில்லாழி, 2011).

ஆனால் தென்னாட்டைப் பொறுத்தவரையில் சங்க இலக்கிய காலத்திற்கு முந்தைய தொல்காப்பிய காலம் தொட்டே திருமால் வழிபாட்டின் வரலாறு அறியப்படுகின்றது. தொல்காப்பியத்தில்,

“மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்” (தொல், புறத், 5)

எனக் குறிப்பிடப்படுவதைக் கொண்டு தென்னாட்டவரிடத்தில் திருமால் வழிபாடு எவ்வளவு காலம் தொண்மை உடையதாக இருந்திருக்கின்றது என்பதை ஓரளவு உய்த்துணரலாம். சங்க இலக்கியத்தில் திருமால் முல்லை நிலத்துக் கடவுளாகப் போற்றப்படுவது இவ்விடம் குறிப்பிடத் தக்கது (தொல். அகத்திணை, 5). சங்கஇலக்கியம், மகாவிஷ்ணுவை மால், மாயோன் எனக் குறிப்பிடுகின்றது. இதுவல்லாது திருமாலின் தசாவதாரங்களும் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் பாடப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில் மிகத் தோய்ந்த புலமையுடைய பேராசிரியர் சோ.ந.கந்தசாமி, திருமால் வழிபாடு தென்னாட்டவர்களுக்கு உரிய பழைமையான நெறி என்று
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

ஆதாரங்களுடன் தமது இந்தியத் தத்துவக் களஞ்சியம் எனும் நூலில் நிறுவுகிறார். சங்க இலக்கியங்களுள் ஒன்றாகிய பரிபாடலில் திருமாலைப் பற்றிய குறிப்புகள் பாடுபொருளாக வருகின்றன. இதுவல்லாமல் மற்ற சங்க இலக்கியங்களாகிய கலித்தொகை, புறநானூறு போன்றவற்றில் கூட திருமாலின் சிறப்புகள் உதாரணமாகக் கையாளப்பட்டுள்ளன (கந்தசாமி, 2003).

இவ்வாறு தென்னகமும் வடபுலமும் போற்றும் தனிப்பெரும் கடவுளாக விளங்கும் திருமாலைப் போற்றும் வைணவ சமயத்தைப் பற்றி எத்தனையோ ஆச்சாரியர்களும், கல்விமான்களும் பல நூல்களை இயற்றியுள்ளனர். அவ்வாறு இயற்றப்பட்ட நூல்களுள் தனித்தன்மையுடையதாக விளங்குவது ந. சுப்பு ரெட்டியாரின் ஆக்கத்தில் உருவான 'வைணவமும் தமிழும்' எனும் நூல் என்பது மறுக்கவியலாதக் கருத்தாகும். இந்நூல் குறித்தப் பாராட்டுத் திறனாய்வாகவே இக்கட்டுரை படைக்கப்படுகிறது.

**ஆய்வு நெறி – பாராட்டுமுறைத் திறனாய்வு:**

ஒரு படைப்பைத் திறனாய்வு செய்வதற்குப் பல்வேறு நெறிமுறைகள் உள்ளன. ஒரு படைப்படைத் திறனாய்வு செய்வதற்கான நோக்கம், தேவை போன்ற காரணங்களின் அடிப்படையில் இலக்கியத் திறனாய்வு உத்திகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. அவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் உத்திகளாவன:-

· பாராட்டுமுறைத் திறனாய்வு
· முடிபுமுறைத் திறனாய்வு
· விதிமுறைத் திறனாய்வு
· செலுத்துநிலை அல்லது படைப்புவழித் திறனாய்வு
· விளக்கமுறைத் திறனாய்வு
· மதிப்பீட்டு முறைத் திறனாய்வு
· ஒப்பீட்டுத் திறனாய்வு
· பகுப்புமுறைத் திறனாய்வு

எனப் பகுக்கப்படுகின்றன (Patricia Waugh 2006).

இவற்றுள் பாராட்டுமுறைத் திறனாய்வு எனப்படுவது ஓர் இலக்கியத்தின் தனிச்சிறப்புகளை ஆராய்ந்து அதன் வழி வாசகர் சமூகம் பயனடைய வேண்டும் எனும் நோக்கத்திற்காக கையாளப்படும் உத்தி ஆகும். எடுத்துக் கொண்ட பொருளையும், இலக்கியத்தையும் குறை பேசாமல், அப்படியே குறைகள் சிலவற்றைக் காண நேர்ந்தாலும் அக்குறைகளைப் பற்றி அதிகம் பேசாமல் நிறைகளை மட்டுமே விதந்து பேசுவது பாராட்டுமுறைத் திறனாய்வு ஆகும். அந்த வகையில் தற்போதைய ஆய்வில் இந்தப் பாராட்டுமுறைத் திறானாய்வு உத்தியே பயன்படுத்தப்பட்டுள்ளது (OwenHolland 2016).

ந. சுப்பு ரெட்டியார் மிகப்பெரிய தமிழரிஞர் ஆவார். அவர், மொழி, இலக்கியம், சமயம் எனப் பல்வேறு துறைகளில் தமிழை வளர்த்த கல்விமான். மிகப் பெரிய அறிஞராக இருந்த போதும் இவரது ஆக்கங்கள் எளியோராலும் படித்து எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் படைக்கப்படவை. மிகக் கடினமான தத்துவங்களையும் சாமானியரும் விளங்கிக் கொள்ளும் வகையில் எழுதும் ஆற்றல் பெற்றவர். இவரது ஆக்கங்கள் தற்காலத்திலும் மக்கள் மத்தியில் குறைவின்றி சென்று சேர வேண்டும் எனும் நோக்கிலும் இவர் தமிக்கூறு நல்லுலகத்திற்கு ஆற்றிய பெரும் பணிகளைப் போற்றும் வண்ணமாகவே இத்திறனாய்வானது பாராட்டுமுறைத் திறனாய்வு உத்தியைப் பயன்படுத்தி மேற்கொள்ளப்படுகின்றது.

**ந. சுப்பு ரெட்டியார்:**

தமிழறிஞர்கள் வரிசையில் வைத்துப் போற்றத்தக்க கல்விமான்களுள் ஒருவராக விளங்கும் ந. சுப்பு ரெட்டியார் (27-8-1916 – -1-5-2006), திருச்சி மாவட்டம், பெரகம்பி என்ற ஊரில் வேளாண்மைக் குடும்பத்தில் பிறந்தவர். திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளங்கலைப் பட்டமும், சென்னை பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960-ஆம் ஆண்டில் தமிழ்த் துறையை நிறுவி 17 ஆண்டுகள் அவ்விடத்தில் பேராசிரியராகப் பணியாற்றியவர். மேலும் திரு. வி. க. விருது, திருக்குறள் விருது, டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது, கலைமாமணி விருது போன்ற பல அரிய பட்டங்களைப் பெற்றவர். ந. சுப்பு ரெட்டியார் தமிழ், இலக்கியம், சமயம், அறிவியல் தொட்டுப் பல்வேறு துறைகளில் 135 நூல்களைப் படைத்துள்ளார். இவை அனைத்தையும் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் சமயத்துறையில் சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமங்களிலும் நல்லறிவு பெற்றவர். இவரின் படைப்புகளுள், வைணமும் தமிழும், அண்ணல் அனுமன், அர்த்த பஞ்சகம், ஆழ்வார்களின் ஆரா அமுது, கண்ணன் பாட்டுத்திறன், காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள், சடகோபன் செந்தமிழ், சோழ நாட்டுத் திருப்பதிகள்-1, சோழ நாட்டுத் திருப்பதிகள்-2, திருவேங்கடமும் தமிழிலக்கியமும், தொண்டைநாட்டுத் திருப்பதிகள், நவவித சம்பந்தம், மலைநாட்டுத் திருப்பதிகள், வடவேங்கடமும் திருவேங்கடமும், வடநாட்டுத் திருப்பதிகள், வாய்மொழியும் வாசகமும், விட்டுசித்தன் விரித்த தமிழ், வைணவ புராணங்கள், வைணவ உரைவளம் ஆகியன வைணவ சமயத்திற்கு எழுத்துலகில் இவர் ஆற்றிய மிகப்பெரிய பங்களிப்பாகப் பார்க்கப்படுகின்றன.

இவற்றுள் ‘வைணமும் தமிழும்’ எனும் நூல் வைணவ சமயத்தின் ஒட்டு மொத்த சாரத்தை மிக எளிய நடையில் விளக்குவதாக அமைந்துள்ளது. அதே வேளையில்

வைணவத்தின் தத்துவக் கூறுகளின் மேன்மைச் சற்றும் விடுபடாமல் இந்நூல் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்நூலே இக்கட்டுரையின் ஆய்வுப் பொருளாகவும் அமைவது இவ்விடம் குறிப்பிடத்தக்கது.

**வைணவமும் தமிழும் நூல் குறித்த பொது அறிமுகம்:**

'வைணவமும் தமிழும்' எனும் தலைப்பில் இயற்றப்பட்டுள்ள இந்நூல் வைணவ சமயத்தைத் தமிழாய்வாகக் காணும் போக்கில் இயற்றப்பட்டுள்ளது. இதன் முதல் பதிப்பு 1998-ஆம் ஆண்டு திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்தக் நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. வைணவத்திற்குச் சைவம் அளித்த கௌரவமாகவும் இதனைக் கொள்ளலாம். மொத்தம் 350 பக்கங்களைக் கொண்ட இந்நூல் சமயத்துறையில் மிகப்பெரிய பங்களிப்பைச் செய்துள்ளது. இந்நூலுக்குச் சென்னை பல்கலைக்கழகத்தின் வைணவத்துறையின் இணைப்பேராசிரியர் முனைவர் எம்.ஏ.வேங்கடக் கிரிஷ்ணன் அணிந்துரை அளித்துள்ளார். இந்நூல் 'வைணவமும் தமிழும்' தலைப்பிலான முன்னோட்டம் தொடங்கி 'வைணவ திவ்ய தேசங்கள்' எனும் தலைப்பை ஒட்டி 16 இயல்களில் இயற்றப்பட்டுள்ளது. இந்நூல் முழுமையும் வைணவ நெறியைத் தமிழ்ச் சுவையோடு படையலிடும் பாங்கு ஓங்கி நிற்கின்றது.

**வைணவமும் தமிழும் – பாராட்டுமுறைத் திறனாய்வு:**

**நூலின் துவக்கம்**

இந்நூலின் முன்னுரையிலேயே நூலின் தலைப்பைத் தொட்டு ந. சுப்பு ரெட்டியார் மிகப் பொருத்தமான அனுகுமுறையில் தமது படைப்பை இட்டுச் சென்றுள்ளார். இந்நூலின் ஒட்டுமொத்தத் தலைப்பான வைணவமும் தமிழும் எனும் தலைப்பையே முதல் இயலின் தலைப்பாகவும் இந்நூலில் இவர் கையாண்டிருப்பது நல்லதொரு துவக்கமாக அமைகிறது எனலாம்.

இவ்விடத்தில் வைணவச் சமயத்தின் முக்கியக் கூறுகளை விளக்கி இருப்பதோடு, தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் போன்ற தொன்மைத் தமிழ் இலக்கியங்களிலும் பழந்தமிழர் வாழ்க்கையிலும் மாலியம் எவ்வாறு இயைந்து வந்துள்ளது என்பதனை ந. சுப்பு ரெட்டியார் ஆதாரங்களுடன் நிறுவியுள்ளார். அதே வேளையில் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் தலையானதாகக் கருதப்படும் திருக்குறளில் முதல் குறளில் வரும் 'ஆதி பகவன்' என்ற பதம் திருமாலையே குறிக்கும் என்று ஆதாரங்களை முன்வைத்து ந. சுப்பு ரெட்டியார் அளித்திருக்கும் நயமான விளக்கம் ஆய்வுலகில் ஒரு புதிய கோணத்தையே தோற்றுவித்துள்ளது எனத் துணிந்து கூறலாம்.

**பிரபந்தங்களின் பிரதாபங்கள்:**

வைணவமும் தமிழும் எனும் போது இவ்விடத்தில் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களை நீக்கி விட்டு அல்லது அதனைப் பற்றிப் பேசாமல் இந்நூல் நிறைவு பெற்றால் அது நிச்சயம் குறையுடையதாகுப் போகும் என்ற கருத்தை ஆழ்ந்து உள்வாங்கியிருந்தார் நூலாசிரியர் என்றால் அது மிகையில்லை. அதனால்தான் தனது இரண்டாவது இயலிலேயே நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்களைப் பற்றி மிகச் சிறப்பாக விவாதித்திருக்கிறார் ந. சுப்பு ரெட்டியார். இவ்விடத்தில் நாதமுனிகள், காலத்தால் மறைந்து போன திவ்யப் பிரபந்தங்களை மீட்டுக் கொடுத்தது தொடங்கி, அதில் உள்ள பாசுரங்களின் தொகை, அதனை வைணவ அடியார்கள் வகைப்படுத்திய விதம், இவற்றோடு திவ்யப் பிரபந்தங்களின் பெருமைகளையும் தனிச்சிறப்புகளையும் மிகத் துள்ளியமாக விவரித்துள்ளார் நூலாசிரியர். இதுவல்லாது "பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்" எனும் கருப்பொருளில் அதில் விளங்கும் நாயக நாயகி பக்திப் பாவத்தை ஆழ்வார்களின் அனுபவமாக ந. சுப்பு ரெட்டியார் வெளிப்படுத்தியிருக்கும் பாங்கு சிறப்பானது. குறிப்பாக நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் இந்த நாயக நாயகி பாவத்தில் திருமாலைப் போற்றித் துதித்த விதத்தை இந்நூல் நன்கு விளக்குகிறது. இப்பெண் தன்மையுற்ற ஆழ்வார்கள் தங்களை எம்பெருமானின் தோழி, தாய், மகள் ஆகிய பாவத்தில் சேவித்த விதத்தையும் பக்தி மார்க்கத்தில் மட்டுமல்லாது அதனை வேதாந்தத் தத்துவப் பொருளாகவும் விளக்கமளித்திருப்பது வைணவ மார்க்க அறிவாக்கத்திற்கே பெரும் பங்களிப்பு என்றே கூற வேண்டும்.

**பன்னிரு ஆழ்வார்கள்**

திவ்ய பிரபந்தங்கள் எனும் போது அங்கே ஆழ்வார்கள் குறித்த சிந்தனையை விடுத்துச் செல்ல முடியாது. எம்பெருமானின் அடியவர்கள் ஆழ்வார்கள் எனப்படுவர். 'ஆழ்வார்' என்பதற்குப் பரம்பொருளின் கல்யாண குணங்களில் ஆழ்ந்து அனுபவித்துத் திளைப்பவர்கள் எனப் பொருளுண்டு. வைணவ சம்பிரதாயத்தில் எம்பெருமானின் அடியவர்கள் மட்டுமன்றி அவரது பஞ்சாயுதங்களும் அவரது உப அவதார மூர்த்தங்களும் ஆவ்ழார்கள் என்றே அழைக்கப்படுகின்றனர். ஆயினும் கூட நாலாயிரத் திவ்ய பிரபந்தங்களைப் பாடியருளிய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஸ்ரீஆண்டாள் நாச்சியார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் முதலாய பன்னிரு ஆழ்வார்கள் எம்பெருமானுக்கு மட்டுமல்லாது தமிழுக்கும் பெருந்தொண்டு செய்தவர்களாவர்.

(வேணு சீனிவாசன், 2013).

கலியுகத்தில் உயிர்களை உய்விக்கும் பொருட்டு எம்பெருமான், தமது பூதேவி, பஞ்சாயுதங்கள், ஸ்ரீவத்சம், கௌஸ்துபம், வனமாலாதி சின்னங்களையும், ஆதிசேடன், கருடபிரான், விஷ்வக்ஸேனர் முதலியோரை, ஆழ்வார்களாக அவதரிக்கச் செய்தார். இவ்வாறு எம்பெருமானின் திருவுளப்படித் தோன்றிய ஆழ்வார்கள் ஸ்ரீமந்நாராயணனை அனுபவித்துப் பாடிய பாடல்களே நாலாயிரத் திவ்யப் பிரபந்தங்கள் எனச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ந. சுப்பு ரெட்டியார் ஆழ்வார்களைப் பற்றிக் குறிப்பிடும் போது அவர்களின் தனித்த விசேடங்களை நன்கு உள்வாங்கிப் பின்னரே அவர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றை அமைத்திருக்கிறார் என்பது இப்பகுதியில் நன்கு விளங்கப் பெறுகிறது. பன்னிரு ஆழ்வார்களின் புராணத்தைக் கூறும் ஆழ்வார் வைபவத்தில் நன்கு தேர்ச்சியுற்றவரே அவர்களைப் பற்றி இவ்வளவு சுவைபடக் கூற முடியும். ஆதலின், நூலாசிரியர் ஆய்வு நோக்கையும் கடந்து ஆழ்வார் வைபவத்தைப் படித்து மகிழ்ந்து தான் பெற்ற இன்பத்தை இவ்விடத்தில் பதிவு செய்து, உலகோர்க்கும் அவ்வின்பத்தை பெருமனதுடன் பகிர்ந்துள்ளார் என்று கூறுவதே சாலப் பொருந்தும்.

மேலும் ஆழ்வார்களின் தனிப்பெருமைகளைப் பக்திச் சுவையுடன் மட்டும் அல்லாது வரலாற்றும் பார்வையிலும் கூறியிருப்பது மற்றுமொரு தனிச்சிறப்பு என்றே கூறுதல் வேண்டும். பொதுவில் வரலாற்றுப் பார்வையில் எழுதுவோரிடத்தில் ஆய்வு மனப்பான்மை மட்டுமே இருக்கும். பக்தியில் கதை எழுதும் போது அங்கே பெருமைகள் மிகுந்தும் சில வேலைகளில் மிகைப்பட்டும் இருக்கும். ஆனால் இவ்விரண்டையும் சமன் செய்து ந. சுப்பு ரெட்டியார் இப்பகுதியில் ஆழ்வார்களைப் பற்றி எழுதியிருப்பது பாராட்டுக்குறிய அரிய செயலாக அமைகின்றது.

**ஆச்சாரிய குருபரம்பரை**

வைணவ சம்பிரதாயத்தில் குருபரம்பரை தனித்தன்மையது. ஏனெனில் வணவத்தில் எம்பெருமானே 'பெரியபெருமாள்' எனும் திருநாமத்தில் மூல குருவாக வீற்றிருந்து அருள்கிறார் என்பது ஆன்மீகத் தத்துவமாக வைக்கப்பட்டுள்ளது. இதன் பின்னர் வரக் கூடிய, பெரிய பிராட்டியார் (இலக்குமி தேவி, பூதேவி, நீளாதேவி) விஷ்வக்சேனர், ஆழ்வார்கள், நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, யமுனைத்துறைவர் பெரியநம்பிகள், இராமானுசர் முதலானவர்களையும் அவர்தம் சீடர், வாழ்க்கை ஆகியவற்றையும் அழகுற விளக்கியுள்ளார் நூலாசிரியர். இவர்களைக் குரு பரம்பரையாகத் தெளிவுற வரிசைப்படுத்து விளக்கியுள்ளார் நூலாசிரியர்.

அடுத்த நிலையில் நில்லாமல் வடகலை ஆச்சாரியப் பரம்பரை எனும் உப தலைப்பின் கீழ் திருக்குருகை பிரான் பிள்ளை, எங்களாழ்வான், நடாதூரம்மாள், கிடாம்பி அப்புள்ளாள், வேதாந்த தேசிகர், நாயினாராச்சான் பிள்ளை ஆகியோரின் வரலாற்றையும் அதனைத் தொடர்ந்து தென்கலை ஆசாரியப் பரம்பரை எனும் மற்றொரு உபதலைப்பின் கீழ், எம்பார், பட்டர், நஞ்சீயர்,

நம்பிள்ளை, வடக்குத் தெருவீதிப் பிள்ளை, பிள்ளை உலகஆசிரியர், திருவாய்மொழிப் பிள்ளை, மணவாள மாமுனிகள் முதலாய குருமார்களின் வரலாற்றையும் அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதங்களையும் இந்நூல் விளக்குகிறது. இவ்விளக்கமானது வைணவ சம்பிரதாயத்தில் ஆச்ச்சாரிய பரம்பரையைப் பற்றிய எளிய, தெளிவான அரிய விளக்கத்தை வாசகர்களுக்குக் கொடுத்து அவர்களின் புரிதலை மேம்படுத்தும் என்பது உறுதி.

**வைணவ சீலர்கள் யாவர்?**

குருபரம்பரையை அடுத்து வைணவ சீலர்கள் எனும் இயலில் ந. சுப்பு ரெட்டியார், உடையவர் காலத்து முன்னும் பின்னும் வாழ்ந்த ஆச்சாரியர்கள் மற்றும் அடியார்களின் பெருமைகளை நன்கு விளக்குகிறார். இப்பகுதியில் திருக்கச்சி நம்பி முதலாக, பெரியதிருமலை நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமலையாண்டான், திருவரங்கப்பெருமாள் அரையர், வாதிகேசரி அழகிய மணவாளசீயர், பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளை உலகஆசிரியார், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், திருவரங்கத்தமுதனார், ஆத்தான் சீயர், பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் ஈராக ஆச்சாரியர்களைப் பற்றித் தெளிவுறுத்துகிறார். அதனைத் தொடர்ந்து கூரத்தாழ்வான், முதலியாண்டான், அனந்தாழ்வான், கிடாம்பி ஆச்சான், வடுக நம்பி, மிளகாழ்வான், பிள்ளை உறங்காவில்லிதாசர், பொன்னாச்சியார், அகளங்க நாட்டாழ்வான், அம்மங்கி அம்மாள், எறும்பியப்பா, கூரநாராயணசீயர், நடுவில் திருவீதிப் பட்டர், கந்தாடை அண்ணன், கந்தாடைஆண்டாள், கந்தாடை இலட்சுமனாசாரியார், பிள்ளைத் திருநாறையூர் அரையர், பிரதிவாதி பயங்கரம் அண்ணன், கந்தாடை தோழப்பர், விளாஞ்சோலைப் பிள்ளை முதலாய வைணவ அடியார்களைப் பற்றிய வரலாற்றை பக்திச் சுவையுடன் கலந்து எழுதியுள்ளார் நூலாசிரியர்.

**வைணவத் தத்துவங்கள்:**

பொதுவில் தத்துவங்களை விளக்குவது அல்லது விளக்கிக் கூறுவது ஓர் அசாத்தியமான காரியம் என்றே கூற வேண்டும். ஆனால் வைணவத் தத்துவங்களை இந்நூல் விளக்கியிருக்கும் பாங்கானது இந்நூலுக்கு மேலும் ஒரு தனிச்சிறப்பைச் சேர்க்கிறது என்றே உரைக்கத் தோன்றுகிறது. ந. சுப்புரெட்டியாரின் வைணத்தத்துவத்தின் எளிய விளக்கத்தின் புரிதலைக் காணலாம்.

வைணவத்தைப் பொருத்த வரையில் இறைவனை அடைய விருப்பம் கொள்பவனை சேதனன் என்பர். அறிவுள்ளவன் என்பது இதற்குப் பொருள். இறைவனை அடைய விருப்பம் உடையவர் எனப்படுவது மோட்சத்தை அடைவதில் விருப்பமுடையவர் என்பதன் பொருளாகவே குறிக்கப்படுகின்றது. மோட்சத்தை விரும்புபவர்களை முமுட்சு என்பர். முமுட்சாகக் குறிக்கப்படும் ஒருவர் தத்துவம், ஹிதம், புருசார்த்தம் ஆகிய மூன்றையும் அறிந்திருத்தல் வேண்டும். இதில் தத்துவம் மூன்று. அவை,

i) சத்து – உயிர்கள்.

ii) அசித்து - அவற்றின் உடல்கள் மற்றும் பிற சடப்பொருள்களைக் குறிக்கும். இது பிரகிருதியைக் கொண்டு படைக்கப்பட்டது. இதனை மூலப்பகுதி என்பர் வைணவர்.

iii) ஈசுவரன் - இறைவன்

இவை மூன்றையும் தத்துவத் திரயம் என்பர். 'திரயம்' என்பது மூன்று என்ற எண்ணிக்கையைக் குறிக்கும்.

அடுத்து ஹிதம். வீடு பேற்றை அடைவதற்கான வழியாக (உபாயம்) இதனைக் குறிப்பர். இது பத்தி, பிரபத்தி என இரு வகைப்படும். இதில் பத்தி என்பது வெளிப்படையாக இறைவன் மீது பக்தி செலுத்தி அடிமையாய் இருந்து கைங்கரியம் செய்வதைக் குறிப்பது. பிரபத்தி என்பது மனத்தால் ஈசுவரனை அடைவது. சுரணாகதி நெறி என்றும் இதனைச் சொல்வார்கள். ஆழ்வார்கள், பக்திக்கும் மேலாக பிரபத்தியை வலியுறுத்துகின்றனர் என்பது இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

மூன்றாவதாகப் புருசார்த்தம். இது, ஆன்மா அடைய வேண்டிய நான்கு உறுதிப் பொருள்களைக் குறிப்பது. தர்மம், அர்த்தம், காம, மோட்சம் (அறம், பொருள், இன்பம், வீடு) என வைணவர் இதனைக் கூறுவர். இதில் ஆன்மா அடையவேண்டிய இறுதி நிலை மோட்சம், வணவத்தில் இது 'பரமபதம் சேருதல்' என்றும் 'வைகுண்டம் சேருதல்' என்றும் 'பரிபூரண பாகவதானுபவம் பெறுதல்' என்றும் கூறுவர். பரமபதம் அடைந்த ஆன்மாக்களின் நோக்கம் ஒன்றுதான். அது ஈசுவரனுக்கு கைங்கரியம் செய்வது மட்டுமே. வைணவத்தைப் பொறுத்த மட்டில், முமுட்சு அதாவது முக்தி அடைய விரும்பும் ஒருவர் திருமந்திரம், துவையம், சாம சுலோகம் ஆகிய மூன்று மந்திரங்களைத் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். இவை அனைத்தும் 'ஓம்', எனும் பிரணவ மந்திரத்தின் விரிவுதான்.

திருமந்திரம் எனப்படுவது, 'ஓம் நமோ நாராயணாய' எனும் எட்டெழுத்து மந்திரமே ஆகும். 'ஓம்' என்ற சொற்பொருளின் விரிவுதான் 'நமோ நாராயணாய' எனும் மந்திரம் என்பது வைணவர்களின் கொள்கையாகும். துவயம் என்பது,

'ஸ்ரீமத் நாராயண சரணௌ சரணம் பிரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம'

எனும் மந்திரம் ஆகும். இதன் முதல் அடிக்கு, 'ஸ்ரீமானான நாராயணனுடைய திருவடிகளை உபாயமாக பற்றுகின்றேன்' என்பது பொருள். அடுத்த அடிக்கு, 'பெரிய பிராட்டியாரும் ஈசுவரனுமான சேர்க்கையில் என்றும் கைங்கரியத்தைப் புரிவேனாக' என்பது பொருள். இரண்டு வாக்கிய மந்திரம் என்பதால் இது 'துவயம்' அதாவது இரண்டுடையது எனப்பட்டது. சற்றே

ஆழ்ந்து நோக்கிடில் மேற்சொன்ன எட்டெழுத்துத் திருமந்திரத்தின் பொருளை விரித்துக் கூறுவதாகவே துவயம் அமைந்துள்ளது என்பது பெறப்படும். சாம சுலோகமானது,

'சர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வாஜ
அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோட்சயிஷ்யாமிம் மாசுச' (கீதை அத்தியாயம்: 66)

என்கிறது. சாம சுலோகம் எனும் இந்த மந்திரம் மேற்குறிப்பிட்ட கீதையின் இரண்டு வரிகளாகவே உள்ளது. இதிலிருந்து துவய மந்திரத்தின் பொருளை மேலும் விரித்துக் கூறுவதாகவே சாம சுலோகம் அமைந்துள்ளது என்பது பெறப்படும். அதாவது, இம்மந்திரத்தின் முதல் அடிக்கு, 'எம்பெருமானை உபயமாகப் பற்றுகிறேன்' என்பது திரண்ட கருத்து. அடுத்த வரிக்கு, 'பெரிய பிராட்டியாரும் எம்பெருமானும் சேர்த்தியில் எல்லா அடிமைக் காரியங்களையும் செய்யப் பெறுவேனாக' என்பது கருத்து. இவ்விடம் பிராட்டியாரையும் சேர்த்துச் சொல்வதற்கான காரணத்தை அறிவது முக்கியம்.

பிராட்டியார்தான் எல்லா திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியிருக்கும் ஈசுவரனோடு விலகாமல் உடன் இருப்பவள். பெரிய பிராட்டியார்தான் உயிர்களின் பிழை பொறுப்பிப்பவர். உயிர்களுக்கு சேர்க்க வேண்டியவற்றைச் சேர்த்துப் போக்க வேண்டியவற்றைப் போக்கி ஈசுவரனிடம் கொண்டுச் சேர்ப்பவள். பிராட்டியாரின் இச்செயல்களைப் 'புருஷகாரம்' என்பர் வைணவர். இவற்றில் வைணவன் ஒருவன் குறைந்தது எட்டெழுத்து மந்திரமாகிய திருமந்திரத்தையாவது தெரிந்திருத்தல் வேண்டும். இவ்வாறு வைணவத் தத்துவங்களை எளிமையாகப் படைத்துள்ளார் ந. சுப்பு ரெட்டியார்.

**நாராயண மூல மந்திரத்தின் பெருமை:**

வைணவ மார்க்கத்தில் தலையாயது "ஓம் நமோ நாராயணா" எனும் மந்திரம். இந்தத் தாரக மந்திரத்தின் பொருண்மையை உணர்ந்து ஓதுதல் ஒரு வைணவனின் அடிப்படைத் தர்மம் ஆகும். இது மந்திரத்தையும் கடந்து தத்துவங்களை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. ஆதிமுதல்வனாகிய ஹரிப் பரந்தாமனின் 'நாராயணா' எனும் திருநாமாம் நல்ல குலத்தையும் சுற்றத்தையும் தருகின்றது, சகல விதமான செல்வங்களையும் நல்குகின்றது, அடியவர்களின் துயரங்கள் யாவற்றையும் தரைமட்டமாக்குகிறது, முக்திப் பேராகிய பரமபதத்தைத் தருகின்றது, எம்பெருமானின் திருவருளோடு பெருநிலமும் வலிமையையும் கொடுக்கின்றது, மற்ற எல்லாவற்றையும் கொடுக்கின்றது, மேலும் பெற்ற தாயை விட சாலப் பரிந்து அனைத்துக் கருணை செய்கின்றது, நலங்கள் எல்லாவற்றையும் குறைவில்லாமல் கொடுத்துத் திருவருள் புரிகின்றது என்று திருமங்கையாழ்வார் நாராயணத் திருமந்திரத்தின் பெருமைகளைப் பறை சாற்றுகின்றார். இவ்வகையில், அத்துனை முக்கியம் பெற்றுள்ள இம்மந்திரத்தின் பெருமைதனை இந்நூல் மிகச் சிறப்பாகவே குறைவின்றி வாரி வழங்கியுள்ளமை போற்றுதலுக்கு உரியது.

வைணவம் பகவானை 'வியாப்தி' என்கிறது. எல்லாவற்றிலும் வியாபித்திருப்பது என்பது இதற்கான பொருள். பகவான் சித்து, அசித்து ஆகியவற்றைத் தன் சரீரமாகக் கொண்டுள்ளதால் அவனுக்குள்ளே எல்லாம் நிறைந்திருக்கின்றது என்றும், அவனே எல்லாவற்றிலும் உள்ளான் என்பதுவும் அறியப்படுகின்றது. சரீர சரீரி பாவனை என்பதுவும் இதுவே. பகவானைப் போல அவனின் எட்டெழுத்துத் திருமந்திரமும் வியாப்தியாகவே இருக்கின்றது. இறைவனைப் போலவே அதுவும் பேரருட் கருணையைக் குறைவின்றிப் பொழிகின்றது என வைணவம் சாற்றுகின்றது. இன்னும் சொல்லப்போனால் எம்பெருமானைக் காட்டிலும் அவனின் திருநாமம் மகிமையுடையது என்பது வைணவ அடியார்களின் ஆழ்ந்த கருத்தாக உள்ளது என்பது அறியத்தக்கது. வைணவ சமய ஆன்றோர்களுள் தலையானவர்களாகப் போற்றப்பெறும் ஆழ்வார்களும் கூட எட்டெழுத்து மந்திரத்தையே தஞ்சமாகக் கொண்டனர் என்பது அரிய செய்தியாகும். நாதமுனிகள் உட்பட மற்ற வைணவ ஆச்சாரியர்களும் கூட 'ஓம் நமோ நாராயணாய' எனும் திருமந்திரத்தையே தங்களின் ஊன்றுகோளாகக் கொண்டு உய்தி பெற்றனர் என்பது வரலாறு.

எட்டெழுத்து மந்திரத்தின் ஒரு சில அம்சங்களைக் கொண்டதாகக் 'கோவிந்தா' எனும் திருநாமத்தைக் கூறுவர். மகாபாரதத்தில் துரோபதை துட்சாதனனால் துகில் உரியப்பட்ட போது இந்த 'கோவிந்தா' எனும் திருநாமத்தைத்தான் ஒருநிலை மனதோடு ஓதினாள். உடனே எம்பெருமானால் அபயமளிக்கப்பட்டாள். எட்டெழுத்து மந்திரத்தின் ஓரிரு அம்சங்களைக் கொண்ட 'கோவிந்தாய நம' எனும் திருநாமத்திற்கே இத்துணை மகிமை என்றால் அண்ணலில் ஆதி மந்திரமாகிய எட்டெழுத்து மந்திரத்தின் சிறப்பினை எந்த அளவுகோள் கொண்டு அளவிடுவது?

ஒரு வைணவன், இத்திருமந்திரத்தை ஆச்சாரியாரிடமிருந்து முறையாக உபதேசம் வழி பெறும் பொழுதுதான் உண்மையில் அவன் பிறக்கிறான் என்பது வைணவம் கூறும் கருத்தாக உள்ளது. இவ்வாறு முறையாக இத்திருமந்திரத்தைக் கற்றவரை அம்மந்திரம் பற்றிக் கொள்வதால் அதனை அவர்கள் மறக்கவே மாட்டார்கள். ஆன்மாவின் இக பர சுகத்திற்கான யாவையும் தரும் இந்த எட்டெழுத்து மந்திரத்திரம் என்கிறார் நூலாசிரியர். இது படிப்போரிடத்தில் வைணவம் குறித்த தெளிவை மட்டுமல்லாது பக்தியையும் வளர்க்கும் என்பது திண்ணம் எனும் தத்துவப் பொருளை இந்நூல் படிப்போரின் மனதில் ஆழப்பதிக்கிறது.

**எட்டெழுத்து மந்திரத்தின் பொருண்மை:**

'ஓம் நமோ நாராயணாய'. இதில் 'ஓம்' என்பது ஓர் எழுத்தாகவும், அதனைத் தொடர்ந்து வருகின்ற 'நமோ நாராயணாய' என்ற சொற்களின் எழுத்துக்களைக் கூட்டினால் எட்டெழுத்து மந்திரம் தோன்றும். 'ஓம்' என்பது மூல மந்திரம். இது அகார, உகார, மகாரத்தின் சேர்க்கையில் தோன்றியதாகும். இதன் அடிப்படையில் அ, உ, ம் ஆகியவற்றின் கூட்டெழுத்தே 'ஓம்' எனும் பிரணவமாகும். இதில் அகாரம் என்பது இறைவனையும், உகாரம் என்பது உயிரானது ஈசுவரனைத்

தவிர்த்து மற்றவற்றிற்கு உரியது அன்று எனும் பொருளையும் (ஷேசத்துவம் - ஈசுவரனுக்கு அடிமையாய் இருத்தல்), மகாரம் என்பது ஞானவானாகிய சீவனையும் குறிக்கின்றன. மகாரமாகக் குறிக்கப்படும் சீவனுக்கு அறிவும் சுதந்திரமும் உள்ளது. இதனால் 'ஓம்' என்பது ஞானவானாகிய உயிர்கள் யாவும் இறைவனுக்கு மட்டுமே அடிமை எனும் தத்துவத்தைப் பிரணவ மந்திரம் சுட்டுகின்றது. இந்தப் பிரணவ மந்திரத்தைச் சகல வேத சாரம் என்றும் வைணவர்கள் சிறப்பித்துக் கூறுவர்.

கீதையில் கண்ணன், எழுத்துகளில் நான் அகரமாக இருக்கிறேன் என்கிறார். எல்லா ஓசைகளுக்கும் அகரம் அடிப்படைக் காரணமாக இருக்கின்றது என்பது யாவரும் அறிந்த ஒன்றே. 'அகரம்', நாராயண எனும் பதத்தின் சுருக்கம் என்பதால் அது எல்லா உலகையும் காப்பது என்ற பொருளிலும் வைணவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

'நமோ' எனும் ஈரெழுத்தில் மகாரம் உயிரையும், 'ந' எனும் எழுத்து இல்லை என்றும் பொருள் தருகின்றது. இக்குறிப்பின் அடிப்படையில் உயிரானது தானும் தனக்கு உரிமை உடையவர் அல்ல, பிற பொருளும் தனக்கு உரிமை உடையது அல்ல என்பதனால் அவ்வுயிர் பிறனுக்கு அதாவது ஈசுவரனுக்கே உரியது என்பது பொருளாகின்றது. எனவே 'நம' என்பது பகவானுக்கே வசப்பட்டிருத்தல் எனும் பொருளில் வைத்துப் பார்க்கவேண்டும். 'நாராயணாய', எனும் சொல்லோ நார, அயன, ஆய எனும் மூன்று சொற்களின் கூட்டுத் தொகுதியாக அமைந்துள்ளது. 'நார', எனும் சொல் நரனிடம் இருந்து தோன்றிய உயிர்களைக் குறிக்கின்றது; 'அயன', எனும் சொல் உபாயம், பலன், ஆதாரம் எனும் பொருள்களைத் தருகின்றது. இதன் அடிப்படையில் "நாராயணன்" எனும் சொல்

1. உயிர்களுக்கு ஆதாரமாகவும், அவை உய்வதற்கான உபாயமாகவும், அவை அடைய வேண்டிய பலனாகவும் விளங்குகிறது என்றும்.

2. உயிர்களை வசிப்பிடமாக உடையது (சித்தில் வாழ்வது). என்றும் பொருள் கூறுவதை உணர முடிகின்றது

3. இதன் அடிப்படையில் 'நாராயணன்' என்பது ஆதிபரம்பொருளாகிய ஈசுவரனுக்குள் உலகம் உள்ளது, உலகம் யாவிலும் அவன் உள்ளான் எனும் பொருளை உணர்த்துகிறது.

'அய' என்ற சொல், கைங்கரியத்தைக் குறிக்கின்றது. உயிர்கள் என்றென்றும் இறைப்பணிக்கே உரியவை எனும் தத்துவத்தைக் குறிக்கின்றது. உயிர்கள் இறைத் தொண்டு செய்யும்போது பரம்பொருளின் திருமுகம் மலர்கின்றது. இந்த மலர்ச்சியானது உயிர்களுக்கு பலத்தைச் சேர்க்கின்றது. இதன் அடிப்படையில் 'ஓம் நமோ நாராயணாய', எனும் மகாமந்திரம், உயிர்கள் யாவும் இறைவனுக்கே அடிமை பூண்டவை என்பதால் உயிரானது பற்றற்ற நிலையில் சரணாகதி தத்துவத்தை அனுசரித்து, காண்பன யாவற்றிலும் அவனையே கண்டு, நினைத்து அவனுள்ளே எல்லாம் உள்ளது எனும் தெளிவு நிலையில் இறைவனின் திருத்தொண்டில் தம்மை ஆழ்த்திக்

கொண்டிட, உய்வு பெறும் எனும் மாபெரும் சத்தியத்தை உணர்த்துகிறது. இந்தப் பேருண்மைகளை யாவருக்கும் விரித்துரைக்கும் வண்ணமாகவே வைணவப் பிரமாண நூல்கள் யாவும் எழுந்துள்ளன.

இவ்வாறான விளக்கத்தை இந்நூல் முன்வைக்கும் பாங்கு நாராயண மந்திரத்தின் பொருண்மையை எளிதில் விளங்கிக் கொள்ள வழிவகுக்கிறது என்று சொல்வது மிகையில்லை.

**வைணவனுக்கான பிரதான கொள்கைகள்:**

வைணவத்தில் ஒவ்வொரு வைணவனும் ஏற்றுக் கொள்ளும் ஐந்து மையக் கொள்கைகள் உள்ளன. அவற்றையும் ந. சுப்புரெட்டியார் மிக எளிய முறையில் விளக்கிக் கூறுவது பாராட்டுக்குறிய செயலே. வைணவனின் பிரதான கொள்கைகள்:-

1. வைணவன் துய்த்தற்குரிய இறை இயல்பு (எம்பெருமானின் ரூபங்கள்). வைணவம், பரமாத்மாவாகிய திருமால் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என ஐவகைத் திருமேனிகளைத் தாங்கி அருள்வதாகக் கூறுகின்றது.

Ø பரத்துவம் - திருமால் புலன்களுக்கும் சிந்தனைக்கும் அப்பாற்பட்ட நிலையில் அன்னை மகாலட்சுமியுடன் வைகுந்தத்தில் இருந்து அருளும் நிலை.

Ø வியூகம் - உயிர்களைக் காத்து அருளவும், முத்தொழில் இயற்றவும் சங்கருணன், பிரத்தியும்னன், அநிருத்தன், வாசுதேவன் எனும் நான்கு வேறுபட்ட திருவுருவங்களில் திருமால் தோன்றுவது வியூகத் திருமேனி எனப்படும்.

Ø விபவம் - அதர்மத்தை அழித்துத் தர்மத்தை நிலைநாட்டவும், தீயவர்களை ஒழித்து நல்லோர்க்கு அருள் செய்யவும் எம்பெருமான் திருஅவதாரம் செய்யும் திருக்கோலங்கள் விபவம் எனப்படுகின்றது.

Ø அந்தர்யாமி - இந்நிலையில் திருமால் எல்லா உயிர்களிடத்தும், சடப் பொருள்களிடத்தும் நிறைந்து அவற்றை இயக்கும் நிலையைக் குறிக்கின்றது.

Ø அர்ச்சை - விஷ்ணு ஆலயங்களில் காணப்படும் திருவிக்கிரகங்கள் அர்ச்சை மூர்த்தி எனப்படுகின்றன. இவ்வாறு திருமால் ஏற்றுள்ள திருவடிவங்கள் யோக மூர்த்தம், போகமூர்த்தம், வீரமூர்த்தம் என மூன்று வடிவங்களில் வணங்கப்படுகின்றன.

2. இறை இன்பத்தினைத் துய்க்கும் உயிரின் இலக்கணம் (ஜீவாத்மாவின் ரூபம்).

Ø உயிரின் இலக்கணம் - உயிரானது உடல், இந்திரியங்கள், மனம், பிராணவாயு, புத்தி ஆகியவற்றில் இருந்து வேறாக நீங்கி இன்ப அறிவுடன் இறைவனுக்கு அடிமையாய்த் திகழும் நிலையே உயிரின் இலக்கணமாகவும் இயல்பாகவும் உள்ளது.

3. இறைவனை அடைய ஒட்டாமல் குறுக்கிடும் தடைகள்(மாயை).

Ø முக்திக்கான தடைகள் - நித்தியமான உயிர் தனக்கும் தான் தாங்கியுள்ள அநித்தியமான உடலுக்கும் உள்ள வேறுபாட்டினை அறியாமலும், தனக்கும் பரம்பொருளுக்கும் உள்ள உறவினை உணராமலும் இருப்பதால் தன்னைப் போன்ற மற்ற சீவனுக்கு அடிமையாகி

மயங்குவதும், புலன் இன்பத்தில் அமிழ்ந்து போவதும், குருவின் உபதேசமும் அருளும் பெறாமையும், ஞான வேட்கை இல்லாமல் இருப்பதுவும் முக்திக்கான தடைகளாக உள்ளன.

4. வீடு பேற்றை அடைவதற்கான உபாயங்கள்.

உயிரானது பரமபதமாகிய முக்தியை அடைவதற்கு ஒன்பது மார்க்கங்களை ஸ்ரீ வைஷ்ணவம் முன் வைக்கின்றது. அவை:-

Ø தந்தை மகன் உறவு - பரமாத்மாவைத் தந்தையாகவும், தம்மை அவரின் மகவாகவும் ஏற்று பக்தி செலுத்துவது.

Ø காக்கப்படுபவன் காப்பவன் உறவு - எம்பெருமானைச் சரணாகதியடைந்து அவனிடம் தன்னைக் காக்கும் எல்லாப் பொறுப்புகளையும் ஒப்படைத்து விடும் பக்தி நிலை.

Ø ஆண்டான் அடிமை உறவு - எல்லாம் வல்ல பரமாத்மாவைத் தன் தலைவனாகவும் தன்னை அவனது அடிமையாகவும் கொண்டு பக்தி செலுத்தும் தாச மார்க்கம்.

Ø மணாளன் மணாட்டி உறவு - வைணவத்தில் திருமால் ஒருவரே மணாளனாகவும்(ஆணாகவும்) மற்ற உயிர்கள் யாவும் பெண்ணாகவும் குறிக்கும் மரபு உண்டு. அந்நிலையில் இறைவனைத் தன் மணாளனாகக் கருதி பக்தி செய்யும் இயல்பு இது (நாயக-நாயகி பாவம்).

Ø அறிபவன் அறியப்படுபவன் உறவு - இறைவனைத் தவிற வேறு எதுவும் அறியப்படும் பொருள் இல்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து ஞானத்தால் இறைவனை அடையும் மார்க்கம்.

Ø உடைமை உடையான் உறவு - உயிர்கள் யாவும் பரம்பொருளாகிய மகாவிஷ்ணுவின் உடமை என்றும், தனது உடமைகளைப் பாதுகாக்க வேண்டியது உடையவனாகிய அந்த ஆதிகேசவன் பொறுப்பு என்று எண்ணிச் சரணடையும் வழி.

Ø தாங்குபவன் தாங்கப்படுபவன் உறவு - இறைவனே எல்லா உயிர்களையும் தாங்குபவன். அவனைத் தவிர யாராலும் அக்காரியத்தைச் செய்து உயிர்களைக் காக்க முடியாது எனத் தெளிந்து பக்தி செய்யும் நிலைப்பாடு.

Ø உடம்பு, உயிர் உறவு (சரீர சரீரி) - எம்பெருமான் உலகில் உள்ள சித்து அசித்து எனப்படும் உயிர், உலகு ஆகியவற்றைத் தனது மேனியாகவும் அவற்றின் உள் அந்தர்யாமியாகத் தானே நீக்கமற நிறைந்து திகழும் நிலை. வைணவ நெறியில் இம்மார்க்கம் தனிச் சிறப்பு உடையது.

Ø துய்ப்பவன் துய்க்கப்படும் பொருள் - உயிர்கள் தாம் பெற்ற பிறவியில் இனிது வாழ்வதற்காக இறைவனால் வழங்கப்பட்ட போகங்கள் யாவையும் அவனாகவே எண்ணி அவற்றை அனுபவிப்பது.

5. இறுதி இலட்சியமாகிய பாகவத அனுபவம் (இறை அனுபவத்தின் இயல்பு).

Ø இறைவனைச் சரணடைதல், அவனுக்கு இனிமையானவைகளைச் செய்தல், ஒவ்வாத விசயங்களைத் தவிர்த்தல், பக்தியோகத்தைக் கடைபிடித்தித்தல், எம்பெருமானைத் தவிர வேறு கதி இல்லை, பரமபதத்தைத் தவிர வேறு இலட்சியம் இல்லை ஆகிய கொள்கைகளைக் கடைபிடித்தல் இணையில்லா பாகவானுபத்தை நல்கும்.

**பரம்பொருளின் கல்யாண குணங்கள்:**

உலகலந்த பரம்பொருளாகிய, ஸ்ரீமந் நாராயணனின் கல்யாண குணங்களைளையும் அதன் பெருமைகளையும் அளவிட்டுக் கூற இயலாது. இறைவனின் கல்யாண குணங்கள் எல்லையற்று இருந்த போதும் அவற்றை ஆறு அருங்குணங்களில் வகைப்படுத்திக் கூறுவர் வைணவ ஆன்றோர்கள். இதனையும் எளிமைப்படுத்திருக்கிறார் ந. சுப்புரெட்டியார். எம்பெருமானின் கல்யாண குணங்களாவன:-

1) வாத்சல்யம்

இதனைத் தாயன்புடன் ஒப்பிட்டுக் கூறுவர். ‘வத்சம்’ என்பது கன்று எனப் பொருள்படும். தாய்ப்பசுவானது தன் கன்றின் மீது கொண்ட அன்பினால் கன்றின் உடலின் மீது படிந்துள்ள அழுக்குகளைத் தன் நாவினால் நக்கி அதனைப் போக்கி பின் அதற்குப் பால் கொடுப்பது போல இறைவனும் தன் அடியவர்கள் மீது கொண்ட அன்பினால் அவர்களின் குற்றங்களைத் தன் குணங்களால் நீக்கி அவர்களுக்கு அருள் பாலிக்கும் பண்பைச் சுட்டுவதும் வாத்சல்யம்.

2) சுவாமித்துவம்

பேரின்பவீடாகிய தம்மைப் பற்றாமல், உலகியல் சிற்றின்பத்தில் பற்று கொண்டு வாழும் ஒருவனை, அப்படியே விட்டுவிடாது அவனைத் தடுத்தாட்கொண்டு அந்த ஆன்மாவைத் தமது உடைமையாக்கி அருளும் பண்பு.

3) சௌசீல்யம்

தாம் பரம்பொருளாக இருந்த போதும் தன்னைச் சரணடைந்தோனின் கீழ்மை நிலையைப் பொருள்படுத்தாது அவனுடன் வேறுபாடு இன்றிக் கலந்துறவாடும் உயர் பண்பு.



4) சௌலப்பியம்

காண்பதற்கு இயலாத தன் உருவை யாரும் காணுமாறு எளிமை செய்தருளும் பண்பு இதுவாகும். உளம் உருகி வேண்டும் உண்மை பக்தர்களுக்கு எம்பெருமான் எளிதில் காட்சி தந்து அருள் புரிபவன் என்பதை இந்தக் கல்யாண குணம் சுட்டுகிறது.

5) ஞானம்

ஆன்மாக்கள் இதுவரையில் அடையப்பெற்ற துன்பங்களையும், அதற்கான காரணங்களையும், அதனைக் களையும் வழிகள் யாவையும் அறிந்து அவ்வுயிர்களைக் காத்துக் கடைத்தேற்றும், அனைத்தையும் முழுமையாக அறிந்திருக்கும் எம்பெருமானின் முழு ஞானத்தை விளக்கப்படுத்தும் கல்யாண குணத்தை ஞானம் என்பர்.

6) சக்தி

தன்னைச் சரணடைந்த ஆன்மாக்களின் குற்றங்களை நீக்கி, குணமுள்ளவர்களாக்கி அவ்வுயிர்களை ஆட்கொண்டு காத்து இரட்சிக்கும் பேராற்றலே சக்தியாகும்.

இவ்வாறு எம்பெருமானின் கல்யாண குணங்களை ஆறு நிலைகளில் பகுத்துக் கூறப்பட்டிருப்பினும் அவற்றிலிருந்து பலம், ஐஸ்வர்யம், வீரியம், தேஜஸ் எனப் பலவாறாகப் பல்கிப் பெருகிக் கணக்கிலடங்காத குணங்களாய் விரிந்துள்ளன. ஆதிபரம்பொருளாகிய எம்பெருமானின் அளவில்லாக் கல்யாண குணங்களை விவரித்துக் கூறும் வல்லமை யாருக்கு உண்டு என வியக்கிறார் ந. சுப்பு ரெட்டியார்.

**திருமண்காப்பு**

வைணவர்களின் மிக முக்கிய அடையாளச் சின்னம் திருமண்காப்பு. இந்தப் பன்னிரண்டு புண்ட்ரங்களை தரிக்கும்போது நாவினால் நவிற்ற வேண்டிய மந்திரங்கள் உள்ளன. நெற்றியில் வெள்ளை மண்ணால் புணர்ந்ததைத்தரிக்கும்போது கேசவாய நம' என்றும், வயிற்றில் தரிக்கும்போது 'நாராயணாய நம' என்றும், மார்பில் தரிக்கும் போது 'கோவிந்தாய நம' என்றும், வயிற்றின் வலப்பாகத்தில் இடப்படும்போது 'விஷ்ணுவே நம' என்றும், வலப்புறத்தில் இடப்படும்போது 'மதுசூதனாய நம' என்றும், வலக்கழுத்தில் இடப்பெறும்போது 'திரிவிக்கிரமாய நம' என்றும், வயிற்றின் இடப்பாகத்தில் இடப்படும்போது, 'வாமனாய நம' என்றும், இடப்புயத்தில் இடுங்கால் 'சிரீதரா நம' என்றும், இடக்கழுத்தில் தரிக்குங்கால் 'இருடி கேசாய நம' என்றும், முதுகின் அடிப்புறத்தில் தரிக்குங்கால் 'பதுமநாபாய நம' என்றும், பிடரியில் இடுங்கால் 'தாமோதராய நம' என்றும், பதின்மூன்றாவதாகச் சிரசில் இடுங்கால் 'வாசுதேவாயா நம'; என்றும் சொல்லிக் கொண்டே இடுத்தல் வேண்டும். கேசவாதி நாமங்களைச் சொல்லி இடப்பெறுவதால் திருநாமம் என்று அதற்குப் பெயராயிற்று.

அது போலவே பெண்கள் பிறைக் கீற்று போல் திருமண் இட்டுக்கொள்ள வேண்டும். திருச்சூர்ணத்தைத் தரிக்கும்போது ஊர்த்துவப் புண்ட்ரத்திலுள்ள இடைவெளியில் திருச்சூர்ணத்தைத் தரிக்க வேண்டும். திருச்சூர்ணம் இலக்குமி சொரூபமானது. மஞ்சள் காப்பைத் தரித்துக்கொண்டு இலட்சுமியை அதில் ஆவாகனம் செய்தல் வேண்டும். மேலே குறிப்பிட்ட பன்னிரண்டு இடங்களிலும் இடப்படும்

மஞ்சள் காப்புக்கு உரிய மந்திரங்கள் முறையே (அ) சிரீதேவியை நம; (ஆ) அம்ருத்தோ பவாயை நம: (இ) கமலாயை நம; (ஈ) லோக கந்தரியை நம (உ) சிரீ விஷ்ணு பத்தியை நம:(ஊ) சிரீவைணவ தேவியை நம:(எ) வராரோஹாயை நம: (ஏ) ஹரி வல்ல பாயை நம;

ஐசாரங்கின்யை நம: (ஓ) தேவதேவிகாயை நம: (ஓ) மகாலட்சுமியை நம (ஔ) லோக பூஜிதாயை நம: எனும் மந்திரங்களை ஓதுதல் வேண்டும். என விளக்குகிறார் நூலாசிரியர்.

மேலும் திருமண் காப்பைச் சிலர் எம்பெருமானின் திருவடி என்றுக் கருதுவது தவறு என்கிறார். அடியார்கள் நெற்றியில் இட்டுக்கொள்வது அரிபாதவடிவமான ஊர்த்துவ புண்டரம் ஓர் இரேகைதான்; திருமால் திருவடி அல்ல. எம்பெருமானுக்கு இதைப்போல் இரேகை இடுதல், திருக்கோயில்களில் எம்பெருமானுக்குத் திருமுழுக்காட்டுதல், திவ்வியாபரணங்கள் தரிப்பித்தல், திருப்பரிவட்டம் சேர்த்தல், போனகமளித்தல் முதலியவைகளால் அணிசெய்து உபசாரம் செய்வது போலாகும். அப்பொழுது திருமண்ணையும் அலங்காரத்திற்காக ஓர் அணிபோல் சாத்துகின்றனரேயன்றி வேறு அல்ல என்பது அறியப்படும் என்பது ந. சுப்புரெட்டியாரின் எளிய விளக்கம் எம்பெருமானின் திருமண் காப்பு குறித்த நல்ல தெளிவைத் தருகிறது.

**முடிவுரை:**

ந. சுப்பு ரெட்டியாரின் வைணவமும் தமிழும் எனும் இந்நூல் உண்மையில் வைணவ சமயத்திற்கு மட்டுமல்லாமல் தமிழ்க்கூறு நல்லுலகத்திற்கும் ஓர் அருட்கொடை என்றுதான் கூற வேண்டும். வைணவம் என்பது கரை காண முடியாத பெருங்கடல். வைணவ சமயம் தமிழர் மரபில் மிகத் தொண்மை வாய்ந்ததாயினும் அதன் ஆழம் காணுதல் அரிது. மேலும் இச்சமயமானது வேதப் பாரம்பரியத்திற்கும் மிக நெறுக்கமானது என்பதால் அதனை விளங்கக் கூறுவது அரிதான காரியமாகவே உள்ளது.

இது மிகப் பெரிய சவாலான பணி என்ற போதிலும் அதனைத் மிகச் சிறப்பாகக் கையாண்டு கூடிய வரையில் யாவருக்கும் விளங்கும் வண்ணம் ‘வைணவமும் தமிழும்’ எனும் தலைப்பில் ந. சுப்பு ரெட்டியார் இந்நூலைப் படைத்திருப்பது பெருமைக்குரிய செயலே. இந்நூலில் உள்ள கட்டமைதி, ஒரு தலைப்பிற்கும் மற்ற தலைப்பிற்கும் இடையிலான கோர்வை, எளிய நடை, வாக்கிய அமைப்பு, தகுந்த இடங்களில் எடுத்தாளப்பட்டிருக்கும் ஆதாரங்கள், அவற்றுள் மிளிரும் பக்திச் சுவை, அதனோடு சேர்ந்த ஆய்வு மனப்பான்மை என அனைத்துமே இந்நூலுக்குத் தனிப்பெருமை சேர்த்துள்ளன. ‘நடப்பதெல்லாம் நாராயணன் செயல்’ என்பதற்கிணங்க இந்நூலை வடிக்கும் பணியில் ந. சுப்பு ரெட்டியாருக்கு எம்பெருமானின் பரிபூரணத் திருவருள் இருந்திருக்கிறது என்றுதான் கூறத் தோன்றுகிறது. இவரது இந்தப் படைப்பு காலம் கடந்து நிற்பதோடு வைணவத்தை ஆழ்ந்து கற்க, அனுபவிக்க ஆர்வமுடையோருக்கு நல்லதொரு உற்ற துணையாக விளங்கும் என்பது திண்ணம். நூலைப் படித்துப் யனுறுக.

“நாராயணஸ்மிருதி”.

**துணைக்குறிப்பு நூல்கள்:**


கந்தசாமி, சொ., ந. (2003). இந்தியத் தத்துவக் களஞ்சியம். சிதம்பரம்: மெய்யப்பன் பதிப்பகம்.

சுப்பு ரெட்டியார், ந. (1998). வைணவமும் தமிழும். சென்னை: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.

தொல்காப்பியம்.
பகவத் கீதை.
வேணு சீனிவாசன். (2013). 12 ஆழ்வார்கள்: திவ்ய சரிதம். கிழக்கும் பதிப்பகம்.

Kandasamy S.N. 2003. India Thattuva Kalanjiyam. Vol. 3. Sidhambaram: Meiyappan Publications.

Owen Holland. (2016). Introducing Literary Criticism: A Graphic Guide. Icon Books Ltd.

Patricia Waugh. (2006). Literary Theory and Criticism: An Oxford Guide. Oxford University Press.

Silllalee K. &amp@ Rajantheran M. (2011). Glory and Philosophy of Lord Thirumal. Kuala
Lumpur: Sri Maha Mariamman Temple Dhevasthanam. ISBN-9789671084601.


**********************************

# இலக்கணம் கற்பித்தல் ~ ஓர் ஆய்வு

(ந.சுப்பு ரெட்டியாரின் “தமிழ் பயிற்று முறை” நூலை முன்வைத்து )

**முனைவர் க.பசும்பொன்**
**மேனாள் இயக்குநர் (பொ.),**
**உலகத்தமிழ்ச் சங்கம், - மதுரை.**
**ஆட்சிக்குழு உறுப்பினர்,**
**தமிழ்ப்பல்கலைக் கழகம்,**
**ஆய்வறிஞர் – பாரதவாணி**
**இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் - மைசூர்**

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் “தமிழ் பயிற்றும் முறை” என்கிற நூலை 1957இல் எழுதியுள்ளார். இந்நூலின் மொத்த பக்கங்கள் 716. இந்நூலின் மூன்றாம் பதிப்பு 2018இல் வெளிவந்துள்ளது. 136 நூல்களைப் படைத்து ரெட்டியார் பன்முக ஆளுமையாக மிளிர்கிறார். ஒரு மொழியைப் பிழையின்றி பேசவும் எழுதவும் இலக்கியங்களைப் படைக்கவும் இலக்கணம் தேவைப்படுகின்றது. 14 தலைப்புகளில் பேராசிரியர் இந்நூலை ஆக்கியுள்ளார், தமிழ்மொழியைப் பயிற்றும் நோக்கங்கள், கல்வித்திட்டமும் மொழிப்பாடத்திட்டமும், பயிற்றலின் அடிப்படை விதிகள், பயிற்று முறைகள், பயிற்றலின் உபாயங்கள், வாய்மொழிப்பயிற்சி, படிப்பு, கையெழுத்தும், எழுத்தும் கூட்டலும், மொழிப்பயிற்சிக்கட்டுரைப் பயிற்சி, இலக்கியம், இலக்கணம், ஆசிரியரின் வேலைத்திட்டங்கள், பள்ளிக்குரிய நூல்கள், கல்வித்துறை அளவியல் ஆகியன குறித்தும் பின்னிணைப்பில் பயன்பட்ட நூல்கள், கலைச்சொல் அகராதி மற்றும் பொருட்குறிப்பு அகராதி குறித்தும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எடுத்து இயம்பி உள்ளார். இந்நூலிலுள்ள தமிழ் இலக்கணம் கற்பித்தல் குறித்து இக்கட்டுரை ஆய்கின்றது.



இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய தி.சு.அவினாசி லிங்கம், தாய்மொழிப் பயிற்சியைத் தவிர அத்துடன் தொடர்பாக இருக்க வேண்டிய நவீன முறைகள் பற்றிய பிற செய்திகளும் சேர்க்கப்பெற்றிருப்பதாக அறிகின்றேன். அவருடைய புத்தகம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளிலும் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியிலும் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு பெரிதும் பயன்படும் என்று நம்புகின்றேன் என்றார். இக்கருத்தை நானும் நம்புகிறேன்.

ந. சுப்பு ரெட்டியார் அவர்கள், அனைவரும் தாய்மொழியில் தெளிவாகப் பேசவும் எழுதவும் ஆற்றல் பெற வேண்டும் என்பதைக் கூறவா வேண்டும்? இதை முக்கிய நோக்கமாக கொண்டு தொடக்க, இடை, உயர்நிலைப் பள்ளிகளில் பணியாற்றும் தாய்மொழி ஆசிரியர்கள் மொழியைக் கற்பிக்க வேண்டும். தாய் மொழியிலேயே எல்லாப் பாடங்களும் கற்பிக்கப் பெற வேண்டியதாயிருந்தலின் பிற பாட ஆசிரியர்களும் இந்நோக்கத்தை நினைவில் வைத்துக் கொண்டு
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

பணியாற்ற வேண்டும் என்றும் நவீன முறைகளைக் கொண்டு கற்பித்தனால் தமிழ்மொழி கற்பதன் நோக்கத்தையொட்டி மாணாக்கர் பெறும் மொழி அறிவையும் இலக்கிய அறிவவையும் நவீன அளவியல் முறைகளைக் கொண்டே அளப்பது இன்றியமையாதது என்று பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் குறிப்பிடுகிறார்.

மொழியாசிரியர்கள் இன்று பயின்று வரும் தொல்காப்பியம் நன்னூல், அகப்பொருள் விளக்கம் இறையனராகப் பொருள், யாப்பருங்கலங்காரிகை, தண்டியலங்காரம், வெண்பாப்பாட்டியல் போன்ற ஏதாவது பாட்டியல் ஆகியவைப் பற்றி ஓரளவு தெரிந்திருக்க வேண்டும். அந்நூல்களில் கூறப்பெற்றுள்ள ஒரு சில அடிப்படையானவற்றையாவது அறிந்திருத்தல் மிகமிக இன்றியமைந்தது என்கிறார் பேராசிரியார் ரெட்டியார்.

இலக்கணம் என்பது மொழியின் இயக்கத்தைப் பல விதிகளாகப் பாகுபடுத்திக் கூறும் நூல், தமிழில் நூல் என்றே சொல்லே இலக்கணத்தைச் சுட்டி நிற்கும். இலக்கியத்தின் பல நுட்பமான கருத்துக்களை அறிய இலக்கிய அறிவு தேவை.

இலக்கணம் தொடக்கநிலைப் பள்ளிகளில் வேண்டாம் என்பது ஓரளவு உண்மையாக இருக்கலாம். தொடக்க நிலையில் தூய்மையான பேச்சைக் கேட்பதாலும், நல்ல நூல்களைப் படிப்பதாலும் மட்டுமே மொழித்திறமையை அடைய முடியும். சொற்றொடர்களின் அமைப்பினாலும் ஓசையினாலும் அவை பிழையா, சரியா என்று அறிய முடியுமே அன்றி, தனியான இலக்கண அறிவால் இளம் மாணக்கர்கள் மொழியின் நயத்தை அறிய முடியாது என்கிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். மேலும் தொடக்க நிலையில் மொழிப் பயிற்சியினைக் கொடுக்க வேண்டும் என்கிறார்.

கற்றலின் விதிகளையும் பயிற்று முறைகளையும் சரியாக அறியாத ஆசிரியர்கள் தொடக்கநிலை வகுப்புகளிலேயே இலக்கணத்தைத் தொடங்கி மாணாக்கர்களிடம் வெறுப்புணர்ச்சியினை ஊட்டி விடுகின்றனர். அன்றியும் இலக்கியத்துடன் இணைத்துக் கற்பிக்காமல் தனியாகக் கற்பித்தனாலும் விளையாட்டு முறைகளை மேற்கொள்ளாததாலும் அவ்வெறுப்புணர்ச்சி இன்னும் மிகுகின்றது!. இலக்கணத்தின் இன்றியமைப்பினை உணர்வதே இல்லை. மாணாக்கரின் பட்டறிவில் வரக் கூடிய எடுத்துக்காட்டுகளைக் கொடுப்பதில்லை என்று மேலும் ரெட்டியார் குறிப்பிடுகிறார்.

**விதி வருவித்தல் முறை:**

நடுநிலை உயர்நிலைப் பள்ளி வகுப்புகளிலும் பெரும்பாலான ஆசிரியர்கள் விதி வருவித்தல் முறையில் கற்பிப்பதில்லை, விதிவிளக்கு முறையினையே மேற்கொள்ளுகின்றனர். விதிகளையும் நூற்பாக்களையும் முதலில் கூறிய எடுத்துக்காட்டுகளால் விளக்குவது கூடாது.

ஏனெனில் தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றிற்கும், எளிமையிலிருந்து அருமைக்கும், தெளிகளிலிருந்து சிக்கலுக்கும் போக வேண்டும் என்ற கருத்துக்கு எதிராக உள்ளது. இலக்கணத்தை மொழிப்பாடத்துடனும் கட்டுரை வரைதலுடன் பொருத்திக் காட்டாமல் தனிப்படமாக கற்பிக்கக் கூடாது என்கிறார். பழைய இலக்கண நூல்களிலுள்ள எடுத்துக்காட்டுகளைக் கொடுக்கக் கூடாது என்கிறார். இலக்கணக் குறிப்பு பயிற்சி வழங்கப்பட வேண்டும். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற முறையில் இலக்கணத்தைக் கற்பித்து மாணவர்களுக்குச் சலிப்பு ஏற்படுத்தக் கூடாது என்கிறார் பேராசிரியர் ரெட்டியார்.

**இலக்கணத்தை தொடங்கும் பருவம் மற்றும் பொருள்**

பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார், தொடக்கப் பள்ளிகளில் முதல் இரண்டு வகுப்புகளில் இலக்கணத்தை பற்றிய எண்ணம் வேண்டியதில்லை. மூன்றாம் வகுப்பில் இலக்கணத்தைப் பற்றி ஓரளவு சிந்திக்கலாம். பாடப்புத்தகங்களைப் பயிலும் போது மொழிப் பயிற்சிகளாக அந்நூல்களிலிருந்தும் சொற்றொடர்களிலிருந்தும் பெயர்ச்சொல், வினைச்சொற்களைப் பிரித்து எடுத்துச் சொல்ல வேண்டும். அவற்றின் ஒருமை, பன்மை வேறுபாடுகளைக் காட்டவும் பழகிக் கொண்டால் போதுமானது நான்காம் வகுப்பில் உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்எழுத்து, ஆய்தயெழுத்து, குறில், நெடில், சுட்டு எழுத்துக்கள் ஆகிய எழுத்து வகைகளையும் தன்மை முன்னிலைப் படர்க்கைப்பெயர்களையும், உயர்திணை, அஃறிணை வகைகளையும் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய கால வகைகளையும், எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் வகைகளையும் ஓரளவு மாணவர்களுக்குப் பாடநூல்களைக் கற்பிக்கும்போது கற்பிக்க முயற்சி செய்யலாம். இவற்றைப் பற்றி சிறிதளவு தெரிந்தால் போதுமானது. ஐந்தாம் வகுப்பில் நான்காம் வகுப்பில் கற்பிக்கப் பெற்றவை தக்க பயிற்சிகளால் வலியுறுத்தப் பெற வேண்டும் முற்றுச் சொற்றொடர், எச்சச் சொற்றொடர் வகைகளையும், வேற்றுமைப்பற்றியும், பெயரெச்ச வினையெச்சம், உடன்பாட்டு எதிர்மறைப் பொருள்கள், உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வரும் வினா, கட்டளை, உணர்ச்சி, செய்தி, தனிநிலை, கலவை, தொடர்நிலை முதலிய வாக்கியவகைகளையும் இவ்வகுப்பு மாணவர்களின் பட்டறவில் காண நேரிடும். சில சொற்களை பிரித்தறியும் சேர்த்தறியவும் கற்றுத் தரலாம் என்கிறார் பேராசிரியர் சுப்பு ரெட்டியார்.

**பயிற்று முறைகள்**

விளையாட்டு முறைகளை முதல் ஐந்து வகுப்புகளில் கையாண்டால் நல்ல பயனைத் தரும். ஐந்தாம் வகுப்பில் விதிவருவித்தல் முறையை (Inductive method) பயன்படுத்த வேண்டும். எடுத்துக்காட்டுகள் மாணவர்களின் பட்டறிவினை ஒட்டியிருத்தல் வேண்டும். கற்பிக்கும் போது தகுந்த விளக்கப் பாடங்களையும் கருத்துப் பாடங்களையும் (Diagram) and (Charts) பயன்படுத்த வேண்டும் என்கிறார் பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார்.

**இலக்கணப் பயிற்சிகள்**

வரிசை மாறியுள்ள சொற்களை வாக்கியமாக அமைத்தல், எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கண்டறிதல், பெயர், வினைச்சொற்களைப் பொறுக்கி எடுத்தல், திணை, பால், எண், இடம் இவற்றிற்கு ஏற்றவாறு எழுவாயைக் கொடுத்துப் பயனிலையும் பயனிலையைக் கொடுத்து எழுவாயையும் அமைத்து எழுதச்செய்தல், வினைச்சொற்களில் காலங்களை அறியச் செய்தல், பெயரை வினையடைகளைக் கண்டறிதல், வாக்கியத்தை மாற்றி பயிற்சிகள் கொடுக்கலாம் என்கிறார் பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார்.

**பயிற்று முறை**

நடுநிலை வகுப்புகளில் பெரும்பாலும் வழிவருவித்தல் முறையிலேயே இலக்கணத்தைக் கற்பிக்க வேண்டும். விதிவருவித்தல் முறை என்பது, மாணவர்களுக்கு பல எடுத்துக்காட்டுகளைத் தந்து அவற்றிலிருந்து அவர்களாகவே ஒரு பொது விதியைக் கண்டறியச் செய்தலாகும் என்கிறார் பேராசிரியர் சுப்பு ரெட்டியார்.

ஆகு பெயரைக் கற்பித்தல் பற்றி விரிவாகப் பேசுகிறார் பேராசிரியர். உயர்நிலைப்பள்ளி வகுப்புகளில் இலக்கணத்தைத் தனிப்பாடங்களாகவே கற்பிக்கலாம். நான்காம் வேற்றுமைப் பொருள்களைக் கற்பித்தல் விதிவருவித்தல் முறை, விதிவிளக்கு முறையை விளக்குகிறார் பேராசிரியர்.

கடன் சொற்களை (loan words) ஆசிரியர்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்கிறார். கடன் சொற்கள் வணிகம், அரசியல், சமயம், போன்ற காரணங்களால் தமிழல் புகுந்தது என்கிறார். தமிழில் பிறமொழிச் சொற்கள் வந்து கலக்கும்போது அவற்றைத் தமிழின் நீர்மைக் கேற்றவாறு மாற்றியமைத்து ஏற்றுக்கெள்ளவேண்டும் பிறமொழிச் சொற்கள் வந்து கலப்பதற்கு நாம் விதிகள் செய்யவேண்டும் என்கிறார் பேராசிரியர். மோட்டார் என்ற சொல்லைப் பயன்படுத்திக் கொள்ளலாம், ‘தானியங்கி’ என்ற சொல்லைத் திணிக்க வேண்டாம் என்கிறார் தொடர்மொழியையும் மரபுத்தொடர்களையும் மானவர்கள் ஓரளவு நன்கு அறிந்திருத்தல் தேவை, என்றும் மொழியாசிரியர்கள் அவற்றை மானவர்களின் பட்டறிவிற்குற்குட்பட்ட நிகழ்ச்சிகளில பொருத்தி வாக்கியத்தில் வைத்து வழங்கும்படி கற்பிக்க வேண்டும் என்கிறார் பேராசிரியர்.

மொழி ஆசிரியர்கள் இலக்கண பாடங்களில் அறிந்த இலக்கண அமைதிகள், குறியீடுகள் முதலியவற்றை வாய்மொழியில் ஏற்ற இடங்களில் வைத்து வழங்கும் பழக்கத்தை உண்டாக் வேண்டும், கட்டுரை எழுதும்போது இலக்கண அறிவுவை நேராக வற்புறுத்தாமல் மறைமுகவே அனுபவத்தில் கைவர நடவடிக்கை எடுக்க வேண்டும். ஒரு கட்டுரை, அதன் பத்தியாகிய சொற்றொடர்களின் ஒருமைப்பாடு, தொடர்ச்சி, அழுத்தம், வேறுபாடு முதலியவற்றையும்

சொற்களின் வைப்புமுறை, ஏற்ற சொற்களை எடுத்து வழங்கல் முதலியவைகளையும் பற்றிய விதிகளோடு பொருத்திக்காட்டலாம் எவ்வாறு எனில், அவ்விதிகளை அவர்கள் சொல்லளவுடன் நில்லாது நடைமுறையிலும் தங்கள் கட்டுரையில் கொண்டு வந்தால் கட்டுறையும் இலக்கணமும் சிறந்த முறையில் பொருத்தப்பட்டன என்று கூறி விடலாம் என்கிறார் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார்.

பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் தமிழ் பயிற்று முறை நூலில் 14 தலைப்புகளில் அந்த காலக்கட்டத்தில் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் மிகச்சிறந்த முறையில் நூலினை செப்பம் செய்து இருக்கின்றார்.

தொடக்கநிலை, நடுநிலை, உயர்நிலைப் பள்ளிகளில் இலக்கணம் கற்பித்தல் குறித்தும், கற்றலில் விதி வருவித்தல் முறை மற்றும் விதி விளக்கு முறை குறித்தும் பேசுகின்றார். இவர் பெரும்பாலும் விதிவருவித்தல் முறை சிறந்தது என்கிறார். விளையாட்டு மூலம் கற்பித்தலையும் பேராசிரியர் ரெட்டி பேசுகிறார். பயிற்று முறை, கடன் சொற்கள், ஒப்புமை (Analogy) இலக்கணப் பயிற்சிகள் குறித்தும் சிறப்பாகப் பேசுகின்றார் பேராசிரியர் சுப்புரெட்டியார்.

1957இல் எழுதப்பட்ட இந்நூல் என்பதால் மொழியியல் அப்பொழுதுதான் வளர்ந்து கொண்டு இருந்த காலம் என்பதனால். ஒலிப்புப் பயிற்சி குறித்தும் வாக்கியங்களின் வகைகள், பொருண்மையியல் குறித்தும் பேசவில்லை.

பேராசிரியர் ஜெ.நீதிவாணன், மொழி கற்பித்தல், தனித்துறையாக மலர்ந்துள்ளது. தாய்மொழியைக் கற்பிப்பது, தாய்மொழியையே இரண்டாம் மொழியாகக் கற்பிப்பது, வேற்று மொழியைக் கற்பிப்பது எனக் கற்பித்தல் உத்திகள் மாறுபடுகின்றன. அதைப்போன்றே ஒரு இலக்கியத்தைப் பல்வேறு பண்பாட்டுப் பின்னணி கொண்ட வேறுபட்ட மாணவர்களுக்குக் கற்பிக்கும் போதும் மாறுபட்ட உத்திகள் தேவைப்படுகின்றன. அகம், புறம், இறைச்சி, உள்ளுறை போன்ற கோட்பாடுகளை விளக்கிச் செல்வது அவ்வளவு எளிதன்று என்கிறார்.

தற்போது பிழைகளின் அடிப்படையில் இலக்கணம் கற்பித்தல் முறையும் இப்பொழுது பின்பற்றப்படுகிறது. இப்பொழுது இலக்கணம் கற்பித்தல் முறை வளர்ச்சி பெற்றுள்ளது. ந.சுப்புரெட்டியாரின் தமிழ் பயிற்றும் நூலினை அதோடு, ஒப்பீடு செய்யக்கூடாது. அவர் மிகச் சிறந்த ஆய்வாளர் என்பதை இந்நூலின் வழி அறியமுடிகிறது.

**பார்வை நூல்கள்**


1. சுப்புரெட்டியார்.ந. 1980 “தமிழ் பயிற்றும் முறை” பதிப்பாளர், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

2. நீதிவாணன், ஜெ. 2009, “தமிழ் இலக்கியங்கள் கற்றலும் கற்பித்தலும், அணிந்துரை டோக் பெருமாட்டி கல்லூரி, மதுரை.
3. எஸ்தர் நான்சி பியூலா, 2009, தமிழ் இலக்கியங்கள் கற்றலும் கற்பித்தலும், (கட்டுரைத் தொகுப்பு), டோக் பெருமாட்டி கல்லூரி, மதுரை.
4. Rajaram, S. 1979, An Intensive Course in Tamil, CIIL, Mysore.

********************************



# கல்வி

## கொடையும், பணியும்

**(வள்ளலும் பேராசிரியரும்)**

முனைவர் சு இராமலிங்கம்
இணைப் பதிவாளர் - மொழிப்புலம்
டாக்டர் எம்.ஜி.ஆர்.கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
(நிகர்நிலைப் பல்கலைக்கழகம்)
மதுரவாயில், சென்னை - 600 095

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~



Inaugural of Dr Alagappa Chettiar Training College in 1950

முனைவர் பேராசிரியர் ந சுப்புரெட்டியார் அவர்கள் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராக வாழ்வைத் தொடங்கிப் படிப்படியாகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிப் பின்பு கலைக்களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராக உயர்ந்த செம்மல். அரை நூற்றாண்டுக் காலமாகக் கல்வி உலகில் சிறந்து விளங்கியவர். பல்துறைப் பயிற்சி மிக்கவர். பல நிலைகளில் பதவி ஏற்றுச் சிறந்தவர். எதனையும் ஆழ்ந்து கற்பவர். எளிதாகக் கற்பிப்பவர். கல்வி இயலில் தனிநோக்குச் செலுத்துபவர். இவர்தம் படைப்புகளின் பயனாக முகிழ்ந்த நூல்கள் பல. எதனையும் விரிவாகவும், விளக்கமாகவும் எழுதுபவர்கள். இவர்கள் படைத்த நூல்கள் அனைத்தும் அளவாலும் பொருளாலும் பெரியவை.

தாம் வாழ்ந்த காலங்களை எண்ணி நினைவலைகளைப் பதிவு செய்கிறார் அறிஞர் சுப்புரெட்டியார். ஒவ்வொரு நினைவுக் குமிழியிலும் ஒரு பெரிய அல்லது ஒரு சிறிய நிகழ்ச்சி அமைந்திருக்கும். ரெட்டியாரின் கைவண்ணத்தால் அவை உயிரோவியம் ஆகின்றன. காரைக்குடியின் கதையினை (**நினைவுக்குமிழிகள்** - 3), பெருமக்கள் வாழ்வினை, கல்வி நிலையங்களின் வளர்ச்சியினை, சான்றோர்களின் சால்புகளை, அறிஞர்களின் அறிவுரைகளை கவிதை அழகுடன் கல்வெட்டுகளாக்கித் தருகிறார். அவர் கண்ட காட்சி ஒன்றா? இரண்டா? ஓராயிரமல்லவா! மனிதர்களின் சாதனைகள் எத்தனை எத்தனையோ? தனித்தனி வளையங்களாக அவை வட்டமிடுகின்றன. ஓர் ஆசிரியர் நல்லாசிரியர் பேராசிரியர் உருவான கதை பொன் இழைச் சரடாக இந்நூலுள் இழையோடுகிறது.
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

பேராசிரியரின் கல்விப்பணி வியத்தகு சிறப்பம்சங்களை கொண்டுள்ளது. பள்ளி, கல்லூரி மற்றும் பல்கலைக் கழகம் என பேராசிரியரின் கல்விப்பணி விரிவடைந்தது. ஓய்விற்குப்பின்னரும் அவரது கல்வித்தொண்டு தொடர்ந்தது. பள்ளியில் 9 ஆண்டுகளும், கல்லூரியில் 10 ஆண்டுகளும், பல்கலைக் கழகத்தில் 17 ஆண்டுகளும், ஓய்விற்குப்பின்னர் 29 ஆண்டுகளும், ஆக 65 ஆண்டுகள் கல்வியுலகில் அவரது பணி பெரிதும் போற்றப்பெறுகின்றது.

முன்னமேயே நிறுவப்பெற்று இருக்கும் ஒரு துறையில் அல்லது ஒரு நிறுவனத்தில் சேர்ந்து அதை திறமையாக நடத்தி அதை மேம்படுத்துவதென்பது ஓர் இயல்பான செயல். ஆனால், பேராசிரியர் பணியில் சேர்ந்த மூன்று இடங்களிலும் (பள்ளி, கல்லூரி மற்றும் பல்கலைக்கழகம்), இவர்தான் முதன் முதலில் சேர்ந்து தொடங்குகின்றார். அனைத்துமே சவால்களாகவும், புதிய அநுபவங்களாகவும். அமைந்தன. பள்ளியில் பெற்ற அநுபவத்தினை பின்புலமாக வைத்து கல்லூரியிலும், கல்லூரியில் பெற்ற அநுபவத்தினை பின்புலமாக வைத்து பல்கலைக் கழகத்திலும் திறமையாக பணியாற்றிய பாங்கு இங்கு குறிப்பிட தக்கதொன்று. நிறுவனங்களில் 36 ஆண்டுகள் பணியாற்றிய அநுபவம், பல்வேறு நிறுவனங்கள் மற்றும் சான்றோர்களின் தொடர்பு ஆகியவைகளின் துணைக்கொண்டு, ஓய்வுக்குப் பின்னரும் 29 ஆண்டுகள் பேராசிரியரின் கல்வி மற்றும் தமிழ்ப்பணி தொடர்ந்தன.

பல்வேறு இடங்களில், பல்வேறு காலகட்டங்களில், பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றிய நாட்களில் ஒரு நாள் கூட பணியில் இடைவெளி இல்லாதிருந்தது வியக்கத்தக்கதொன்று. தலைமையாசிரியாக 4.7.1950அன்று துறையூரிலிருந்து விடைபெற்று, 5.7.1950அன்று காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பொறுப்பில் சேர்தல்; பேராசிரியராக 31.7.1960அன்று காரைக்குடியிலிருந்து விடைபெற்று, 1.8.1960அன்று திருப்பதியிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணியில் சேர்தல். 1.6.1941முதல் 25.10.1977வரை (36 அண்டுகள்) பணியாற்றிய காலத்தில் ஒரு நாள் கூட பணி இடைவெளி இல்லாது பணியாற்றியது பேராசிரியரின் சிறப்புகளில் குறிப்பிடத்தக்கதொன்று.

அந்நாளில் (1941-1950) திருச்சி மாவட்டத்தில் தமிழ் படித்த – வித்துவான் பட்டம் பெற்ற – தலைமையாசிரியர் பேராசிரியர் ஒருவரே எனும் சிறப்பினைப் பெற்றவர். துறையூரில் பேராசியரின் ஒன்பது வருட (1.6.1941லிருந்து 4.7.1950வரை) தலைமையாசிரியர் பணி 1950ல் நிறைவு பெறுகின்றது. கம்பன் அடிப்பொடி சா கணேசன் அவர்களின் அழைப்பிற்கிணங்கி காரைக்குடியில் வள்ளல் அழகப்பச் செட்டியார் தொடங்கியிருந்த ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாளராக 5.7.1950ல் சேர்ந்தார். சுமார் 9 ஆண்டு (1941-1950) கால கல்விப்பணி (தலைமையாசிரியராக) நிறைவுற்றது.

**கல்லூரிப் பேராசிரியர்**

காரைக்குடியில் புதிதாக தொடங்கப்பெற்ற ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணி ஏற்கவும், காரைக்குடியில் வாழ்வு அமையவும் கம்பன் அடிப்பொடி சா கணேசன் அவர்கள் கருவியாக அமைந்தது குறித்து போராசிரியர் பெருமிதம் அடைகின்றார். வள்ளல் அழகப்பர் தொடங்கிய

ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல் முதலாகச் செயல்பட்ட தனியார் கல்லூரிகளில் முதன்மையானது. அழகப்பரின் வள்ளன்மையை வ சுப மாணிக்கனார்,

**‘கொடையறத்தின் திருவுருவைக் கொடுத்துவளர் திருக்கையை**
**நடையறத்தின் திருவடியை நான்மலரின் திருமுகத்தை**
**விடையறத்திற் சிவன்போல விளங்குகின்ற திருநிறத்தை**
**தொடையறத்தின் திருவழகைத் தொழுதுநின்று பார்த்தார்கள்’**

என்று வளமான தமிழில் வியந்து போற்றுகின்றார் (சிந்தனைக் களங்கள், பக். 432).

காரைக்குடி கவின்மிகு நகர்; கற்றோரைப் போற்றும் நகர்; கம்பனுக்கு விழா எடுக்கும் நகர்; செல்வர்கள் பலர் சிறப்போடு வாழும் திருநகர்; தமிழ் விழாக்களும் திருவிழாக்களும் மிகுந்த பெருநகர். இத்தகைய சீரிய காரைக்குடியில் பணி புரிந்தமையையும், வாழ்ந்தமையையும் பேராசிரியர் தம் வாழ்க்கையின் பெரும் திருப்புமுனையாக எண்ணி மகிழ்கின்றார்.

தம் வாழ்வில் பெரும் மாற்றத்திற்கு வழிகோலிய கம்பன் அடிப்பொடி சா கணேசனை கீழ்க்கண்டவாறு பேராசிரியர் நினைவு கூறுகின்றார்: (**நினைவுக்குமிழிகள்-3, பக். 166-173)**

“சுமார் நாற்பது ஆண்டுகட்குமேல் கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பவர். காரைக்குடிக் கம்பன் திருநாள் இவர்தம் திருத்தொண்டு. கம்பனுக்கு ஒரு மணிமண்டபமும் தமிழன்னைக்கு ஒரு திருக்கோயிலும் கட்டி முடித்த திருத்தொண்டர். கம்பன்மேல் அளவற்ற ஈடுபாடு கொண்டு கம்பன் அடிப்பொடி ஆனவர். ….

தமிழோடு பல்துறை ஆர்வலர். இலக்கியம், கலை, கல்வெட்டு, நாட்டு மருத்துவம், அரசியல் இசை, நாடகம் போன்ற அனைத்திலும் ஆர்வம் காட்டுபவர். ….. ஆறு, ஏழு ஆண்டுகள் சிந்தித்து எழுதிய இரண்டு பெரிய நூல்கள் **தமிழ் பயிற்றும் முறை**, **இல்லற நெறி** என்பனவாகும். முன்னதன் கைப்படியை முற்றிலும் நோக்கியவர்; பின்னதன் கைப்படியை மேலோட்டமாகப் பார்த்தவர். …..

ஊரில் நடைபெறும் எல்லாத் திருவிழாக்களிலும் இவர் பங்கு உண்டு. சுவாமியின் திருமேனியை வாகனங்களில் ஏற்றி அலங்காரம் செய்வதில் அருகிலிருந்தே ஒவ்வொரு செயலையும் கவனித்துக் கலையுணர்ச்சியுடன் குறிப்புகளைத் தந்து செம்மைப்படுத்துபவர். …. இத்தகைய பேரறிஞரை, பொதுவாழ்வுக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவரை, வள்ளல் டாக்டர் அழகப்பர் தாம் ஏற்படுத்திய அறக்கட்டளையின் அறங்காவலர்களில் ஒருவராக நியமித்தார்.”

புதிதாக தொடங்கப்பெற்ற கல்லூரியாதலால், நூலகத்தை அமைக்கும் பொறுப்பு பேராசிரியரிடம் ஒப்படைக்கப்பெற்றது. பேராசிரியர் ஒரு தனித்தன்மை வாய்ந்த திட்டத்தினை வகுத்துக்கொண்டு பணியைத் தொடங்கினார். பதிப்பு நிறுவனங்களிடமிருந்து விலைப்பட்டியலை வரவழைத்த பின்னர், ஆங்கில நூல்கள், தமிழ், அறிவியல், கணிதம், கல்வி உளவியல், தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள், கலைக்களஞ்சியங்கள், இருபதாம் நூற்றாண்டின் தமிழ் நூல்கள், தொடக்க நிலை, உயர் நிலை, கல்லூரி-பல்கலைக் கழக மட்ட நிலைகளில் வெளியிடப்பெற்ற அறிக்கைகள், முக்கியமான வார, திங்கள், பிறை முதலிய சஞ்சிகைகள், நாளிதழ்கள் முதலியவற்றை ஆராய்ந்து தேர்ந்தெடுத்து அவைகளை நூலகத்திற்கு வாங்குதலில் பேராசிரியர் கவனம் செலுத்தினார்.

இடநெருக்கடியுடன் அறிவியல் கட்டடத்தில் செயற்பட்ட அழகப்பர் ஆசிரியர் கல்லூரி தமிழகத்தில் முதல் முதலாகச் செயற்பட்ட தனியார் கல்லூரியில் முதலாவது; முதன்மையானது.

பின்னர் தொடங்கப்பெற்ற அரசினர் கல்லூரிகள் எல்லாம் இதன் தகுதியை எப்பொழுதும் பெறவில்லை; நாடு விடுதலை பெற்றபிறகு வட்டத்திற்கு ஓர் உயர்நிலைப் பள்ளி என்ற குறிக்கோளுடன் பள்ளிகள் தொடங்கப்பெற்றதால் அவற்றிற்குப் பயிற்சிபெற்ற ஆசிரியர்கள் கிடைக்கவில்லை. பள்ளிகள் திறக்கப்பெறும்போதே சில கல்லூரிகளையும் தொடங்கலாம்; அப்படிம் தொடங்குவதற்குத் திட்டம் அரசிடம் இல்லை. மாவட்டக் கழகங்களும் தனியார்களும் பள்ளிகளைத் தொடங்கினர். இதனால் மாவட்டக்கழகங்கள் ரூ 500 .௦௦ நிதி உதவி பயிற்சி பெறும் மாணாக்கர்களைத் தங்கள்பால் ஈர்க்க முன்வந்தன. கன்னியாகுமரி, நெல்லை மாவட்டங்களிலிருந்து அதிகமான மாணாக்கர்கள் வரத் தொடங்கினர். அக்காலத்தில் சைதைக் கல்லூரியில் 200 பேருக்கும் (ஆண்கள்) மெஸ்டன் பயிற்சிக் கல்லூரியில் 50 பேருக்கும் (ஆண்கள்) இடம் இருந்தது. கிறிஸ்டோ.ஃ.பர் பயிற்சிக் கல்லூரியில் (பெண்கள்) 50 பேருக்குத்தான் இடம் இருந்தது.

வள்ளல் அழகப்பர் கல்வித்தொண்டில் தம் முழு கவனத்தையும் செலுத்தினார். ஓர் அரசு செய்ய வேண்டிய பணியினையும் மிஞ்சி கல்விப் பணியில் முழுமனதுடன் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். புதுப்பள்ளிகள் தொடங்கும் காலகட்டங்களிலெல்லாம் பேராசிரியர் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு தன்னாலான சிறுஉதவியை செய்து வந்தார். வள்ளல் அழகப்பர் தோற்றுவித்த கல்வி நிறுவனங்களில் சில இங்கு குறிப்பிடப்பெறுகின்றன: (1) அழகப்பர் மாதிரி உயர்நிலைப்பள்ளி (ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் ஓர் அங்கம்), (2) அழகப்பர் தொடக்கநிலைப் பள்ளி (பணியாற்றும் ஊழியர்களுக்காக), (3) அழகப்பர் முன்னேற்பாட்டுப் பள்ளி, (4) மாண்டிச்சாரிப் பள்ளி.

வள்ளல் அழகப்பரின் கவனம் ஆசிரியர் நியமனத்திலும் சென்றது. நாட்டில் திறமையான ஆசிரியர்களையெல்லாம் தம் கல்லூரிகளில் சேர்த்து விட வேண்டும் என்று அவர் நல்லுள்ளம் விழைந்தது. ஆகவே கலைக் கல்லூரியின் முதல்வராக ஓய்வு பெற்ற கல்வித்துறை இயக்குநர் தென்னட்டி சூரிய நாராயணா (தெலுங்கர்) நியமனம் பெற்றார். அங்ஙனமே திரு. ஆ. முத்துசிவன் (தமிழ்), திரு. V. சுவாமிநாதன் (வேதியியல்), திரு. K.G. கிருஷ்ணன் (இயற்பியல், மாணிக்கவாசகம்பிள்ளை (கணிதம்), திரு. K. ஏகாம்பரநாதன் (விலங்கியல்), திரு. ஊ. இராசகோபாலன் (நில உட்கூற்றியல்), டாக்டர் கருணாகரமேனன் (ஆங்கிலம்) என்று பேராசிரியர்களாக நியமனம் பெற்றிருந்தனர். தென்னட்டி சூரிய நாராயணா 1950 இல் ஒப்பந்தப்படி விலகிக் கொண்டார். ஆகவே கலைக் கல்லூரிக்குத் திருவனந்தபுரத்தைச் சார்ந்த திரு. ஏ. நாராயணா தம்பியும் புதிதாகத் திறக்கப் பெற்ற பயிற்சிக் கல்லூரிக்குத் திருச்சூரைச் சார்ந்த திரு. ஐ. நாராயணமேனனும் முதல்வர்களாக நியமிக்கப்பெற்றனர். பேராசிரியர் காரைக்குடி சென்றபோது இருவருமே வேலையில் அமர்ந்திருந்தனர்.

பயிற்சிக் கல்லூரி திறக்கப்பெற்ற ஆண்டே நாற்பது பேர் தங்கக் கூடிய உணவு விடுதியும் திறக்க ஏற்பாடு செய்யப் பெற்றது. காரைக்குடிச் சிவன்கோயில் அருகிலிருக்கும் மீனாட்சி சுந்தரேசுவரர் பள்ளிக்குச் சொந்தமான அமிர்தவல்லி உணவு விடுதிக் கட்டடம் பல ஆண்டுகள்

மூடிக் கிடந்தது. இதனை கல்லூரி உணவு விடுதிக்குப் பயன்படுத்திக் கொள்ள ஏற்பாடு செய்யப்பெற்றது.

முதலாமாண்டுக்குள் மாணவர்க்கு 300 சிறு மேசைகள், கையில்லாத 300 நாற்காலிகள், கண்ணாடி முகப்புள்ள பல பீரோக்கள், முதல்வர் அறைக்கு வேண்டிய பெரிய மேசை, பல கையுள்ள நாற்காலிகள், ஆசிரியர்கட்கு வேண்டிய 20 மேசைகள், 20 கையுள்ள நாற்காலிகள் - இவை அசுர வேகத்தில் தயாராகி முடிந்தன. எங்களுக்கு 'மயன்படைப்பு' தான் நினைவுக்கு வந்தது. எல்லாம் தேக்கு மரத்தாலானவை. வரையாது வழங்கும் வள்ளலின் பொருளுதவியும், திறமைமிக்க தச்சுத் தொழிலாளர்களின் இடைவிடாத உழைப்பும் இவை தயாரானமைக்கு முதற்காரணமாக அமைந்தன. அரசுகூட இவ்வளவு விரைவாகச் செயற்பட முடியாது. அங்குக் கோப்புகள் ஆமை வேகத்திற்குக் குறைவாக நகரும்; இங்குக் கோப்புகள் முயல் வேகத்திற்கும் அதிகமாக நகர்ந்தன. 'அது இல்லை, இது இல்லை' என்ற குறையையே எவரும் எப்பொழுதும் உணரவில்லை. ஆசிரியர்கள் பற்றாக் குறையை நிறைவு செய்ய வள்ளல் முன் வந்தமை தமிழகத்தின் தவப்பயனாகும். ஆசிரியர்கள் பற்றாக் குறையை நிறைவு செய்ய வேண்டிய பொறுப்பை, அரசின் விருப்பத்திற்கிணங்க, வள்ளல் மேற்கொண்டு நிறைவேற்றினமையும் தமிழர்களின் தவப்பயனாகும். இப்பொறுப்பை அரசு மேற்கொண்டிருந்தாலும் இவ்வளவு விரைவாக, இவ்வளவு சிறப்பாக, இவ்வளவு திறமையாகக் கல்லூரியை உருவாக்கிப் பயிற்சி பெற்ற ஆசிரியர்களை வெளிக்கொணர்ந்திருக்க முடியாது.

டாக்டர் வள்ளல் ஒரு கர்ம வீரர்; கர்ம வீரர் என்று சொல்லுவதைவிடக் 'கர்மயோகி' என்று சொல்லுவதில் சிறப்பு உண்டு. வாழ்க்கையில் அமைத்த செயல்கள் அனைத்தையும் ஒருவித வேள்வியாகச் செய்கின்றவர்கட்குத் தொடக்கத்திலும் துன்பம் இல்லை; இடையிலும் துன்பம் இல்லை; இறுதியிலும் துன்பம் இல்லை; 'இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை' என்ற பெரும்பேறு அமையப்பெற்றவர். படைப்பின் உட்கருத்தை அறிந்தவர். தங்களுக்கென்று தேடுபவர்க்குச் செல்வம் சேர்ந்து பிறகு தங்களை விட்டுச் சென்று விடுகின்றது. ஒன்றையும் எதிர்பாராது கொடுத்துக் கொண்டே இருப்பவர்கட்குக் கொடைக்கு வேண்டிய பொருள் தானே வந்தமைகின்றது. அத்தகைய மனநிலை அட்சய பாத்திரமாகின்றது. ஆகையால் அதில் துன்பம் இல்லை. இதுதான் படைப்பின் மேலான திட்டம். அநுட்டித்துப் பார்ப்பவர்கட்கு இவ்வுண்மை விளங்கும். வள்ளல் அழகப்பர் வாழ்க்கையை வேள்வியாக நடத்தி வந்தவர். இதனால் அவரிடம் ஆக்கமே அதிகரித்து வந்தது. வேள்வி சிறப்பீனும்; செல்வமும் ஈனும்; முக்தி ஈறாக அனைத்தையும் ஈனும். அதனை நன்கு அறிந்தவர் அழகப்பர். பகவத் கீதையின் தாத்பரியமும் இதுவே.

கல்விப்பணியிடையே, வள்ளலின் தமிழ்ப்பணியும் தொடர்ந்து இயங்கி வந்தது. 1953-இராமகாதை-பாலகாண்டம் உரையுடன் வெளிவந்தது. பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் முகவுரையும் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்களின் அணிந்துரையும் நூலை அலங்கரிக்கின்றன. நூல் கம்பர் கவிச்செல்வத்தில் ஊறித் திளைக்கும் ராய. சொ. அவர்கட்கு

உரிமையாக்கப் பெற்றுள்ளது. இதன் வெளியீட்டு விழா காரைக்குடி மீனாட்சி மகளிர் உயர்நிலைப் பள்ளியில் நடை பெற்றது. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்க வள்ளல் அழகப்பர் நூலை வெளியிட்டார். அறிஞர்கள் நூலைப் பாராட்டிப் பேசினார்கள்; சொ. முரு. அவர்கள் பணித்தபடி பேராசிரியரும் 15 மணித்துளிகள் உரையாற்றினார்.

அன்றைய உயர்நிலைப்பள்ளிக் கல்வித் திட்டத்தில் மாணாக்கர்கட்குக் குடிமைப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். அதைப் பயிற்சிக் கல்லூரியிலேயே அளிக்க வேண்டிய சூழ்நிலை. 10 நாட்கள் வெளியூர்களில் பயிற்சி முகாம்கள் நடத்தப்பெற்றன. இடங்களைத் தேர்ந்தெடுத்தல், முகாம் அமைத்தல், தங்குதல், வகுப்புகள் நடத்துதல், உணவு தயாரித்தல் முதலியவற்றில் மற்ற ஆசிரியர்களோடு பேராசிரியர் தன்னை உற்சாகத்தோடு ஈடுபடுத்திக் கொண்டார். இளையாற்றங்குடியில் நடைபெற்ற முகாமை அப்பொழுது சென்னை மாநிலப் பொதுத்துறை அமைச்சர் திரு B கோபாலரெட்டியும் அவரது துணைவியாரும் பார்வையிட்டனர். சூரைக்குடியில் நடைபெற்ற முகாமிற்கு அபிசீனியா பழ நாச்சியப்பன் வருகை தந்து உரையாற்றினார். மாற்றூரில் நடைபெற்ற முகாமிற்கு திரு எஸ் சங்கரராஜு நாயுடு தன் துணைவியாருடன் வந்து தேசியக் கொடியேற்றி மாணாக்கர்களிடையே 10 நிமிடங்கள் உரையாற்றினார். திருப்பராய்த்துறையில் நடைபெற்ற குடிமைப்பயிற்சி முகாம் சித்பவானந்த அடிகளின் ஆசியோடு நடைபெற்றது. மற்றும் பிள்ளையார்பட்டி, இராமேஸ்வரம் ஆகிய இடங்களிலும் குடிமைப்பயிற்சி முகாம்கள் நடைபெற்றன.

மகாகவி சுப்பிரமணிய பாரதியாரால் பாடப்பெற்ற ஒரே சங்கம் இந்து மதாபிமான சங்கம். காரைக்குடி இளைஞர்கள் ஒன்று கூடி – சொ முருகப்பா, இராய சொக்கலிங்கம், சா கணேசன் உட்பட - இச்சங்கத்தினை தோற்றுவித்தனர். இச்சங்கத்தின் மீது பாரதியார் ஏழு பாடல்கள் பாடியுள்ளார். (பாரதியார் கவிதைகள் : தனிப்பாடல்கள் - இந்து மதாபிமான சங்கத்தார்). 9.11.1919ல் பாரதியார் இச்சங்கத்திற்கு வருகை தந்தார்.

**பலநூல்கள் பதிப்பித்தும், பல பெரியோர்**
**பிரசங்கம் பண்ணு வித்தும்**
**நலமுடைய கலாசாலை புத்தகசா**
**லைபலவும் நாட்டி யுந்தம்**
**குலமுயற நகருயர நாடுயர**
**உழைக்கின்றார் கோடி மேன்மை**
**நிலவுறஇச் சங்கத்தார் பல்லூழி**
**வாழந்தொளிர்க நலத்தின் மீதே !**

பேராசிரியர் இச்சங்கத்தின் நிர்வாகக்குழுவின் ஆயுள் உறுப்பினர். காரைக்குடிவாழ் மக்கள் பெரும்பாலும் தேசபக்தி மிக்கவர்கள். தமிழ்ப்பற்றும் சமயப்பற்றும் மிக்கவர்கள். சிவம் பெருக்கும் சீலர்கள். சிவன்கோயில் மேற்கு வீதியில் இருக்கும் அறுபத்துமூவர் மடமும், இந்து மதாபிமான சங்கமும் சிறப்பான சான்றுகளாகத் திகழ்கின்றன. இச்சங்கம் நடத்தும் தமிழ் இலக்கிய கூட்டங்களில் இராய சொக்கலிங்கம், சொ முருகப்பா இன்னபிற தமிழறிஞர்கள் கலந்து கொண்டு இலக்கிய சொற்பொழிவாற்றுவர். சங்க ஆண்டு விழாக்களில் தமிழ்த்தென்றல் திரு வி க,

பண்டிதமணி கதிரேசச் செட்டியார், டாக்டர் ஏ சி செட்டியார், சுவாமி சித்பவாநந்தர், பன்மொழிப்புலவர் தெ பொ மீனாட்சிசுந்தரனார், வள்ளல் அழகப்பர், தொழிலதிபர் தியாகராசச் செட்டியார் முதலியோர் பங்கு கொண்டு சிறப்பித்துள்ளனர். இராய. சொ.வின் நினைவினைப்போற்றும் வகையில் பேராசிரியர் 1998ல் **தமிழ்க்கடல் இராய சொ** எனும் நூலினை வெளியிட்டார்.

பேராசிரியர் கல்விப்பணி வெகுவாக சிறந்தோங்கியது என்பது கீழ்க்கண்ட அவரது குறிப்பிலிருந்து (***தமிழ் பயிற்றும் முறை*** என்னும் நூலைப்பற்றி) தெளிவாகின்றது: (**நினைவுக்குமிழிகள்-3, பக். 159**)

> "வீட்டு வேலையின் இன்றியமையாமையை எல்லோரும் அறிவர். பெரும்பான்மையான ஆசிரியர்கள் சிந்தனையின்றியே ஒவ்வொரு பாடத்தின் ஈற்றில் காணப்பெறும் பயிற்சிகள் எல்லாவற்றையும் செய்து வரும்படி ஏவுகின்றனர். தம் பாடமே முக்கியம் என்று சில ஆசிரியர்கள் அளவுக்கு மீறிய வீட்டு-வேலையை மாணாக்கர்-மீது சுமத்தி விடுகின்றனர். இவற்றைச் செய்வதற்கு எவ்வளவு காலம் வேண்டும் என்பதை எவருமே எண்ணிப் பார்ப்பது இல்லை. ஒருவித நோக்கமுமின்றி வீட்டு-வேலையைத் தருவதால் நற்பயன் ஒன்றும் விளையாது; அதற்கு மாறாகத் தீமைதான் விளையும். படிப்பிலும் வெறுப்புத் தட்டும்; இத்தகைய கருத்துகள் நூலில் விரிவாக இடம் பெற்றுள்ளன. "

பேராசிரியரின் அறிவியல் நூல்களை கண்டும் கேள்வியுற்றும், 1958ல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் TM நாராயணசாமி பிள்ளை PUC வகுப்பிற்குத் தமிழில் அறிவியல் பாடங்களைப் பயிற்றுவிப்பது பற்றிய ஆறுவாரக் கருத்தரங்கினை முன்னின்று நடத்துமாறு பேராசிரியருக்கு அழைப்பு விடுத்தார். பல்கலைக்கழக விருந்தினன் என்ற சிறப்பு பேராசிரியருக்கு வழங்கப்பெற்றது; ஊதியமோ, சன்மானமோ ஏதும் இல்லை. 'பணியே பரமன் வழிபாடு' என்ற கொள்கையுடைய பேராசிரியர் இந்த அழைப்பையேற்று சிதம்பரம் சென்றார். கருத்தரங்கு கல்வியியல் துறையின் சார்பில் நடத்தப்பெற்றது. பல்கலைக் கழகத் துணைவேந்தர் வெகுவாக பாராட்டுமளவிற்கு கருத்தரங்கினை வெற்றிகரமாக நடத்தி முடித்தார்.

பேராசிரியரின் சென்னைப் பல்கலைக்கழகத் தொடர்பு இங்கு குறிப்பிடத்தக்கதொன்று. பல்கலைக்கழக கல்வி ஆலோசனைக்குழுவின் உறுப்பினராவற்கு மூன்று முறை முயன்றும் தோல்வியுற்றார். நான்காம் முறை வெற்றிபெற்று மூன்று (1953 – 1956) ஆண்டுகள் உறுப்பினராக பணியாற்றி பெற்ற அநுபவம் எதிர்கால கல்விப்பணியில் பேராசிரியருக்கு பெரிதும் துணைபுரிந்தது. சென்னைப் பல்கலைக்கழகப் பேரவைக்குழுவிற்கு முதல் முறை தோல்வியுற்று, இரண்டாம் முறை போட்டியிட்டு வென்று பேரவை உறுப்பினரானார். ஒரு சமயம் பி.எட் (BEd) வகுப்பில் விருப்பப்பாடங்களை தமிழிலும் கற்பிக்கலாம் என்னும் தீர்மானம் பல்கலைக்கழக கல்வி ஆலோசனைக்குழுவில் கொண்டு வரப்பெற்றது. பல்கலைக்கழக துணைவேந்தர் (Dr AL Mudaliar) தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் (Feb 1956) இத்தீர்மானம் நிறைவேற்றப்பெற்றது.

இத்தீர்மானத்தை நடைமுறைப்படுத்தும் பொருட்டு, பேராசிரியர் **அறிவியல் பயிற்றும் முறை** என்ற நூலை எழுதத் தொடங்கினார். இந்நூலை வள்ளல் அழகப்பருக்கு அன்புப்படையலாக்க எண்ணி

**நலங்கிலர் ஊக்கம் எனும்புனல் பெய்து**
**நாள்தொறும் அன்புற வளர்த்த**

**பொலங்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த**
**பொருளெனும் நறுமலர் கொய்து**
**புலங்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே**
**பொற்புற அணிந்துளம் களிக்கும்**
**வலம்கிளர் டாக்டர் அழகப்ப வள்ளல்**
**மலரடிக் குரியதிந் நூலே.**

எனும் பாடலை யாத்தார். இப்பாடலுக்கு இராய சொக்கலிங்கமும், கம்பன் அடிப்பொடி சா கணேசனும் ஆசி வழங்கினர். அவ்வமயம் வள்ளல் அழகப்பர் உடல் நலிவுற்று சென்னை மருத்துவமனையொன்றில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். அழகப்பா அறக்கட்டளையின் துணை மேலாளரான திரு பத்மநாபன் அழகப்பரை கவனித்துக் கொண்டிருந்தார். அப்பாடல் திரு பத்மநாபனுக்கு அனுப்பப்பெற்று, பாடல் அழகப்பருக்கு வாசித்துக் காட்டப்பெற்றது. பத்மநாபனும் பாடலைப்பாடி வள்ளலை மகிழ்வித்தார். ஆனால், சென்னைப் பல்கலைக்கழக கல்வி ஆலோசனைக்குழுவின் தீர்மானத்தின்படி எழுதப்பெற்ற முதல்நூல் அச்சாகி வெளியிடப்பெறும் முன்பே வள்ளல் அழகப்பர் இயற்கை (5.4.1957) எய்தினார். நூல் 1957ல் வெளியிடப்பெற்றது. ஒரு மாதத்திற்குப்பின், பேராசிரியர் கண்டனூர் சென்று அழகப்பரின் திருமகளார் உமையாள் ஆச்சி மற்றும் அவர் கணவர் ஆகியோரை சந்தித்து நூலின் இரு படிகளை வழங்கினார். அழகப்பர் மறைவிற்குப்பின்பு அழகப்பா கல்வி அறக்கட்டளையின் பொறுப்பை அக்கால சென்னை மாநில கல்விநிதி அமைச்சராயிருந்த திரு சி சுப்பிரமணியம் ஏற்றுக் கொண்டார்.

கம்பன் விழாவினை முதன்முதலில் - காரைக்குடியில் - தொடங்கியவர் கம்பன் அடிப்பொடி சா கணேசன். நான்குநாள் நிகழ்ச்சிகளை அமைத்து வெற்றிகரமாக நடத்துவதில் சா கணேசனுக்கு நிகர் எவரும் இல்லை என்பது கண்கூடு. முதல் மூன்று நாள் நிகழ்வுகள் காரைக்குடி மீனாட்சி மகளிர் உயர்நிலைப்பள்ளி வளாகத்திலும், நான்காம் நாள் நிகழ்வு நாட்டரசன் கோட்டை கம்பன் சமாதியிலும் நடைபெற்று வந்தன. தமிழகத்தின் புகழ் பெற்ற தமிழறிஞர்கள் பலரும் ஒவ்வொரு ஆண்டும் கலந்து கொள்வர். இந்நிகழ்ச்சிகளின் அமைப்புகளில் சா கணேசனுக்கு பெரிதும் உறுதுணையாக பேராசிரியர் ஒத்துழைப்பு நல்கினார். இதனால் பேராசிரியருக்கு பல்வேறு தமிழறிஞர்களின் நட்பும், தொடர்பும் கிடைக்கப்பெற்றன.

சுமார் இரண்டாண்டு காலம் இழுபறியாக இருந்த பதவி உயர்வு, அழகப்பா கல்வி அறக்கட்டளையின் உறுப்பினர் K V AL M இராமநாதன் செட்டியார் அவர்களின் முயற்சியால் ஒரு முடிவுக்கு வந்தது. விரிவுரையாளர் எனும் பதவி பேராசிரியராக உயர்த்தப்பெற்றது.

காரைக்குடியில் வாழ்ந்த பத்தாண்டுகளில் பேராசிரியரின் நண்பர் குழாம் பெருகியது. கம்பன் விழா மற்றும் பல இலக்கிய நிகழ்வுகளில் தவறாது கலந்து கொண்டு பேராசிரியர் தம் பங்கினை வழங்கினார். இராய சொக்கலிங்கம், சொ முருகப்பர், ஆ முத்துசிவன், பூ அமிர்தலிங்கம், R நடராசன், சோமய்யா (இலக்கியப் பதிப்பகம்), அ லெ நடராசன் (பதுமைப் பதிப்பகம்), ரெ முத்து கணேசன், க தேசிகன், சோமலெ, V சொக்கலிங்கம் பிள்ளை,

இரசிகமணி, தொ மு பாஸ்கரத் தொண்டைமான் அ சீனிவாச ராகவன், மற்றும் இராம சிதம்பரம் இக்குழுவில் அடங்குவர்.

**மொழிபெயர்ப்புப் பணிகள்**

*'பிறமொழி நயங்களைத் தமிழில் பெய்து தமிழை விரிந்த கலைக் கடலாக்குவோம்.'*

<< கவியோகி சுத்தானந்த பாரதி

*"I can understand the difficulties of a translator of scientific books and I tender my congratulations to Prof. N. Subbu Reddiar on his having won the prize for the best translation of Heisenberg's "**Nuclear Physics**".*

**<< *Bharat Ratna* C Rajagopalachari, Former Governor-General of India**

தொல்காப்பியர் மொழிபெயர்ப்பினை 'அதர்ப்பட யாத்தல்' என குறிப்பிட்டுச் செல்கின்றார். தமிழ் மொழியாக்கத்தில் தூய்மையான ஆர்வமே முக்கியமாகும். கூட்டங்களில் பாமர மக்களிடையே 'வெற்று வேட்டுகள்' எழுப்புவதைவிட அறிஞர்கள் அமைதியாக உருப்படியான பணியில் இறங்குவது இன்று மிகவும் வேண்டப்படுவதொன்று. துறையறிவு சிறிதுமின்றி தமிழப்புலமையொன்றையே துணையாகக்கொண்டு மொழிபெயர்ப்புத் துறையில் இறங்குவது விரும்பத் தக்கதன்று. ஒரு நூல் இ∴து ஒரு மொழிபெயர்ப்பு என்று தோன்றாவண்ணம் முதல் நூல் போன்றே மொழிபெயர்ப்பு அமைதல் சாலச்சிறந்ததாகும்.

மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையை குறித்து பேராசிரியரின் கருத்து கீழ்கண்டவாறு:

"தமிழ் மொழி வளம் பெற வேண்டுமானால் எல்லாத் துறைகளிலும் நல்ல புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். எந்தத் தமிழனும் தமிழிலேயே படித்து எத்தகைய உயர்ந்த அறிவையும் பெற வாய்ப்புகள் இருக்க வேண்டும்.

**"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**<br>
**தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்;**<br>
**இறவாத புகழுடைய புதுநூல்கள்**<br>
**தமிழ்மொழியில் இயற்றல் வேண்டும்."**

என்ற பாரதியின் வாக்கை 'மறைமொழி' போல் போற்றி அறிஞர்கள் தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டும்."

வெ. சாமிநாத சர்மாவின் கருத்தும் ஈண்டு கொள்ளத்தக்கது: 'ஒரு விஷயம் இங்குக் கூற வேண்டியது அவசியமாயிருக்கிறது. அந்நிய நாட்டுப் பெயர்களை, வழக்கில் உள்ளபடி உபயோகித்தல் நலம். அதை விடுத்து அந்நிய பெயரைத் தமிழ்ப் பெயராக மாற்றுதல் பொருந்தாது. உதாரணமாக, 'அரிஸ்டாட்டில்' என்ற கிரீக் ஆசிரியனை 'அரிஸ்தோத்தலன்' என்றும், 'பிளேட்டோ' என்பானை பிளாத்தன் என்றும் கூறுவது பொருத்தமேயன்று.'

மூல நூலில் காணப்பெறுகின்ற கருத்துகளை வரிக்கு வரி அப்படியே மொழிபெயர்ப்பின், அவ்வகையான மொழிபெயர்ப்பு எதிர்பார்த்த இலக்கை அடையாது போய்விடும். முதலில், ஒரு மொழிபெயர்ப்பாளர் மூல ஆசிரியரின் உட்கிடக்கையையும், சொற்களினிடையே பொதிந்துள்ள உட்கருத்தையும் நன்கு கிரகிக்க வேண்டும். பின்பு அனைவர்க்கும் புரியும் வகையில் அழகான நடையில் கூறுதல் வேண்டும்.

ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்க்க மிகவும் ஏற்புடையவர் எவர் என்ற வினாவிற்கு திரு சுந்தர இராமசாமியை அணுகுவோம். இ∴தோ, அவரது கருத்து: 'பிற மொழியிலிருந்து தமிழுக்கு வர வேண்டும் என்று ஒரு தமிழர் தேர்ந்தெடுப்பதைப் போலப் பிற மொழியைச் சேர்ந்த ஒருவர் தமிழிலிருந்து இந்தப் படைப்பு தன் மொழிக்கு வர வேண்டும் என்ற விருப்பத்துடன் அதைச் செய்ய வேண்டும். ….. எந்த மொழிக்கு ஒரு படைப்பு செல்கிறதோ அந்த மொழியின் மீது மொழிபெயர்ப்பாளருக்கு அசாத்தியமான பிடிமானம் இருக்க வேண்டும்.'

பேராசிரியர் மூன்று அறிவியல் நூல்களை தமிழிலும் மற்றுமொரு மூன்று நூல்களை சாகித்திய அகாதெமிக்காகவும் மொழிபெயர்த்துள்ளார்.

**(அ) அறிவியல் நூல்கள்:**

**1. யுனெஸ்கோ அறிவியல் பயிற்றும் மூல முதல்நூல்** (1969)
(UNESCO Source Book for Science Teaching)

இந்நூலின் தோற்றமும் வளர்ச்சியும் ஒரு நீண்ட வரலாறு. அ∴தை இந்நூலின் முகவுரை சுருக்கமாக பின்வருமாறு பகர்கின்றது:

'இரண்டாம் உலகப்பெரும் போரின் இறுதியில் பல்வேறு நாடுகளில் பல பள்ளிகள் அழிக்கப் பெற்றுவிட்டன. இப்பள்ளிகள் உயிர்பெறத் தொடங்கியதும் அறிவியல் தளவாடத் தேவை அதிகமாக ஏற்பட்டது; ஏனெனில், இந்நாடுகள் உற்றுநோக்கல், சோதனை இவற்றின் அடிப்படையில் அறிவியல் பயிற்றலை மேற்கொள்ளுவதை மரபாகவே கொண்டிருந்தன. இத்தேவையை நிறைவேற்றுவதற்காக ஐக்கிய நாட்டுக் கல்வி-அறிவியல்-பண்பாட்டுக் கழகம் (யுனெஸ்கோ) **'அழிபட்ட நாடுகளின் அறிவியல் ஆசிரியர்க்கான குறிப்புகள்'** என்ற தலைப்பில் ஒரு சிறிய நூலொன்று வெளியிடுவதற்குக் காரணமாக இருந்தது………. இதுகாறும் இந்நூலின் பதிப்புகள் வெளியாகியுள்ளன: அது ∴பிரெஞ்சு மொழி, ஸ்பானிய மொழி, தாயிமொழி, அரபு மொழி போன்ற பல மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளன……. ஸ்டீ∴பென்ஸனின் நூலுடன் இணைந்த இவர்களின் பணியால் அணி அணியாக எளிய தளவாடமும் அறிவியல் சோதனைகளும் கண்டறியப்பெற்றன; இவற்றைத் தொகுத்து ஒரே ஒரு நூல் வடிவில் வெளியிடவேண்டிய இன்றியமையாமையும் ஏற்பட்டது. இ∴து இன்று நம் கையிலுள்ள **'யுனெஸ்கோ அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்'** என்னும் புத்தகம் வெளிவருவதற்கான பேரூக்கத்தை அளித்தது.'

இந்நூலின் முதல் ஆங்கில வடிவு 1959-இல் வெளிவந்தது. உலகின் அனைத்துப் பகுதிகளிலுள்ள பல பருவ இதழ்களில் (Journals) பல மதிப்புரைகள் வெளியாயின. முதல் ஆங்கிலப்பதிப்பு திரும்பத் திரும்ப பதினொரு முறை அச்சேறியுள்ளது; ∴பிரஞ்சு பதிப்பு நான்கு முறை வெளிவந்துள்ளது. மேலும் பல்வேறு இருபது மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது.

யுனெஸ்கோ அமைப்பு நூலின் ஆங்கில வடிவத்தைத் தமிழில் மொழிபெயர்க்கும் பணியைப் பேராசிரியர்க்கு வழங்கியது. அப்பணி 1.4.1969 அன்று முடிவுற்றது.

இந்நூல், 19 இயல்களில் 82 உட்பிரிவுகளையும், 3 பின்னிணைப்புகளையும் மற்றும் 9 அட்டவணைகளையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

**2. அணுக்கரு பௌதிகம்** (1966)
(Nuclear Physics by Werner Heisenberg, Director, Max Plank Institute of Physics)

இயற்பியலில் நோபல் பரிசு (1932) பெற்ற விஞ்ஞானி **வெர்நர் ஹைசன்பர்க்** 'Nuclear Physics' எனும் இந்நூலை ஜெர்மானிய மொழியில் எழுதினார்; பின்பு, அந்நூல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற்றது. அந்த ஆங்கிலநூலை, பேராசிரியர் தமிழில் மொழிபெயர்த்தார்.

இந்நூல், சிறந்த மொழிபெயர்ப்பு நூலாக 1956-இல் சென்னைப் பல்கலைக்கழகத்தால் தேர்ந்தெடுக்கப் பெற்று பரிசு வழங்கப்பெற்றது. ஆனாலும், சென்னைப் பல்கலைக்கழகத்தினரின் மெத்தனப்போக்கினால் வெளியிடப்பெறாமல் இந்நூல் உறங்கிக்கிடந்தது. பேராசிரியரின் மன உளைச்சல் அவரது சொற்களில்:

"புதுமைக் கவிஞர் பாரதியாரின் குரல் பல்லாண்டுகட்கு முன்னரே பல்கலைக்கழக மாளிகையிலும் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. அதன் விளைவே இம்மொழிபெயர்ப்பின் தோற்றமாகும். சுமார் பத்தாண்டுகட்கு முன்னர் சென்னைப் பல்கலைக் கழகப் பரிசினைப் பெற்ற இந்த அறிவியல் குழந்தை 'நாமகரணம்' பெற்று வெளியில் உலவ முடியாமல் இருந்ததொல்லாம் ஒரு நீண்ட கதை. அக்குழந்தை ஏழுமலையான் திருவடிவாரத்திலிருந்து உலவத் தொடங்க வேண்டும் என்ற **'ஊழ்'** பெற்றிருந்தது போலும்!"

பின்னர் பேராசிரியர் தானே வெளியிட அனுமதி வேண்ட, அந்நாள் சென்னைப் பல்கலைக் கழக துணைவேந்தர் சர் ஆ இலக்குமணசாமி முதலியார் (Sir AL Mudaliar) அனுமதி வழங்கினார். ஜெர்மானிய மூல நூல் உரிமையாளர்களும் (Friedr. Vieweg & Sohn-Verlah, West Germany) தங்களின் அனுமதியினை நல்கினர். திருவேங்கடவன் பல்கலைக் கழகமும் பேராசிரியருக்கு அனுமதியளித்தது. இறுதியாக இந்நூல் 1966-இல், உயர்திரு இராஜாஜி அவர்களின் அணிந்துரையோடு:

*'I can understand the difficulties of a translator of scientific books and I tender my congratulations to Prof. N. Subbu Reddiar on his having won the prize for the best translation of Heisenberg's Nuclear Physics.'* << Bharat Rathna C Rajagopalachari [Rajaji]

வெளியிடப் பெற்றது. இந்நூல் மதுரைப் பல்கலைக்கழக முதல் துணைவேந்தர், உயர்திரு தெ பொ மீனாட்சிசுந்தரனார் அவர்கட்கு காணிக்கையாக்கப் பெற்றுள்ளது.

இந்நூல், 8 தலைப்புகளில் 30 இயல்கள், 40 விளக்கப் படங்கள், பின்னிணைப்பு (அணுவாற்றலைத் தொழில் துறையில் கையாளுவதுபற்றி ஜெர்மனியில் நடைபெறும் ஆராய்ச்சி), அட்டவணைகள் (பௌதிக மாறிலிகள், பௌதிக அலகுகள், அடிப்படைத்துகள்கள், இன்னபிற), கலைச்சொல் அகராதி மற்றும் பொருட்குறிப்பு அகராதி ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது.

**3. மானிட உடல்** (1958)
(The Science Book of Human Body by Edith E Spoural)

கொலம்பியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த **டாக்டர் எடித் இ ஸ்ப்ரௌல்** என்ற அம்மையார் (ஓர் ஆய்வாளர், ஆசிரியர் மற்றும் மருத்துவர்) எழுதிய “**The Science Book of Human Body**” எனும் நூலை பேராசிரியர் தமிழில் ‘**மானிட உடல்**’ என்னும் பெயரில் மொழிபெயர்த்துள்ளார். மொழிபெயர்த்ததன் காரணத்தைப் பேராசிரியர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:

“இஃது அறிவியல் யுகம். ஆராய்ச்சிகளால் பல உண்மைகள் கண்டறியப்பெறும் காலம். இந்த உண்மைகளால் உடல் பற்றிய தத்துவங்களும், கருத்துக்களும் மாறிக் கொண்டே வருகின்றன. எனவே, மானிட உடலைப்பற்றிய நம் அறிவு விரிந்து கொண்டே வருகிறது. அவற்றையெல்லாம் சாதாரண மக்கள் அறிந்துகொள்வதென்பது எளிதன்று. அவை யாவும் அவர்கட்கு விளக்கம் தருவதைவிட, குழப்பத்தில்தான் கொண்டு செலுத்தும். சாதாரண மக்கள் தம் உடல் எவ்வாறு இயங்கி வருகிறது என்பதைப்பற்றி பொதுவாக அறிந்து கொண்டால் போதுமானது. அதற்கு இந்நூல் பெருந்துணை புரியும்.”

மேலும் பேராசிரியர், மூல ஆங்கில நூலாசிரியரைப் பாராட்டும் வகையான் கீழ்க்கண்டவாறு மொழிகின்றார்:

“அம்மையார் ஓர் ஆய்வாளர்; ஆசிரியர்; மருத்துவர். எனவே, அவர் அறிவு வளர்ச்சியினையொட்டியும், அநுபவத்தினையொட்டியும் மானிட உடலைப் பற்றிய பல கருத்துக்களைத் தெளிவாக விளக்கியுள்ளார். அதன் தமிழாக்கமே இந்நூல். இந்நூலிலுள்ள பல்வேறு படங்கள், படிப்பவர் பொருளை நன்கு விளங்கிக் கொள்ளப் பெருந்துணை புரியும். புத்தகத்தைப் படிப்பவர்கள் இதை நன்கு உணர்வார்கள். சாதாரண மக்கள் உடலைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டியவற்றையெல்லாம் மிக நல்ல முறையில் எடுத்தோதியுள்ளார் மூல ஆசிரியர்.”

ஆங்கிலத்தில் உள்ள மூல நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட, யுனைடெட் ஸ்டேட்ஸ் இன்பர்மேஷன் சர்விஸ் (USIS) மற்றும் ஐக்கிய அமெரிக்க நாடுகளின் செய்தித்துறை அனுமதி வழங்கின. இந்நூல் வெளியிடப்பெற்ற ஆண்டு 1958. இந்நூல் 15 இயல்களையும். 92 விளக்கப் படங்களையும் மற்றும் மூன்று பின்னிணைப்புகளையும் (1. கலைச்சொல் விளக்கம், 2. கலைச்சொற்கள் 3. பொருட்குறிப்பு அகராதி) தன்னகத்தே கொண்டுள்ளது.

**(ஆ) சாகித்திய அகாதெமி நூல்கள்:**

உலகிலேயே இருபதிற்கும் மேலான மொழிகளைக் கொண்டது நம் இந்தியநாடு. இருபத்து நான்கு மொழிகளில் உள்ள இலக்கிய வளத்தை ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து மேம்படுத்தும் மாபெரும் சாதனையை நிகழ்த்தி வரும் ஒரே நிறுவனம் சாகித்திய அகாதெமி.

முதலில் 24 மொழிகளிலிருந்து ஒரு நூலை தேர்தெடுத்து, அவைகளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து, அந்த ஆங்கில மொழிபெயர்ப்புகளை மீண்டும் 22 மொழிகளில் மொழிபெயர்ப்பது என்பது ஓர் உயரிய இலக்கியப் பணி மட்டுமின்றி ஒரு பெரும் சாதனையாகும்.

சாகித்திய அகாதெமி மொழிபெயர்ப்புப் பணியினைப் பேராசிரியருக்கு வழங்கியது. அவ்வாறு வழங்கப்பெற்ற கீழ்கண்ட நூல்களை பேராசிரியர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

1. வேமனர் (1978)    2. CR ரெட்டி (1981)    3. குரஜாட (1982)

பேராசிரியர், தமிழாக்கம் செய்தவரின் குறிப்பாக, வேமனர் நூலில் கீழ்க்கண்டவாறு உரைக்கின்றார்.

> **“ ‘மொழி பெயர்ப்பு’ என்பது ஒரு கலை; இலக்கியப் படைப்புகளில் மொழி பெயர்ப்பு நூலும் ஒரு வகை. மொழி பெயர்ப்பினைத் தொல்காப்பியர் ‘அதர்ப்பட யாத்தல்’ என்று குறிப்பிடுவர். மொழி பெயர்ப்பு நூலைப் படிப்போருக்கு ‘இ∴து ஒரு மொழி பெயர்ப்பு’ என்று தோன்றாவண்ணம் முதல்நூல் போலவே சரளமான தீந்தமிழ் நடையில் மொழிபெயர்ப்பு அமைதல் வேண்டும். பல புதிய கருத்துகள் தமிழ் மொழியினை அடைவதற்கு ‘மொழி பெயர்ப்பு – சேது’ ஒரு வழியாகும்.’’**

பேராசிரியரின் அறிவியல் அறிவும், ஆங்கில அறிவும், தமிழ்மொழிப்பற்றும் மொழிபெயர்ப்புப்பணியில் பெரும் பங்கு வகித்தன என்பது ஈண்டு கருத்தில் கொள்ளத்தக்கது. பேராசிரியரின் மொழிபெயர்ப்புத்திறனை சாகித்திய அகாதெமி பயன்படுத்திக் கொண்டது பெரிதும் பாராட்டிற்குரியது.

1958ல் கல்லூரி முதல்வர் அலெக்ஸாண்டர் ஞானமுத்துவின் ஆலோசனைப்படி, பேராசிரியர் ஏதேனும் ஒரு பல்கலைக் கழகத்தில் உள்ள தமிழ்த்துறையில் சேரும் முயற்சியில் ஈடுபட்டார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திலிருந்து தமிழ் விரிவுரையாளர் பதவிக்கு ஒரு விளம்பரம் வரவே, பேராசிரியர் அதற்கு விண்ணப்பித்தார். வந்த 18 விண்ணப்பங்களில் இறுதியாக மூவர் அழைக்கப்பெற்றனர். திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் எஸ் கோவிந்தராஜுலு நாயுடு தலைமையில் அமைந்த வல்லுநர் குழுவில் திரு TM நாராயணசாமி பிள்ளை மற்றும் டாக்டர் கு மா அ துரை அரங்கசாமி ஆகியோர் உறுப்பினர்களாக இருந்தனர். முடிவில் திரு TM நாராயணசாமி பிள்ளை அவர்களின் சிறப்பான பரிந்துரையின்பேரில் பேராசிரியர் தேர்ந்தெடுக்கப்பெற்றார். 4.7.1960ல் பல்கலைக் கழகத்திடமிருந்து ஆணை வந்தது. மாதச்சம்பளம் குறைவாக இருப்பினும், பல்கலைக்கழகப் பணியில் உள்ள மிகச்சிறந்த எதிர்காலத்தை எண்ணத்தில் கொண்டு பேராசிரியர் கல்லூரியிலிருந்து பல்கலைக் கழகத்திற்குச் செல்ல முடிவு செய்தார்.

பேராசிரியரின் இரு புதல்வர்களும் முறையே 6 மற்றும் 2ம் வகுப்புகளில் படித்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு திருப்பதியில் கல்வி வசதி இல்லாததால் குடும்பத்தை காரைக்குடியில் இருத்திவிட்டு 31.7.1960ல் கல்லூரியில் அனைவரிடமும் விடைபெற்றுக் கொண்டு பேராசிரியர் மறுதினம் (1.8.1960) திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பொறுப்பேற்றுக் கொண்டார். காரைக்குடி பத்தாண்டு (1950-1960) கல்விப்பணி முடிவுற்றது.

காரைக்குடியில் தம் வாழ்க்கையினையும், கல்விப் பணியையும் பேராசிரியர் தம் சுயசரிதையில் விளக்கமாக குறிப்பிட்டு மகிழ்கின்றார்

**நினைவுக்குமிழிகள்-3**

10 ஆண்டுகள் (1950 – 1960) – கல்லூரிப்பேராசிரியராக (காரைக்குடி) – கல்வியியல் அநுபவங்கள் - 49 குமிழிகள் - 472 பக்கங்கள். வெளியிடப்பெற்ற ஆண்டு: 1989 **அணிந்துரை**: டாக்டர் ச மெய்யப்பன், தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

கீழ்கண்ட இணையதளத்தில் இந்நூலை **(நினைவுக்குமிழிகள்-3)** படித்து மகிழலாம்.

https://archive.org/details/ninaivukkumizhikal3




**1957**

**Ariviyal Payitrum Murai**

*அறிவியல் பயிற்றும் முறை*

Dedicated to:

**Dr RM Alagappa Chettiar**

Educationist & Philanthropist




'உண்மைச் செல்வர்', வள்ளல் டாக்டர் **RM. அழகப்பச்செட்டியார்,** அவர்கட்கு.

*அன்புப் படையல்*

நலம்கிளர் ஊக்கம் எறும்புனல் பெய்
நாள்தொறும் அன்புற வளர்த்த
பொலம்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த
பொருள்எனும் நறுமலர் கொய்து
புலம்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே
பொற்புற அணிந்துளம் களிக்கும்
வலம்கிளர் **டாக்டர் அழகப்ப வள்ளல்**
மலரடிக் குரியதிந் நூலே.

**பல்கலைக்கழகப் பேராசிரியர்**

1000 ஏக்கர் பரப்பளவுள்ள நிலத்தில் திருவேங்கடவன் பல்கலைக்கழகம் 1954ல் தொடங்கப்பெற்றது. திருவேங்கடவன் பல்கலைக்கழக அமைப்பு தமிழக பல்கலைக்கழக

அமைப்பினின்று சிறிது வேறுபட்டது. திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பல்கலைக்கழகக் கல்லூரி என்ற ஒரு தனி அமைப்பு உள்ளது. இதற்கு முதல்வர் ஒருவர் உண்டு. அனைத்து துறைகளும் இவருடைய பொறுப்பில் இருக்கும். கணிதம், இயற்பியல், வேதியியல், தாவரயியல், விலங்கியல், நில உட்கூற்றியல், இந்தி, தத்துவம், தெலுங்கு ஆகிய துறைகள் இருந்தன.

1.8.1960 அன்று அதிகாலை 4 மணி அளவில் பேராசிரியர் திருப்பதி இரயில் நிலையத்தை அடைந்தார். காலைக்கடன்களை முடித்துக் கொண்டு திருமலை சென்று ஏழுமலையானை சேவித்த பின்பு கீழே திருப்பதிக்கு சுமார் 8 மணிக்கு வந்திரங்கினார். காலை உணவு உட்கொண்டு பல்கலைக் கழகத்தை நோக்கி பயணமானார். பேராசிரியர் காலை 10 மணியளவில் கல்லூரி முதல்வரைச் சந்தித்து சான்திழ்களையும் சேரும் அறிக்கையையும் அளித்து பணியில் சேர்ந்தார். வளர்ந்துவரும் பல்கலைக்கழகமாகையால் இட நெருக்கடி இருந்தது. முதலில் இந்தித்துறையில் பேராசிரியருக்கு இடம் அளிக்கப்பெற்றது. அன்றிலிருந்து இந்தி, தத்துவம், விலங்கியல், தெலுங்கு ஆகிய துறைகளில் மாறி மாறி இடம் அளிக்கப்பெற்றது. 1968ல் புதிதாக கட்டப்பெற்ற கலைக் கட்டடத்தில் ஒரு சிறிய அறை பேராசிரியருக்கு அளிக்கப்பெற்றது. பேராசிரியர் ‘ சிறுகக் கட்டிப் பெருக’ என வாழ்ந்து வந்தார்.

இருமுறை நடைபெற்ற தமிழ்ப் பாடத் திட்டக்குழுக் கூட்டங்களும் இச்சிறு அறையில்தான் நடை பெற்றன. டாக்டர் மு வரதராசனார், பேராசிரியர் கோ சுப்பிரமணிய பிள்ளை (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்), பேராசிரியர் பூ ஆலால சுந்தரம் செட்டியார் (சென்னை கிறித்துவக் கல்லூரி) ஆகியோர் பாடத் திட்டக்குழு உறுப்பினர்களாக இருந்தனர்.

மாலைநேரங்களில் திருப்பதியில் தங்கியிருந்த அறைக்கு அருகிலிருந்த கோவிந்தராஜசுவாமியின் திருக்கோயிலுக்குச் சென்று கோவிந்தனை வழிபடுவார். அவ்வாறு வழிபடுங்கால் பாரதியாரின் பாடல்களை (கோவிந்தன் பாட்டு 1, 2, 3) பாடி மகிழ்வார். பின்னர், உள் மண்டபத்தில் அமர்ந்திருக்குங்கால் கோயிலுக்கு வந்திருக்கும் திருத்தலப் பயணிகளிடம் உரையாடி களிப்பார். திருப்பதியிலேயே இருப்பினும் ஏழுமலையானை அடிக்கடி சேவிக்க முடிவதில்லை. ‘ அவனருளால் அவன்தாள் வணங்கி...’ என்ற மாணிக்கவாசகர் போன்று, ஏழுமலையான் அருள் கிட்டும்போது திருமலைக்குச் சென்று சேவிப்பார்.

தமிழ் பயிலும் மாணாக்கர்கள் அதிகம் இல்லாத காரணத்தால், பேராசிரியர் தன்நேரத்தை நூல்கள் எழுதுவதில் செலவிடலானார். சில நாட்களில் பல்கலைக் கழக நூலகத்திற்குச் சென்று, அங்கிருந்த நூலக நண்பர் எம் ஆர் சந்திரன் அவர்களின் துணையோடு தமிழ் நூல்களை வகைப்படித்தினார். சில ஆயிரம் நூல்கள் இவ்வாறாக வகைப்படுத்தப் பெற்றதால், பிற்காலத்தில் நூலகத்திற்கு வருகை தரும் மாணாக்கர்கள் நூல்களை நன்கு பயன் படுத்தினர்.

நூல்களை எழுதி வெளியிட திருவேங்கடவன் பல்கலைக் கழகம் பேராசிரியருக்கு தேவையான அனுமதி வழங்கிற்று. காரைக்குடியில் எழுதிய மூன்று நூல்கள் - **கல்வி உளவியல், காதல் ஓவியங்கள், கவிதையநுபவம்** - அச்சேறத் தொடங்கியிருந்தன. ஒரு வாரத்தில் குறைந்தது நான்கு பார்வைப் படிவங்கள் திருத்துவதற்கென வந்துகொண்டிருந்தன. அவைகளை நேரம்

தாழ்த்தாது திருத்தி அனுப்புவது, நூலகத்திற்குச் சென்று நூல்களைப் புரட்டி தேவையான தகவல்களைச் சேகரித்தல் போன்ற பணிகளில் பேராசிரியர் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டார். **கல்வி உளவியல்** 1961ல் வெளி வந்தது. இந்நூல் அப்போது சென்னை மாநில கல்விநிதி அமைச்சர் திரு சி சுப்பிரமணியத்திற்கு ‘ அன்புப் படையல்’ செய்யப்பெற்றது. அடுத்து 1961ல் **காதல் ஓவியங்கள்** அச்சாகி வெளிவந்தது. பேராசிரியர் இந்நூலை, அழகப்பர் ஆசிரியர்க் கல்லூரி முதல்வர் திரு ப துரைக்கண்ணு முதலியார் அவர்கட்கு அன்புப்படையலாக்கினார். மீண்டும் 1961ல் **கவிதையநுபவம்** என்ற நூல் வெளியிடப்பெற்றது. இந்நூல், சென்னைப் பல்கலைக்கழகத் தன்னேரில்லாத துணைவேந்தர் ஆ இலக்குமணசாமி முதலியாருக்கு அன்புப்படையலாக்கப் பெற்றது.

பேராசிரியரின் நூல் எழுதும் பணி தொடர்ந்து நடைபெற்றது. அடுத்து சிறுவர்கட்கு விளக்கமாக இருக்கும் பொருட்டு **இளைஞர் வானொலி** என்ற சிறு நூலை பேராசிரியர் எழுதத்தொடங்குகின்றார். இந்நூல் அப்போதய சென்னை மாநில முதல்வர் திரு காமராஜ் அவர்கட்கு அன்புப்படையலாக்கப்பெற்று 1962ல் வெளிவந்தது. 1963ல் **அதிசய மின்னணு** எனும் அறிவியல் வெளியிடப்பெற்றது. அப்போது கல்வி உலகில்ஜாம்பவான்போல் திகழ்ந்த நெ து சுந்தரவடிவேல் அவர்கட்கு இந்நூல் அன்புப்படையலாக்கப் பெற்றது. காரைக்குடியில் எழுதத்தொடங்கி முற்றுப்பெறாத **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை** திருப்பதியில் முற்றுப்பெற்று 1963ல் வெளியிடப்பெற்றது. இந்நூல் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் துணைவேந்தர் எஸ் கோவிந்தராஜுலு நாயுடு அவர்கட்கு அன்புப்படையலாக்கப்பெற்றது.

திரு வி க அவர்களின் **பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை** என்ற நூலால் ஈர்க்கப்பெற்ற பேராசிரியர் அடுத்து **இல்லற நெறி** எனும் நூலை கடித உத்தியில் எழுதி 1964ல் வெளியிட்டார். இந்நூல் முத்தர் திரு வி க அவர்கட்கு அன்புப்படையலாக்கப் பெற்றது. அடுத்து ஓர் அறிவியல் நூலான **இராக்கெட்டுகள்** 1964ல் வெளியிடப்பெற்று தவத்திரு குன்றக்குடி அடிகளாருக்கு அன்புப்படையலாக்கப்பெற்றது. 1965ல் **முத்தொள்ளாயிர விளக்கம்** திருவேங்கடவன் பல்கலைக் கழக நிதியுதவியுடன் வெளியிடப்பெற்றது. தமிழ் இலக்கிய வானில் துருவமீன் போலத்திகழும் டாக்டர் உ வே சாமிநாதய்யர் அவர்கட்கு,

**முதலைவாய் அகப்பட்டுக் களிறு கூவ**
**முன்வந்து புரிந்திட்ட திருமால் போலச்**
**சிதலைவாய் அகப்பட்டுக் கலங்கி மாழ்கிச்**
**சீர்குன்றி அகம்புறமும் நைந்து நொந்து**
**விதலைநோய் உறுதமிழைக் காக்க வந்த**
**வீறுடையான் சீர்சாமி நாதன் தெய்வப்**
**பதமலரில் இந்நூலை அன்பி னோடு**
**படைக்கின்றேன் பணிகின்றேன் வாழ்த்துகின்றேன்**

என்ற பாடல்மூலம் பேராசிரியர் அன்புப்படையலாக்குகின்றார்.

பேராசிரியரின் நூல் எழுதும் பழக்கம் தொடர்ந்து சிறப்பாக நடைபெற்று வந்தது. சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் சிறந்த மொழிபெயர்ப்பு என்று பரிசளிக்கப்பெற்ற பேராசிரியரின்

**அணுக்கரு பௌதிகம்** 1966ல் வெளியிடப்பெற்றது. **இளைஞர் தொலைக்காட்சி** என்ற மற்றொரு அறிவியல் நூலும் 1966ல் வெளிவந்தது. மற்றுமொரு அறிவியல் நூலான **நமது உடல்** 1966ல் வெளியிடப்பெற்று தவத்திரு சித்பவாநந்த அடிகளார் அவர்கட்கு அன்புப்படையலாக்கப் பெற்றது. இளைஞர்களுக்கு அறிவியல் அறிவை வழங்கும் பொருட்டு மற்றுமோர் அறிவியல் நூலான **இளைஞர் தொலைக்காட்சி** 1966ல் வெளியிடப்பெற்றது. இந்நூல் அணுவாற்றலை மக்கள் நலனுக்குப் பயன்படுத்த வேண்டுமென்று கூறும்பொருட்டு நம் நாட்டுத் தூதராக அமெரிக்கா சென்று திரும்பிய இராஜாஜி அவர்கட்கு,

**மல்லிகை மலர்போல் தூயவன்; வேத**
**வரம்புறும் உபநிட தத்தில்**
**சொல்லிய பொருளை ஆய்ந்தவன்; சிறுமைச்**
**சூழலில் புகாப்பெரு நடையன்**
**நல்லியல் கலைஞன்; சிலசொல்லால் சான்றோர்**
**நன்மனம் கவர்ந்தவன்; அஞ்சா**
**வல்லிய மனைய வீர ராஜாஜி**
**மலர்ப்பதத் தொளிர்கஇந் நூலே.**

என்ற பாடலின் மூலம் அன்புப் படையலாக்கி பேராசிரியர் மகிழ்கின்றார்.

பல இதழ்களிலும், மலர்களிலும் வெளிவந்த அறிவியல் கட்டுரைகள் தொகுக்கப்பெற்று 1967ல் **அறிவியல் விருந்து** எனும் நூலாக வெளியிடப்பெற்றது. இந்நூல் உயர்திரு த மூ நாராயணசாமி பிள்ளை அவர்கட்கு அன்புப்படையலாக்கப் பெற்றது. அடுத்த அறிவியல் மொழிபெயர்ப்பு நூலான **UNESCO: அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல் (UNESCO: Source Book for Science Teaching)** 1969ல் வெளி வந்தது. திருப்பதி அருகாமையிலுள்ள பாக்காலாவில் உள்ள தமிழ்ச்சங்கத்தில் ஆற்றிய ஆறு சொற்பொழிவுகள் தொகுக்கப்பெற்று **பரணிப்பொழிவுகள்** எனும் நூல் தயாராகியது. விரிவுப்பொழிவுகள் என்ற திட்டத்தின்கீழ் திருவேங்கடவன் பல்கலைக் கழகம் இந்நூலை 1972ல் வெளியிட்டது. 1973ல் வெளியிடப்பெற்ற **அம்புலிப்பயணம்** என்ற நூல் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் னு ஜகந்நாத ரெட்டி அவர்கட்கு அன்புப்படையலாக்கப்பெற்றது.

சென்னை மயிலாப்பூரிலுள்ள பி எஸ் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு துரைசாமி அய்யர் அவரது வீட்டு நூலகத்தில் ஏராளமான அரிய நூல்களை லைத்திருந்தார். அவரது மறைவிற்குப்பின்னர் அவரது மைந்தர்கள் இருவரும் அந்நூல்களை புதிதாகத் தொடங்கப்பெற்ற திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு வழங்க எண்ணி துணைவேந்தரை அணுகினர். திருவேங்கடவன் பல்கலைக்கழகம் அப்பணியை பேராசிரியரிடம் வழங்கியது. பேராசிரியர் சென்னை சென்று அங்கு நான்கு நாட்கள் தங்கி, எல்லா நூல்களையும் நன்கு பார்த்து ஆராய்ந்து எடுத்து ஒரு பட்டியல் தயார் செய்தார். சுமார் இருநூறு நூல்களுக்குமேல் தெரிவு செய்யப்பெற்று அவைகளை திருவேங்கடவன் பல்கலைக் கழக நூலகத்தில் சேர்ப்பித்தார்.

பேராசிரியர் திருப்பதியிலும் அதைச்சுற்றியுள்ள நகரங்களிலும் தமிழ்ச்சங்கங்களை தோற்றுவித்தார். முனைவர் தானியேல் தேவசங்கீதம் தம் அணிந்துரையில்

(**நினைவுக்குமிழிகள்-4**),

> பேராசிரியர் அவர்கள் தமிழ்த்தொண்டை துறை உருவாக்கினதோடு நிறுத்திக்கொள்ளவில்லை. மொழிவழி மாநிலங்கள் பிரிந்தபின் வடவேங்கடப் பகுதிகளில் தமிழ் கொஞ்சம் கொஞ்சமாகச் சாவதைப் பார்த்து, இப்பகுதிகளில் எப்படியாவது தமிழ் மக்கள் தமிழ் உணர்வோடு வாழ வேண்டும் என எண்ணி **பாக்காலா, சித்தூர், திருப்பதி, புத்தூர், நகரி, குந்தக்கல்** ஆகியவிடங்களில் படிப்படியாகத் தமிழ்ச் சங்கங்களை ஏற்படுத்தி அங்குள்ள தமிழர்களை ஊக்குவித்திருக்கிறார். பேராசிரியர் அவர்கள் இத்தமிழ்ச் சங்கங்களைத் தமக்குச் சிறந்த இலக்கிய மேடைகளாகப் பயன்படுத்திக் கொண்டதோடு நில்லாது, இவைகளைத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை ஏற்படத் துணைக் கருவிகளாகவும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

எனக்குறிப்பிடுகின்றார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தது முதலே தமிழ் நாட்டு அரசின் மானியம் பெறுவதற்கான பேராசிரியரின் முயற்சிகள் தொடங்கின. விண்ணப்பத்தை அனுப்பிய பின்பு பேராசிரியர் சென்னை சென்று தலைமைச் செயலகத்தை பலமுறை வட்டமிட்டு தொடர்ந்து முயற்சி மேற்கொண்டார்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருவேங்கடவன் பல்கலைக் கழக வளர்ச்சிக்கென்று முதலில் ஆண்டொன்றுக்கு மூன்று இலட்ச ரூபாயும், சில ஆண்டுகள் கழித்து ஆண்டொன்றுக்கு ஆறு இலட்ச ரூபாயும், இன்னும் சில ஆண்டுகள் கழித்து ஆண்டொன்றுக்கு பத்து இலட்ச ரூபாயுமாக வழங்கி வந்தது. தமிழ்த்துறைக்கு ஏதும் வழங்குவதற்கு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்பெறவில்லை. தமிழ் நாட்டு அரசின் மானியம் பெறுவதற்கான முயற்சி தொடர்ந்து கொண்டிருந்தது. ஒருமுறை தமிழக முதல்வர் அண்ணாத்துரையை காண முயற்சித்து வெற்றியடையவில்லை. ஆனால், தமிழகம்தான் முதன் முதலாக தமிழ் வளர்ச்சிக்கென்று மானியம் வழங்கும் கொள்கையை வகுத்துக்கொண்டு தில்லி பல்கலைக் கழகத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூ10000மும், உஸ்மானியப் பல்கலைக் கழகத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூ25000மும், அலகாபாத், ஆக்ரா பல்கலைக் கழகங்கட்கு ரூ10000மும் வழங்கி வந்து கொண்டிருந்தது.

திருப்பதி ஆந்திர மாநிலத்தில் சேர்க்கப்பெற்றதையொட்டி, சில கல்லூரிகளில் இருந்துவந்த வித்துவான் போன்ற படிப்புகளும் நிறுத்தப்பெற்றன. திருப்பதியில் தமிழ் படிப்பு.'.கல்வி இருப்பின், எப்பொழுதாவது  திருப்பதி தமிழ் நாட்டிற்குரியது என்ற கிளர்ச்சி எழத்தான் செய்யும் என்ற அச்சம் பொதுவாக நிலவி வந்தது. திருவேங்கடவன் பல்கலைக் கழகமும் திருமலை திருப்பதி தேவஸ்தானமும் ஒன்றே என்ற கருத்தும் பரவலாக நிலவிவந்தது. ஒருமுறை பேராசியர் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வாமனராவைச் சந்தித்து நிலைமையை தெளிவாக விளக்கினார். பின்னர் துணைவேந்தரின் ஆலோசனைப்படி வேறொரு சிறப்பான விண்ணப்பம் தயார் செய்யப்பெற்றது. அவ்விண்ணப்பத்தினை துணைவேந்தரே தமிழக அரசிற்கு அனுப்பிவைத்தார். பேராசிரியரின் பெருமுயற்சிக்குப்பின் தமிழக அரசின் மானியம் பெறப்பெற்றது.

தமிழ்த்துறையில் பேராசிரியர் ஒருவரே பணிபுரிந்து வந்தமையாலும், தனியாக புலம் என்ற ஒன்று இல்லாமையாலும் முனைவர் பட்டப்படிப்பிற்கு பதிவுசெய்வதில் ஏராளமான காலதாமதம் ஆயிற்று.

இறுதியில் ஒருவாறு பதிவுசெய்துகொண்டு 1969ல் 1200பக்க ஆங்கில ஆய்வேட்டை சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றார். தமிழ்த் துறையில் முதன் முதலில் முனைவர் பட்டம் பெற்றவர் எனும் சிறப்பினைப் பெற்றவர் பேராசிரியர்தான். இந்த ஆய்வேடு 32 இயல்களையும், 5234 அடிக்குறிப்புகளையும் பிற்சேர்க்கையில் 306 நூல்களையும் தன்னகத்தே கொண்டு வைணவ இலக்கியத்தின் மிகச்சிறந்த ஆய்வு நூலாக ஆய்வாளர்கள் அனைவருக்கும் பெரும் பயனுள்ளதாக விளங்கிவருகின்றது.

தமிழில் முதுகலை வகுப்பு தொடங்குவதற்கு ஏற்பாடுகள் தொடங்கின. திருவேங்கடவன் பல்கலைக் கழகம் கு தாமோதரன் என்பவரை துணைப்பேராசிரியராகவும், துணைத்தலைவர் மற்றும் துணைப்பேராசிரியராக பேராசிரியரை நியமித்தது. அக்டோபர் 1970ல் நான்கு துறைகள் (தமிழ், சட்டம், மானிட இயல், அரசியல்) தொடங்கி வைக்கப்பெற்றன. பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சகந்நாத ரெட்டி தலைமையில் நடந்த விழாவில் ஆந்திர மாநிலத்தின் நான்கு அமைச்சர்கள் கலந்து கொண்டனர். அமைச்சர் திரு பி திம்மாரெட்டி அவர்கள் துறைகளைத் தொடங்கி வைத்தார். இதற்கான கல்வெட்டுச்சான்று பல்கலைக் கழகத்தில் வைக்கப்பெற்றுள்ளது. முனைவர் தானியேல் தேவசங்கீதம் தம் அணிந்துரையில், பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறையை உருவாக்கிய சிற்பி **(The Architect of the Department of Tamil in Sri Venkateswara University)** என்பது தமிழ்கூறு நல்லுலகம் நன்கறிந்த உண்மை எனக்குறிப்பிடுகின்றார்.

1970-1971ல் முதுகலை வகுப்புகள் தொடங்கப்பெற்றன. 1972ல் முதுகலை வகுப்பு முடிக்கும் மாணாக்கர்களுக்கு தங்கப்பதங்கள் வழங்குவதென முடிவு செய்யப்பெற்றது. திருப்பதி, சித்தூர், பாக்காலா, புத்தூர், நகரி, சென்னை, கோவை முதலிய நகரங்களில் உள்ள நண்பர்கள், செல்வந்தர்கள் ஆகியோரை அணுகி தேவையான தொகை ஏற்பாடு செய்யப்பெற்றது. பொள்ளாச்சி வள்ளல் நா மகாலிங்கம் செய்தியறிந்து ஒரு தங்கப் பதக்கத்திற்கு வேண்டிய தொகையை தானே முன்வந்து வழங்கினார். இத்தொகைகளைக்கொண்டு பேராசிரியர் கீழ்க்காணும் இரு தங்கப்பதக்கங்களை தமிழ்த்துறையில் நிறுவினார்:

**(1) திருவள்ளுவர் தங்கப்பதக்கம்**

தமிழ் எம்.ஏ-யில் முதல் வகுப்பில் முதலாவதாக தேர்ச்சி பெரும் மாணாக்கருக்கு

**(2) இராமலிங்க சுவாமிகள் தங்கப்பதக்கம்**

இலக்கியத்திறனாய்வு தாளில் அறுபது விழுக்காட்டிற்கு மேல்பெறும் முதல் மாணாக்கருக்கு

இவையிரண்டும் பட்டமளிப்பு விழாவின்போது தேர்ந்தெடுக்கப்பெற்ற மாணாக்கர்கட்கு வழங்கப்பெறுகின்றன. பதக்கங்கள் பெற்ற மாணாக்கர்களின் பெயர்கள் பெற்ற ஆண்டுடன் பெயர்ப் பலகைகளில் பொறிக்கப்பெற்று துறையில் வைக்கப்பெற்றுள்ளன.

தமிழ்த்துறையின் வளர்ச்சியில் பேராசிரியரின் பங்கு மிகவும் பெரிது. ஆண்டுதோறும் பல தமிழ் அறிஞர்களை அழைத்து கருத்தரங்கள் நடத்தப்பெற்றன. கருத்தரங்கிற்கு தலைமை வகிப்பது

பல்கலைக்கழகத் துணைவேந்தர் எனவும் தொடக்க விழா ஆங்கிலத்தில் நடைபெறுவது எனவும் முறைமையாக வைக்கப்பெற்றது. இந்த முறை அனைத்து கருத்தரங்களிலும் நடைமுறைப் படுத்தப்பெற்றது. 1974ல் (பிப்ரவரி) **திருக்குறள் கருத்தரங்கு** துணைவேந்தர் தலைமையில், நெ து சுந்தரவடிவேலு தொடக்கவுரை ஆற்றி தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஆசியுடன் நடைபெற்றது. 1975ல் (ஏப்ரல்) **சிலப்பதிகார கருத்தரங்கு** துணைவேந்தர் தலைமையில், ஏஊ குழந்தைசாமி தொடங்கிவைத்து, நாவலர் நெடுஞ்செழியன் மற்றும் ச வே சுப்பிரமணியம் அவர்கள் சிறப்புரையாற்ற இனிதே நடைபெற்றது. 1976ல் (ஜனவரி) **மு.வ-வின் இலக்கிய படைப்புகள்** எனும் கருத்தரங்கம் துணைவேந்தர் தலைமையில், தமிழக அமைச்சர் திரு அன்பழகன் அவர்கள் சிறப்புரையாற்ற, மு.வ-வின் பல மாணாக்கர்கள் கலந்து கொண்டு இனிதே நடைபெற்றது. 1977ல் (ஏப்ரல்) **கம்பராமாயணக் கருத்தரங்கு** துணைவேந்தர் தலைமையில் டீ கோபால் ரெட்டி அவர்கள் சிறப்புரையாற்றினார். சிறப்பு விருந்தினராக கலந்து கொண்ட கம்பன் அடிப்பொடி சா சணேசன் அவர்களை கம்பராமன் அவர்கள் கவிதையில் வரவேற்றார். ளு மகராசன் அவர்கள் சிறப்பானதொரு பேருரை ஆற்றினார்.

1973ல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் உள்ள ரா பி சேதுப்பிள்ளை வெள்ளிவிழா அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நடத்துமாறு பேராசிரியருக்கு அழைப்பு வந்தது. அவ்வழைப்பினையேற்று **திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்** எனும் தலைப்பில் சொற்பொழிவுகள் ஆற்றினார். சங்ககால வேங்கடம், இடைக்கால இலக்கியத்தில் வேங்கடம் மற்றும் திருவேங்கடத்தின்மீது எழுந்துள்ள நூலகள் ஆகிய மூன்று தலைப்புகளில் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இப்பொழிவுகளை சென்னைப் பல்கலைக் கழகம் நூலாக வெளியிடாததனால், பேராசிரியர் பல்கலைக் கழகத்தின் அனுமதி பெற்று சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் தாமரைச்செல்வர் நெ து சுந்தரவடிவேலு அவர்களின் அணிந்துரையுடன் 1975ல் வெளியிட்டார்.

பேராசிரியர் தன் முனைவர் பட்ட ஆய்வு நூலை வெளியிட முயற்சிகளை மேற்கொண்டார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் நிதியுதவி பெற்று ஆய்வு நூல் அச்சிடப்பெற்றது. தட்டெழுத்தில் 1200 பக்கங்கள் உள்ள ஆய்வு நூல் நூலாக்கம் பெறும் போது சுமார் 960 பக்கங்களில் அடங்கியது. திரு SA அனந்தசயனம் அய்யங்கார் அவர்களின் அணிந்தரையுடன் 1977ல் வெளியிடப் பெற்ற நூல் தத்துவமேதை சர்வபள்ளி இராதா கிருஷ்ணன் அவர்களுக்கு அன்புப்படையலாக்கப்பெற்றுள்ளது. இந்நூல் வைணவக் களஞ்சியம் என தமிழ் இலக்கிய உலகில் போற்றப்பெறுகின்றது. 1977ல் பதவி உயர்வு பெற்றார் பேராசிரியராக.

திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை பேராசிரியரின் மணிவிழாவினைக் கொண்டாட விரும்பியது. திரு SA அனந்தசயனம் அய்யங்கார் தலைமையில் மணிவிழா சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. பேராசிரியரின் ஆசிரியப்பெருமக்கள், அவரது மாணாக்கர்கள், தமிழகக் கல்லூரியில் உள்ள ஆசிரியர்கள், பள்ளியில் பணியாற்றிய தோழ ஆசிரியர்கள், தலைமை மற்றும் உயர் நீதிமன்ற நீதிபதிகள், அரசியல் தலைவர்கள், பல்கலைக் கழக ஆட்சிக்குழு உறுப்பினர்கள், பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், தமிழக மடாதிபதிகள்

ஆகியோரிடமிருந்து பெறப்பெற்ற ஆசிகள் மற்றும் வாழ்த்துரைகள் அடங்கிய ஒரு **மணிவிழா மலர்** ஒன்று வெளியிடப்பெற்றது. மற்றுமொரு நூல் தமிழ்ச் சான்றோர்கள் மற்றும் பேராசிரியர்கள் எழுதிய 61 கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு **Studies in Arts and Science** என்ற பெயரில் வெளியிடப்பெற்றது. 1977ல் (25.10.1977) பணியிலிருந்து பேராசிரியர் ஓய்வு பெற்றார். அவரது 17 ஆண்டு பல்கலைக்கழகக் கல்விப்பணி முடிவுற்றது.

**ஓய்விற்குப்பின்னர் தமிழ்ப்பணி**

ஓய்விற்குப்பின்னர் பேராசிரியர் 14.1.1978 – அன்று தன் சென்னை வாழ்க்கையைத் தொடங்குகின்றார். ஓய்வு பெற்ற பின்னரும் பேராசிரியரின் கல்வி மற்றும் தமிழ்ப்பணி 29 ஆண்டுகளாக தொடர்ந்தன.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் மூன்று முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கு ஆராய்ச்சி நெறியாளராக இருந்து அம்மூவரும் முனைவர் பட்டம் பெறுவதற்கு பேராசிரியர் உதவினார். சென்னைப் பல்கலைக்கழகத்திலுள்ள தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபு வழிப் பண்பாட்டு நிறுவனத்தின் மதிப்பியல் இயக்குநராக பேராசிரியர் ஆறு ஆண்டுகள் (1996 – 2002) பணியாற்றினார். சென்னை மற்றும் அதனைச் சுற்றியுள்ள மாவட்டங்களில் தமிழ் இலக்கியம் மற்றும் மக்கள்நல தலைப்புகளில் பல உரையரங்கங்களை நடத்தினார்.

தமிழ் அகாதெமியின் தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியராக போரசிரியர் 18 மாதங்கள் பணியாற்றினார். மெய்யியல்த் துறை (காஞ்சிபுரம் அமர்வு) , தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மதிப்பியல் பேராசிரியராக இரு ஆண்டுகள் பணிபுரிந்தார். அக்கால கட்டத்தில் வைணவ ஆய்வு மேற்கொண்டு '**வைணவ செல்வம்**' எனும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரை சமர்ப்பித்தார். இவ்வாய்வுக்கட்டுரை தமிழ்ப் பல்கலைக்கழகத்தால் இருதொகுதிகளாக 1998 மற்றும் 2010 ஆண்டுகளில் வெளியிடப்பெற்றது.

திருவேங்கடவன் பல்கலைக்கழத்தின் தமிழ்த்துறையின் வெள்ளிவிழா ஆண்டில் (1985) வருகைப்பேராசிரியராக பணியாற்றினார். மேலும் பல்வேறு பல்கலைக் கழகங்களில் – தில்லி பல்கலைக்கழகம், கர்நாடகா பல்கலைக்கழகம், கேரளப் பல்கலைக்கழகம், ஆந்திரப் பல்கலைக்கழகம், மைசூர் பல்கலைக்கழகம், பெங்களூர்ப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், உஸ்மானியப் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், திராவிடப் பல்கலைக்கழகம், இராஷ்ட்ரீய சமஸ்கிருத வித்யாபீடம், திருப்பதி, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், – பல்வேறு குழுக்களில் தொண்டாற்றினார். சாகித்திய அகாதெமியின் தென்மண்டல உறுப்பினராக பணிபுரிந்தார். 1989 – ல் சென்னைப் பல்கலைக்கழகம் பேராசிரியரை தமிழ்த்துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராக நியமித்தது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம் பேராசிரியரை கல்வி அலுவல் குழுவின் வாழ்நாள் உறுப்பினராக நியமித்தது.

பேராசிரியர் பல்வேறு அறக்கட்டளைகளை நிறுவியுள்ளார். 1984ல் முதல் அறக்கட்டளை திருவேங்கடவன் பல்கலைக்கழத்தின் தமிழ்த்துறையில் நிறுவப்பெற்றது. அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கான 80 தலைப்புகளும் உறுதிசெய்யப்பெற்றன. பின்னர் பல்வேறு அறக்கட்டளைகள் சென்னை, மதுரை காமராசர், அழகப்பா, அன்னை தெரசா, மனோன்மணியம் சுந்தரனார், பாரதிதாசன் ஆகியப் பல்கலைக் கழகங்களில் நிறுவப்பெற்றன. சென்னை கம்பன் கழகத்திலும் ஓர் அறக்கட்டளை நிறுவப்பெற்றது. தன் சொந்த சேமிப்பு மற்றும் தனக்குவந்த விருதுத்தொகை ஆகியவற்றை பேராசிரியர் அறக்கட்டளைகள் நிறுவுவதற்கு பயன்படுத்தினார்

பல்வேறு பல்கலைக் கழகங்கள் மற்றும் பிற நிறுவனங்களில் நிறுவப்பெற்றுள்ள அறக்கட்டளைகளில் (சென்னைப் பல்கலைக் கழகம், உலகத் தமிழாய்ச்சி நிறுவனம், சென்னை கம்பன் கழகம், பாரதிதாசன் பல்கலைக் கழகம், மையப்

பல்கலைக்கழகம், பாண்டிச்சேரி) பேராசிரியர் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். இவ்வாறு ஆற்றிய சொற்பொழிவுகள் நூலாக்கம் செய்யப்பெற்று அனைவரும் படித்து பயன்பெறும் வகையில் பேராசிரியரால் வெளியிடப்பெற்றன.

பேராசிரியர் தன் வாழ்நாளில் எழுதிய 136 நூல்களில் 100 நூல்கள் அவர் ஓய்வுபெற்ற பின்னரே எழுதப்பெற்றன என்பது சிறப்பாக குறிப்பிடத் தக்கதொன்று. திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி பேராசிரியர் எழுதிய சமய நூல்களுக்கு நிதியுதவி நல்கியது. தமிழ் வளர்ச்சித் துறை, தமிழக அரசு பேராசிரியர் எழுதிய சுயசரிதை (நினைவுக்குமிழிகள்) நூல்களுக்கு நிதியுதவி வழங்கியது. 100 நூல்களும் கல்வியியல், சமயம், அறிவியல், இலக்கியத் திறனாய்வு, தமிழ் இலக்கியம், வாழ்க்கை வரலாறு, யாத்திரை நூல்கள், தன் வரலாறு, பயண இலக்கியம் ஆகிய பிரிவுகளில் வெளியிடப்பெற்றன. பேராசிரியர் எழுதிய 13 நூல்களுக்கு தமிழ் நாடு அரசு சிறந்த நூல்களுக்கான பரிசினை வழங்கியது. 2008ல் தமிழ் நாடு அரசு பேராசிரியரின் நூல்களை நாட்டுடைமை ஆக்கியது.

தன் வரலாறு எனும் தலைப்பில் வெளிவந்த 4 நூல்கள் இங்கு சிறப்பாக குறிப்பிடத் தக்கன.

(1) நினைவுக்குமிழிகள் – 1

25 ஆண்டுகள் (1916 – 1941) – பிறப்பு முதல் கல்வி முடிய (பல்வேறு இடங்கள்) – வித விதமான அநுபவங்கள் – 64 குமிழிகள் – 559 பக்கங்கள். வெளியிடப்பெற்ற ஆண்டு: 1988

**அணிந்துரை:** டாக்டர் சிலம்பொலி சு செல்லப்பன், தமிழ் வளர்ச்சி இயக்குநர், தமிழ்நாடு அரசு

(2) நினைவுக்குமிழிகள் – 2

9 ஆண்டுகள் (1941 – 1950) – பள்ளித் தலைமையாசிரியாக (துறையூர்) – சவாலாக அமைந்த அநுபவங்கள் – 43 குமிழிகள் – 447 பக்கங்கள். வெளியிடப்பெற்ற ஆண்டு: 1989

**அணிந்துரை:** ஆ பன்னீர்செல்வம், துணை இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை, தமிழ்நாடு அரசு

(3) நினைவுக்குமிழிகள் – 3

10 ஆண்டுகள் (1950 – 1960) – கல்லூரிப்பேராசிரியராக (காரைக்குடி) – கல்வியியல் அநுபவங்கள் – 49 குமிழிகள் – 472 பக்கங்கள். வெளியிடப்பெற்ற ஆண்டு: 1989

**அணிந்துரை:** டாக்டர் ச மெய்யப்பன், தமிழ்த்துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

4) நினைவுக்குமிழிகள் – 4

17 ஆண்டுகள் (1960 – 1977) – பல்கலைக் கழகப்பேராசிரியராக (திருப்பதி) – வேறு மாநிலத்தில் அமைந்துள்ள பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையை தோற்றுவித்ததில் எதிர்கொண்ட சவால்கள். 77 குமிழிகள் – 715 பக்கங்கள். வெளியிடப்பெற்ற ஆண்டு: 1990

**அணிந்துரை:** முனைவர் தானியேல் தேவ சங்கீதம், தமிழ்ப்பேராசிரியர், தமிழ்த்துறை, திருவேங்டவன் பல்கலைக்கழகம், திருப்பதி.

பேராசிரியர் பல்வேறு பிரிவுகளில் நூல்கள் எழுதுவதில் தன் சிந்தனையை செலுத்தி வந்தமையால் நினைவுக்குமிழிகள் ஐந்தாம் பாகம் எழுதப்பெறவில்லை.

பேராசிரியரின் 70 – வது பிறந்தநாள், 80 – வது பிறந்தநாள், 90 – வது பிறந்தநாள் (69 – வது மணநாளோடு இணைந்து) வெகு சிறப்பாகக் கொண்டாடப்பெற்றன. சென்னையில் உள்ள கந்தகோட்டத்தில் (கந்தசாமிக் கோயில்) கடவுள் வழிபாட்டினைத் தொடர்ந்து அன்னதானம் வழங்கப்பெற்றது.

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் பொன்விழாவின் போழ்து (2004), ஓய்வுபெற்ற ஆசிரியப் பெருமக்கள்களில் மூத்தவராக வாழ்ந்து கொண்டிருந்த பேராசிரியரை அப்பல்கலைக் கழகம் திருப்பதிக்கு அழைத்துச் சென்று சிறப்பு செய்து பாராட்டி மகிழ்ந்தது.

பேராசிரியரின் கல்வி மற்றும் தமிழ்ப் பணியினைப் பாராட்டும் பொருட்டு பல விருதுகளும், பட்டங்களும் பேராசிரியர்க்கு வழங்கப்பெற்றன. அவற்றில் சில இங்கு குறிப்பிடப்பெறுகின்றன. தமிழக அரசு வழங்கிய **திரு.வி.க. விருது** (1985), இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளை வழங்கிய **இராஜா சர் முத்தையா செட்டியார் விருது** (1994), சென்னை கம்பன் கழகம் வழங்கிய **இராதாகிருஷ்ணன் விருது** (1994), சென்னை ஆழ்வார் மையம் வழங்கிய **இராமாநுஜர் விருது** (1996), மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் வழங்கிய **முதுமுனைவர் (DLitt)** மற்றும் தினத்தந்தி அறக்கட்டளை வழங்கிய **சி பா ஆதித்தனார் மூத்த தமிழறிஞர் விருது** (2001).

போராசிரியர் பெற்ற பட்டங்களில் சில இங்கு குறிப்பிடப்பெறுகின்றன. மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் வழங்கிய **தமிழ்ப் பேரவைச் செம்மல்** (1993), தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம் வழங்கிய **கலைமாமணி** (1999), உலக திருக்குறள் மையம், சென்னை வழங்கிய **திருக்குறள் உரைச் செம்மல்** (1992) மற்றும் ஸ்ரீவைணவ சபை, பண்ருட்டி வழங்கிய **ஸ்ரீ சடகோபன் பொன்னடி** (1993).

பேராசிரியர் தன் இரு பேத்திகளின் திருமணங்களை 2002 மற்றும் 2006 ஆண்டுகளில் கண்டு களித்தார். பேராசிரியர் 1.5.2006 – அன்று தன் 90வது வயதில் இயற்கை எய்தினார்.

(😊)(😊)(😊)(😊)(😊)









DR. ALAGAPPA CHEITTAR WITH DR. S. RADHAKRISHNAN,
THE THEN PRESIDENT OF INDIA



DR. CHETTIAR WITH THIRU K. KAMARAJ AT
ALAGAPPA PREPARATORY SCHOOL



DR. ALAGAPPA CHETTIAR WITH THE THEN PRESIDENT
DR. RAJENDRA PRASAD

# கொடைஞனும் அறிஞனும்

## அறிஞனின் காணிக்கை
## அழகப்ப வள்ளலுக்கு




**1957**
**Ariviyal Payitrum Murai**
*அறிவியல் பயிற்றும் முறை*

Dedicated to:
**Dr RM Alagappa Chettiar**
Educationist & Philanthropist




'உண்மைச் செல்வர்', வள்ளல் டாக்டர் **RM. அழகப்பச்செட்டியார்,** அவர்கட்கு.

**அன்புப் படையல்**

கலம்கிளர் ஊக்கம் எனும்புனல் பெய்து
நாள்தொறும் அன்புற வளர்த்த
பொலம்கிளர் முயற்சிக் கொடியினில் பூத்த
பொருள்எனும் நறுமலர் கொய்து
புலம்கிளர் தெய்வக் கலைமகள் அடிக்கே
பொற்புற அணிந்துளம் களிக்கும்
வலம்கிளர் டாக்டர் அழகப்ப வள்ளல்
மலரடிக் குரியதிந் நூலே.




